# அறிவியல் கலைச்சொல் களஞ்சியம்

(இறுதிப் பகுதி)

வளர்தமிழ்ச் செல்வர்
*கலைமாமணி* மணவை முஸ்தபா

விலை ரூ. 45/-

வெளியீடு :
மீரா பப்ளிகேஷன்
AE-103 அண்ணா நகர்,
சென்னை - 600 040.



# Encyclopaedic Tamil Scientific Technical Dictionary

(Final part)

MANAVAI MUSTAFA, M.A.

Price Rs, 45/-

*Published by:*

**MEERAA PUBLICATION**

AE-103, ANNA NAGAR

MADRAS - 600 040.

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the book | : | Arivial Kalaichol Kalanjiam (Encyclopaedic Tamil Scientific Technical Dictionary) |
| Author | : | Manavai Mustafa |
| Copyright holder | : | Author |
| Language | : | Tamil |
| Paper used | : | 16kg. White cream wove |
| Size of the book | : | Dy. octavo |
| First Edition | : | September 1993 |
| Printing points used | : | 10 points |
| No. of pages | : | 648—384=264+8=272pages |
| Price | : | Rs. 45/- |
| Printer | : | Meeraa Press<br>AE 103, Annanagar,<br>Madras - 600 040. |
| Binding | : | Paper back |
| Publishing place | : | Meeraa Publication<br>AE 103, Annanagar,<br>Madras-600 040. |

# முன்னுரை

இது அறிவியல் ஊழி. அறிவியல் உணர்வும் அறிவும் மக்களிடையே பொங்கிப் பொழிய வேண்டிய கால கட்டம். வாழ்வின் அனைத்து அம்சங்களிலும் அறிவியல் கண்ணோட்டம் ஆட்சி செய்ய வேண்டிய அவசிய அவசரச் சூழல்.

இந்நிலையில் அறிவியல் அறிவுப் பெருக்கத்திற்காக அனைத்து முயற்சிகளையும் மேற்கொள்ள வேண்டியது காலத்தின் கட்டாயத் தேவையாக உள்ளது. அத் தேவையின் ஒரு பகுதியை நிறைவு செய்யும் பொருட்டு உருவாக்கப்பட்டுள்ளதே 'அறிவியல் கலைச்சொல் களஞ்சியம்' எனும் இந்நூல்.

அறிவியல் தமிழ் படைப்பு ஆர்வலர்களுக்கு உறுதுணையாயமையும் பொருட்டு இக் கலைச்சொல் களஞ்சியம் உருவாக்கப்பட்டிருப்பினும் வேறு சில முக்கிய நோக்கங்களையும் உட்கொண்டே வெளி வருகிறது.

சாதாரண 'கலைச்சொல்' அகராதி'களினின்றும் இஃது சற்று வேறுபட்டது. ஆங்கிலச் சொற்களுக்கு நேரான தமிழ்க் கலைச்சொற்களைக் கொடுப்பதைவிட அச் சொல்லின் செயற்பாட்டு வினை சற்று விரிவாக விளக்கப்பட்டுள்ளது. இதன் மூலம் சொற்பொருள் விளக்கம் பெற இயல்கின்றது. இதனால் இதனினும் சுருங்கிய வடிவிலான சொற்செட்டும் பொருட் செறிவுமுடைய நயமிக்கக் கலைச்சொற்களை ஆர்வமுடையவர்கள் நாளை உருவாக்க வழியேற்படலாம்.

ஒவ்வொரு கலைச்சொல்லின் வாயிலாக அறிவியல் தகவல்களைத் துணுக்குச் செய்திகளாக வாசகர்களுக்கு வழங்க வேண்டும் என்பது எனது நோக்கமாகும். ஏனெனில், இன்றைய சூழ்நிலையில் விரிவான அறிவியல், தொழில்நுட்பச் செய்திகளைக் கட்டுரைகள் வாயிலாகப் படித்தறியும் பொறுமையும் நேரமும் மிகக் குறைவாகவே உள்ளது. அவற்றை ஒரு சில வழிகளில் செய்தித் துணுக்குகளாகத் தரும்போது ஒரு சில விநாடிகளில் படித்தறிய மனம் அவாவுவது இயல்பு. அவ் வகையில் அறி

வியல் செய்திகளை வாசகர்களுக்கு வழங்கவே இந்நூல் கலைக் களஞ்சிய வடிவில் தயாரிக்கப்பட்டுள்ளது. இவ்வகையில் தமிழில் வெளிவரும் முதல் கலைச்சொற் களஞ்சியம் இதுவே யாகும் என் பதில் ஐயமில்லை.

அறிவியல் தமிழ் வளர்ச்சியில் நாட்டமுள்ள தமிழ் ஆர்வலர் களுக்கும் படைப்பாளர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் மாணவர் களுக்கும் வாசகர்களுக்கும் இந்நூல் அறிவு விருந்தாக அமைந்து பெருந்துணை புரியும் என நம்புகிறேன்.

இந்நூலை உருவாக்குவதில் எனக்குப் பெருந்துணையா யமைந்தவர் நண்பர் திரு இரா. நடராசன் அவர்கள். அறிவியல் தமிழ் வளர்ச்சியில் என்னொத்த ஆர்வமும் உழைப்பு நாட்டமு முள்ள அவர்களின் உதவியையும் ஒத்துழைப்பையும் இச் சமயத் தில் நன்றிப் பெருக்குடன் நினைவு கூர்கிறேன்.

எனது மற்ற அறிவியல் நூல்களை ஏற்று ஆதரவளித்து வரும் தமிழுலகம் இந்நூலையும் ஏற்று என் முயற்சிக்குப் பேர தரவு அளிக்கும் என நம்புகிறேன்.

*20-9-1993* மணவை முஸ்தபா

# L

**L-head engine:** (தானி. எந்.) 'எல்' வடிவத் தலை எஞ்சின்: தலைப் பகுதி ஆங்கில எழுத்து 'L' வடிவில் அமைந்துள்ள ஓர் எஞ்சின்.

**Label:** (க. க.) வடிதாரை: ஒரு சுவரிலுள்ள இடைவெளிக்கு மேலாக நீட்டிக்கொண்டிருக்கும் மழைத்துளிகளை அப்பால் விழச் செய்யும் கட்டமைவு.

**Label Paper:** குறிப்புச் சீட்டுத் தாள்: அடையாளத் துண்டுக் குறிப்புச் சீட்டுகள் தயாரிப்பதற்குப் போதிய வடிவளவில் வெட்டப் பட்ட தாள்.

**Laboratory** ஆய்வுக்கூடம்: அறிவியல் ஆராய்ச்சிகள், பரிசோதனைகள், பகுப்பாய்வுகளைச் செய்வதற்கான செய்முறைச் சாலை.

**Laboraory assistant:** ஆய்வுக் கூட உதவியாளர்: ஆய்வுக்கூடத்தில் பொருள்களை வழக்கமான முறையில் சோதனை செய்யும் ஓர் இளநிலைப் பொறியாளர்.

**Labor saving:** (அச்சு.) உழைப்புச் சுருக்கப் பொருள்: உழைப்பினைச் சுருக்கி, கால விரயத்தைக் குறைக்கும் அச்சுப் பொருள்.

**Lac:** (மர. வே.) அரக்கு: அரக்குப் பூச்சியிலிருந்து சுரக்கும் பிசின் போன்ற ஒரு பொருள், இது அவலரக்கிலிருந்து வேறுபட்டது. அவலரக்கு என்பது அரக்கிலிருந்து தயாரிக்கப்படும் பொருள். விரைவாக உலரும் மரவண்ணப் பூச்சுப் பொருள்களையும் இது குறிக்கும்.

**Lacewood:** பட்டுக்கருவாலி: ஆஸ்திரேலியாவில் வளரும் ஒருவகை மரம். இது விலை மலிவானது; பட்டுப்போல் சீரான புள்ளிகள் உடையது. அலங்கார வேலைகளுக்கு ஏற்றது. சிறிய பரப்புகளிலும், உள்பதிவு வேலைகளிலும் பயன்படுகிறது.

**Lacing:** (பொறி.) இறுக்கு இழைவார்: எந்திர உறுப்புகளை இணைத்தியக்கும் தோல் பட்டைவாரின் முனைகளை இழைக்கச்சினால் இறுக்கிப்பிணைக்கும் தோல் வார். இப்போது இதற்கு உலோக இணைப்பிகள் பயன்படுகின்றன.

**Lacquer:** (உலோ.) உலோக மெருகு: வாயுமண்டலப் பாதிப்பினால் வண்ணங் கெடாமல் பாதுகாப்பதற்கு உலோக வேலைப் பாடுகளில் பூசப்படும் மெருகெண்ணெய்.

**Lacquer work:** மெருகுவேலை: வண்ணங்கெடாமல் தடுப்பதற்கு உலோக மெருகெண்ணெய் பூசப் பட்ட வேலைப்பாடு. இனாமல் போன்று உலோக மெருகு பூசப் பட்ட அலங்கார வேலைப்பாடு.

**Lactose:** (*வேதி.*) பால் வெல்லம்: ($C_{12}H_{22}O_{11}$): பாலிலுள்ள சாக்கரை. உறைபால் தெளிவினைச் செறிவாக்குதல், படிகமாக்குதல் மூலம் பெறப்படும் இனிப்பான, மிக நுண்ணிய வெண் பொடி.

**Lacunar:** (*க.க.*)பொட்டிப்பு முகடு: பொட்டிப்புகள் அல்லது உள் கண்ணறைகள் உடைய மேல் முகடு.

**Ladder:** (*க.க.*) ஏணி: ஏறுவதற்கு உதவும் சாதனம். இணையான இரு கோல்களை குறுக்குப் படிகளால் இணைத்து அமைக்கப்பட்ட படிமரம்.

**Ladder back:** ஏணி நாற்காலி: பல கிடை மட்ட மரச் சட்டங்கள் கொண்ட நாற்காலிச் சாய்பலகை.

**Ladle:** (*வார்.*) சட்டுவம்: இரும்பு வார்ப்படத் தொழிற்சாலை அடுப்பிலிருந்து உருகிய உலோகத்தைக் கோதி வார்ப்படத்தில் ஊற்றுவதற்குப் பயன்படும் கொள்கலம். இது, 25—100டன் வரைக் கொள்ளக் கூடியதாகப் பல்வேறு வடிவளவுகளில் உண்டு.

**La Farge cement:** சுண்ணச் சிமென்ட்: சுண்ணாம்பை நீற்றும் போது துணைப் பொருளாக உண்டாகும் சிமென்ட். இது கறைபடாதது. இது போர்ட்லந்து சிமென்ட் போன்ற வலுவுடையது.

**Lagging current:** (*மின்.*) பின்னடைவு மின்னோட்டம்: ஒரு மின் சுற்று வழியிலுள்ள தூண்டலினால் மின்னோட்டம் பின்னடையும்படி செய்கிறது.

**Lag screw;** பின்னடைவுத் திருகு: சதுர வடிவத் தலையுடைய, கனமான மரத் திருகு. இதன் தலையில் இயைவுப்பள்ளம் இல்லாததால் இதனைத் திருக்குக் குறடு மூலம் இறுக்க வேண்டும்.

**Laid paper:** முகட்டுக் காகிதம்: கம்பிகளைப் பயன்படுத்திச் செய்யப்பட்டதால் வரிவரியான முகடுகளுள்ள காகிதம்.

**Lake:** (*வேதி.*) அரக்குச் சாயம்: அரக்கினால் செய்யப்பட்ட வண்ணப் பொருள்.

**Lake copper:** (*உலோ.*) ஏரிச் செம்பு: மிச்சிகன் ஏரி அருகே கிடைக்கும் தாதுப்பொருள்களிலிருந்து குளிர் செறிவாக்க முறைகள் மூலம் பெறப்படும் செம்பு.

**Lambre quin:** முகட்டுத்திரை: கதவின் அல்லது பலகணியின் அலங்கார முகட்டுத் திரை.

**Laminar flow:** (*வானூ.*) தடைபடாத் துகளியக்கம்: தடைபடாத் துகளணுக்களின் இயக்கம். திட எல்லைகள் அருகே பசைத் திரவம் பாய்வதை இது குறிக்கும்.

**Laminate;** தகட்டடுக்கு: மரப் பலகைகளை ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கி ஒட்டுப் பலகை தயாரித்தல். மென் தாள் ஒட்டல்.

**Laminated brush:** (*மின்.*) மென்தகட்டுப் தொடுவி: செம்பு.

வெண்கலம் போன்ற உலோகங்களின் மென் தகடுகளாலான திசை மாற்றுத் தொடுவி.

**laminated construction :** அடுக்குக் கட்டுமானம்: குறைந்த எடையில் உயர்ந்த அளவு வலிமை பெறுவதற்காக அடுக்குகள் அடுக்கி எழுப்பப்படும் கட்டுமானம்.

**Laminated core:** (மின்.) மென் தகட்டு உள்ளீடு : மின் காப்பிடப்பட்ட இரும்புத் தகடுகளின் அடுக்குகளினாலான ஒரு மின்னக உள்ளீடு. இது உலோகத்தில் சுழல் மின்னோட்டம் ஏற்படாமல் தடுக்கிறது.

**Leminated liner:** (தானி.) அடுக்குக் காப்புறை: உந்து ஊர்திகளில் சுழற்றக்கூடிய பல அடுக்கு உள்வரி உலோகக் காப்புறை.

**Laminated plastics :** (குழை.) அடுக்கு பிளாஸ்டிக்: கனமில்லாமல் வலுவாகவுள்ள பிளாஸ்டிக். கண்ணாடிப் பொருள்களை அடுக்கடுக்காக அமைத்துச் செறிவாக்குவதன் மூலம் போதிய வலிமையுள்ள பிளாஸ்டிக் கிடைக்கிறது. இவை தகடுகளாக அல்லது படகின் உடற்பகுதிக்கேற்ப வலுவாகத் தயாரிக்கப்படுகின்றன.

**Lamp:** (மின்.) விளக்கு: மின் இழை அல்லது சுடர் உள்ள ஒருசாதனம். இது சூடாகும்போது சுடர்விட்டு ஒளியுண்டாக்குகிறது.

**Lamp adapter:** (மின்.) விளக்குக் கிளைப்பான் : தொலைபேசித் தொடர்பாளரின் கவனத்தைக் கவர்வதற்காக தொலைபேசி, விசைப் பலகைகளில் பயன்படுத்தப்படும் வெண்சுடர் விளக்குகளைப் பயன்படுத்துவதற்கான ஒரு சாதனம்.

**Lamp bank:** (மின்.) விளக்குப் பலகை: விலக்குகளுக்கான பல கொள்கலன்கள் பொருத்தப்பட்டுள்ள ஒரு பலகை. இந்த விளக்குகள் கட்டுறுத்தும் கம்பங்களுடன் இணைக்கப்பட்டிருக்கும்.

**Lamp base:** (மின்.) விளக்காதாரம்: ஒரு வெண்சுடர் விளக்கின் முனையுடன் இணைக்கப்பட்டுள்ள பித்தளைத் திருகு ஆதாரம். இது ஒரு குதை குழியுடன் விளக்கினை இணைப்பதற்கு இடமளிக்கும்.

**Lamp cord:** (மின்.) விளக்குக் கட்டிழை: இரு சரங்களாக மின் காப்பிட்ட மின்கடத்திகளைக் கொண்ட நெகிழ்வுடையகட்டிழை. இது பொதுவாக ஒரே உறையில் இருக்கும்.

**Lamp efficiency:** (மின்.) ஒளித்திறன்: ஒரு மெழுகுவர்த்தியின் ஒளித்திறனை உண்டாக்குவதற்குத் தேவைப்படும ஆற்றலின் அளவு. இது வாட்டுகளில் குறிப்பிடப்படும். இதனை வாட்/மெழுகு வர்த்தித் திறன் (W.P.C.) என்று குறிப்பிடுவர்.

**Lamp socket:** (மின்.) விளக்குக் குதைகுழி: விளக்குக்கும் மின்சுற்று வழிக்குமிடையே இணைப்பு ஏற்படுத்துவதற்காக ஒரு விளக்கின்

அடிப்பகுதியைப் பொருத்துவதற்குரிய கொள்கலன்.

**Land:** (பட்.) சால்வரி இடைவெளி: துரப்பணங்கள், குழாய்கள். துளைச் சீர்மிகள் போன்ற கருவிகளில் வடுப்பள்ளங்களுக்கிடையிலுள்ள இடைவெளி.

**Landing:** (வானூ.) தரையிறங்குதல்: பறக்கும் விமானம் பறக்கும் வேகத்தைக் குறைத்துக் கீழே இரங்கு தரையுடன் தொடர்பு கொண்டு இறுதியாக நின்று விடுதல்.

**Landing angle:** (வானூ.) தரை நிலைக்கோளம் : விமானம் தரை மட்டத்தில அதன் இயல்பான நிலையில் நிலையாக இருக்கும் போது அதன் உந்து கோட்டிற்கும் கிடைமட்டக் கோட்டிற்குமிடையிலான கூர்ங்கோணம்.

**Landing area floodlight :** (வானூ.) தரையிறங்கு பகுதி ஒளிப் பெருக்கு : விமானம் தரையிறங்கும் பகுதியில் பல திசைகளிலிருந்து ஒளி வீசுவதற்கான சாதனம்.

**Landing beam:** (வானூ.) அலைக் கதிர்க்கற்றை: விமானம தரையிறங்குவதற்கு வழி காட்டும் வானொலி அலைக்கதிர்கற்றை.

**Landing Direction Light :** (வானூ.) இறங்குதிசை விளக்கு : விமானம் எந்தத் திசையில் தரையிறங்க வேண்டும் என்பதைக் காட்டும் விளக்கு அல்லது விளக்குகளின் தொகுதி.

**Landing field :** (வானூ.) தரையிறங்கு தளம்: விமானம் தரையிறங்குவதற்கு ஏற்ற வடிவளவும் பரப்பளவும் கொண்ட ஒரு தளம். இது விமான நிலையத்தின் ஒரு பகுதியாக இருக்கலாம்; இல்லாமலுமிருக்கலாம்.

**Landing flap:** (வானூ.) தரையிறங்கு சிறகு: விமானத்தின் ஓர் இறகின் பின் முனையுடன் இணைக்கப்பட்டிருக்கும் ஓர் இணைப்பு தரையிறங்கும்போது இதைத் திருப்பும்போது இது காற்றுத்தடையாகச் செயற்படுகிறது.

**Landing gaar:** (வானூ.) தரையிறங்கு பல்லிணை: விமானத்தின் அடியிலுள்ள ஒரு கட்டுமானம் தரையிறங்கும்போது ஏற்படும் அதிர்ச்சியைக் குறைக்கவும், தரையிலோ, நீரிலோ விமானம் இருக்கும்போது அதனைத் தாங்கிக் கொள்ளவும் இது பயன்படுகிறது.

**Landing light:** (வானூ.) தரையிறங்கு ஒளி: விமானம் தரையிறங்கும்போது ஒளியூட்டுவதற்காக விமானத்திலுள்ள ஒரு விளக்கு.

**Landing mat:** (வானூ.) தரையிறங்கு தளப்பாய்: விமானம் தரையிறங்குவதற்கான ஓடுபாதையாக அமைக்கப்பட்டுள்ள உலோக வலைகள் அல்லது துவாரமுள்ள உலோகத் தகடுகள்.

**Landing newel:** (க. க.) தரையிறங்கு நடுத்தூண் : ஒரு படிக்கட்டின் தரையிறங்கு முனையில் அமைக்கப்பட்டுள்ள, படிக்கட்டுக் கைப்பிடி வரிசையின் அடிக்கம்பம்.

**Landing speed:** *(வானூ.)* தரை யிறங்கு வேகம்: விமான சமதளத் தில் பறந்துகொண்டு, போதிய அளவு கட்டுப்பாட்டில் நிலைத்து நிற்கக்கூடிய குறைந்த அளவு வேகம்.

**Landing strip:** *(வானூ.)* தரை யிறங்கு நீள் தளம்: விமான நிலை யத்தின் ஒரு பகுதியாக அமைந் துள்ள குறுகலான நீண்ட நிலப் பகுதி. இயல்பான சூழ்நிலைகளில் விமானம் தரையிறங்குவதற்கும், தரையில் ஓடிப் பறப்பதற்கும் இது பயன்படுகிறது.

**Landing T:** *(வானூ.)* தரையிறங்கு T: ஆங்கிலத்தில் 'T' எழுத்தின் வடிவிலுள்ள ஒரு பெரிய சைகை. இது, விமானம் தரையிறங்குவதற் கும், தரையில் ஓடி மேலே பறப்ப தற்கும் வழி காட்டுவதற்காக தரை யிறங்கு தளத்தில் அல்லது ஓர் உயரமான கட்டிடத்தில் பொருத் தப்பட்டிருக்கும்.

**Landing tread:** *(க.க.)* படிக்கால் மிதி கட்டை: படிக்கட்டின் தரை யினைத் தொடும் மிதி கட்டை. பொதுவாக, இதன் முன்முனை ஒரு மிதிகட்டையின் கனத்தையும், பின் முனை தரைத் தளத்தின் கனத்தை யும் கொண்டிருக்கும்.

**Landing wire:** *(வானூ.)* தரை யிறங்கு கம்பி: விமானத்தை உயரே செலுத்துகிற இயல்பான திசைக்கு நேர் எதிர்த்திசையில் இயங்கும் விசைகளைத் தடுப்பதற் காக அமைக்கப்பட்டுள்ள ஒரு கம்பி, இது உறுப்புகள் அளவுக்கு மீறி இறுகி கட்டுமானத் திரிப டைந்து விடாமலும் காக்கிறது.

**Landmark beacon:** *(வானூ.)* நில எல்லை அடையாள ஒளி: திட்டவட் டமான புவியியல் எல்லைகளைக் குறித்துக் காட்டுவதற்குப் பயன் படும் அடையாள ஒளி. இது விமான நிலைய அடையாள ஒளி. அல் லது ஓடுபாதை அடையாள ஒளி யிலிருந்து வேறுபட்டது.

**Land plane:** *(வானூ.)* தரை விமா னம்: தரையில் மட்டுமே இறங்க வும், தரையிலிருந்து மட்டுமே ஏற வும் கூடிய ஒரு விமானம்.

**Landscape panel:** இயற்கைக் காட்சிக் கரணை: கிடைமட்டக் கரணையுடைய பொட்டிப்பு.

**Lap:** *(எந்.)* மெருகிடு கருவி: உராய்வுப் பொருள் பூசிய மேற் பரப்பினையுடைய துல்லியமான கூர்மை கொண்ட ஒரு கருவி.

**Lap joint:** *(மர. வே.)* மடிப்புமூட்டு: தண்டவாளம், கம்பம் முதலியவற் றின் இரு விளிம்புகளையும் பரும னில் பாதியாக்கி இணைத்துப் பொருத்தும் முறை.

**Lapping:** *(எந்.)* மடிப்புறுத்துதல்: உட்புற அல்லது வெளிப்புறப் பரப்புகளை கையாலோ எந்திரத் தாலோ மடித்துச் சமனாக்குதல்.

**Lap riveted joint:** மடித்திறுக்கு மூட்டு: தகடுகளின் முனைகள் ஒன்றன் மேல் ஒன்று பொருந்து மாறு மடித்து இறுக்கிப் பிணைத்த மூட்டு.

**Lap seam welding:** மடிப்புப் பற்ற வைப்பு: விளிம்புகள் ஒன்றன்மேல் ஒன்று பொருந்துமாறு மடித்து வைத்துப் பற்ற வைக்கும் முறை.

**Larch;** (*மர. வே.*) ஊசியிலை மரம்: கற்பூரத் தைலம் தரும் ஊசியிலைக் கட்டுமான மரம். இது நடுத்தர வடிவளவுடையது: கூம்பு வடிவக் கனி தருவது; குறிப்பிட்ட பருவத்தில் இலையை உதிர்க்கக்கூடியது. இதன் மரம் கடினமானது. கனமானது. வலுவானது. இதன் மரம் தொலைபேசிக் கம்பங்களுக்கும் வேலிக் கம்பங்களுக்கும் கப்பல் கட்டுவதற்கும் பயன்படுகிறது.

**Lard oil:** (*எந்.*) பன்றிக் கொழுப்பு எண்ணெய்; பன்றிக் கொழுப்பிலிருந்து தயாரிக்கப்படும் எண்ணெய். உலோக வெட்டுக் கருவிகளில் திறன்வாய்ந்த உயவுப் பொருளாகப் பயன்படுகிறது.

**Large knot:** பெருங்கணு; 4 செ.மீ.க்கு மேல் விட்டமுள்ள மரக்கணு.

**Larry:** கலவைக்கருவி: வளைவான எஃகு அலகுடைய ஒரு கருவி, இதன் கைபிடி 18 செ.மீ. அல்லது 20 செ.மீ. நீளமுடையதாக இருக்கும். இது கலவை செய்திடப் பயன்படுகிறது.

**Last:** மிதியடிப் படியுரு; புதை மிதியடி செய்வதற்குரிய படியுருவக் கட்டை.

**Lastic:** (*வேதி. குழைம.*) ரப்பர் பிளாஸ்டிக்: ஒரு குறிப்பிட்ட வெப்ப நிலையில் ரப்பரின் பண்புகளையுடைய ஒரு பிளாஸ்டிக் பொருள்.

**Latent heat.** உட்செறி வெப்பம். ஒரு பொருளின் வெப்பநிலையை மாற்றாமல் அப்பொருளின் இயற்பியல் நிலையை மாற்றுகிற வெப்பம், எடுத்துக்காட்டு: பனிக்கட்டியை நீராக மாற்றுவதற்குத் தேவை வெப்பம்; 32° ஃபாரன்ஹீட் நீரை நீராவியாக மாற்றுவதற்குத் தேவையான 212° ஃபாரன்ஹீட்.

**Lateral:** பக்கம் நோக்கிய: பக்கம் நோக்கிச் செல்கிற அல்லது நீள்வாக்கிற்குக் குறுக்காகச் செல்கிற.

**Lateral motion:** பக்கம் நோக்கிய இயக்கம்: பக்கம் நோக்கிய திசையில் இயங்குதல்.

**Laterals·** (*பொறி*) மூலை விட்டத் தளை இணைப்பு: விறைப்புத் தன்மையை அதிகரிப்பதற்காக எந்திரத்தின் இரு உறுப்புகளிடையே மூலை விட்டமாகத் தலைப்பட்டைகளால் இணைத்தல்.

**Lateral stability:** (*வானூ.*) பக்க உறுதிப்பாடு: விமானத்தில் சுழற்சி விரிசல், பக்கத் தளர்வு போன்றவற்றால் சமநிலைச் சீர்குலைவு ஏற்படாமல் உறுதி நிலையை ஏற்படுத்துதல்.

**Lateral strain:** (*பொறி*). பக்க வாட்டத் திரிவு: எந்திரக் கட்டமைப்புக்கு எதிராகப் பக்கவாட்டில் ஏற்படும் திரிவு. இதனைக் குறுக்குத திரிவு என்றும் கூறுவர்.

**Lateral thrust:** பக்க உந்துவிசை: பக்கங்களை நோக்கி அளாவுகிற ஒரு பளுவின் அழுத்த விசை.

**Latex:** ரப்பர்மரப்பால்: காகிதத்தை வலுப்படுத்துவதற்குப் பயன்படுத்தப்படும் ரப்பர் மரப்பால்.

**Lath:** (க.க)வரிச்சல்: சுவர், தளம், மச்சு ஆகியவற்றிற்குப் பாவப்படும் $1\frac{1}{2}'' \times \frac{3}{8}'' \times 4'$ அளவுள்ள மென் மரப்பட்டிகை.

**Lathe:** கடைசல் எந்திரம்: (எந்.) வட்ட வடிவப் பொருள்களைத்தயாரிப்பதற்குப் பயன்படும்எந்திரம்.

**Lathe bed** (எந்.) கடைசல் எந்திரப் படுகை: கடைசல் பிடிக்கும் எந்திரத்தின் ஏற்பமைவு வாய்ப்புடைய அடிப்பணிச் சட்டம்.

**Lathe center grinter:** (எந்.) கடைசல் மைய அரைப்பான்: ஒரு கடைசல் எந்திரத்துடன் இணைக்கப்படும் ஓர் அரைவைச் சாதனம். இது மையங்களை அராவுவதற்குப் பயன்படுகிறது.

**Lathe chuck:** (எந்.) கடைசல் கவ்வி: கடைசல் எந்திரத்தின் கதிர்களுடன் இணைக்கப்பட்டுள்ள ஒரு கவ்வும் சாதனம். இது கடைசல் எந்திரம் இயங்கும்போது, அதில் வேலைப்பாடு செய்யப்படும் பொருளைக் கவ்விப் பிடித்துக் கொள்கிறது.

**Lathe dog:** (எந்.) கடைசல் எந்திரக் குறடு: ஒரு கடைசல் எந்திரத்துடன் இணைக்கப்பட்டுள்ள இடுக்குக் குறடு.

**Lathe engine:** (எந்.) எந்திரக் கடைசல் பொறி: திருகிணைக் கொண்ட விசையினால் இயங்கும் கடைசல் எந்திரம்.

**Lathe gap:** (எந்.) இடைவெளிக் கடைசல் பொறி: எந்திரத்தால் இயங்கும் கடைசல் படுகை கொண்ட கடைசல் பொறி.

**Lathe tool:** (எந்.) கடைசல் கருவி: கடைசல் எந்திரத்தில் வேலைப்பாடு செய்யப்பட்ட உலோகப் பொருளிலுள்ள பிசிறுகளை அகற்றுவதற்குப் பயன்படும் கருவி இதனை "வெட்டுக் கருவி" என்றும் கூறுவர்.

**Lathe work:** கடைசல் வேலைப்பாடு: கடைசல் எந்திரத்தில் செய்யப்படும் துளையிடுதல், நெளிவெடுத்தல் போன்ற அனைத்து வேலைப்பாடுகளையும் குறிக்கும்.

**Latitude:** அட்சரேகை: பூமியின் மேற்பரப்பில், பூமத்திய ரேகையிலிருந்து வடக்கே அல்லது தெற்கே உள்ள தொலைவு.

**Lattice:** (க. க.) பின்னல் தட்டி: வரிச்சல் அல்லது கம்பிகளின் பின்னால் அமைந்த பலகணி.

**Lattice girder:** (க. க.) குறுக்குச் சட்ட உத்தரம்: இரும்பாலான பின்னற் சட்ட அமைப்போடு இணைக்கப்பட்ட பெரிய உத்தரம்.

**Lattice work:** பின்னல் வேலைப்பாடு: மரத்தினாலான அல்லது உலோகத்தினாலான பின்னல் வலை வேலைப்பாடு.

**Laureling:** புன்னையிலை வேலைப்பாடு: புன்னை இலைப் புடைப்புச்

சித்திர வேலைப்பாடுகளைக் கொண்ட அலங்காரவேலைப்பாடு·

**Lava:** (*வேதி.*) எரிமலைக் குழம்பு: எரிமலை உருகிய பாறைக் குழம்பு

**Lavatory:** (*க. க.*) கழிப்பிடம்: கை கால் கழுவவும் துணி துவைக்கவும் சிறுநீர் கழிக்கவும் பயன்படும் அறை.

**Lawn:** சல்லடை: நார்த்துணி அல்லது பட்டாலான மென்மையான சல்லடை.

**Layout:** (*அச்சு.*) (1) அமைப்புத் திட்டம்: ஒரு பணியின் செயல் முறைத்திட்டம்அல்லது வரைபடம். (2) மனைத்திட்ட அமைப்பு: ஒரு வீட்டுமனையின் திட்ட அமைப்பு. (3) நிலத்திட்ட அமைப்பு: வீடுகள் கட்டுவதற்கான நிலத்தை மனைகளாகப் பகுத்துத் திட்ட அமைப்பு செய்தல்.

**Layout bench or a teble:** விரிப்பு மேசை: வேலைப்பாடு செய்யப்பட வேண்டிய பொருளை விரித்து வைப்பதற்கான உலோகச் சமதளமுடைய மேசை.

**Layout man:** (*அச்சு.*) பக்க அமைப்பாளர்: அச்சுப்பணியில் பக்கங்களை அமைப்பாக்கம் செய்பவர். இவரை 'அச்சுப்பக்கஅமைப்பாளர்' என்றும் கூறுவர்.

**Layout paper:** (*அச்சு.*) பக்க அமைப்புக் காகிதம்: அச்சுப் பக்க வடிவாக்கத்திற்குப் பயன் படும் காகிதம். இதில் அச்சுருப் படிவச் சதுரங்கள் வரையப் பட்டிருக்கும். இதில் விளம்பரங்களும், மற்ற அச்சிடவேண்டிய பணிகளும் வடிவமைக்கப்படும்.

**Lazy tongs:** பல் திசை விளைவு நெம்புகோல்: தூரத்திலுள்ள பொருட்களைப் பற்றி யெடுப்பதற்குரிய பல் திசை வளைவுகளையுடைய நெம்பு கோல் அமைவு.

**Leach:** (*குழை.*) நீர்மக் கசிவு: ஒரு பொருளிலிருந்து மற்றொரு பொருளைக் கசிவூறல் மூலம் உள்மாசு வெளியேற்றுதல்.

**Leaching cesspool:** (*கம்.*) கசிவு வடிகுட்டை: நீர் கசியக்கூடிய ஒரு வடிகுட்டை.

**Lead:** (*மின்*) (1) தலைமை மின்னிணைப்புக்கம்பி: ஒரு மின் இணைப்புச் செய்யப்பட்டுள்ளமின் சாதனத்திலிருந்து வெளியே நீட்டிக்கொண்டிருக்கும் ஒரு மின் கடத்தி.

(2) முந்து நிலை அளவு: ஒரு நிமிர் வீத வளை கோட்டின் நீச முனையும் உச்ச முனையும் மற்றொரு வளை கோட்டின் மீதான அதே முனைக்கு முன்னேறி எட்டுகிற போது, அந்த வளைகோடு மற்ற வளைகோட்டிற்கு முந்து நிலையிலிருப்பதாகக் கூறப்படும்.

(3)திருகாணி இடைவெளி: ஒரு திருகாணியில் ஒரு முழுச்சுற்று முடிந்ததும் திருகாணி முன்னேறியிருக்கக் கூடிய தூரம்.

**Lead:** ஈயம்: பழுப்பு நீலநிற உலோகம்: மென்மையானது; கம்பியாக

இழுத்து நீட்டத்தக்கது. தகடா கத்தக்கது வீத எடைமானம் 11.34; உருகுநிலை 327°C நைட்ரிக் அமிலத்தில் கரையக் கூடியது. பொதுவாக, கந்தகத்துடன் கலந்து ஈயச்சல்பைடு ஓர் காலினா என்ற தாதுவாகக் கிடைக்கிறது. தூய்மையாகவும், கூட்டுப்பொருளாகவும் பல்வேறு வகையில் பயன்படுகிறது.

**Lead burning:** (*தானி.*) ஈயப்பற்றவைப்பு : ஈயத்தைப் பயன்படுத்திப் பற்றவைத்தல் சேமக்கலங்களில் முக்கியமாகப் பயன்படுகிறது.

**Lead cutter:** (*அச்சு.*) ஈயவெட்டுச் சாதனம்: ஈயத்தை வேண்டிய வடிவளவுகளில் வெட்டுவதற்குக் கையினால் இயக்கப்படும் ஒரு கருவி.

**Leaded mater:** (*அச்சு.*) ஈயஇடைவெளி: அச்சுப்பணியில் வரிகளுக்கிடையே ஈய இடைவரிக்கட்டைகள் இடப்பட்டு அமைக்கப்பட்ட அச்செழுத்துகள்.

**Leader:** இணைப்புத் திரைப்படச் சுருள்: திரைப்பட ஒளியுருப்படிவுக் கருவியில் இணைத்துத் தொடர்பு டுத்துவதற்குத் திரைப்படச் சுருளின் இரு முனையிலும் பயன்படுத்தப்படும் வெற்றுத் திரைப் படச் சுருள்.

**Leaders:** (*அச்சு*). வழி காட்டு வரை: விழிக்கு வழிகாட்டும் புள்ளிகளால் அல்லது கோடுகளாலான வரை.

**Lead hammer:** (*எந்.*) ஈயச்சுத்தியல்: ஈயத்தாலான கொண்டையுடைய ஒரு சுத்தியல். உறுப்புகளில் சிராய்வு ஏற்படுவதைத் தவிர்ப்பதற்காக எஃகுச் சுத்தியலுக்குப் பதிலாகப் பயன்படுத்தப்படுகிறது.

**Lead hole:** (*எந்.*) முந்து துவாரம்: ஒருபெரியதுவாரத்தைத்துரப்பணம் செய்வதற்கு அல்லது ஒரு சாய்வு தளத்தின் மீது மையத் துவாரமிடுவதற்கு வசதியாக ஓர் உலோகத் துண்டில் துரப்பணம் செய்யப்படும் துவாரம்.

**Leading:** (*அச்சு.*) வரி விரிவாக்கல்: அச்சுப்பணியில் வரிகளின் இடை வெளியை அகலமாக்குவதற்கு ஈயத் தகட்டுப் பாலங்களிட்டு அகலமாக்குதல்.

**Leading current:** (*மின்.*) முந்து மின்னோட்டம்: மின்னோட்டத்தை உண்டாக்கும் மின்னியக்க ஆற்றலின் முன்னோடியான உச்ச நீச அளவுகளை எட்டுவதற்கான மாற்று மின்னோட்டம்.

**Leading edge:** (*வானூ.*) முந்து முனை: விமானத்தின் முற்செலுத்தி அலகு முனை. இதனை "நுழைவு முனை" என்றும் கூறுவர்.

**Lead joint:** (*கம்.*) ஈய இணைப்பு: ஒரு மணிக்கும் மூடு குமிழுக்குமிடையிலான வளையவடிவ இடைவெளிக்குள் உருகிய ஈயத்தை ஊற்றி, பின்னர் கூர்முனையை இறுகப் பொருத்துவதன் மூலம் செய்யப்படும் இணைப்பு.

**Lead monoxide:** (*வேதி.*) ஈயமானக்சைடு (PbO): மஞ்சள் நிற

மான அல்லது மஞ்சள் கலந்த சிவப்பு நிறமான தூள். ஈயத்தைக் காற்றில் சூடாக்குவதன் மூலம் பெறப்படுகிறது. ஈயக்கண்ணாடி, மட்பாண்ட மெருகுப் பொருள் தயாரிக்கப் பயன்படுகிறது. கசிவு மூட்டுகளை அடைக்க கிளிசரினுடன் கலந்து சாந்தாகப் பயன்படுத்தப்படுகிறது.

**Lead paint** (வண்.) ஈய வண்ணச் சாயம்: சாதாரண வண்ணப் பொருள். இதில் வெள்ளை ஈயம் ஆதாரப் பொருளாகப் பயன்படுத்தப்படுவதால் இப்பெயர் பெற்றது.

**Lead peroxide:** (வேதி. மின்.) ஈயப்பெராக்சைடு : (PbO) ஓர் ஈயக் கூட்டுப் பொருள் மின்சேமக்கலங்களின் நேர்மின் தகடுகள் இதிலிருந்து தயாரிக்கப்படுகின்றன.

**Lead poisoning :** ஈயநஞ்சு : வண்ணம் பூசுவோர், ஈயத்தில் அல்லது ஈயப் பொருள்களில் வேலை பார்க்கும் தொழிலாளர்களைப் பாதிக்கும் ஒரு நோய்.

**Leads :** (அச்சு.) இடைவரிக் கட்டைகள் : அச்சு வேலையில் வரிகளின் இடைவெளியை அகலமாக்குவதற்கான உலோகத் தகடுகள். இவை அச்செழுத்து அலகுகளின் மடங்குகளில் தயாரிக்கப் பயன்படுகின்றன.

**Lead screw :** (எந்.) முன்னேற்றத் திருகு : திருகு வெட்டுக் கடைசல் எந்திரத்தின் படுகையின் முன்புறம் நீளவாக்கில் அமைந்துள்ள திருகு.

**Lead sponge :** (மின்.) ஈயப்பஞ்சு: ஒரு சேமக் கலத்திலுள்ள எதிர்மின் தகட்டிலுள்ள செயல் திறமுடைய தனிமம்.

**Lead atorage cell :** ஈயச் சேமக் கலம்: கந்தக அமிலத்தின் மின்பகுப்பானிலுள்ள ஈயப் பெராக்சைடு, பஞ்சு ஈயம் இவற்றினாலான தகடுகளைக்கொண்ட சாதனம்.

**Lead tetraethyl:** (வேதி.) ஈய டெட்ரா எத்தில்: $Pb(C_2H_5)_4$ : உள்வெப்பாலை வெடிப்பைத் தடுக்கும் பொருளாகிய கேசோலின் ஒரு முக்கியமான அமைப்பான்.

**Lead wool :** (கம்.) ஈயக் கம்பளி: உருகிய ஈயத்திற்குப் பதிலாகப் பயன்படுத்தப்படும் ஈய இழை குழாய் இணைப்புகளில் பயன்படுத்தப்படுகிறது.

**Leaf :** (அச்சு.) சுவடித்தாள்: மடிக்கப்படாத ஒரு தாள்; அல்லது ஒரு புத்தகத்தில் உள்ளது போன்று மடிக்கப்பட்ட தாளின் இரண்டு பக்கங்கள்.

**Leaflet:** (அச்சு.) துண்டு வெளியீடு : சில பக்கங்கள் மட்டுமே அச்சிடப்பட்ட சிறிய துண்டு வெளியீடு.

**Leaf spring :** இலை விற்சுருள் : அடுக்கடுக்காக அமைந்த தட்டையான பல தகடுகளினாலான ஒரு விற்சுருள். இது உந்து ஊர்திகளில் பயன்படுத்தப்படுகிறது.

**Leef work:** இலை வேலைப்பாடு: அறைகலன்களின் கால்களிலும் சாய்மானங்களிலும் இலைகளின்

வடிவில் செய்யப்படும் நுட்பமான இலை வேலைப்பாடுகள்.

**League:** லீக்: ஏறத்தாழ மூன்று மைல் தொலைவு; 15, 830' நீளம்.

**Lean mixture:** (*தானி.*) செறிவிலா எரிபொருள் கலவை: ஒருவகை எரிபொருள் கலவை. இதில் கேசோலினைவிடக் காற்று அதிக விகிதத்தில் கலந்திருக்கும்.

**Lease:** பாவு நூல் பிரித்தல்: *தறியில் பாவு நூலிழைகளை முனைகளில் பிரித்துவிட்டுத் தறிக்குத் தயாராக்குதல்.*

**Leather:** பதனிட்ட தோல்: தோற்பொருட்கள் செய்வதற்காகப் பதனிடப்பட்ட தோல்.

**Leather-board:** தோல் அட்டை: பல்வேறு இழைப் பொருள்களை சீமைச் சுண்ணாம்பு அல்லது வெண்சுண்ணத்துடன் கலந்து தயாரிக்கப்படும் குழம்பினாலான அட்டை.

**Leether craft:** தோல் வேலைப்பாடு: கருவிகளைக் கொண்டு தோலில் செய்யப்படும் அலங்கார வேலைப்பாடுகள்.

**Learher-ette cover paper:** போலித்தோல் உறைக் காகிதம்: தோல்போல் செய்யப்பட்ட தாளினாலான உறைக் காகிதம்.

**Laather fillet;** தோல் கச்சை: வார்ப்படத் தொழிலில் வார்ப்படங்களின் வலிமையை அதிகரிக்கவும், வார்ப்பட மணலில் கூர்முனைகளை நீக்கவும் பயன்படும் தோலினாலான பட்டை.

**Leatheroid:** செயற்கைத் தாள் தோல்: வேதியியல் முறையில் பாடம் செய்யப்பட்டுப் பச்சைத் தோல் போலிருக்கும் பருத்தித் தாள்.

**Leclanche cell:** (*மின்.*) லெக்லாஞ்சிக் கலம்: *திறந்த மின் சுற்றுவழியுடைய ஓர் அடிப்படை மின்கலம். இதில் கார்பன், துத்தநாக மின்முனைகளும், நவச்சார மின் பகுப்பானும் மின்காந்த முனைப்பியக்க அகற்றியாக மாங்கனீஸ் டையாக்சைடும் பயன்படுத்தப்படுகின்றன.*

**Lectern:** சாய்மேசை: படிப்பதற்குப் பயன்படும் சாய்வான மேசை.

**Ledge:** (*க. க.*) வரை, விளிம்பு: சுவர்ப் பக்கத்தை ஒட்டிய நீள் வரை விளிம்பு.

**Ledger paper:** பேரேட்டுத் தாள்: கணக்குப் பதிவுப் பேரேடுகள் தயாரிப்பதற்கான கனமான தாள்.

**Left hand engine:** (*வானூ:*) இடப்பக்க எஞ்சின்: விமானத்தின் முற்செலுத்தியைப் பார்த்துக் கொண்டிருப்பவருக்கு இடப்புறமாக இயங்கும் வகையில் உள்ள எஞ்சின்.

**Left hand screw:** (*எந்.*) இடப்புறத் திருகு: வடமிருந்து இடமாகத் திருகும்போது முற்செல்லும் வகையில் அமைந்த திருகாணி.

**Left hand thread:** (*எந்.*) இடப்புறத் திருகிழை: *மரையாணி அல்*

லது திருகாணியை இறுக்குவதற்கு இடப்புறமாகத் திருகும் வகையில் அமைந்த திருகிழை.

**Legend:** நீளம்: பிழம்புருவின் மூவளைவையில்கழிமிகையாள அளவைக் கூறு: ஒரு முனையிலிருந்து இன்னொரு முனைக்கு உள்ள தூரம், கால நீட்சியையும் குறிக்கும்.

**Length:** (*அச்சு.*) விளக்க வாசகம்: ஒரு படத்திற்கான விளக்க வாசகம்.

**Lenz's law:** (*மின்.*) லென்ஸ் விதி: 'ஒரு தூண்டு மின்னோட்டத்தின் திசையானது. எப்பொழுதும் அதன் காந்தப் புலன், தூண்டு மின்னியக்க விசையினை உருவாக்குகின்ற காந்தப் புலனின் வலிமையில் ஏற்படும் மாறுதலை எதிர்க்கும்' என்பது லென்ஸ் விதியாகும்.

**Leopard wood:** வேங்கை மரம்: தென் அமெரிக்க மரம். இது கடினமானது; பல வண்ணப் புள்ளிகளுடையது. இது அலங்கார மேலொட்டுப் பலகையாகப் பயன்படுத்தப் படுகிறது.

**Letter board:** (*அச்சு.*) கடிதத்தாள் படிவம்: கடிதம் எழுதுவதற்கான நான்மடி உருவத்தாளின் தலைப்பில் அச்சடிக்கப்பட்டுள்ள படிவம். அச்சடிக்கப்பட்ட பின்னர் உள்ள தாளையும் குறிக்கும்.

**Letter press:** எழுத்து அச்சுப் பொறி: எழுத்துகளைப் படியெடுப்பதற்குப் பயன்படுத்தப்பட்ட ஒரு சாதனம்.

**Letter-press printing:** (*அச்சு.*) அச்செழுத்தில் அச்சிடல்: அச்செழுத்துகளில் அல்லது புடைப் பெழுத்துகள் உள்ள தகடுகளில் அழுத்த அச்சிடுதல்.

**Letter-size drills:** (*உலோ.வே.*) எழுத்து வடிவத் துரப்பணங்கள்: இவை A முதல் Z வரையிலான எழுத்துகளின் வடிவில் அமைந்திருக்கும். A வடிவம் சுமார் 15/64" விட்டமுடையது. Z வடிவம் சுமார் 12/32" விட்டமுடையது.

**Letter spacing:** எழுத்து இடைவெளியாக்கம்: அச்சுப்பணியில் எழுத்துகளிடையே இடைவெளியை அதிகப்படுத்திச் சொற்களை விரிவுபடுத்துதல்.

**Level:** (1) கிடைமட்டம்: கிடைமட்டமான தளத்தில் கிடைமட்ட நிலை.

(2) மட்டக் கருவி: கிடைமட்டத்தைப் பார்ப்பதற்கான கருவி:

(3) ஒலியாற்றல்: தொலைக்காட்சியில் அனுப்பீடு செய்யப்படும் ஒளியின் ஆற்றல் அளவு. இது 'டெசிபல்' கணக்கில் அளவிடப்படும்.

**Leveling instrument:** (*பொறி.*) தளமட்டக் கருவி: ஒரு, காட்சிக் குழாய் கொண்ட சாதனம். இந்தக் குழாயில் சாராயம் இருக்கும். இதில் குமிழ் மையக கோட்டில் இருக்கும் போது, காட்சிக்கோடு கிடைமட்டத்தில் இருக்கும் வகையில் இக் குழாய் பொருத்தப்பட்டிருக்கும். இதிலுள்ள அளவுக் குறியீடுகளு

டைய வளைவரை, இக்கருவி ஊச லாடுவதற்கு இடமளிக்கிறது. அப்போது கிடைமட்டத் தளத்தின் கோணங்களை அளவிடலாம்.

**Leveling rod:** (*எல்.*) சமதளக் கோள்: இதில் இருவகைகள் பொது வாகப் பயன்படுத்தப்படுகின்றன.

(1) இலக்குக் கோல்; (2) தானே அளவு காட்டும் கோல்.

இலக்குக் கோல் அளவுகளைக் கோல் அளவுக்காரர்களே படித் தறிய முடியும். தானே அளவு காட்டும் கோல்களில் அளவுகளைச் சமதள அளவாளர் நேரடியாகப் படித்தறியலாம்.

**Level man:** (*எல்.*) சமதள அளவாளர்: நில அளவையாளரின் சமதள மானியை இயக்குபவர்.

**Lever:** (*பொறி.*) நெம்புகோல்: ஓர் ஆதாரத்தின் மீது இயங்கும் ஒரு விறைப்பான கோல்.

**Leverage:** (*எந்.*) நெம்புகோலியக் கம்: ஓர் ஆதாரத்தின் மீது இயங் கும் நெம்புகோலின் இயக்கம்.

**Lewis:** (*க.க.*) கல் தூக்குப் பொறி: கனமான கற்களைப் பற்றித் தூக்குவதற்கான இரும்புப் பொறியமைப்பு.

**Lewis bolt:** (*க. க.*) நங்கூர மறையாணி: கூர்மையான பல்வெட்டும். கூம்பான வாலும் உடைய ஒரு மறையாணி. இது கட்டுமானப் பணிகளில் பயன்படுகிறது.

**Leyden jar:** (*மின்.*) லேடன் மின் கலம்: மிக எளிய வடிவ வடிகலம். இது உட்புறமும் வெளிப்புறமும் ஓரளவு உயரத்திற்கு வெள்ளீயத் தகட்டுப் படலமிடப்பட்ட ஒரு கண்ணாடி ஜாடியைக்கொண்டிருக் கும். இதன் மரமூடியின் வழியே ஒரு பித்தளைக்கோல் உட்புறப் படலத் துடன் ஒரு சங்கிலி வழியாகத் தொடர்பு கொள்ளும்.

**Lift:** (*வானூ.*) தூக்காற்றல்: விமானத்தைச் சமதளத்திற்கு மேலே உயர்த்துவதற்கான காற்றின் மொத்த ஆற்றல்.

**Lifting magnet:** (*மின்.*) தூக்கு காந்தம்: பாரந்தூக்கிப் பொறியின் கொக்கியினால் தூக்கிச் செல்லப் படும் ஒரு மின்காந்தம். பெரும் பெரும் இரும்பு·எஃகுக் கட்டிக ளைத் தூக்குவதற்கு இது பயன் படுகிறது.

**Ligature:** (*அச்சு.*) எழுத்து இணைப் புரு: அச்சில் 'ff', fi போன்று இரு எழுத்தாக இணைத்து உருவாக்கப பட்ட எழுத்துகள்,

**Light:** (*அச்சு.*) ஒளிப்புழை: ஒளி வருவதற்கான புழை வழி; பல கணிக் கண்ணாடிப் பாளம்.

**Light bridge:** ஒளிமேடை: ஒளிக் கட்டுப்பாட்டுக் கருவிகளும், சில சமயம் விளக்குகளும் ஏற்றி வைக் கப்பட்டிருக்கும் ஒரு மேடை.

**Light cut:** (*பட்.*) நுட்ப வெட்டு மானம்: உலோக வேலைப்பாடு களில் குறுகலாகவும் நுண்ணிய தாகவும் வெட்டி வேலைப்பாடு செய்தல்.

**Light face:** *(அச்சு.)* மென்முகப்பு: அச்சுக் கலையில் மென்மையான முகப்புடைய அச்செழுத்துகள்.

**Light flare:** வெண் புள்ளி: தொலைக்காட்சிப் படத்தில், மோசமான தள அல்லது குவி விளக்கு காரணமாக உண்டாகும் வெண் புள்ளிகள்.

**Light level:** ஒளி அளவு நிறை: ஒரு பொருளின் மீது அல்லது காட்சியின் செறிவளவு. இதுமெழுகுவிளக்கொளி அலகுகளில் அளவிடப் படும்.

**Lightning arrester:** *(மின்.)* இடிதாங்கி: மின்னலை வாங்கிப் பூமியில் செலுத்தும் ஒரு சாதனம், இதனால் மின்னியல் எந்திரங்கள் காக்கப் படுகின்றன.

**Ligne:** லிக்னே: கடிகாரம் செய்பவர்கள் பயன்படுத்தும் ஓர் அளவீட்டு அலகு. இது 6 செ.மீ. அளவுக்குச் சமமானது.

**Lignite:** பழுப்பு நிலக்கரி: பழுப்பு நிறமான, கெட்டியாகாத நிலக்கரி. இதில் பெருமளவு ஈரப்பதம் கலந்திருக்கும்.

**Lignum vitae:** புதர்ச் செடிமரம்: மத்திய அமெரிக்காவில் காணப் படும் நடுத்தர வடிவளவுடைய புதர்ச்செடி. இதன் மரம் மிகக் கடினமானது; கனமானது. இதன் ஒரு கன அடி 20 கி.கி. எடையுள்ளது. தாங்கிகளும், செருகு வகைக் கப்பிகளும் செய்யப் பயன் படுகிறது.

**Lime:** *(க. க.)* சுண்ணாம்பு: சுண்ணாம்புக்கல், சிப்பிகள் போன்றவற்றின் மீது வெப்பம் செயற்படுவதால் கிடைக்கிறது. கட்டிடப்பணிகளில் பலவிதங்களில் பயன்படுகிறது. இதனைக் கால்சியம் ஆக்சைடு (($CaO$) என்பர்.

**Lime light:** சுடரொளி: ஆக்சிஜனும், ஹைடிரஜனும் கலந்துருவான சுடரொளி. இதனை கால்சியம் ஒளி என்றும் கூறுவர். இது பிரகாசமான ஒளியைத் தரும். மேடை ஒளியமைப்புகளுக்குப் பயன்படுகிறது.

**Lime stone:** *(க.க.)* சுண்ணாம்புக் கல்: இதனைக் கால்சியம் கார்பனேட் ($C_1 CO_3$): என்பர். கட்டுமான வேலைகளுக்குப் பயன்படும் சுண்ணாம்பு தயாரிககப் பயன்படு கிறது.

**Limiter:** வரம்புறுத்துக் கருவி: தொலைக்காட்சியில் ஒலி அல்லது அதிர்வு அலை வீச்சுத் திரிபினை நீக்குவதற்குப் பயன்படும் ஒரு மின்னணுவியல் வாயில்

**Limit gauge:** *(எந்;பட்.)* வரம்புறுத்து அளவி: ஒன்றுக்கொன்று மாறுவதை அனுமதிப்பதற்கென சரியான பரிமாணத்தில் ஒவ்வொரு பக்கத்திலும் மாறுதல் வரம்பு ஒன்று அனுமதிக்கப்படுகிறது. இந்த வரம்புகளுக்கேற்ப அளவிகள் செய்யப் பட்டு, வேலைப்பாட்டினைச் சோதனையிடுவதற்குப் பயன்படுத் தப்படுகின்றன.

**Limits of tolerance :** (எந்.) தாங்கு திறன் வரம்புகள் : எந்திரங் களில் உறுப்புகளின் துல்லியம், கூடுதல் வடிவளவு குறைந்த வடி வளவு பற்றிய வரம்புகள்.

**Limonite :** லைமோனைட் ($CaCo_3$ $M_gCo_3$) ஓர் இரும்பு ஹைடிராக் சைடு. இதனை "பழுப்பு ஹேம டைட்" அல்லது "சதுப்பு இரும்பு" என்றும் கூறுவர்.

**Linden :** எலுமிச்சை இனமரம் :அழ கொப்பனைக்குரிய இருதய வடிவ இலைகளும், சிறு நறுமண இளமஞ் சள் வண்ண மலர்களும் உள்ள மரவகை.

**Line:** (மின்.) (1) மின் கம்பி: மின் உற்பத்தி நிலையங்களிலிருந்து அல்லது துணை மின் நிலையங்களி லிருந்து மின் மாற்றிகளுக்கு அல் லது கட்டிடங்களுக்கு நேரடியாக மின் விசையினைக் கொண்டு செல் லும் மின் கம்பி வழி.

(2) வரி: அச்சுக்கலையில் அச் சிட்ட சொற்கள் அல்லது இலக்கம் அடங்கிய வரி.

(3) பக்கக் கீற்றுவழி: தொலைக் காட்சியில் பக்கவாட்டில் கீற்றுக் கீற்றாக எழும் நிழற் காட்சிக் கூறுகளில் ஒன்று.

**Lineal foot ;** நேர்கோட்டு அடி : நீளவாக்கிலான அடி அளவு. இது சதுர அடி அளவிலிருந்து வேறு பட்டது.

**Line amplifier :** மின்வழி மிகைப் பான்: தொலைபேசியில் மின் அனுப் பீட்டுக் கம்பிக்குச் சைகைகளை வழங்குகிற ஒரு மின் மிகைப்பான்.

**Linear:** நீட்டலளவை சார்ந்த ;ஒரே அளவாக ஒடுங்கி நீண்ட கோடு கள் சார்ந்த.

**Linear molecule:**(குழை.) நெடிய மூலக்கூறு: மிக நீண்ட வடிவமுள்ள ஒரு மூலக்கூறு. பொதுவாக, இது நீண்ட சங்கிலி வடிவ மீச்சேர்மங் களைக் குறிக்கும். மீச்சேர்மங்கள் என்பவை, ஒரே வகைப்பட்ட சேர் மங்களின் அணித் திரள்கள் இணைந்து வேதியியல் முறையில் மாறாமலேயே அணுத்திரள் எடை மானமும், இயற்பியல் பண்பும் மட் டும் கொண்ட மாறுபட்ட பிறிதுருச் சேர்மங்கள் ஆகும்.

**Line cut :** (அச்சு.) வரிவெட்டு: அச்சுக்கலையில், ஒளிச் செதுக்கு முறையில் துத்தநாகத்தில் வரி களை அல்லது பரப்புகளை செதுக்குதல்.

**Lined board:**உட்பொதிவு அட்டை: மெல்லிய காகிதத்தினால் உட் பொதிவு செய்த அட்டை.

**Line drop:** (மின்.) மின்வழி அழுத் தம்: மின்கம்பிகள் வாயிலாக மின் னோட்டத்தைச் செலுத்தும்போது பயன்படுத்தப்படும் மின்னழுத்தம்.

**Line engraving :** (அச்சு.) வரி உருவப்படம்: அச்சுப் பள்ளத்தில் செதுக்கு வரி வேலைப்பாடு மூலம் படங்களை அல்லது எழுத்துக் களை அச்சிடுதல்.

**Line frequency:** வரி அலை வெண் : தொலைக்காட்சியில் ஒரு வினாடியில் அலகிடும் வரிகளின் எண்ணிக்கை.

**Line gauge:** (அச்சு.) வரி அளவி: அச்சுக் கலைஞர்கள் பயன்படுத்தும் ஓர் அளவுகோல், இதில் அளவுகள் பிக்கா, நான்பாரைல்ஸ் என்னும் அச்செழுத்து அளவு அலகுகளில் குறிக்கப்பட்டிருக்கும்.

**Linen finish:** (அச்சு.) துணிக் காகிதம் : துணி போன்று இடிக்கத் தக்க முறையில் தயாரிக்கப்பட்ட காகிதம் அல்லது அட்டை.

**Line scroll:** (க.க.) நார்மடி அணி: கதவுகளை அழகு படுத்துவதற்கான நார்மடிச்சுருள் போன்ற அலங்கார வேலைப்பாடு.

**Line of action :** செயலியக்கக் கோடு: ஒரு விசையின் செயலியக்கக் கோடு என்பது, அந்த ஒரு பொருண்மையைப் புள்ளியின் மீது செயற்படும் திசை என்று பொருள் படும்.

**Line pickup :** தந்திவட இணைவு: தந்தி, தொலைபேசி அறிகுறியீடுகளுடன் தொலை நோக்கிக் குறியீடுகளை ஒருங்கே அனுப்பும்படி பொருந்திய தந்திவட இணைவு போன்ற உலோக மின் கடத்திகள் வாயிலாகச் சைகைகளை அனுப்பீடு செய்தல்.

**Line pipe:** (கம்.) கூம்பு குழாய்: பின்னோக்கிச் சரிந்து கூம்பின் இழையுள்ள இணைப்புடைய தனி வகைக் குழாய். இது பொதுவாக அதிக நீளத் திருகிழையுடையதாக இருக்கும்.

**Liner** (எந்.) புறஉறை: ஓர் எஞ்சினின் நீள் உருளையின் உட்புறம் பொருந்தக்கூடிய ஒரு உறை. இதனை அகற்றி விடவும் முடியும், இது ஒரு தாங்கிக்குரிய சுழல் உருளையாகவும் செயற்படும்.

**Line shaft :** (எந்.) தொடர் சுழல் தண்டு: பல சுழல் தண்டுகள் ஒன்றாக இணைக்கப்பட்டுள்ள ஒரு தொடர். இது பிரதான சுழல் தண்டாக இருக்கலாம் அல்லது இல்லாதிருக்கலாம்.

**Lines of force:** (மின்.) விசைக் கோடுகள்: ஒரு காந்தவிசைக் கோடு, வடதிசை காட்டும் துருவம் அதைச் சுற்றியுள்ள மற்றத் துருவங்களின் பாதிப்பினால் காட்டுகின்ற திசையினைக் குறிப்பதாகும்.

**Lining:** (அச்சு.) வரிசையமைப்பு: அச்செழுத்து முகப்புகளை கிடைமட்டத்தில் துல்லியமாக வரிசைப் படுத்தி அமைத்தல்.

**Link:** (எந்.) கண்ணி: சங்கிலியின் ஒரு தனிவளையம்.

(2) பிணைப்புக் கருவி: எஞ்சின்களில் ஓரதர் இயக்கத்தைக் கட்டுப்படுத்துவதற்குரிய ஒரு பொறியமைவு.

**Link motion:** பிணைப்பு இயக்கம்: ஓர் உந்து ஊர்தியின் ஓரதர்களை

இயக்குவதற்கான உறுப்புகளை ஒருங்கிணைத்தல்.

**Linograph:** (*அச்சு.*) வரி உருக்கச்சு: வரி உருக்கச்சுப் பொறி போன்றதான உருக்கச்சு எந்திரத்தில் கோத்து வரிப் பாளங்களை வார்த்தெடுக்கும் அச்சுக்கோப்பு எந்திரம்.

**Linotype:** (*அச்சு.*) வரி உருக்கச்சுப் பொறி: அச்சுக்கோப்பு இல்லாமலே எழுத்துருக்களை வரிப்பாளங்களாக உருக்கி வார்த்து அடிக்கும் அச்சுப் பொறி.

**Linseed oil :** ஆளிவிதை எண்ணெய்: வண்ணங்கள் தயாரிப்பதற்கு முக்கியமாகப் பயன்படுத்தப்படும் ஆளிவிதையிலிருந்துவடித்தெடுக்கப்படும் எண்ணெய்.

**Lintel:** (*க. க.*) வாயில் மேற்கட்டை: வாயில், பலகணி ஆகியவற்றின் கிடைமட்ட மேற்கட்டை.

**Linters:** குற்றிழைப் பருத்தி:பருத்தி விதையிலிருந்து பிரித்தெடுக்கப்படும் குறுகிய இழைப் பருத்தி இது மெத்தை, திண்டு வேலைப்பாடுகளுக்குப் பயன்படுகிறது.

**Lintless cotton:** விதைப் பொதிவிலாப் பருத்தி: நீண்ட இழைப் பருத்தி; இதில் பிற பருத்திகளில் உள்ளது போன்று விதைகள் பஞ்சில் பொதிந்திருக்காது.

**Lip:** (*பட்.*) வெட்டுமுனை: எந்திரப் பட்டறை வழக்கில் ஒரு கருவியின் வெட்டுமுனை.

**Lique-faction:** (*இயற்.*) திரவமாக்குதல் . கெட்டிப் பொருள் அல்லது வளிப் பொருளை திரவமாக்குதல்.

**Liquid :** (*வேதி.*) திரவம்: ஒரு பொருளின் திரவநிலை. இதற்குக் குறிப்பிட்ட கொள்ளளவு உண்டு. கொண்டிருக்கும் கலத்தின் வடிவத்தைப் பெற்றிருக்கும்.

**Lipuid air:** (*வேதி.*)திரவக் காற்று: கடுங்குளிர்ச்சியினால் திரவமாக்கப்பட்ட காற்று. இது குளிர்ப்பதனப் பொருளாகப் பயன்படுத்தப்படுகிறது.

**Litmus paper:** லிட்மஸ் தாள்: வேதியியல் நிறமாற்ற வண்ணப் பொருள் தோய்ந்த நீலத்தாள்.

**Live:** நேரடி ஒளிபரப்பு: தொலைக்காட்சியில் ஒளிப்பதிவு மூலமாக அல்லாமல் நிகழ்ச்சிகளை நேரடியாகவே ஒளிபரப்புதல்.

**Live axles:** (*தானி.*) இயங்கு இருசுகள்: பாரமும்: விசைப்பயன் பாடும் அமைந்துள்ள இருசுகள். இவற்றில் பாதி மிதவை, முக்கால் மிதவை வகைகளும் அடங்கும்.

**Live center:** (*பட்.*) இயங்கு மையம்: கடைசல் எந்திரம் அல்லது அது போன்ற எந்திரத்தின் சுழலும் கதிரிலுள்ள மையம். வேலைப்பாடு செய்யப்படும் பொருள் திரிபான பாதையில் செல்லாமல் பார்த்துக்கொள்வதற்கு இது இன்றியமையாதது.

**Live load:** (*பொறி.*) இயங்கு பாரம்: இயங்குகின்ற அல்லது திரும்பத் திரும்ப வருகிற பாரம் இது அதன் இயையில் மாறாமல் இருப்பதில்லை.

**Live matter:** (*அச்சு*) அச்சு வாசகம்: அச்சிடவேண்டிய வாசகம்.

**Live spindle:** (*எந்.*) இயங்கு கதிர்: ஒரு கடைசல் எந்திரத்தின் சுழலும் பகுதியின் உராய்வு தாங்கி உருளையிலுள்ள சுழலும் கதிர் இது வால் பகுதியிலுள்ள நிலையான கதிருக்கு நேர் எதிரானது.

**Load:** (*மின்.*) மின்னோட்ட அளவு: மின்விசை ஆக்கப் பொறியால் குறித்த காலத்தில் வெளியேற்றப் படும் மின்னோட்ட அளவு.

**Loaded wheel:** அரவைச் சக்கரம்: அரவை செய்யப்படும் பொருளின் துகளினால் மெருகிடப்பட்ட அல்லது தடங்கலிட்ட சக்கரம்.

**Load factor:** (*வானூ.*) சுமைக் காரணி: ஒரு விமானத்தில் ஓர் உறுப்பின் மீதான குறிப்பிட்ட பாரத்திற்கும், நேரிணையான அடிப்படைப் பாரத்திற்குமிடையிலான விகிதம். இது பொதுவாக, முறிவுறுத்தும் பாரத்திற்கும் அடிப்படைப் பாரத்திற்குமிடையிலான விகிதமாகக் குறிக்கப்படும்.

**Loading:** காகித மெருகுப் பொருள்: காகிதத்தை வழுவழுப்பாக்குவதற்கு அல்லது ஒளி புகாதபடி செய்வதற்குப் பயன்படுத்தப்படும் வண்ணப் பொருள் அல்லது கனிமப் பொருள்.

**Loam:** (*வார்.*) களிச்சேற்று வண்டல்: வார்ப்பட வேலையில் பயன்படும் மணலும் களிமண்ணும் கலந்த கலவை.

**Loam molds:** (*வார்.*) களிச்சேற்று வண்டல் வார்ப்படம்: செங்கற்களினால்உருவாக்கப்பட்டுகளிச்சேற்று வண்டல்கொண்டு மேற்பூச்சு பூசப்பட்ட வடிவங்கள். இந்த வார்ப்படங்கள் பெரும்பாலும் பெரிய வடிவங்களை வார்ப்பதற்குப் பயன்படுத்தப்படுகின்றன.

**Lobby:** (*க. க.*) முகப்பு அறை: ஒரு கட்டிடத்தில் முகப்பிலுள்ள ஒரு பெரிய அறை. உணவகங்களில் உள்ளதுபோல் இதனை பொதுக்கூடமாகவும், புகுமுகக் கூடமாகவும் பயன்படுத்தலாம்.

**Loblolly pine:** (*மர.*) சிவப்புத் தேவதாரு: கரணையுடைய, மென்மையான இழை கொண்ட, மிகுந்த மென்மரமுள்ள ஒரு வகைத் தேவதாரு மரம். அமெரிக்காவின் தென் பகுதியில் சட்டங்களுக்கு மிகுதியும் பயன்படுத்தப்படுகிறது.

**Local action:** (*மின்.*) உள்ளிட நிகழ்ச்சி: ஓர் அடிப்படை மின்கலத்தில், மின்பகுப்பானின் மேற்பரப்பின் கீழுள்ள நேர்மின் முனையில் (எதிர்ச் சேர்முனை) ஏற்படும் வேதியியல் வினை.

**Local cuerrents:** (மின்.) உள்ளிட மின்னோட்டங்கள்: இவற்றைச் சுழல் மின்னோட்டங்கள் அல்லது ஃபூர்க்கால்ட் மின்னோட்டங்கள் என்றும் கூறுவர்.

**Local vent:** (கம்.) உள்ளிடக் காலதர்: ஓர் அறையிலிருந்து மாசடைந்த காற்றினை வெளியேற்றுவதற்கான ஒரு குழாய் அல்லது கூண்டு.

**Locate:** இட அமைவு: ஒரு குறிப்பிட்ட இடத்தில் அல்லது இடச் சூழலில் அமைத்தல்; இடத்தைக் குறித்திடுதல் அல்லது எல்லைகளைக் குறித்தல்.

**Lock:** (மர.) பூட்டு: பூட்டு விசைத்தாழ்.

**Locker:** (க. க.) நிலைப்பெட்டி: சிறிய அடுக்குப் பெட்டி.

**Leckin:** (இயற்.) ஒலித்தெளிவு: தொலைக்காட்சியில் படம் நிலையாகவும் தெளிவாகவும் தெரிவதற்குரிய நிலை. தொலைக்காட்சியில், ஒளிபரப்புக் கருவியிலிருந்து வரும் ஒரு கணத்தொகை நிகழ்வுத் துடிப்புகளினால் அலைவீச்சுச் சுற்றுவழிகள் கட்டுப்படுத்தப்படும் போது இந்த ஒளித்தெளிவு நிலை ஏற்படுகிறது.

**Locking bolts:** (எந்.) பூட்டு மரையாணிகள்: எந்திர உறுப்புகளை அவற்றின் நிலைகளில் பொருத்திப் பூட்டுவதற்குரிய மரையாணிகள்.

**Locking stile:** (தச்சு.) பூட்டு நிலை வரிச்சட்டம்: பூட்டு இணைக்கப்பட்டுள்ள கதவின் பகுதி.

**Lock nut:** (எந்.) பூட்டுச் சுரையாணிகள: பிரதானச் சுரையாணி பின்புறம் நழுவிவிடாமல் தடுப்பதற்காக மற்றொரு சுரையாணியின் அடிப்புறம் திருகி இறுககப்படும் ஒரு மெல்லி மரையாணி.

**Lock pin:** (எந்.)பூட்டு முளை: எந்திரத்தின் உறுப்புகள் கழன்று விடாமலிருப்பதற்காக உறுப்பினுள் செருகப்படும் பிணைப்பூசி அல்லது முளை.

**Lock stitch:** பூட்டுத் தையல்: தையல் எந்திரங்களில் தைப்பது போன்ற ஈரிழைத் தையல்.

**Lockup :** (அச்சு) முடுக்கிப்பூட்டுதல் : அச்சு எந்திரத்தில் அச்சுப் பதிப்புச் சட்டங்களை முடுக்கிப் பூட்டுதல்.

**Lock washer :** பூட்டு வளையம்: அழுத்த விற்சுருள்போல் வினை புரியும் பிளவு வளையம். ஒரு பூட்டு மரைபோல் செயற்படுகிறது.

**Locust :** இலவங்கமரம் : நடு நிலக்கடலக மரவகை; கடினமானது. நீண்டநாள் உழைக்கக் கூடியது. புற அலங்கார வேலைப் பாடுகளுக்கு ஏற்றது.

**Lodestone :** (க.க.) அயக்காந்தம்: இயற்கையான காந்தக்கல்; மாக்னட்டைட்.

**Loess :** (மண்.) மஞ்சள் வண்டல் ஆற்றுப்பள்ளத்தாக்குகளில் படியும் களிமண் கலந்த சாம்பல் மஞ்சள் நிறமான வண்டல் படிவு. மிசிசிபிப்

பள்ளத்தாக்கிலும், சீனாவிலும் 5 அடி முதல் 1000 அடி ஆழத்தில் கிடைக்கிறது.

**Loft dried paper:** உயர்தள உள் காகிதம் : மேற்பரப்பு வடிவாக்கம் செய்யப்பட்ட பின்பு உயர்தளத்தில் உலர்த்தப்படும் காகிதம்.

**Log :** (கணி.) [1] மடக்கை: எண்ணுக்கு நிகரான மதிப்புடைய கட்டளை விசை எண்ணின் மடங்கெண்.

(2) மரக்கட்டை: வெட்டப்பட்ட மரத்துண்டு.

**Logarithm:** (கணி.) மடக்கை: எண்ணுக்கு நிகரான மதிப்புடைய கட்டளை விசை எண்ணின் மடங்கெண்.

**Loggia:** (க. க.) படிமேடை இருக்கை: திறந்த பக்கங்கள் உள்ள படிமேடை இருக்கை.

**Logo-type:** (அச்சு.) சொற்பாள வார்ப்பு: அச்சு முறையில் இணையெழுத்து வார்ப்பு.

**Logwood :** (வேதி.) சாயமரம்: மத்திய அமெரிக்காவிலும், மேற்கிந்தியத் தீவுகளிலும் வளரும் ஒரு வகைச் சாயமரவகை சாயத் தொழிலிலும், மருந்துகளிலும் பெருமளவில் பயன்படுகிறது

**Long:** குழைமக் களிமண்: குழைமமாகவும் எளிதில் வேலைப்பாடு செய்வதற்கு ஏற்றதாகவும் உள்ள களிமண்.

**Longeron:** (வானூ.) நீள் உடற்பகுதி: விமானத்தின் நீட்டு வாட்டமான உடற்பகுதி.

**Long fold:** நீள் மடிப்பு: காகிதத்தினை நீளவாக்கில் மடித்தல். இது "அகமடிப்பு"க்கு எதிர்மாறானது.

**Longitude:** தீர்க்கரேகை: இங்கிலாந்திலுள்ள கிரீன்விச் போன்ற ஒரு நடுவிடத்திலிருந்து கிழக்கில் அல்லது மேற்கில் உள்ள தூரம்.

**Longitudinal dihedral angle :** (வானூ.) நிரைகோட்டு இரு சமதள முகக்கோணம்: விமானத்தில் இறகுக்கும் சமநிலையமைவுக்குமிடையிலான கோணத்தில் வேறுபாடு. இறகு அமைவுக் கோணத்தைவிட சமநிலையமைவுக் கோணம் குறைவாக இருக்குமாயின், அந்தக் கோணம் நேரவையாகும்.

**Longitudinal section.** (பட்.) நீளப்பாங்கு வெட்டுவாய்: நீளவாக்கில் வெட்டப்பட்ட பகுதி.

**Longitudinal stability:**(வானூ.) நீளப்பாங்கு உறுதிப்பாடு: விமானத்தில் சமதளச் சீர்மையில் ஏற்படும் உலைவினைப் பொறுத்த உறுதிப்பாடு.

**Long letter:** (அச்சு.) நீள் எழுத்து: 'f' என்னும் ஆங்கில எழுத்தினைப் போன்று ஏறுமுக, இறங்குமுக வரைவுடைய அச்செழுத்து.

**Long screw:** (கம்.) நீள் திருகு: சாதாரணத் திருகிழையைவிட

அதிக நீளமுடைய 6" நீளமுள்ள ஒரு கூர்ங்கருவி.

**Long-shunt compound connection:** (மின்.) நீள் இணைக்கூட்டுப் பிணைப்பு: மின்னகமும் தொடர் வரிசைக் களச் சுருணையும் இணைந்த சுருணையுடன் குறுக்காக இணைக்களச் சுருணையை இணைக்கும்போது உண்டாகும் பிணைப்பு. இது குறுகிய இணைப் பிணைப்புக்கு மாறுபட்டது.

**Long - stroke:** (தானி.) நீள் உகைப்பு: துளையின் விட்டத்தை விடக் கணிசமான அளவு அதிக நீளம் உகைத்திடக் கூடியதான ஓர் எஞ்சின்.

**Loom:** (மின்.) நெகிழ் காப்புறை: மின் கடத்திகளைக் காப்பதற்குப் பயன்படுத்தப்படும் நெகிழ்திறனுடைய உலோகமல்லாத குழாய்.

**Loop:** (வானூ.) கரண வளைவு: விமானம் செங்குத்தான மட்டத்தில் ஏறத்தாழ ஒரு வட்ட வளையமாகச் செல்லும் ஒரு கரண உத்தி.

**Loop wiring:** (மின்.) கண்ணிக் கம்பியிடல்: மின்சுற்று வழியில் மின் கடத்திகளைக் கண்ணிகள் போல் பிணைத்து அமைத்தல்.

**Loose dowel:** தளர் இணைப் பாணி: இறுக்கமாகப் பொறுத்தப் படாத இணைப்பாணி. இது வேண்டும்போது அகற்றுவதற்கு வசதியாக நகரும் வகையில் அமைக்கப் பட்டிருக்கும்.

**Loose pulley:** (பட்.) தளர் கப்பி: எந்திரம் ஓடாதிருக்கும்போது அதை இயக்கும் வார்ப்பட்டை தளர்வாக ஓடுவதற்கான கப்பி. எந்திரம் இயங்கும்போது வார்ப் பட்டை தளர் கப்பியிலிருந்து விரைவாக இயங்கும் கப்பிக்கு மாற்றப் படும்.

**Loper:** சுழல் சக்கரம்: கயிறு திரிப்பதற்குப் பயன்படும் ஒரு சுழல் சக்கரம்.

**Loss factor:** (மின். குழை.) இழப்புக் காரணி: விசைக்காரணியையும் மின் காப்பு நிலை எண்ணையும் பெருக்குவதால் கிடைக்கும் தொகை.

**Lost motion:** (எந்.) இயக்க இழப்பு: இயக்க வேகத்திற்கும், இயக்கப்படும் உறுப்புகளின் வேகத்திற்குமிடையிலான வேறுபாடு. இது குறைபாடான இணைப்புகள், தளர்வுகள் காரணமாக ஏற்படலாம்.

**Loud speaker:** (மின்.) ஒலி பெருக்கி: அதிகத் தொலைவுக்கு ஒலி எட்டும் வகையில் ஒலியைப் பெருக்குவதற்கான ஒரு சாதனம்.

**Louis XV.:** லூயி XV பாணி: ஃபிரெஞ்சு அரசன் பதினைந்தாம் லூயி (1723-1774) காலத்திற்குரிய பாணியிலமைந்த அறைகலன் வடிவமைப்புகள். இந்த அறைகலன்கள், நேர்கோட்டு அமைப்புகளுடனும், மென்மையான முட்டை போன்ற நீளுருண்டை வடிவுடைய

பட்டயத் தகடுகளுடனும் அமைந் திருக்கும். மரத்தாலான இந்த அறைகலன்களில் பெரும்பாலும் வெண்மையான வண்ணம் பூசப் பட்டிருக்கும்.

**Louver:** (க.க; எந்.) காற்றுக் கூப்பு: காற்று புகவிடுவதற்கான பலகை அல்லது கண்ணாடிப் பாளங்களின் மோட்டுக் கவிகை யடுக்கு.

**Lowboy:** ஒப்பனைமேசை: ஆங்கில பாணி ஒப்பனை மேசை அல்லது பல இழுப்பறைகள் உள்ள சிறிய மேசை இது அதிக அளவு $\frac{1}{4}$8″ உயரமுடையதாக இருக்கும்.

**Low brass:** (உலோ.) மந்தப் பித்தளை: 80% செம்பும், 20% துத்தநாகமும் கலந்த மஞ்சள் நிற மான பித்தளை உலோகக் கலவை. இது எளிதில் கம்பியாக இழுத்து நீட்டக் கூடியது.

**Low carbon steels:** (உலோ.) மந்தக்கார்பன் எஃகு: °.3C%-க்கும் குறைவான கார்பன் கொண்ட எஃகு உலோகம். இத்தகைய எஃகு உலோகங்களைப் பரப்பில் கார்பனாக்குவதன் மூலம் கடும் பதப்படுத்தலாம்; ஆனால், செம் பதமாக்க இயலாது.

**Low case:** (அச்சு.) சிறு வடி வெழுத்து: ஆங்கில எழுத்து வடி வின் சிறிய பொது முறை உருவம்.

**Lower case:** (அச்சு.) பொது முறை எழுத்து: ஆங்கில நெடுங் கணக்கில் முகட்டெழுத்துகள் அல் லாத சிறிய பொதுமுறை வடிவ எழுத்துகள்.

**Low finish:** பழுப்புக் காகிதம்: முட்டையின் வெண்தோடு, கன் றின் தோல் போன்றவற்றிலிருந்து செய்யப்பட்ட பழுப்பு நிறக் காகிதம்.

**Low gear:** (தானி.) தாழ்விசை இணைப்புத்திறம்: மிகக் குறைந்த அளவு முன்னோக்கு இயக்க வேகம் உடையதாக இயக்கு உறுப்புகளை அமைத்தல்.

**Low in line:** (அச்சு.) தாழ்வுறு வரி: அடுத்துள்ள அச்செழுத் தினை அல்லது பொருளைவிடத் தாழ்வாக உள்ள அச்செழுத்து.

**Low- pressure laminates:** (குழை.) குறைவழுத்த மென்தகடு கள்: குறைந்த அழுத்த நிலையில் அல்லது அழுத்தம் இல்லாத நிலை யில் அறை வெப்ப நிலையில் தயா ரிக்கப்படும் மென்தகடுகள்.

**Low relief:** மென்புடைப்புச் சித்திரம்: மேற்பரப்பிலிருந்து சிறி தளவு புடைப்பாக இருக்கும் வகை யில் வடிவமைக்கப்பட்ட செதுக் கோவியம்.

**Low tension:** (தானி; மின்.) தாழ்நிலை மின்சுற்று வழி: முதல் நிலை மின் சுற்று வழி (6வோல்ட்).

**Low wing-mono-plane:** (வானூ.) தாழ்நிலை சிறகு ஒற்றைத்தட்டு

விமானம் : விமான உடற் பகுதியின் அடிப்பகுதியில் சிறகுகள் பொருத்தப்பட்டுள்ள ஒற்றை தொகுதி சிறகுகளையுடைய விமானம்.

**Lozenge :** வைர வடிவம்: வைரம் போன்று சாய்சதுர உருவம்.

**Lozenge molding :** (*க.க.*) சாய் சதுர வார்ப்படம் : வைரம் போன்ற சாய் சதுர வடிவில் அமைந்த வார்ப்பட அலங்கார வேலைப் பாடும்.நார்மானியக் கட்டிடக்கலையில் மிகுதியாகப் பயன்படுத்தப்படுகிறது.

**Lubricant :** (*பொறி.*) மசகுப் பொருள் : உராய்வு காப்புப் பொருளாகப் பயன்படுத்தப்படும் எண்ணெய், கொழுப்பு, காரீயகம் போன்ற பொருள்கள். இது வெட்டுமானம் செய்யப்படும் கருவிகளைக் குளிர்விப்பதற்கும் பயன்படுகிறது.

**Lubrication :** (*பொறி.*) மசகிடல்: உராய்வைத் தடுப்பதற்காக மசகுப் பொருள்களைக் கொண்டு மசகிடுதல்.

**Ludlow:** (*அச்சு*) லட்லோ அச்சுப் பொறி : அச்சுக்கலையில், கரைகள், வரிக்கோடுகள், அலங்கார வரிகள் முதலியவற்றை வார்ப்பதற்காகப் பயன்படுத்தப்படும் உருக்கச்சு வரிப்பாள எந்திரம்.

**Lug :** (*எந்.*) பிடிவளை : எந்திர வார்ப்புப் பகுதியின் பிடிப்புக்குமிழ்

**Lumber :** வெட்டுமரம் : விற்பனைக்கு ஏற்ற பலகைகள், துண்டுகள் போன்ற வடிவளவுகளில் கட்டைகளாக வெட்டப்பட்ட வெட்டுமரம்.

**Lumber scale:** வெட்டுமர அளவி முரட்டுக் கட்டைகளாக வெட்ட மட்ட வெட்டு மரத்தில் பலகை அளவுகளை அளவிடுவதற்குப் பயன்படும் அளவுக் குறியிடப்பட்ட ஒரு சாதனம்

**Lumen bronze:** (*உலோ.*) லூமன் வெண்கலம்: 86% துத்தநாகம், 10% செம்பு, 4% அலுமினியம் கொண்ட ஓர் உலோகக் கலவை. மிகுவேகத் தாங்கிகள் தயாரிப்பதற்குக் குறிப்பாகப் பயன்படுகிறது.

**Luminosity:** ஒளிர்வுத் திறன்: சுடர் ஒளி வீசுகின்ற அல்லது மின்னிடுகின்ற திறன்.

**Luminous:** ஒளிர் திறனுடைய:சுடர் ஒளி வீசுகின்ற அல்லது மின்னிடுகின்ற திறனுடைய.

**Luminous paint:** ஒளிரும் வண்ணம்: இருளில் ஒளிவிடுகின்ற திறனுடைய வண்ணப்பூச்சு.

**Lump lime:** கட்டிச் சுண்ணாம்பு : சுண்ணாம்புக் காளவாய்களில் எரிக்கப்பட்ட அல்லது புடமிடப்பட்ட சுண்ணாம்புக் கல்லிலிருந்து தயாரான கட்டிச் சுண்ணாம்பு.

**Lunette:** தொங்கணிச் சரவிளக்கு: கண்ணாடித் தொங்கணிகள் கொண்ட சரவிளக்கு.

**Luster:** (கனி.) பிறங்கொளி: ஒரு கனிமப் பொருளின் ஒளிப் பிரதி பலிப்புப் பண்பு காரணமாக பரப்பில் ஏற்படும் ஒளிர்வு.

**Lute:** கலமட்பூச்சு: காற்றுப் புகா மண்ணடைப் பூச்சு.

(2) சீலைமண்: காற்றுப் புகா மண்ணடைப் பூச்சுக்காகப் பயன்படும் பொருள்.

**Lye:** (வேதி.) கடுங்கார நீர்: மாசு போக்கும் ஆற்றல் வாய்ந்த கழுவு நீர்ம வகை. சோடியம் ஹைட்ராக்சைடு (NaOH), அல்லது பொட்டாசியம் ஹைட்ராக்சைடு (KOH) போன்றவை இவ்வகையின. காரப் பொருள் உள்ள பொருளிலிருந்து கரைசலாக அல்லது தூளாக இது எடுக்கப்படுகிறது. இது முக்கியமாக சோப்பு தயாரிக்கும் தொழிலில் பயன்படுத்தப்படுகிறது.

# M

**Mechinable:** எந்திர வேலைப்பாடு செய்யத்தக்க: கருவிகளினால் அல்லது எந்திரக்கருவியிலுள்ள வெட்டு கருவிகளினால் வேலைப்பாடு செய்யத்தக்க பொருள்.

**Machine:** (எந்.) எந்திரம்: விசையாற்றலை உருமாற்றுவதற்கான அல்லது இடமாற்றுவதற்கான ஒரு சாதனம்.

**Machine eomposition:** (அச்சு.) எந்திர அச்சுக்கோப்பு: எந்திர முறை மூலம் அச்செழுத்துக்களைக் கோத்தல்.

**Machine drawing:** எந்திர முறைப்படவரைவு: எந்திரத்தின் அல்லது எந்திர உறுப்புகளின் வரைபடங்களை எந்திரத்தின் மூலம் வரைதல். இதில் குறிப்புகளும், பரிமாணங்களும் பட்டறைத் தகவல்களும் குறிக்கப்பட்டிருக்கும்.

**Mnchine dried:** எந்திர உலர்த்து தாள்: எந்திரத்தின் உலர்த்து உருளைகளில் உருட்டி முழுமை உலர்த்தப்பட்ட காகிதம்.

**Machine drilling:** (எந்.) எந்திரத் துரப்பணம்: விசையினால் இயக்கப்படும் எந்திரத்தின் மூலம் துரப்பண வேலைகள் செய்தல்.

**Machine finish:** எந்திர மெருகீடு: எந்திரத்தின் மூலமாகக் காகிதத்தின் மேற்பரப்புக்கு மெருகூட்டுதல்.

**Machine glazed:** மெருகேற்றிய தாள்: ஒருபக்கம் நன்கு மெருகேற்றப்பட்ட தாள்.

**Machine molding:** (*வார்.*) எந்திர வார்ப்படம்: வார்ப் புருவங்களைத் தயாரிப்பதற்கான வார்ப்படங்களை தனிவகை எந்திரங்களைப் பயன்படுத்தி உருவாக்குதல்.

**Machine rating:** (*மின்.*) எந்திர அறுதிப்பாடு: ஓர் எந்திரம் அளவுக்கு மீறிச் சூடாகிவிடாமல் விசையை அனுப்பும் திறன்.

**Machinery** :எந்திரத் தொகுதி: எந்திரக் கருவிக்கலன்களின் தொகுதி. ஓர் எந்திரத்தின் செயலுறு உறுப்புகளையும் குறிக்கும்.

**Machinery steel:** (*எந்.*) எந்திர எஃகு: திறந்த உலை முறையில் தயாரித்த எஃகு. இதில் 0.15% முதல் 0.25% கார்பன் கலந்திருக்கும். கடும் பதப்படுத்தக்கூடிய. ஆனால் செம்பதமாக்க முடியாத மென்மையான எஃகு அனைத்தையும் இச்சொல் குறிக்கும்.

**Machine screw:** எந்திரத் திருகு: தெளிவான வெட்டுத் திருகிழைகளும் பல்வேறு தலைவடிவங்களும் கொண்ட திருகு வகை. பெரும்பாலும் பயன்படுத்தப்படும் இந்தத் திருகு ஒரு மரையாணியுடனோ, மரையாணி இன்றியோ அமைந்திருக்கும்.

**Machine tool:** (*பட்.*) வெட்டுக் கருவி: கடைசல் எந்திரம், துரப்பண எந்திரம், இழைப்புளி, அரைவை எந்திரம் போன்ற வெட்டும் வகையைச் சேர்ந்த கருவிகள். இவை மற்ற எந்திரங்களைத் தயாரிப்பதற்குப் பயன்படும் கருவிகள். எனவே, இந்தக் கருவிகள் "தொழில் துறையின் தலைமைக் கருவிகள்" என்று அழைக்கப்படுகின்றன.

**Machining:** எந்திர வேலைப்பாடு: உலோக வேலைப்பாடுகளில் எந்திரங்களினால் செய்யப்படும் நுட்ப வேலைப்பாடுகள்.

**Machining allowance:** (*எந்.*) மெருகுவேலை மிகைப்பகுதி: வெட்டுக் கருவிகளினால்மெருகு வேலைப்பாடு செய்வதற்கு வசதியாகப் போதிய அளவு விடப்படும் மிகைப் பகுதி.

**Machinist:** எந்திர இயக்குநர்: எந்திரக் கருவிகளை இயக்குபவர்.

**Mach number:** (*வானூ.*) ஒப்பு வேக எண்: உண்மையான காற்று வேகத்திற்கும் ஒலியின் வேகத்திற்குமிடையிலான விகிதத்தைக் குறிக்கும் எண். ஒலியை விடக் குறைந்த வேகத்திற்கான இந்த எண் ஒரு பின்னமாகும். ஒலியினும் மிகுதியான வேகத்திற்கு இந்த எண் ஒன்றுக்கு மேற்பட்டதாகும்.

**Macro molecule:** (*குழை.*) பெருமூலக்கூறு: கரைதக்கை நிலைப் பண்புகளை வெளிப்படுத்து அளவுக்கு வடிவளவுள்ள ஒரு மூலக்கூறு.

**Madrono:** (மர.வே.) மாட்ரோனோ: ஒரு பூக்கும் இன மரம். பசிபிக் கடற்கரையோரம் வளர்கிறது. இதன் வெட்டு மரம் கரடு முரடானது; கனமானது; இளஞ்சிவப்பு நிறமுடையது. அறைகலன்கள் செய்வதற்கு மிகுதியும் பயன்படுகிறது.

**Magazine :** (க.க.) படைக்கலக் கொட்டில் : போர்க்காலத்தில் படைக்கலங்களையும் போர்த் தளவாடங்களையும் சேர்த்து வைக்குமிடம்; துப்பாக்கி மருந்து முதலிய வெடிமருந்துகளைச் சேர்த்து வைக்குமிடம்.

(2) பருவ இதழ் : பல எழுத்தாளர்களின் படைப்புகளடங்கிய புத்தக வடிவிலுள்ள பருவவெளியீடு

(3) அச்சுக்கோப்பு எந்திரப் பகுதி : அச்சுக்கோப்பு எந்திரத்தின் ஒரு பகுதி. இதில், அச்சு வார்ப்புருக்கள் அல்லது எழுத்துகள் வரிகளாக ஒருங்கிணைப்பதற்காகச் சேர்த்து வைக்கப்பட்டிருக்கும்.

**Magnalium :** (உலோ.) மாக்னாலியம் : அலுமினியமும் மக்னீசியமும் கொண்ட இலேசான உலோகக்கலவை. இதில் 2%—10% மக்னீசியம் கலந்திருக்கும். இந்த உலோகக் கலவை மிகக் கடினமானது, இதனை எளிதில் வார்க்கலாம்; வடிவமைக்கலாம்; இதில் எளிதில் வேலைப்பாடுகள் செய்யலாம்.

**Magnesia :** (வேதி.) மெக்னீசியா: இதனை வெளிம உயிரகை என்றும் கூறுவர். இது வயிற்றுப் புளிப்பகற்றும் மருந்தாகப் பயன்படுத்தப்படும வெண்பொடி.

**Magnesium :** (உலோ.) மெக்னீசியம் : மிக இலேசான உலோகத் தனிமம். இதன் வீத எடைமானம் 1:74. இது தனியாகப் பயன்படுத்தப்படுவதில்லை. இதனை அலுமினியம் அல்லது பிற உலோகங்களுடன் கலந்து விமானம் முதலியவற்றின் இலேசான உறுப்புகளைத் தயாரிக்கப் பயன்படுத்துகிறார்கள். இந்த உலோகம் எளிதில் தீப்பற்றும் தன்மையுடையது. அதனால், இதில் எந்திரத்தால் வேலைப்பாடுகள் செய்யும் போது தீப்பிடிப்பதற்கு எதிராக முன்னெச்சரிக்கை ஏற்பாடுகள் செய்து கொள்ள வேண்டும். இது கண்கூச வைக்கும் ஒளி விளக்குகளிலும், வாண வேடிக்கைப் பொருள்களிலும் பயன்படுகிறது

**Magnet :** (மின்.) காந்தம் : வளைவில் (குதிரைலாட) அல்லது சலாகை வகைத் துகள்களைக் கவர்ந்திழுக்கு இயல்புடைய பொருள்.

**Magnet core** (மின்.) காந்த உள்ளீடு : இது பெரும்பாலும் மென்இரும்பாக அமைந்திருக்கும். இதனை மையமாகக் கொண்டு கம்பி சுற்றப்பட்டிருக்கும். இக்கம்பியில் மின்விசை பாயும்போது மின்காந்தம் உண்டாகும்.

**Magnetic chuck :** (மின்.; பட்.) காந்தப்பற்றி : காந்த ஈர்ப்பு சக்தி

மூலம் இரும்பையும் எஃகையும் பற்றிக் கொள்ளும் ஒரு வகைப் பற்று கருவி. மேற்பரப்பினை அராவித தீட்டும் எந்திரங்களில் இது முக்கியமான உறுப்பாகும். இதனை நேர் மின்னோட்டத்தை மட்டுமே கொண்டு பயன்படுத்த முடியும்.

Magnetic circuit (மின்.) காந்தச் சுற்று வழி : ஒரு காந்தப் பொருளில் அல்லது ஒரு காந்தக் கருவியில் காந்தவிசை வரிக்கோடுகள் செல்லும் வழி. ஒரு சுற்று வழி ஓர் இடைவெளியையும் கொண்டிருக்கலாம்.

Magnetic circuit breaker : (மின்.) காந்தச்சுற்றுவழிமுறிப்பான்: ஒரு சுற்று வழித் தொடர்பை ஏற்படுத்துவதற்குப் பயன்படும் ஒரு மின்காந்தச் சாதனம்.

Magnetic coil : (மின்.) காந்தச் சுருணை : ஒரு மின்காந்தச் சுருள். இதில் ஒரு கம்பிச் சுருள் ஒரு திசை சுற்றப்பட்டிருக்கும். இதில் மின்னோட்டம் பாயும் போது, அடர்த்தியான காந்தப்புலம் உண்டாக இரும்பையும் எஃகையும் ஈர்க்கும்.

Magnetic cutout: (மின்.) காந்த வெட்டுவாய்: ஒரு மின்சுற்று வழியை, அந்தச் சுற்று வழியின் ஒரு பகுதியை உருக்குவதற்குப் பதிலாக ஒரு மின்காந்தத்தின் மூலம் முறிப்பதற்கான ஒரு சாதனம்.

Magnetic deflection: காந்த விலக்கம்: காந்தப் புலங்கள் மூலம் மட்டுப்படுத்தப்படும் எலெக்ட்ரான் கற்றையின் இயக்கம்.

Magnetic density: (மின்.) காந்த அடர்த்தி: பார்க்க பெருக்கடர்த்தி

Magnetic field: (மின்.) காந்தப் புலம்: ஒரு காந்தத்தின் அருகிலுள்ள இடப்பகுதி. இதன் வழியே காந்த விசைகள் செயற்படுகின்றன.

Magnetic flux: (மின்.) காந்தப் பெருக்கடர்த்தி: மின் காந்தம், நிலைக்காந்தம் அல்லது கம்பிச் சுருள் மூலம் உருவாக்கப்படும் காந்தவிசைக் கோடுகள்.

Magnetic force: (மின்.) காந்த விசை: ஒரு காந்தத்தின் துருவங்கள் கவர்ந்திழுக்கிற அல்லது விலகச் செல்கிறவிசை.

Magnetic fuel pump: (தானி.) காந்த எரிபொருள் இறைப்பான்: வெற்றிட அமைப்பு முறையின் உதவியின்றி எரிபொருள் வழங்குவதை முறைப்படுத்தும் மின்விசையால் இயங்கும் எந்திர இறைப்பான்.

Magnetic hoist: (மின்.) காந்தப் பாரந்தூக்கி: மின் காந்தத்தின் மூலம் பாரத்தைத் தூக்கும் ஒரு பாரந்தூக்கி எந்திரம்.

Megnetic induction: (மின்.) காந்தத் தூண்டல்: பாய்வுத் திசைக்குச் செங்குத்தாகவுள்ள குறுக்கு

வெட்டுப் பரப்பின் ஓர் அலகிலுள்ள காந்தக் கோடுகளின் அல்லது காந்தப் பெருக்கத்தின் எண்ணிக்கை.

Magnetic needle: (மின்.) காந்த ஊசி: ஒரு நுண்ணிய எஃகுக் காந்தம். இதனை ஒரு ஆதாரத்தில் வைக்கும்போது, பூமியின் காந்தத் துருவங்களுக்கேற்ப, இயல்பாக வடக்கு-தெற்குத் திசையில்நிற்கும்.

வடக்கு நோக்கிய கருவியில் எப்போதும் வடக்கையே காட்டும் காந்த ஊசி.

Magnetic permeability: (மின்.) காந்தத் தகவு: காந்தத் தாக்குதலுக்கும் இளக்கி அடர்த்திக்கும் உள்ள தகவு. ஒரு பொருளுக்குள் காந்தம் எளிதாக ஊடுருவிச் செல்லக்கூடிய திறனைக் கணக்கிடும் அளவு.

Magnetic potential: (மின்.) காந்த ஆற்றல்: காந்தப் புலத்தின் எல்லையிலிருந்து ஒரு காந்தத் துருவ அலகினைக் காந்த ஆற்றல் தேவைப்படும் புள்ளிக்கு நகர்த்துவதற்குத் தேவைப்படும் பணியின் அளவு.

Magnetic screen or shield: (மின்.) காந்தத் திரை அல்லது கேடயம்: இது உட்புழையான இரும்புப் பெட்டி. இதன் மையப்பகுதி காந்த விசைக்கோடுகளின்றி அமைக்கப் பட்டிருக்கும்.

Magnetic switch: (மின்.) காந்த இணைப்பு விசை: மின்காந்தம் மூலம் இயக்கப்படும் அல்லது கட்டுப்படுத்தப்படும் ஓர் இணைப்பு விசை.

Magnetic whirl: (மின்.) காந்தச் சுழற்சி: மின்னோட்டம் பாயும் ஒவ்வொரு கம்பியைச் சுற்றிலும் ஒரு வடிவமான காந்தப்புலம் நீர்ச்சுழி அல்லது சுழல் போல் அமைந்திருக்கும். இதுவே காந்தச் சுழற்சி எனப்படும். இது தூண்டலற்ற சுருணையைக் குறிப்பதில்லை.

Magnetism (மின்.) காந்த விசை: இரும்பு, எஃகு, வேறு பொருள்களுக்குள்ள ஒருவகை ஈர்ப்பு இயல்பு. இந்த இயல்பு காரணமாக, இவை குறிப்பிட்ட விதிகளுக்குட்பட்டு, ஈர்ப்புவிசைகளையும், எதிர்ப்புவிசைகளையும் செலுத்துகின்றன.

காந்தவியல்: காந்தவிசை பற்றிய விதிகளையும் நிலைகளையும் ஆராயும் அறிவியல் பிரிவு.

Magnetite: (கனி.) அயக்காந்தம். (மாக்னடைட்): காந்த விசையுடைய இரும்புக் கனிமம ($Fe_3O_4$)

Magnetization: (மின.) காந்த விசையூட்டுதல்: காந்தத்தின இயல்புகளை ஏற்றல் அல்லது காந்தவிசையினை ஊட்டுதல்.

Magneto (மின்.) தனிக்காந்த மின்னாக்கி: உள் வெப்பாலைப் பொறி முதலியவற்றில் தீக் கொளுவுவதற்காகப் பயன்படுத்தப்படும் தனி நிலைக்காந்த மின்னாக்கிப் பொறி. இதில் மின்காந்தத் தூண்டுதல் மூலம் மின்விசை உற்பத்தி

செய்வதற்காக நிலைக் காந்தங் களும், ஒரு மின்னகமும் அமைந் திருக்கும்.

**Magnet–o–motive force:** (*மின்.*) காந்தவியக்க விசை: ஒரு முழுமையான காந்தச் சுற்று வழி யின் நெடுகிலும் ஒருங்கிணைக்கப் பட்ட முழுமையான காந்தம் ஏற் றும் விசை.

**Magnet steel** காந்த எஃகு: இது சாதாரணமாக, குரோமியமும் மக்னீ சியமும் கலந்த உயர்தரமான எரியும் மின்னிழைம எஃகினைக் குறிக்கும். இது நிலைக்காந்தங் களுக்குப் பயன்படுகிறது.

**Magnet wire:** (*மின்.*) காந்தக் கம்பி: மின்னகங்கள், புலச் சுருள் கள், தூண்டு சுருள்கள் முதலியவற் றின் சுருணைகளில் பயன்படுத்தப் படும் கம்பி. இது சிறியது, ஒரே செம்புக் கம்பியினாலானது; பஞ்சு, பட்டு, எனாமல் போன்றவற்றால் மின் காப்பிடப்பட்டது; செறிவூட் டப் பெறாதது.

**Mahl stick:** (*வண்.*) தாங்கு கோல்: ஓவியம் வரைபவர்கள் இடது கைத் தாங்கலாகப் பயன் படுத்தும் தோலுருளை அடியுடைய கோல்.

**Mahogany:** சீமை நூக்கு: உல கெங்கும் பெட்டிகள், அறைகலன் கள் செய்வதற்குப் பயன்படும் முக் கியமான மரம். தெற்கு ஃபுளோ ரிடா, மேற்கிந்தியத் தீவுகள், மெக் சிக்கோ, மத்திய அமெரிக்கா, கொலம்பியா, வெனிசூலா, மேல் அமேசான் மண்டலம் ஆகியவற் றில் மிகுதியாக வளர்கிறது. இம் மரம் வெட்டியவுடன் இளஞ் சிவப்பு அல்லது வஞ்சிரம் அல்லது மஞ்சள் நிறத்தில் இருக்கும்; வெயில் படப்படக் கருஞ்சிவப்பு நிறமாக மாறிவிடும். அடர்த்தி வேறுபடும் கரணைகள் கவர்ச்சி யான உருவங்களில் அமைந் திருக்கும்.

**Main bearings:** (*தானி.*) முதன் மைத் தாங்கிகள்: உந்து ஊர்தி எஞ் சின்களில் வணரி அச்சுத் தண்டி னைத் தாங்கி நிற்கும் தாங்கிகள் முதன்மைத் தாங்கிகள் ஆகும்.

**Mains:** (*மின்.*) மின்வாய்கள்: கிளைமின் சுற்று வழிகளுக்கு மின் விசை வழங்குகிற மின்னியல் கடத்திகள்.

**Main shaft:** (*எந்.*) முதன்மைச் சுழல்தண்டு: எஞ்சினிலிருந்து அல் லது இயக்கியிலிருந்து நேரடியாக மின்விசையைப் பெற்று, மற்ற உறுப்புகளுக்கு விசையை அனுப்பு கிற சுழல்தண்டு.

**Main supporting surface:** (*வானூ.*) முதன்மை ஆதாரப்பரப்பு: விமானத்தில், இறகுகளின் மேற் பரப்பு. இப்பரப்பு விமானம் இயங்கு வதற்கு உதவியாக இருக்கிறது.

**Major axis:** நெட்டச்சு: ஒரு நீள் வட்டத்தின் நீள் விட்டம்.

**Major diameter:** (எந்.) நீள் விட்டம்: இதனைப் 'புற விட்டம்' என்றும் அழைப்பர். ஒரு திருகில் அல்லது சுரையாணியில் உள்ள மிகப் பெரிய விட்டம்.

**Make up:** (அச்சு.) பக்கத் தயாரிப்பு: அச்சுக்கலையில் அச்சுக் கோத்த எழுத்துகளைப் பக்கங்களாகத் தயாரித்தல்.

**Make - up rule:** (அச்சு.) பக்கத் தயாரிப்பு வரித்தகடு: அச்சுக்கலையில் பக்கங்களைத் தயாரிப்பதில் பயன்படுத்தப்படும் எஃகு வரித் தகடு.

**Malachite:** (கனி.) மாலாசைட்: தாமிரத் தாதுக்களில் ஒன்று பச்சை நிறமான, அடிப்படைத் தாமிரக் கார்போனேட். மேலேட்டுப் படிவங்களாகப் பெருமளவில் கிடைக்கிறது. "மலைப் பச்சை" என்னும் பெயரில் வண்ணப் பொருளாகப் பயன்படுகிறது.

**Malleable:** நெகிழ் திறனுடைய: தங்கம் போன்ற உலோகங்களை உடைந்துவிடாதபடி தகடாக நீட்டத்தக்க நெகிழ்திறத் தன்மையுடைய.

**Malleable cast iron ;** (உலோ.) நெகிழ்திற வார்ப்பிரும்பு: ஓரளவுக்குக் கரிம நீக்கம் செய்யப்பட்ட வார்ப்பிரும்பு. இது சாதாரண வார்ப்பிலிருந்து வேறுபட்டிருக்கும். இதில் கட்டமைப்புக் கரணையாக இருப்பதற்குப் பதிலாக இழை இருக்கும். கடும் அதிர்ச்சிக்குள்ளாகும் உறுப்புகளைத் தயாரிக்க இது பயன்படுகிறது.

**Malleablizing :** (உலோ.) நெகிழ்திறனூட்டுதல்: வெண்மையான வார்ப்பிரும்பிலிருந்து பெரும்பாலான கார்பனை அகற்றுவதற்காக அல்லது கார்பனைச் செம்பதமாக்கிய கார்பனாகமாற்றுவதற்காகப் பதப்படுத்தும் முறை.

**Maltose:** (வேதி.) மால்ட்டோஸ்: மாவூறலிலிருந்து எடுக்கப்படும் படிக வடிவச் சர்க்கரை. ரொட்டி தயாரிக்கப் பயன்படுகிறது.

**Management :** மேலாண்மை: நிருவாகம் செய்தல்; நெறிப்படுத்துதல்; கண்காணித்தல்; கட்டுப்படுத்துதல்.

**Mandrel :** (எந்.) குறுகு தண்டு: கடைசல் பிடிக்கும் எந்திரத்தின் நடுவச்சு. கடைசல் பிடிக்க வேண்டிய பொருளை இதில் பொருத்தி, இதனைச் சுழலச் செய்து கடைசல் வேலை செய்வார்கள்.

**Maneeuver :**(வானூ.) நுட்ப இயக்கம்: (1) விமானத்தைத் தேர்ச்சித் திறனுடன் மிக நுட்பமாக இயக்குதல்.

(2) விமானத்தில் சுழன்று பறந்து சாதனை புரிதல்.

**Maneuverability:** (வானூ.) நுட்ப இயக்கத் திறன்: விமானத்தை எளிதாக இயக்குவதற்கு இடமளிக்கும் நுட்ப இயக்கத்திறன்.

**Manganese :** (*கனி;*) மாங்கனீஸ் (மங்கனம்) : கடினமான, எளிதில் உடைந்து போகக்கூடிய உலோகத் தனிமம். பழுப்பான வெண்மை நிறம் முதல் சிவப்பு நிறம்வரை பல வண்ணங்களில் கிடைக்கிறது. இது காந்தத் தன்மையற்றது. எஃகு, கண்ணாடி, வண்ணங்கள் தயாரிக்கப் பயன்படுகிறது.

**Manganese bronze :** (*உலோ.*) மாங்கனீஸ் வெண்கலம் : ஓர் உலோகக்கலவை. இதில் 55%—60% செம்பு, 35% — 42% துத்தநாகம், சிறிதளவு வெள்ளீயம், மாங்கனீஸ், அலுமினியம், இரும்பு, ஈயம் கலந்திருக்கும். வன்மையும் வலிமையும் வாய்ந்த உறுப்புகள் செய்யப் பயன்படுகிறது.

**Manganese dioxide** (*மின்.*) மாங்கனீஸ் டையாக்சைடு : மின் கலங்களில் மின் முனைப்பு நீக்கப் பொருளாகப் பயன்படும் வேதியியல் பொருள்.

**Manga :** (*உலோ.*) மாங்கனீஸ் எஃகு : இதில் 0.20% 0.50% கார்பனும், 1.00%-1.30 மாங்கனீசும் கலந்திருக்கும். இது மிக அதிக அளவு விறைப்புத்திறன் உடையது. 3.5% நிக்கல் எஃகுக்குப் பதிலாகப் பயன்படுத்தப்படுகிறது. இதிலுள்ள மாங்கனீஸ் அளவை அதிகரிப்பதால், இது முறியும் தன்மையுடையதாகிறது.

**Manganin :** (*உலோ.*) மாங்கானின் : செம்பு, நிக்கல், அய மாங்கனீஸ் கலந்த உலோகக் கலவை. தரமான தடைச் சுருள்கள் தயாரிக்கப் பயன்படுகிறது.

**Manifold :** (*தானி.*) புறம்போக்குக் குழாய் : உந்து ஊர்தி எஞ்சினில் உள்ள புறம் போக்குப் பல் புழை வாய்க் குழாய்கள் இது ஒவ்வொரு நீள் உருளையிலிருந்தும் புறம் போக்கு வாயுக்களைத் தனியொரு புறம்போக்குக் குழாயினுள் செலுத்துவதற்குப் பயன்படுகிறது.

**Manifold paper :** (*அச்சு.*) : பல் படித்தாள் : பல படிகளை ஒருங்கே எடுப்பதற்குப் பயன்படும் மென்மையான காகிதம்.

**Manifold vacuum :** (*தானி.*) புறம் போக்குக் குழாய் வெற்றிடம் : எஞ்சின் இயங்கும்போது புறம் போக்குக் குழாயிலுள்ள வாயு மண்டல அழுத்த நிலை.

**Manila :** சணல் தாள் : சிப்பம் கட்டுவதற்குப் பயன்படும் மஞ்சள் நிற அல்லது மஞ்சள் பழுப்பு நிறக் காகிதம்.

**Manometer:** (*இயற்.*) அழுத்த மானி: ஆவி, வாயு போன்றவற்றின் அழுத்தத்தை அளவிடுவதற்கான ஒரு கருவி.

**Mansard roof:** (*க.க.*) இரு சரிவு மோடு: மேற்பாதிச் சாய்வைவிடக் கீழ்ப்பாதிச் சாய்வு செங்குத்தாகவுள்ள இரு சரிவு மோடு.

**Mansion:** (*க.க.*) மாளிகை: ஒரு பெரிய அலங்காரமான வீடு.

**Mantel:** (க.க.) தண்டயம்: அடுப் பங்கரையிலுள்ள தண்டயப் பலகை.

**Mantissa:** (கணி.) மடக்கைப் பதின்மானம்: இயற்கணிதத்தில் ஒரு மடக்கையின் தசமப்பகுதி அல்லது பின்னப்பகுதி.

**Manual:** (பட்.) (1) கையேடு: அறிவுறுத்தங்கள் அடங்கிய சிறு குறிப்பு ஏடு.

(2) கைவேலை: கைகளால் செய்யப்படும் பணிகள்.

**Manual arts:** கைவேலைப்பாடு: கைகளினால் செய்யப்படும் நுட்பமான கலை வேலைப்பாடுகள்.

**Manual switch:** (தானி.) ஆளியக்க விசை: உந்து ஊர்திகளில், கைகளால் அல்லது கால்களால் இயக்கப்படும் விசை. இது மற்ற வழிகளில் இயக்கப்படும் விசைக்கு மாறானது.

**Manuscript:** (அச்சு.) எழுத்துப் படி: அச்சிடுவதற்குக் கையால் எழுதி அல்லது தட்டச்சு செய்து கொடுக்கப்படும் மூல வரைபடி.

**Marble:** (க.க.) (1) சலவைக்கல்/ பளிங்குக் கல்: வெண்மை, கரும் பழுப்பு, பழுப்பு வண்ணங்களிலுள்ள ஒரு வகைச் சுண்ணாம்புக் கல் கட்டிடங்களின் உட்புற, வெளிப்புற அலங்கார வேலைப் பாடுகளுக்கு மிகுதியும் பயன்படுகிறது.

(2) பளிங்குத் தாள்: பளிங்குபோல் பளபளப்பாகத் தோற்றமளிக்கும் காகிதம்.

**Marble dust:** பளிங்குத் தூள்: அரைத்துத் தூளாக்கிய சுண்ணாம்புக்கல். மெருகு சுண்ணத்தாள் தயாரிக்கப் பயன்படுகிறது.

**Marbling:** பளிங்கு வண்ணப் பூச்சு: பல்வண்ணச் சலவைக்கல் போல் தோற்றமளிக்கும் வகையில் மரத்தில் வண்ணம் பூசுதல்.

**Margin:** (அச்சு.) பக்க ஓரம்: அச்சுத்துறையில் பக்கங்களில் அச்சிடாது விடப்படும் பக்க ஓர இடம்.

**Marginal note** (அச்சு.) ஓரக் குறிப்பு: பக்கங்களின் ஓர இடத்தில் எழுதப்படும் குறிப்புகள்.

**Marine glue:** (மர.வே.) கடற் பசைப் பொருள்: ஒரு பகுதி கச்சா ரப்பர், இரு பகுதி அவலரக்கு, மூன்று பகுதி நிலக்கீல் கொண்ட பசைப் பொருள்.

**Marking awl** (மர.வே.) குறியிடு தமரூசி: கடினமான மரத்தில் குறியிடுவதற்கான கூர்மையான எஃகுக் கருவி.

**Marking machine:** (மர.வே.) குறியிடு பொறி: வாணிக முத்திரைகள், புனைவுரிமைத் தேதிகள் ஆகியவற்றை வெட்டுகருவிகளிலும், துப்பாக்கிக் குழல்களிலும் பொறிப்பதற்குப் பயன் படும் எந்திரம்.

**Marl:** (மண்.) சுண்ணக்கரிகை உரம்: களிமண்ணும், சுண்ணக் கரிகையும் கலந்த மண்வள உரச் சத்து.

**Marquetry:** (மர. வே.) உள் இழைப்பு வேலை: மரத் தளவாடங் களில் உள் இழைப்பு அலங்கார வேலைப்பாடுகள் செய்தல். அரி தாக தந்தம், எலும்பு, முத்து ஆகிய வற்றிலும் இந்த வேலைப்பாடு செய்வதுண்டு.

**Marsh gas or methane:** (வேதி.) சதுப்பு வாயு அல்லது மீத்தேன்: ($CH_4$): இலேசான, நெடியற்ற, தீப்பற்றக்கூடிய, ஹைட்ரோ கார் பன் என்னும் வாயு. சதுப்பு நிலங் களிலும், சுரங்கங்களிலும் கரிமப் பொருள்கள் சிதைவுறுவதால் இயற்கையாகக் கிடைக்கிறது. பல கரிமப் பொருள்களை வாலை வடிப்பதன் மூலமும் பெறப்படு கிறது.

**Martensitic alloy steels:** (உலோ.) மார்ட்டன் சிட்டிக் உலோ கக் கலவை எஃகு: முழுமையாக மார்ட்டன்சைட் கொண்ட ஒரு வகை எஃகு. மார்ட்டன்சைட் என் பது, கார்பனும், ஆல்ஃபாவும் (இரும்புப் படிகங்கள்) அணுவியக் கச் சிதறல் மூலம் உண்டாவது. இந்த வகை எஃகு, மிகக் கடின மானது; ஆயினும், பதப்படுத்திய அல்லது மென்மையான எஃகி னைப் போன்று அத்துணை கடின மானதன்று. ஆஸ்டினைட்டை 300°C-வெப்ப நிலையில், மெல்ல மெல்லக் குளிர வைப்பதன் மூலம் இது படிகிறது. புகழ்பெற்ற ஜெர் மன் உலோகவியலறிஞர் பேராசிரி யர் ஏ. மார்ட்டன்ஸ் என்பாரின் பெயரில் இது அழைக்கப்படுகிறது.



**Mash seam welding.** (பற்ற.) மசிவு மடிப்புப் பற்றவைப்பு: இது ஒரு வகை மடிப்புப் பற்றவைப்பு முறை. இதில் விளிம்புகள் ஒன்றன் மேல் ஒன்று வைத்து நன்கு மசிக்கப்படு வதன் மூலம் பற்ற வைக்கப்படு கிறது.

**Mask:** முகமூடி: முகத்தை மூடிக் கொள்வதற்கு விசித்திரமான வடி வங்களில் செய்யப்பட்ட பொம் மைத் தலைகள்.

**Masonite:** மாசோனைட்: மர இழையிலான மின்காப்பு அட்டை யின் வாணிகப் பெயர். இது பல் வேறு வகையான மேற்பரப்பு மாதிரிகளில் தயாரிக்கப்படுகிறது. இது பொட்டிப்புகள் அமைப்பதற் குப் பயன்படுகிறது.

**Masonry:** கட்டுமான வேலை: கல், செங்கல் போன்றவற்றால் கட்டி டங்கள் கட்டும் வேலை.

**Mass:** பொருண்மை: இயற்பியலில், ஒரு திரளில் செறிந்தடங்கியுள்ள பொருளின் அளவு.

அச்சுக் கலையில் ஒரு பக்க அச்செழுத்துச் செறிவுப் பகுதிகள்.

**Mass production:** பேரளவு உற் பத்தி: எந்திரக் கருவிகளைப் பயன் படுத்தித் திட்டமிடப்பட்ட பெரிய அளவில் பொருட்களை உற்பத்தி செய்தல்.

**Master cylinder:** (*தானி.*) தலைமை நீள் உருளை: உந்து தண்டு உடைய பாய்மரப் பொருளடங்கிய நீள் உருளை. இதன் மூலம் கால் மிதியை அழுத்தித் தடுப்பு செய்யப்படுகிறது.

**Master gauge:** தலைமை அளவி: அன்றாடம் பயன்படும் அளவிகளின் துல்லியத்தை அவ்வப்போது சோதனை செய்து பார்ப்பதற்குப் பயன்படும் அளவி.

**Master key:** (*பட்.*) ஆணித்திறவு: பல பூட்டுகளைத் திறக்கவல்ல திறவுகோல்.

**Master switch :** (*மின்.*) தலைமை விசை : ஒரு பிரதான மின்விசை. இதன் மூலம் மற்ற விசைகளின் இயக்கத்தைக் கட்டுப்படுத்த முடியும்.

**Master taper :** (*எந்.*) தலைமை அளவை வார் : செந்திறமான அளவை வார். இதன் மூலம் உட்புறம் அல்லது வெளிப்புறம் மற்ற அளவை வார்கள் அளவிடப்படுகின்றன.

**Master workman :** தலைமைத் திறவாளர்: சாதாரண அளவை விட அதிகத் தேர்ச்சித் திறன் வாய்ந்த தொழிலாளர். "தலைமைப் பொறிவினைஞர்" என்பது பட்டறை மேன்முறையாளையும், கண்காணிப்டாளர்களையும் குறிக்கும்.

**Msstic :** பூனைக் கண் குங்கிலியம் (கல்புகைக்கீல்) : நிலக்கீலினால் இயற்கையாகப் பூரிதமடைந்த மணற்பாறை. தளம் பரவுவதற்கு மிகவும் உகந்தது.

**Mat ;** (*குழை.*) பாய் : குழைமவியலில் நெசவு செய்யப்படாத இழைக் கண்ணாடிப் பொருள். ஊதிப்பெருக்கச் செய்தல் மூலம் செய்த குறுகிய கண்ணாடி இழைகளாலானது. இது படலமாக இருக்கும். சில பொருள்கள் முன்னுருவாக்க வடிவங்களிலும் அமைந்திருக்கும்.

**Mat board :** பாய் அட்டை : படச் சட்டங்களுக்குப் பயன்படுத்தப்படும் கனமான காகித அட்டை.

**Matched boards :** [*மர. வே.*] ஒட்டிணைப் பலகை : ஒன்றுடன் ஒன்று பொருந்தும்படி குவடு குழிவுகளுடன் கூடிய பலகை வரிச்சல்.

**Matched Metel Molding :** (*குழை.*) ஒட்டிணை உலோக வார்ப்படம் : இரு உலோக வார்ப்படங்களை அழுத்தி வெப்பமூட்டி ஒட்டிணைத்து வலுவாக்கிய வார்ப்படம்.

**Match plates :** (*வார்.*) ஒட்டிணைத் தகடுகள் : தோரணிகள் ஏற்றப்பட்ட உலோக அல்லது மரத் தகடுகள். பெருமளவு எண்ணிக்கையிலான வார்ப்படங்கள் தேவைப்படும் போது உற்பத்தியை அதிகமாக்க இது பயன்படுகிறது.

**Mated position :** (*தானி.*) இணைவுறு நிலை: நழுவுப் பல்லிணைகளை முறையாகக் கொளுவி இணைக்கும் போது அவை இணை

வுறு நிலையில் இருப்பதாகக் கூறப்படும்.

**Material well:** (குழை.) பொருள் குழிவிடம்: அழுத்தப்பட்ட அல்லது மாற்றப்பட்ட வார்ப்புப் பொருளை வைப்பதற்குரிய குழிவான இடம்.

**Mat finish:** பாய்முறைச் செப்பம்: பளபளப்பின்றி மங்கலாக இறுதிச் செப்பமிடுதல்.

**Mathematics:** கணிதவியல்: எண்ணளவுகளுக்கும் அவற்றின் செயற்பாடுகளுக்கு மிடையிலான தொடர்புகள் பற்றி ஆராயும் அறிவியல்.

**Matrix:** (அச்சு.) அச்சு வார்ப்புரு: அச்செழுத்துகளை வார்த்தெடுக்கும் எந்திரத்திலிருந்து எடுக்கப்படும் எழுத்து வார்ப்புருவின் பகுதி. இந்த அச்சு வார்ப்புருக்களிலிருந்து அச்சு வார்ப்புருத் தகடுகளைத் தயாரிக்கப்படும் கனத்த அட்டையினையும் இது குறிக்கும்.

**Matt:** சரவைப் பரப்பு: கரட்டுத்தளமான சரவை வேலைப்பாடுடைய மேற் பரப்பு.

**Matte:** (உலோ.) கலவைச் செம்பு: முழுமையாகச்சுத்திகரித்துஎடுக்கப்படாத செம்பு. வேறு பல உலோகங்கள் அடங்கிய கலவையையும் இது குறிக்கும்.

**Matter:** (இயற்.) சடப்பொருள்: எடையுள்ள, இடத்தை அடைத்துக் கொள்ளக் கூடிய பருப்பொருள்.

**Maul:** சம்மட்டி: கனமான சம்மட்டிக்கட்டை.

**Mausoleum:** (க.க.) கல்லறை மாடம்: வீறார்ந்த கல்லறை மாடம்.

**Mauve:** ஊதாச் சாயம்: ஒள்ளிய மெல் ஊதா நிறச் சாயம்.

**Maxhete:** (உலோ.) மாக்செட்: நிக்கல், குரோமியம், டங்ஸ்டன், செம்பு, சிலிக்கன் அடங்கிய கலவை எஃகு. இது அரிமானத்தையும் வெப்பத்தையும் எதிர்க்கக் கூடியது. கொள்கலன் குழாய்கள், உலைகளின் உறுப்புகள் தயாரிக்கப் பயன்படுகிறது.

**Maximum:** (உலோ.) பெருமம்: (1) அனைத்திலும் மிகப் பெரியதான அளவு.

(2) ஒரு சார்பலன் மூலம் இயன்ற வரையிலும் மிகப்பெரிய அளவில் குறிப்பிடத்தக்க ஒரு மதிப்பு.

**Maximum range:** (வானூ.) பெரும வீச்செல்லை: ஒரு விமானம் குறிப்பிட்ட சூழ்நிலைகளில், அளவான வேகத்தில், அனைத்து உயரங்களிலும் மிகப் பெருமளவில் பறக்கக்கூடிய தொலைவு.

**Maximum revolutions:** (வானூ.) பெருமச்சுழற்சிகள்: ஒரு நிமிடத்தில் மிக அதிக அளவில் சுழலும் சுழற்சிகளின் எண்ணிக்கை. இது பெருமக்குதிரைத் திறனுக்கு நேரிணையானது.

**Maximum voltage:** (மின்.) பெரும மின்னழுத்தம்: ஒரு மாற்று

மின்னியக்க வரிசையில் ஒவ்வொரு மாற்றத்தின் போதும் உண்டாகும் மிக உயர்ந்த அளவு மின்னழுத்தம்.

**Mean :** (கணி.) சராசரி : இயற் கணிதத்தில் இரண்டு எண்களுக்குச் சரி சமமான இடைநிலையிலுள்ள எண்.

**Mean chord of a wing :** (வானூ.) இறகின் இடைநிலை இயைபளவு : விமானத்தில் இறகின் பரப்பளவை ஓர் இறகின் முனையிலிருந்து இன்னொரு இறகின் முனைவரையிலான இடையகல அளவினால் வகுப்பதன் மூலம் கிடைக்கும் ஈவு.

**Mean line :** (வானூ.) இடைநிலைக் கோடு : விமானத்தின் உருவரைப் படிவப் படத்தில் மேல்—கீழ் உருவரைகளுக்கிடையிலான இடை நிலைக்கோடு.

**Measure:** (அச்சு.) அகலளவு : அச்சுக்கலையில் ஒரு பத்தியின் அல்லது அச்சுப் பக்கத்தின் அகலம் அல்லது ஒரு பணியின் அகலம்.

**Measurement :** அளவு : வடிவளவு; பரப்பளவு; கொள்ளளவு. அளவிடுதல்.

**Measures:** அளவைகள்: நீட்டல ளவை, முகத்தலளவை, நிறுத்தல ளவை போன்ற அளவைகள். இவற்றில் மெட்ரிக் முறை, ஆங்கில முறை போன்ற முறைகள் உண்டு.

**Measuring machine:** (பட்.) அளவிடு எந்திரம்: தேவையான வடிவத்திலுள்ள ஒரு நுண் அளவுமானி. இதனைக் கொண்டு குழாய்கள், துளைகள் முதலியவற்றை நுட்பமாக அளவிட உதவுகிறது. இவற்றுள் சில இப்போது எந்திர முறைகளுக்குப் பதிலாக ஒளி அலைகளைப் பயன்படுத்தி இயக்குகின்றன.

**Measuring tape:** அளவு நாடா: அளவுகள் குறிப்பிடப்பட்ட எஃகினாலான அல்லது நார்த் துணியினாலான நாடா. இது சாதாரணமாக 50"-100" நீளமிருக்கும். இதனைப் பொறியாளர்கள், கட்டிடம் கட்டுவோர், நில அளவையாளர்கள் போன்றோர் பயன்படுத்துகின்றனர்.

**Mechanic:** பொறிவினைஞர்: எந்திரங்களைப் பழுது பார்க்கிற அல்லது எந்திரங்களை அல்லது எந்திர உறுப்புகளை ஒருங்கிணைக்கிற தேர்ச்சிபெற்ற கைவினைஞர்.

**Mechanical brakes:** (தானி.) எந்திரத் தடை: உந்து ஊர்திகளிலுள்ள தடையமைப்பு முறை: இதில் கால்மிதி மூலம் சக்கரத்திலுள்ள தடைகளுக்குச்சலாகைகள், நெம்புகோல்கள், இயக்கு சக்கரங்கள், ஊடச்சுகள் போன்றவற்றின் தொகுதி மூலம் அழுத்தம் செலுத்தப்படுகிறது.

**Mechanical drawing:** எந்திர வரைபடம்: கருவிகளைப் பயன்படுத்தி வரையப்படும் படம். எந்திரங்களின் வடிவமைப்புகள் இவ்வாறு வரைபடமாக வரையப்படுகின்றன.

**Mechanical efficiency:** (எந்.) எந்திரத் திறன்: (1) ஓர் எஞ்சினின் எந்திரத்திறன் என்பது, அதன் தடைக் குதிரை விசைக்கும், அதன் குறிப்பிடப்பட்ட குதிரை விசைக்குமிடையிலான விகிதமாகும்.

$$\left.\begin{matrix}\text{எந்திரத்}\\ \text{திறன்}\end{matrix}\right\} = \frac{\text{தடைக் குதிரை விசை}}{\text{குறிப்பிடப்பட்ட குதிரைவிசை}}$$

(2) இயற்பியலில், உட்பாட்டுக்கும் வெளிப்பாட்டுக்குமிடையிலான விகிதம்.

$$\frac{\text{வெளிப்பாடு}}{\text{உட்பாடு}} = \begin{matrix}\text{எந்திரத்}\\ \text{திறன்}\end{matrix}$$

**Mechanical engineer:** எந்திரப் பொறியாளர்: எந்திரங்களை அல்லது எந்திர சாதனங்களை வடிவமைத்து, உருவாக்கிப் பயன்படுத்துவதில் வல்லுநர்.

**Mechanical engineering:** எந்திரப் பொறியியல்: விசையை உற்பத்தி செய்து அனுப்பும் எந்திர சாதனங்களை வடிவமைத்து, உருவாக்குதல் தொடர்பான அறிவியல்.

**Mechanical vibrator:** (மின்.) எந்திர அதிர்ப்பி: எந்திர முறையில் இயங்கும் ஆக்கும்-அழிக்கும் சாதனம்.

**Mechanic arts:** கம்மியர் கலை: கைவினையில் பட்டறையிலும், கருவிகளிலும், எந்திரத்திலும் பயிற்சி பெறுதல்.

**Mechanics:** இயக்கவியல்: பொருள்களின் மீது விசையின் விளைவு பற்றி ஆராயும் அறிவியல் பிரிவு.

**Medaleion:** (க. க.) பதக்கம்: (1) பட்டயத் தகடு.

(2) ஒரு பெரிய பதக்கம்.

**Median:** மைய நிலை: நடுவூடான நிலை; சராசரி.

**Medium carbon steel:** நடுத்தர கார்பன் எஃகு: 0.30% முதல் 0.70% வரை கார்பன் அடங்கிய எஃகு.

**Meg or mega:** (மின்.) பத்து லட்சம்: மின்னியலில் பத்து லட்சம் அளவினைக் குறிக்கும் சொல்.

**Mega volt:** (மின்.) நூறுகோடி ஓல்ட்: மின்னியலில் பத்துலட்சம் ஓல்ட் . மின்னியக்க விசையைக் குறிக்கும் அலகு.

**Megohm:** மெக்ஓம்: மின்னியலில் பத்து லட்சம் ஓம்களுக்குச் சமமான மின்தடையைக் குறிக்கும் அலகு.

**Melting point:** (உலோ.) உருகுநிலை: உலோகங்கள் திடநிலையிருந்து திரவநிலைக்கு மாறுவதற்குரிய வெப்பநிலை.

**Melting zone:** (வார்.) உருகு மண்டலம்: இரும்பு வார்ப்படத் தொழிற்சாலை அடுப்பில், உலோகம் உருகுவதற்கான ஊதுலைக் குழாய்களுக்கு மேலுள்ள பகுதி.

**Mensuration:** (கணி.) உரு அளவியல்: நீளம், பரப்பு, கன அளவு முதலியவற்றை அளப்பதற்கான கணிதப் பிரிவு.

**Mer:** (குழை.) மீச்சேர்ம கட்டலகு: டச்சேர்மத்தின் கட்டுமான அலகு

**Mercerize:** (வேதி.) துணிப் பக்குவமாக்குதல்: நூல், துணி ஆகியவற்றுக்குப் பளபளப்பும் உறுதியும் கொடுப்பதற்காகக் கடுங்கார உப்பிட்டுப் பக்குவப்படுத்துதல்.

**Merchant bar:** (உலோ.) வாணிக இரும்புச் சலாகை: விற்பனை செய்வதற்கு ஏற்பக் குறுகலாக வெட்டப்பட்ட இரும்புச் சலாகை.

**Mercury:** (வேதி.) பாதரசம் வெள்ளிபோல் வெண்ணிறமான திரவ உலோகம். இதன் எடைமானம் 13.6. இரசக் கந்தகை அல்லது பாதரச சல்ஃபைடு (HgS) மூலம் கிடைக்கிறது. சிவப்புப் படிக வடிவில் கிடைக்கிறது. இரசக் கலவைகள் தயாரிக்கப் பயன்படுகிறது.

**Mercury arc rectifier:** (மின்.) பாதரசச் சுடர் திருத்தி: மாற்று மின்னோட்டத்தை நேர் மின்னோட்டமாக மாற்றுவதற்குப் பீட்டர்கூப்பர் ஹெவிட் கண்டுபிடித்த ஒரு சாதனம்.

**Marcury vapor lamp:** (மின்.) பாதரச ஆவி விளக்கு: கூப்பர் ஹெவிட் உருவாக்கிய விளக்கு. இதில் பாதரச ஆவி வழியே மின்னோட்டம் செலுத்துவதன் மூலம் விளக்கு உண்டாக்கப்படுகிறது.

**Mesh :** (பட்.) வலைக்கண்: வலைப் பின்னல் அமைப்பு.

**Mesocolloids:** (வேதி.) மெசோ கொலாய்டுகள்: ஹெமி கொலாய்டுகளுக்கும் யூகொலாய்டுகளுக்கும் இடைப்பட்ட மீச்சேர்மங்கள். அதாவது, 100 முதல் 1000 வரையில் மீச்சேர்ம இணைவுடையவை.

**Metal:** உலோகம் : அடிப்படையான உலோகப் பொருள்களை மட்டுமின்றி, ஒரு திறன். நெகிழ் திறன், இணைவுத் திறன் முதலிய உலோகப் பண்புகளுடைய தாதுப் பொருள்களையும் குறிக்கும். பல்வேறு உலோகக் கலவைகளையும் குறிக்கும்.

**Metal arc welding** உலோகச் சுடர் பற்றவைப்பு: இது ஒரு வகை சுடர் பற்றவைப்பு. இதில் பற்றாசு இட்டு நிரப்புவதற்கான உலோகத்தை மின்முனை அளிக்கிறது.

**Metal dip brazing :** உலோக அமிழ்வுப் பற்றாசு இணைப்பு : உருக்கிய உலோகத்தில் அமிழ்வித்து நிரப்பு உலோகத்தைப் பெறுவதற்குரிய ஒரு செய்முறை.

**Metalene nails :** உலோகப் பொருத்தாணி : வட்டமான அல்லது தட்டையான பெரிய கொண்டைகளையுடைய ஆணிகள். அறைகலன்களில் தோல் இழைகளைப் பொருத்துவதற்குப் பயன்படுத்தப்படுகிறது.

**Metal filament :** (மின்.) : உலோக இழை : ஒரு வகை மின் கடத்தி. இதனை வெண்சுடர் விளக்கில் சூடாக்கும் போது இது ஒளியுடன் எரியும்.

**Metal finishing :** உலோக மெருகிடல் : உலோக வேலைப்பாட்

டில் வேலைப்பாடு செய்யப்படும் பொருளுக்கு இறுதியாகப் பளபளப்பான மெருகூட்டுதல்.

**Metal furniture :** (அச்சு.) உலோக அச்சுத்துண்டு : அச்சுக் கோத்துப் பக்கங்களை முடுக்கும் போது இடைவெளிகளை நிரப்புவதற்காகப் பயன்படும் உலோகத் துண்டு. இது அச்செழுத்தின் உயரத்தைவிடக் குறைவாக இருக்கும்.

**Metalizing :** (குழைம.) உலோக உறையிடல் : பிளாஸ்டிக்கிற்கு ஒரு மெல்லிய உலோகப் படலத்தின் மூலம் உறையிடுதல்.

**Metal lacquer :** உலோக மெருகெண்ணெய் : உலோகத்தினாலான பொருள்களுக்கு மெருகெண்ணெயாகப் பயன்படுத்தப்படும் வெடியகப் பஞ்சின் அமில் மற்றும் மெதில் அசிட்டேட் கரைசல்கள்.

**Metallurgy :** உலோகக் கலை : உலோகத் தாதுக்களிலிருந்து உலோகங்களைப் பிரித்தெடுக்கும் அல்லது உலோகக் கலவைகளை உண்டாக்கும் கலை அல்லது அறிவியல், உலோகங்கள் பற்றி ஆராயும் துறை.

**Metal pattern:** (வார்.) உலோகத் தோரணி: நீண்ட நாட்கள் உழைப்பதற்காக மரத் தோரணிகளிலிருந்து உருவாக்கப்படும் வார்ப்படத் தோரணிகள்.

**Metal spinning:** (பட்.) உலோகத் திரிப்பு: தகடாக்கக் கூடிய உலோகங்களில் இலேசான உருப்புகளை வட்டமான வார்ப்பு வடிவங்களாக உருவாக்கும்முறை. கடைசல் எந்திரத்தில் வேகமாகச் சுழலும்போது அழுத்தம் கொடுக்கும் போது இந்தத் திரிப்பு ஏற்படுகிறது.

**Matal spraying:** உலோகத் தெளிப்பு: உலோகங்களுக்கான காப்பு மெருகுப்பூச்சு. ஒரு கம்பியை ஹைட்ரஜன்-ஆக்சிஜன் சுடர் வழியாகச் செலுத்தும்போது, அது அணுக்களாகக் குறைந்து கம்பிப் பரப்பில் மேற்பூச்சாகத் தெளிக்கப்பட்டு படிகிறது.

**Matamorphic rock:**(கனிம.) உருமாற்றப் பாறை: தனது மூலப் பண்பியல்பிலிருந்து எரிமலைக் குழம்புப் பாறையாக அல்லது படிவியற் படுகைப் பாறையாக மாற்றம் பெற்றுள்ள பாறை.

**Meteorograph:** (வானூ.) வானிலைப் பதிவுமானி: பூமியின் மேற்பரப்பிற்கு மேலேயுள்ள வானிலைக் கூறுகள் பலவற்றின் அளவைப் பதிவித்துக் காட்டும் அமைவு. இது வெப்பநிலை, காற்றழுத்தம், ஈரப்பதம் போன்றவற்றைப் பதிவு செய்யும்.

**Meteorology:** (இயற்.) வானிலையியல்: வருங்குறி அறிவிக்கும் நோக்குடைய வானிலை நிகழ்வியக்க ஆராய்ச்சித் துறை.

**Meter:** (எந்.) (1) மீட்டர்: மெட்ரிக் அளவு முறையில் அடிப்படையான நீட்டலளவை அலகு. 1 மீட்டர் = 39.37".

(2) அளவுமானி: திரவங்கள், வாயுக்கள், மின்னோட்டம் முதலியவற்றை அளவிடுவதற்கான அளவு கருவி.

**Metering orifice:** (*தானி*) அளவித்துளை: பல்வேறு தேவைகளுக்கேற்ப எரிபொருள் செல்வதை முறைப்படுத்துவதற்காக உள்ள ஒரு நிலையான துளை.

**Metering pin:** (*தானி.*) அளவிப் பிணைப்பூசி: அளவித்துளையின் மீது அமைந்துள்ள ஒரு பிணைப் பூசி. இது அளவித் துறையின் வழியாக வாயு பாய்வதை முறைப்படுத்துகிறது.

**Metering rod:** (*தானி.*) அளவித் தண்டு: எரிபொருள் பாய்வதை முறைப் படுத்தும் தடுக்கிதழ் புடத்துடன் இணைக்கப் பட்டுள்ள தண்டு.

**Methane :** (*வேதி.*) மீத்தேன் : மணமற்ற வாயு ($CH_4$). தாவரப் பொருளின் இருமடிச் சேர்மானம் காரணமாக அல்லது கரிமப் பொருளின் உலர் வாலை வடித்தல் மூலமாக உண்டாகும் வாயு. ஒளிரும் வாயுவின் முக்கியமான கூறு.

**Methanol :** (*வேதி.*) மெத்தனால் ($CH_3OH$) : மெத்தில் ஆல்கஹால், மரஆல்கஹால், மரச்சாராவி போன்ற பல்வேறு பெயர்களால் அழைக்கப்படுகிறது. எரிபொருளாகவும், வண்ணங்கள், மெருகெண்ணெய்கள் ஆகியவற்றின் கரைப்பானாகவும், ஆல்கஹாலை இயல்பு திரிப்பதற்காகவும் பயன்படுத்தப்படுகிறது.

**Methyl** (*வேதி*) மெத்தில்: ($CH_3$) மீத்தேனிலுள்ள ஒரு ஹைடிரஜன் அணு இடம் பெயர்வதால் ஏற்படும் மூலக்கூறு. இது பல்வேறு கூட்டுப் பொருள்களில் ஓர் அங்கமாக உள்ளது.

**Methyl acetone :** (*வேதி.*) மெத்தில் அசிட்டோன் : மெத்தில் அசிட்டேட்டும், அசிட்டோனும் கலந்த ஒரு கலவை. ரப்பரின் கரைப்பானாகப் பயன்படுகிறது.

**Metric gear :** (*பட்.*) மெட்ரிக் பல்லிணை : மெட்ரிக் அளவு முறைக்கிணங்க வடிவமைக்கப் பட்ட பல்லிணை.

**Metric plug :** (*தானி.*) மெட்ரிக் செருகி : மெட்ரிக் தர அளவுகளுக்கேற்ப திருகிழைகளைக் கொண்ட ஒரு சுடர்ப் பொறிச் செருகி.

**Metric system :** (*பொறி.*) மெட்ரிக் முறை : பத்தின் மடங்குகளின் அடிப்படையில் அமைந்த நிறுத்தல், நீட்டல், முகத்தல் அளவைகள். முதலில் இந்த ஃபிரான்சில் பயன்படுத்தப்பட்டது. இன்று உலகெங்கும் அறிவியல் பணிகள் அனைத்திலும் பயன்படுத்தப்படுகிறது.

**Metric threads :** மெட்ரிக் திருகிழைகள : மெட்ரிக் அளவுகளுக்கிணங்க விகிதமுறையில் அமைந்த திருகிழைகள்.

**Mezzanine :** (*க.க.*) இடைமாடி: இரண்டு உயர்மாடிக் கட்டிடங்களில் நிலத்தளத் தளத்திற்கும்

முதல் மாடிக்கும் இடைப்பட்ட இடைத்தள மாடி.

Mezzotint : (அச்சு.) முருட்டு அச்சுப் பாளம் : கரடு முரடாக்கப் பட்ட தகட்டின் பின்னணியையே செறிநிழல் வண்ணமாகக்கொண்டு பிற பகுதிகளில் கரடு முரடு நீக்கப் பட்டஒளி நிழற்பட அச்சுப்பாளம். இதனை 1643இல் லுட்விக் கண்டு பிடித்தார்.

Mica: (கனிம.) அப்பிரகம் (காக் காய்ப் பொன்): முழுமையாகப் பிளந்திடும் தன்மையுடைய ஒரு வகை சிலிக்கேட் என்னும் மணற் சத்து உப்பு. இது செதில் செதில் களாகப் பிளவுபடும்.

Micas: அப்பிரகக் காகிதம்: அலங் காரப் பெட்டிகள் செய்வதற்கான காகிதம். இதில் அனிலைன் சாயப் பொருளுடன் கலந்து அப்பிரகம் பூச்சுக் கொடுக்கப்பட்டிருக்கும். இதில் செதுக்கு வேலைப்பாடாக வும் புடைப்பாகவும் அச்சிடப்படும்.

Microampere: (மின்.) மைக்ரோ ஆம்பியர்: ஒரு ஆம்பியரில் பத்து இலட்சத்தில் ஒரு பகுதி. 0.000001 ஆம்பியர்.

Microfarad: (மின்.) மைக்ரோ ஃபாராட்: ஒரு கொள்ளளவு அலகு. மின் காந்தப் பருும அளவான ஒரு ஃபாராடின் பத்துலட்சத்தில் ஒரு பகுதி.

Micrometer: நுண்ணளவை மானி: நுண்பொருள்கள், தொலைவுகள், கோணங்கள் ஆகியவற்றைத் துல் லியமாக அளந்து காட்டுங்கருவி.



Micrometer caliper: நுண்இடுக்கி யளவி: மிக நுண்ணிய தொலைவு களை அளப்பதற்குரிய, அளவு வரையிட்ட திருகுடன் கூடிய ஓர் இடுக்கியளவி.

Micron: (மின்.) மைக்ரோன்: பதின்மான நீட்டலளவை அலகில் பத்துலட்சத்தில் ஒரு பகுதி.

Microphone: (மின்.) ஒலி பெருக்கி: நுண்ணொலிகளைத் திட் பப்படுத்தியும், ஒலிகளை மின் னலைகளாக்கியும் தொலைபேசி ஒலிபெருக்கிகளைச் செயற்படுத் துங் கருவி.

Microscope: நுண்ணோக்காடி (பூதக் கண்ணாடி): மிக நுண்ணிய பொருள்களின் உருவத்தைப் பெருக்கிக் காட்டக்கூடிய, ஒன்று அதற்கு மேற்பட்ட ஆடிகளைக் கொண்ட ஒரு கருவி.

Microvolt: (மின்.) மைக்ரோ வோல்ட்: மின் இயக்க ஆற்றல் அலகின் பத்துலட்சத்தில் ஒரு பகுதி. 0. 000001 ஓல்ட்.

Microwave : நுண்ணலை : ஒரு மீட்டருக்குக் குறைவான நீள முள்ள வானொலி அலைகள். இது நெடுந்தொலைவிலுள்ள கருவி களை நிலையத்துடனும், நிலை யங்களை மற்ற நிலையங்களுட னும் இணைப்பதற்குப் பயன்படு கிறது.

**Microwave reflectors :** நுண்ணலைப் பிரதிபலிப்பான் : நுண்ணலைக் கற்றைகளை நெறிப்படுத்துவதற்குப் பயன்படும் ஒரே மாதிரியல்லாத பிரதிபலிப்பான்கள்.

**Middle space :** (*அச்சு.*) நடு இடைவெளி : அச்சுக்கோப்பில் எழுத்துகளிடையிலான இடைவெளி.

**Middle - tones :** (*அச்சு.*) நடு வண்ணச் சாயல் : ஒளிப்படத்தில் அல்லது நுண்பதிவுப் படத்தில் இளம் வண்ணத்திற்கும் அடர் வண்ணத்திற்குமிடையிலான வண்ணச் சாயல்கள்.

**Midwing monoplane:** (*வானூ.*) நடுக்கிறகு ஒற்றைத்தட்டு விமானம்: விமானத்தின் மையக் கோட்டில் இறகு பொருந்தப்பட்டுள்ள ஒற்றைத் தொகுதி சிறகுகளையுடைய விமானம்.

**Mil ;** மில்; கம்பி முதலியவற்றின் விட்டத்தை அளப்பதற்கான அலகு. இது அங்குலத்தில் ஆயிரத்தில் ஒரு பகுதி, 0.001".

**Mild steel :** மென்னெஃகு : கரியம் குறைவாகவுள்ள எஃகு; இது பற்ற வைக்கக் கூடியது. ஆனால் இது பதமாவதில்லை.

**Mildew :** பூஞ்சணம் : ஈரம்படும் பொருள்களின் மீது படியும் ஒரு வகை பூஞ்சக்காளான்.

**Mil foot :** மில் அடி : கம்பியிலுள்ள மின் தடையின் ஒரு தர அலகு. ஓர் அடிகம்பியில் மின் தடையின் அளவு = விட்டத்தில் ஒரு மில்.

**Milk sugar :** (*வேதி.*) பால் சர்க்கரை : பார்க்க : பால் வெல்லம்.

**Mill:** ஆலை: (1) உற்பத்திச் செய்முறைகள் நடைபெறுவதற்கான எந்திரங்கள் பொருத்தப்பட்டுள்ள கட்டிடம் அல்லது கட்டிடங்களின் தொகுதி. பல்வேறு தொழிற்சாலைகளைக் குறிப்பிட இச் சொல் பயன்படுகிறது.

(2) செய்முறை வேலைகளுக்கான திரிகைப் பொறியமைவு.

**Milli ampere:** (*மின்.*) மிலி ஆம்பியர்: ஒரு ஹென்ரியில் ஆயிரத்தில் ஒரு பகுதி. கொள்ளளவின் ஓர் அலகு.

**Milimeter:** (*பொறி.*) மில்லி மீட்டர்: பருமணலளவு அலகு. ஒரு மீட்டரில் ஆயிரத்தில் ஒருபகுதி. 03937."

**Milling:** (*பட்.*) சால்வரிவிடல் உலோகத் தகடுகளில் பள்ளங்களை வெட்டும் செய்முறை.

**Milling cutters:** (*எந்.*) துளை வெட்டுங்கருவி: உலோகத் தகட்டில் துளைகள் இடுவதற்கான எந்திரத்தில் பயன்படும் பல்வேறு சுழல் வெட்டுக் கருவிகள்.

**Milling machine:** (*பட்.*) துளையிடு எந்திரம்: உலோகத் தகட்டில் வடு வரிசைத் துளைகள் இடுவதற்கான எந்திரம்.

**Milling machine universal:** (பட்.) பொதுத்துளையிடு எந்திரம்: எல்லாவகையான பரப்புகளையும் கொண்ட உலோகத் தகடுகளிலும் துளையிடுவதற்கான எந்திரம்.

**Milling machine vertical:** (பட்.) செங்குத்துத் துளையிடு எந்திரம்: துளையிடுவதற்குச் செங்குத்தான கதிர் கொண்ட எந்திரம். இது இடைமட்ட எந்திரத்திலிருந்து வேறுபட்டது.

**Millivolt:** (மின்.) மிலிவோல்ட்: ஓர் பகுதி. 0.001 வோல்ட்.

**Millwright:** ஆலை அமைப்பாளர்: ஓர் ஆலையில் அல்லது பட்டறையில் எந்திரங்களை திட்டமிட்டு அமைப்பவர்.

**Mimeograph:** படியெடுப்பான்: கையெழுத்து அல்லது தட்டெழுத்துப் படியின் பல படிகளை எடுப்பதற்கான தகடு ஆக்க அமைவு.

**Minaret:** (க.க.) தூபி: பள்ளி வாயில் தூபி.

**Mineralogy:** கனிமயியல்: கனிமங்களின் பண்பியல்புகள், வகைப்பாடு முதலியவை பற்றி ஆராயும் அறிவியல்.

**Miners safety lamp:** சுரங்கக் காப்பு விளக்கு: *பார்க்க:* டேவி காப்பு விளக்கு.

**Minimum:** குறுமம்: மிகக்குறைந்த அளவு; மிகக் குறைந்த எல்லை.

**Minimum flying speed:** (வானூ.) குறும பறக்கும் வேகம்: ஒரு விமானம் தனது இறகுகளின் இடையகல் அளவுக்கு அதிகமான உயரத்தில் பறக்கும் மட்டத்தில் ஒரே சீராகப் பேணக்கூடிய மிகக் குறைந்த அளவு வேகம்.

**Minimum gliding angle:** (வானூ.) குறுமச் சறுக்குக் கோணம்: விமானத்தின் முற்செலுத்தி அழுத்தம் கொடுக்காதிருக்கும் போது, விமானத்தின் கிடைமட்டப் பாதைக்கும், ஏறத்தாழ அதன் கிடைமட்டப் பாதைக்குமிடையிலான கூர்ங்கோணம்.

**Minimum speed:** (வானூ.) குறும வேகம்: விமானத்தில் எந்தக் குறைந்த அளவு வேகத்தில் ஒரே சீராகப் பறக்க முடியுமோ அந்தக் குறைந்த அளவு வேகம்.

**Mining:** சுரங்கத் தொழில்: பூமியிலிருந்து உலோகம், கனிப்பொருள்கள் ஆகியவற்றை அகழ்ந்தெடுத்தல்.

**Mining engineer:** சுரங்கப் பொறியாளர்: சுரங்கங்களைத் தோண்டி, அவற்றிலிருந்து உலோகத் தாதுப் பொருள்களை அகழ்ந்தெடுக்கும் பணிகளைச் செய்யும் பொறியாளர்.

**Minion:** (அச்சு.) குறும அச்செழுத்து: மிகச்சிறிய அளவு அச்செழுத்து. இது 7 புள்ளி அளவுக்குச் சமமானது. அச்செழுத்தில் புள்ளி முறை பயனுக்கு வருவதற்கு முன்பு இப்பெயர் வழங்கியது.

**Minor axis:** சிறுபடி அச்சு : ஒரு நீள் வட்டத்தின் குறுகிய விட்டம்.

**Minor diameter:** சிறுபடி விட்டம்: ஒரு திருகில் அல்லது மரையாணியில் இழையின் மிகக் குறைந்த அளவு விட்டம்.

**Minus charge :** (மின்.) மறிநிலை மின்னேற்றம் : கழித்தற்குறியின் மூலம் சுட்டப்படும் எதிர்மின்னேற்றம். பிசின் பொருள்களை கம்பளப் பொருள்களில் உரசும்போது இத்தகைய மின்னேற்றம் உண்டாகிறது.

**Minute :** (க. க.) நுண்பாகை : கோண அளவில் ஒரு பாகையின் அறுபதில் ஒரு கூறு.

**Misalignment of wheels :** (தானி.) பொருந்தாச் சக்கர இணைப்பு : சீருந்தின் சக்கரங்கள் முறையாக இணைக்கப்படவில்லையெனில், சக்கரங்களைத் திருப்புவது கடினம். இதனால், சீருந்து முழுவதிலும் அளவுக்கு மீறி அழுத்தம் ஏற்பட்டு, டயர்கள் விரைவாகத் தேய்ந்து விடும். சீருந்தின் முன் சக்கரங்கள் சீராக இணைக்கப்பட்டுள்ளனவா என்பதைக் குறைந்தது ஆண்டிற்கு ஓரிரு முறை சரி பார்த்தல் வேண்டும்.

**Misprint :** (அச்சு.) அச்சுப் பிழை: பிழையாக அச்சிடுதல் ; அச்சிடுவதில் ஏற்படும் பிழை.

**Mission type :** பெரு வடிவ அறைகலன் : கருவாலி மரத்தில் கருமை வண்ணத்தில் வளைவுகளின்றி நேர்கோடுகளில் தயாரிக்கப்படும் மிகப் பெருமளவில் வடிவங் கொண்ட அறை கலன்.

**Miter :** செங்கோண இணைப்பு : மரத்துண்டுகளைச் செங்கோணத்தில் இணைத்தல்.

துண்டுகளின் இணை வாயின் சாய்வு 45° கோணம்படும்படியாக இணைத்தல்.

**Miter box :** கோண அறுவைக் கருவி : மரத்தைக் குறிப்பிட்ட கோணத்தில் அறுப்பதற்கு ரம்பத்திற்கு துணை செய்யும் அமைவு.

**Miter cut:** (மர. வே.) கோண அறுவை: துண்டுகளின் இணைவாயின் சாய்வு 46° கோணமாக அமையுமாறு அறுத்தல். இரு துண்டுகளும் இணையும்போது ஒரு செங்கோணம் உண்டாகும்.

**Miterer:** (அச்சு.) செங்கோண இணைப்பான்: அச்சுக்கலையில் கரையோரங்கள், கோடுகள் முதலியவற்றை செங்கோணத்தில் இணைப்பதற்குப் பயனாம் ஒரு சாதனம். இதனைக் கையினாலோ விசையினாலோ இயக்கலாம்.

**Miter gear:** (எந்.) செங்கோண இணைப்புப் பல்லிணை: ஊடச்சுக்கு 45° சாய்வாக உள்ள பற்களையுடைய பல்லிணை.

**Miter plane:** (மர. வே.) செங்கோண இணைப்புத் தளம்: மரத்தைக் குறிப்பிட்ட கோணத்தில் அறுப்

பதற்கு ரம்பத்திற்குத் துணை செய்யும் அமைவுடன் பயன் படுத்தப்படும் ஒரு தளம்.

**Miter-saw cut:** (*மர.வே.*) கோண வெட்டு ரம்பம்: மரத்தைத் தேவையான கோணத்தில் வெட்டுவதற்குப் பயன்படும் ரம்பம்.

**Miter square:** (*மர.வே.*) கோண மட்டச் சதுரம்: மூலமட்டப் பலகை போன்ற ஒரு கருவி. ஆனால், இதில் 90°,45° கோணங்களை அமைக்க இடமளிக்கும் ஒரு தலைப்பினைக் கொண்டது.

**Miter wheel:** சாய் பற்சக்கரங்கள்: ஊடச்சுக்கு 45° சாய்வாக உள்ள பற்களையுடைய சக்கரங்கள்.

**Mitography:** (*அச்சு*) திரையச்சுக்கலை: பட்டுத்திரைச் சீலை அச்சுக்கலை.

**Mixture:** (*வேதி.*) கலவை: வேதியியல் முறையில் ஒன்றோடொன்று இணையாத இரண்டு அல்லது மூன்று பொருள்களின் கலவை.

**M.M.F.:** காந்த இயக்குவிசை: (*கா.இ.வி*).

**Modeling:** உருப்படிவக்கலை: காட்சி மாதிரிகளை உருநிலைப் படிவங்களாக உருவாக்குதல்.

**Mock-up:** (*வானூ.*) எந்திர மாதிரிப் படிவம்: செய்யக் கருதியுள்ள மாதிரிப் படிவம்.

**Modulation:** அலை மாற்றம்: வானொலியில் அலையகலஅதிர்வு, அதிர்வு மாற்றமைப்பு.

**Module:** (*க.க.*) அளவை அலகு: கட்டுமானப் பொருள்களின் தகவுப் பொருத்தங்களைத் தெரிவிப்பதற்கான நீட்டலளவை அலகு.

**Modulus:** நிலை தகவு: மடக்கைகளின் வகை மாற்றத்திற்கான நிலையான வாய்ப்பாடு.

**Modulus of elasticity:** மின் விசை நிலை தகவு: இழுவிசைத் திரிபு தெகிழ் வரம்பிற்குள் இருக்கும்போது, ஓர் அலகுப்பரப்பின் மீதான அழுத்தத்திற்கும், அதற்கு இணையான ஓர் அலகு நீளத்தின் மீதான இழு விசைக்குமிடையிலான வீத அளவு.

**Modulus of rigidity:** (*பொறி.*) விறைப்பு நிலைதகவு: அழுத்தச் சறுக்குப் பெயர்ச்சி இழு விசையினால் சறுக்குப் பெயர்ச்சி அழுத்தத்தை வகுப்பதால் கிடைக்கும் ஈவு.

**Mogul:** (*மின்.*) மோகல்: 300 வாட்டுகளுக்கு அதிகமான பெரிய வெண்சுடர் விளக்குகளுடன் சேர்த்துப் பயன்படுத்தப்படும் ஒரு குதை குழி அல்லது கொள்கலன்.

**Mohair:** ஆங்கோரா ஆட்டுக் கம்பளி: ஆங்கோரா ஆட்டுமயிரைக் கொண்டு செய்யப்படும் நேர்த்தியான துணி வகை.

**Mohs scale:** மோஹ்ஸ் அளவு: கனிமப் பொருள்களின் கடினத்

தன்மையைத் தரம் பிரித்துக் காட்டப் பயன்படும் எண்மான முறை.

**Moisture content** : (அச்சு.) நீர் நயப்பு : தயாரித்து முடித்த காகிதத்தில் உள்ள ஈரப்பதனின் அளவு.

**Molar solution** : (வேதி.) : மூலக் கூற்றுக் கரைசல் : ஒரு கரைவத்தின் மூலக்கூற்று எடையைக் கொண்டுள்ள ஒரு கரைசல். இது ஆயிரம் கன செ.மீ. யில் இவ்வளவு கிராம் என்று குறிக்கப்படும்.

**Mold** : (வார்.) வார்ப்படம் : வார்ப்புருக்களை உருவாக்குவதற்கான ஒரு படிவம்.

பிளாஸ்டிக் உருவங்களை வெப்பம், அழுத்தம் அல்லது வேதியியல் வினை மூலமாக உருவாக்குவதற்குப் பயன்படும் உலோகக் கொள்கலம்.

அச்செழுத்துகளை வடிவமைக்கும் வார்ப்பட எந்திரம்.

**Mold board** : (மர. வே.) : முனைப் பலகை : உழுசாலில் மண்ணைப் பெயர்த்துத் தள்ளும் எஃகு முனைப் பலகை.

**Molders rammer** : (வார்.) வார்ப்படத் திமிசுக்கட்டை : வார்ப்படத்தை அடித்து இறுக்குவதற்குப் பயன்படுத்தப்படும் உருளை வடிவ மரக் கருவி.

**Molding**: (க.க.) வார்ப்படஉருவம்: கட்டிடம், மரவேலை முதலியவற்றில் வார்ப்பட முறையில் செய்யப்படும் சித்திர வேலைப்பாடு.

**Molding board** : (குழைம.) பிசைவுப் பலகை : வார்ப்படப் பொருட்களை வலுவாக்குவதற்காகப் பயன்படும் அழுத்திய தகடுகள், கலப்பு இழைகள், பிசின்கள் ஆகியவை.

**Molding plane** : வார்ப்பட இழைப்புளி : வார்ப்படங்களை வெட்டியெடுப்பதற்குப் பயன்படும் சிறிய இழைப்புளி.

**Molding sand** (வார்.) வார்ப்பட மணல் : வார்ப்படங்கள் செய்வதற்குப் பயன்படும் வார்ப்பட மணல்.

**Mole** ; (வேதி.) மூலக்கூற்று எடை; கிராம்களில் குறிப்பிடப்படும் மூலக்கூற்று எடை.

**Molecular theory**: (வேதி.இயற்) மூலக்கூற்றுக் கோட்பாடு: சடப் பொருட்கள் "மூலக்கூறுகள்" எனப்படும் நுண்ணிய துகள்களினாலானதுஎன்றும்,ஒவ்வொரு துகளும் அந்தப் பொருள் முழுமைக்குமுள்ள குண இயல்புகளைக் கொண்டிருக்கும் என்றும் கூறும் கோட்பாடு.

**Molecule**: (வேதி; இயற்.) மூலக்கூறு: ஒரு பொருளில் அடங்கியுள்ள மிகச் சிறிய நுண்கூறு. இதன் பண்பு, பொருளின் பண்பிலிருந்து மாறுபடாதிருக்கும்.

**Molybdenite**: முறி வெற்றித்தாது: முறிவெள்ளி (மாலிப்டினம்) என்

னும் உலோகத்தின் தாது. இது பசைத்தன்மையுடன் காரீயகப் பொருள் போல் இருக்கும். இது கருங்கல், அடுக்குப்பாறை, சுண்ணாம்புக்கல் ஆகியவற்றுடன் கலந்திருக்கும்.

**Molybdenum:** (*உலோ.*) முறிவெள்ளி: (மாலிப்டினம்): தகர்வியல்டைய வெள்ளிநிறம் கொண்ட உலோகம். அதிவேக வெட்டுக் கருவிகளைச் செய்வதற்கான எஃகு உலோகக் கலவைகளைச் செய்வதற்குப் பயன்படுகிறது.

**Moment** *பொறி.*) நெம்புதிறன்: ஒரு விசைக்கும், அந்த விசை செயற்படும் புள்ளியிலிருந்து அதன் செயல்வினைக் கோட்டின் செங்குத்துக் கோட்டுக்குமிடையிலான பெருக்குத்தொகை.

சுழலச் செய்யும் ஆற்றலின் அளவீடு.

**Moment of a couple:** (*கணி.*) இருவிசை இணைவு நெம்புதிறன்: விசைகளில் ஒன்றுக்கும், விசைகளின் செயல்விசைக் கோடுகளுக்கிடையிலான செங்குத்துத் தூரத்திற்குமிடையிலான அளவுகளின் பெருக்குத்தொகை.

**Moment of inertia:** (*பொறி.*) மடிமை நெம்புதிறன்: நகரும் பொருளின் ஒவ்வொரு துகளினையும் அவற்றின் நடுநிலை அச்சிலிருந்து அத் துகள்களின் தொலைவுகளின் வர்க்கங்களால் பெருக்கி வரும் பெருக்குத் தொகைகளின் கூட்டுத் தொகை.

**Momemtum:** உந்துவிசை: இயக்க உந்து விசையின் அளவு. இது ஒரு பொருளின் பொருண்மையை அதன் வேக விகிதத்தினால் பெருக்குவதால் கிடைக்கும் பெருக்குத் தொகையாகும்.

**Mond 'seventy" alloy:** (*உலோ.*) மாண்ட் "70" உலோகக் கலவை: நிக்கலும், செம்பும் கலந்த ஓர் உலோகக் கலவை. இதன் விறைப்பாற்றல் 40823 கிலோகிராம் வரை உயர்வாக இருக்கும்.

**Monkey wrench:** இயங்கு குறடு: இயங்கு அறுவடைத் திருகு குறடு. இதனைக் கண்டுபிடித்தவர் தாமஸ் மங்கி. அவர் பெயரால் இது அழைக்கப்படுகிறது.

**Monobloc:** (*எந்.*) ஒற்றைப் பாளம்: ஒரே துண்டாகவுள்ள வார்ப்படம்.

**Monograph:** (*அச்சு.*) தனி வரைவு நூல்: ஒரே பொருள் அல்லது ஓரினப் பொருள்கள் பற்றிய தனிநூல்.

**Monolith:** ஒற்றைப் பாளக்கல்: தன்னந்தனியாக நிற்கும் மிகப் பெரிய அளவிலான ஒரே பாளமாகவுள்ள கல்.

**Monomer:** (*வேதி; குழைம.*) எண்முகச் சேர்மம்: ஒரே முற்றுறா வாய்பாடுடைய சேர்மங்களின் தொடரில் மிக எளிய சேர்மம். பிளாஸ்டிக் தயாரிப்பில் இவற்றின் வினைகள் ஒரு மீச்சேர்மத்தை உண்டாக்கும்.

**Monomial:** (*கணி.*) ஒருறுப்புக் கோவை: இயற்கணிதத்தில் ஒரே உறுப்பினைக் கொண்ட கோவை.

**Monoplane:** (*வானூ.*) ஒற்றைத் தட்டு விமானம்: ஒற்றைத் தொகுதிச் சிறகுகளையுடைய விமானம்.

**Monorail crane:** (*பொறி.*) ஒற்றைத் தண்டவாளப் பாரந்தூக்கி: ஒற்றைத் தண்டவாளத்தில் இயங்கும் நகரும் பாரந்தூக்கி.

**Monoscope:** சோதனை ஒளிப்படக் கருவி: சோதனைகளுக்காகப் பயன்படும் எளிய ஒளி அல்லது தோரணி அமைப்பைக் கொண்ட தொலைக்காட்சி ஒளிப்படக்கருவி.

**Monotone:** (*அச்சு.*) சமநிலை அச்செழுத்து: எல்லாக் கூறுகளும் சம அகலத்தில் உள்ள அச்செழுத்து முகப்பு.

**Monotron hardness test:** வைர கடினச் சோதனை: வைரத்தின் ஊடுருவும் ஆழத்தினைக் குறிப்பிட்ட பார நிலைகளில் எண் வட்டில் பதிவு செய்யக்கூடிய ஒரு சோதனை எந்திரம்.

**Monotype:** (*அச்சு.*) எழுத்துருக்கு அச்சுப்பொறி: தனித்தனி அச்சுருவங்களை வார்த்து அமைக்கும் அச்சுக்கோப்பு எந்திரம்.

**Mordant:** அரிகாரம்: செதுக்குருவக்கலையில் பயன்படுத்தப்படும் அரிமானப் பொருள்.

சாயத்தைக் கெட்டிப்படுத்தப் பயன்படுத்தப்படும் நிறம் கெட்டியாக்கும் சரக்கு.

**Moresque:** அராபிய பாணி: வடமேற்கு ஆஃபிரிக்க அராபிய இஸ்லாமியர் பாணிக்குரிய வேலைப்பாடு.

**Morocco goatskin:** பதனிட்ட வெள்ளாட்டுத் தோல்: சாயப் பதனீட்டு இலைத் தூள் கொண்டு பதனிடப்பட்ட வெள்ளாட்டுத் தோல். இது பல வண்ணங்களில் கிடைக்கிறது. கனத்த தோல்களில் அக உறையாகவும், புத்தகக் கட்டுமானத்திலும் பயன்படுகிறது.

**Morse code:** (*மின்.*) மோர்ஸ் குறியீடு: மோர்ஸ் என்பார் அமைத்த தந்திப் பதிவுக் குறியீட்டு முறை இந்த முறையில் எழுத்துகளையும், எண்களையும் குறிக்கும் புள்ளிகள், கோடுகள் மூலம் செய்திகள் அனுப்பப்படுகின்றன.

**Morse taper:** (*எந்.*) மோர்ஸ் கூம்புச் சரிவு: துரப்பணத்தண்டுகளையும், மற்றக் கருவிகளையும் எந்திரக் கதிர்களுடன் பொருத்துவதற்குரிய 0 முதல் 7 வரையிலான திட்ட அளவுக் கூம்புச் சரிவு.

**Mortar:** [1] கல்வம்: உலக்கையால் பொருள்களை இடித்துத் தூளாக்குவதற்குப் பயன்படும் கனமான சுவருடைய குழியுரல்.

[2] சாந்து: காரை, சுண்ணாம்பு, மணல் கலந்த சாந்து.

**Mortar board:** (*க.க.*) சாந்துத் தட்டு: காரைச் சாந்து வைப்பதற்கு அடியில் கைப்பிடியுள்ள ஒரு சதுரத் தட்டு.

**Mortar box:** (*க.க.*) சாந்துக் கலவைப் பெட்டி: சாந்து கலப்ப

தற்குப் பயன்படும் பெரிய பெட்டி அல்லது தொட்டி.

**Mortar joints :** சாந்து இணைப்புகள் : செங்கல் அல்லது காரைக் கட்டுமானப் பணிகளில் சாந்து கொண்டு இணைப்பதற்கான பல்வேறு பாணிகள்.

**Mortise :** (*அச்சு.*) துளைப் பொருத்து: பொருத்து முளையிடும் துளைச் சட்டம்.

அச்சுக் கலையில் அச்சுத் தகட்டில் எழுத்துகளைச் செருகுவதற்கான வாயில்.

**Mortise chisel:** (*மர.வே.*) துளைப் பொருத்து உளி: துளை பொருத்திடும் தடித்த அலகுடைய உளி.

**Mortise gauge:**(*மர.வே.*)துளைச் சட்டமானி: தேவையான அகலத்திற்குத் துளைச் சட்டத்தினை வெட்டுவதற்குப் பயன்படும் ஒரு கருவி.

**Mortise lock:** (*க.க.*) துளைச் சட்டப் பூட்டு: துளைச்சட்டத்துடன் பொருத்தப்படும் ஒரு பூட்டு.

**Mortising machine:** (*மர. வே.*) துளைப் பொருத்து எந்திரம்: மரத்தில் உளியாலோ சுற்று வெட்டு மூலமாகவோ துளைச் சட்டம் வெட்டுவதற்கான ஓர் எந்திரம்.

**Mosaic:** பல் வண்ணப் பட்டை: தரையில் பல வண்ணப் பட்டைகளினால் அணிசெய்தல்.



**Mother-of-pearl:** முத்துக் கிளிஞ்சல்: கிளிஞ்சல்களின் உட்புறத்திலுள்ள பளபளப்பான பொருள். பொத்தான் போன்ற சிறிய பொருள்கள் தயாரிக்கப் பயன்படுகிறது.

**Motion:** (*இயற்.*) இயக்கம்: ஒரு பொருள் இயங்கி நிலை மாற்றம் பெறுதல்.

**Motion study:** (*க.க.*) இயக்க ஆய்வு: சில பணிகளைச் செய்திடும் தொழிலாளர்களின் நடமாட்டங்களைக் கண்காணித்தல். தேவையற்ற நடமாட்டங்களைத் தவிர்த்து இயக்கத் திறனை அதிகரிக்கும் நோக்குடன் இந்த ஆய்வு செய்யப்படுகிறது.

**Motive power:** (*பொறி.*) எந்திர விசை: எந்திரத்தில் இயக்கத்தைத் தோற்றுவிக்கும் திறமுடைய ஆற்றல்.

**Motometer:** (*எந்.*) இயக்கமானி: நீராவி எஞ்சினின் வேகத்தைக் கூறிடும் கருவி. இதனை வேகமானி என்றும் கூறுவர்.

**Motor :** (*மின்.*) (1) மின்னோடி : மின்விசையை எந்திர ஆற்றலாக மாற்றும் ஒரு கருவி.

(2) விசைப் பொறி : எந்திரத்திற்கு இயக்க ஆற்றலை அளிக்கும் பகுதி.

**Motor analyzer :** (*தானி.*) இயக்கப் பகுப்பாய்வுக் கருவி : உந்து

வண்டியில் ஒரு தனிப் பெட்டியில் அல்லது ஒரு தனிச்சேணத்தில் ஒருங்கிணைத்து வைத்த கருவிகளின் ஒரு தொகுதி. இதன் மூலம் நீள் உருளை அழுத்தம், காற்று -எரி பொருள், அனல் மூட்டும் நேரம் ஆகியவற்றைச் சரிபார்க்கலாம்.

**Motor drive :** (பட்.) மின்னோடி விசை : ஓர் எந்திரத்திற்கு ஒரு மின்னோடியின் மூலம் மின் விசையளிக்கும் நவீன முறை. இது எந்திரத்துடன் நேரடியாக இணைக்கப்பட்டிருக்கும்.

**Motor generator :** (மின்.) மின்னோடி மின்னாக்கி : ஒரு மின்னாக்கியை இயக்கும் மின்னோடி. இது மாற்று மின்னோட்டத்தை நேர் மின்னோட்டமாகவும், நேர் மின்னோட்டத்தை மாற்று மின்னோட்டமாகவும் மாற்றுவதன் மூலம் மின்னாக்கியை இயக்குகிறது.

**Motor hoist :** இயக்கு உயர்த்தி: கையினாலோ விசையினாலோ இயக்கப்படும் பாரந் தூக்கிச் சாதனம்.

**Motor jet :** (வானூ.) [1] மின்னோடித் தாரை : எதிரீட்டு வாயு எஞ்சின் மூலம் இயங்கும் அழுத்தியினைக் கொண்ட ஒரு தாரை எஞ்சின்.

(2) இத்தகைய எஞ்சின் உடைய ஒரு விமானம்.

**Motor starter :** (மின்.) மின்னோடித் தொடக்கி : தொடக்க இயக்கத்தைச் செய்வதற்காக ஒரு மின்னோடியுடன் இணைக்கப்பட்டுள்ள மாற்றுத் தடைப்பெட்டி. இதில் மின்னோடியின் வேகம் அதிகரிக்க அதிகரிக்க தடை குறைந்து, இறுதியில் சுற்று வழியிலிருந்து முற்றிலுமாக நீங்கி விடும்.

**Motor torque :** (மின்.) மின்னோடி முறுக்குப் பதக்கம் : ஒரு மின்னோடியில் சுழற்சியை அல்லது சுழலும் போக்கினை உண்டாக்கும் திருகு முயற்சி அல்லது திருகு விசை.

**Mottled :** பல் வண்ணப் புள்ளியமைவு : பல் வண்ணப் பட்டைகள் அல்லது புள்ளிகள் இட்ட அமைவு.

வேண்டுமென்றே பல்வேறு வண்ணக்கோலங்களில் தயாரிக்கப்பட்ட பரப்புடைய காகிதம்.

**Mount :** ஒப்பனைச் சட்டம்: அறைகலனை வலுவாகப் பொருத்துவதற்குரிய அலங்கார ஒப்பனைச் சட்டம். இது பெரும்பாலும் உலோகத்தில் அமைந்திருக்கும்.

**Movieola :** திரைப்படத் தொகுப்பான் : திரைப்படத்தைத் தொகுப்பதற்குப் பயன்படும் ஒரு திரைப் படச் சாதனம்.

**Moving - coil galvanometer :** (மின்.) இயங்கு சுருள் மின்னோட்டமானி : ஒரு நிரந்தரக் காந்தத்

தினால் உருவாக்கப்பட்ட வலுவான காந்தப்புலத்தின் ஆதாரத்திலுள்ள நகரக்கூடிய சுருளினைக் கொண்ட ஓர் உணர் கருவி. இது சுருளின் வழியே சிறிதளவு மின்னோட்டம் பாய்ந்தாலும் அதனைச் சுட்டிக் காட்டும்.

**Moving needle :** (மின்.) இயங்கு ஊசி மின்னோட்டமானி : மின்னோட்டத்தைக் காட்டும் நகரும் காந்தஊசி கொண்ட ஒரு சாதனம். இந்த ஊசியைச் சுற்றி அல்லது அதன் அருகில் சுற்றப்பட்டுள்ள நுண்ணிய கம்பிச் சுருளின் வழியே மின்விசை பாய்கிறதா என்பதைச் சுட்டிக் காட்டக்கூடியது.

**Mucilage :** தாவரப் பசை : ஒரு வகைத் தாவரப் பிசினிலிருந்தும் நீரிலிருந்தும் செய்யப்படும் தாவரப் பசைப் பொருள்.

**Muck bar:** (உலோ.) கூள உலோகக் கட்டி: தேனிரும்புத் தயாரிப்பில் முழுவதும் உருகாத உலோகக் கட்டியைக் கூளங்களின் உருளை வழியே செலுத்துவார்கள். அப்போது அது "கூளக்கட்டி" என அழைக்கப்படுகிறது. இந்த உலோகக் கட்டியில் கசடு அதிகமாகக் இருக்குமாதலால், இதனைச் சுத்திகரிக்காமல் பயன் படுத்த இயலாது.

**Mudsill:** (க.க.) சேற்றுப்படிக் கட்டை: ஒரு கட்டுமானத்தின் அடித்தளப் படிக் கட்டை. இது தரையில் நேரடியாக வைக்கப்படும்.

**Muffle:** (1) சூளை உலை: மண்பாண்டவேலையில் சுடுவதற்காகப் பாண்டம் வைக்கப்படும் சூளை உலையறை.

(2) ஒலித்தடுப்பான்: ஒரு மின்னோடிப் புகைபோக்கியில் ஓசையை அடக்குவதற்கான சாதனம்.

**Muffle furnace:** (உலோ.) பொதியுலை: மின்விசையினாலோ எரிவாயுவினாலோ இயக்கப்படும் ஒரு சிறிய உலை. உலோகங்களைக் கடும்பதப்படுத்துதல், கடினமாக்குதல், முலாமிடுதல் போன்ற அதிகவெப்பம் தேவைப்படும் வேலைகளுக்கு இது பயன்படுத்தப்படுகிறது.

**Muffler:** (தானி.) ஓசையடக்குச் சாதனம்: உட்புழையான நீள் உருளை கொண்ட ஒரு எந்திர சாதனம். இது ஒரு கேசோலின் எஞ்சினுடன் இணைக்கப் பட்டிருக்கும். இதன் வழியே புறம்போக்கும் வாயு வெளியே சென்று ஓசை வராமல் அடக்கிவிடும்.

**Mule-pulley stand:** (எந்.) கலப்புக் கப்பி நிலை: ஒரு துணைச் சுழல் தண்டின் மேலுள்ள தளர்வான இரு கப்பிகளை, இரு சுழல் தண்டுகளுக்கிடையில் விசையினை அனுப்புவதற்கு வசதியாக அமைத்துள்ள நிலை.

**Multicolor press:** (அச்சு.) பல வண்ண அச்சுப் பொறி: ஒரே சமயத்தில் இரண்டுக்கு மேற்பட்ட வண்ணங்களில் அச்சடிக்கவல்ல அச்சுப் பொறி.

**Multi filament lamp:** (*மின்.*) பல இழை விளக்கு: பெரிய வெண்சுடர் விளக்குகள் பெரும்பாலும் பல இழைகளுடன் தயாரிக்கப் படுகின்றன. இந்த இழைகள் இணையாக அமைந்திருக்கும். இதனால், ஓர் இழை எரிந்துபோனாலும், விளக்கு தொடர்ந்து எரியும்.

**Multigraph:** தட்டச்செழுத்துச் சாதனம்: கடிதங்களையும் ஆவணங்களையும் தட்டச்சு செய்த படிகள் போல் தோன்றுமாறு அச்சடிக்கவல்ல ஒரு சாதனம்.

**Multigraph paper:** தட்டச்செழுத்துக் காகிதம்: தட்டச் செழுத்துச் சாதனத்தில் பயன் படுத்துவதற்குரிய காகிதம்.

**Multipart bearings:** (*எந்.*) பல உறுப்புத் தாங்கிகள்: எந்திரத்தில் இருசுக் கட்டையுடன் இணைந்துள்ள மூன்று அல்லது அவற்றுக்கு மேற்பட்ட பகுதிகளைக் கொண்ட தாங்கிகள். இவை எண்ணெய்ப்படலத்தைப் பாதிக்காத வகையில் அமைக்கப்பட்டிருக்கும். இந்த வகைத் தாங்கிகள் ஒரு பெட்டிக்குள் அடங்கியிருக்கும். இந்த வகைத் தாங்கிகள் ஒரு பெட்டிக்குள் அடக்கியிருக்கும. கனரக எந்திரங்களில் இவை பயன்படுத்தப் படுகின்றன.

**Multiplane:** (*வானூ.*) பல தட்டு விமானம்: ஒன்றன்மேல் ஒன்றாக இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட ஆதாரத் தட்டுகளைக் கொண்ட விமானம்.

**Multiple:** பன்மடங்கு: பல கூறுகளானது; எண்ணின் பல மடங்கு; மீதமின்றி ஓர் எண்ணால் வகுக்கப் படத்தக்க தொகை.

**Multiple disk clutch:** (*தானி.*) பன்முக வட்ட ஊடிணைப்பி: பன்முக வட்ட தட்டுகளைக் கொண்ட ஊடிணைப்பி. இதில் ஒரு தொகுதி இயங்குவதாகவும், இன்னொரு தொகுதி இயங்குவதாகவும் அமைந்திருக்கும். அழுத்தப்பட்ட சுருணை விற்சுருள் மூலம் அழுத்தம் கொடுக்கப்படுகிறது. ஊடிணைப்பி மிதிகட்டையை அழுத்துவதன் மூலம் ஊடிணைப்பி விடுவிக்கப்படுகிறது. இந்த ஊடிணைப்பிகள் உலர், ஊடிணைப்பி, ஈர ஊடிணைப்பி என இருவகைப்படும்.

**Multiple drilling machine:** பன்முகத் துரப்பண எந்திரம: ஒன்றுக்கொன்று இணையாகப் பல துரப்பணக் கதிர்கள் அமைக்கப்பட்டுள்ள ஓர் எந்திரம். இவை ஒரே சமயத்தில் இயககப்படும்.

**Multiple projection welding:** பன்முக வீச்சுப் பற்றவைப்பு: இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட பற்றாசுகளை ஒரே சமயத்தில் இயங்கச் செய்யும் முறை.

**Multiple series.** (*மின்.*) பன்முகத் தொடர் மின்சுற்று வழி: இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட தொடர் மின்சுற்று வழிகளின் ஓரிணையான இணைப்பு.

**Multiple - threaded screw:** (*எந்.*) பன்முக இழைத்திருகு: தனது

உடற்பகுதியைச் சுற்றி பல திருகு சுழல் வட்டங்கள் உள்ள ஒரு திருகு. இதன் மூலம் ஓரிழைத் திருகின் மூலம் கிடைக்கும் இயக்கத்தை விட அதிக வேக இயக்கத்தைப் பெறலாம்

**Multiplier:** (மின்.) விசைப் பெருக்கி: மின்விசை ஆற்றலை வைப் பன்மடியாகப் பெருக்குவதற்குரிய சாதனம்.

**Multipolar motor:** (மின்.) பல் துருவ மின்னோடி; நான்கு அல்லது அவற்றுக்கு புலக்காந்தத் துருவங்களையுடைய ஒரு மின்னோடி.

**Multispeed motor:** (மின்.) பன் முகவேக மின்னோடி: எவ்வளவு பாரமிருந்தாலும், இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட வெவ்வேறு வேகங்களில் இயங்கவல்ல ஒரு மின்னோடி.

**Muntz metal :** (உலோ.) மண்ட்ஸ் உலோகம் : 60–62 பகுதி செம்பும், 38-40 பகுதி துத்தநாகமும் கலந்த உலோகக் கலவை. இது கப்பற் கவசத்தட்டுகள் செய்யப் பயன்படுகிறது.

**Muriatic acid :** (வேதி.) நீரகப் பாசிகை அமிலம் : ஹைடிரோகுளோரிக் அமிலத்தின் (HCl) வாணிகப் பெயர்.

**Mushet steel :** (உலோ.) முஷட் எஃகு : 9% டங்ஸ்டன், 2.5% மாங்கனீஸ், 1.85% கார்பன் கொண்ட எஃகு. இது வெட்டுக் கருவிகள் செய்வதற்கு முக்கியமாகப் பயன்படுகிறது.

**Muslin :** மென்துகில் (மஸ்லின்) : பெண்டிர் உடைகளுக்கும், திரைகளுக்கும் உதவும் நுண்ணயமுடைய பருத்தியாலான மென் துகில்.

**Mutual inductance :** (மின்.) பிறிதின் தூண்டல் : ஒரு சுருணையின் காந்தப்புலம், இன்னொரு சுருணையின் மீது செயற்படுவதன் மூலம் உண்டாகும் விளைவு.

ஒரு மின் சுற்று வழியில் ஏற்படும் மின்னோட்ட மாறுதலினால் இன்னொரு மின் சுற்று வழியில் உண்டாகும் மின்தூண்டல்.

**Mutule :** (க க.) பிதுக்கக் கவரணை : டோரிக் என்னும் கிரேக்கக் கலைப் பாணியின் படி தூணின் மேல் வரம்பிலுள்ள பிதுக்கக் கவரணை.

**Myrtle :** புன்னை : இதனைக் கலிபோர்னியாப் புன்னை என்றும் கூறுவர். இதன் மரம் கடினமானது; வலுவானது; பசு மஞ்சள் நிறமுடையது. இந்தப் பசுமை மாறாத தன்மையுடைய இது பல நோக்க மரம். அமெரிக்காவின் மேற்குக் கரையில் இது மிகுதியாக வளர்கிறது.

# N

**N. A. C. A. cowling:** (*வானூ.*) என். ஏ. சி. ஏ. மேல்மூடி: வானூர்தி எந்திரத்தின் ஒருவகை மேல்மூடி. இது காற்றினால் குளிர்விக்கப் படும் கதிர்களைப் போலமைந்த எஞ்சினை மூடியிருக்கும். இதில் ஒரு தலைச்சீரா அல்லது வளையம் இருக்கும். இதுவும், உடற்பகுதி யின் பின்புறமுள்ள ஒருபகுதியும், குளிர்விக்கும் காற்று தலைச் சீரா வின் முன்முறம் வழியாக உட் சென்று, உடற் பகுதிக்கும் தலைச் சீராவின்பின் பகுதிக்குமிடையிலான வழவழப்பான கோண வடிவப் பள் ளத்தின் வழியேவெளியேறும் வகை யில் அமைக்கப்பட்டிருக்கும்.

**Nacelle:** (*வானூ.*) விமான எந்திர வேயுறை: பயணிகளுக்கான அல்லது மின் எந்திரத்திற்கான அடைக்கப்பட்ட காப்பிடம். இது பொதுவாக விமானத்தின் கட்டு மானச் சட்டத்தைவிடக் குறுகலாக இருக்கும். இதில் வால் பகுதி இருக் காது.

**Nail:** ஆணி: மெல்லிய உலோகத் துண்டு. இதன் ஒரு முனை கூர்மை யாகவும், இன்னொருமுனை தட் டையான அல்லது உருண்டை யான கொண்டையினையும் கொண்டிருக்கும். மரத் துண்டு களையும். பிற பொருட்களையும் இணைக்க இது பயன்படுகிறது. இணைக்க வேண்டிய பொருட் களைப் பொருத்தி ஆணியின் கொண்டையில் அடித்துப் பிணைக் கலாம்.

**Nail puller :** (*எந்.*) ஆணிக் குறடு: (1) ஆணி பிடுங்கப் பயன்படும் ஒரு கருவி. இது இருகவர்முனைகளைக் கொண்டிருக்கும். கவர் இடை வெளியை ஆணியின் கொண்டைக் குக் கீழே கொடுத்து நெம்பி ஆணி யைப் பிடுங்கலாம்.

(2) இரு தாடைகள் கொண்ட ஒரு எந்திர சாதனம். இது மரத்தில் அறையப்பட்டுள்ள ஆணியைப் பிடுங்குவதற்கு ஒரு நெம்பு கோலாகப் பயன்படுகிறது.

**Nail set:** (*மர. வே.*) ஆணித் தண்டு: 4″ அல்லது 5″ நீளமுள்ள ஒரு சிறிய எஃகுத் தண்டு. இதன் ஒரு முனை நுனி நோக்கிச் சிறுத் தும் ஆணியின் கொண்டை வழியே கழன்று விடாதவாறு சற்றே கிண்ண வடிவிலும் அமைந்திருக் கும். ஆணியின் கொண்டையை மேற்பரப்புக்குக் கீழே செலுத்து வதற்குப் பயன்படுகிறது.

**Naphtha:** (*வேதி.*) இரசகற்பூரத் தைலம்: பெட்ரோலியத்திலிருந்து கேசோலினுக்கும் பென்சீனுக்கு மிடையே வடித்து இறக்கப்படும் பொருள். இது தூய்மைப்படுத்தும் பொருளாகப் பெருமளவில் பயன் படுத்தப்படுகிறது.

**Naphthalene:** (*வேதி.*) இரசகற்பூரம்: $C_{10}H_8$ : கரி எண்ணெயில் (கீல்) கலந்திருக்கும் ஒரு கூட்டுப் பொருள். இது கரி எண்ணெயிலிருந்து வெண்படிகச் சிம்புகளாகப் பிரித்தெடுக்கப்படுகிறது. சாயப்பொருட்கள் தயாரிப்பதாலும், நோய் நுண்ம ஒழிப்புப் பொருளாகவும், அந்துப்பூச்சி அழிப்பானாகவும் பயன்படுகிறது.

**National electrical code:** (*மின்.*) தேசிய மின் விதித்தொகுப்பு: மின் கடத்திகள், மின் சாதனங்கள், மின் எந்திரங்கள் போன்றவற்றை நிறுவும்போது மின்னியல் வல்லுநர்களுக்கு வழி காட்டியாகவுள்ள விதிகளின் தொகுப்பு.

**Nstive copper:** (*கனிம.*) தன்னியல்புத் தாமிரம்: மிக உயர்ந்த தரமான செம்பு. இது உலோக வடிவிலேயே தோண்டியெடுக்கப்படுகிறது. மின்னியல் நோக்கங்களுக்குப் பெரிதும் பயன்படுகிறது.

**Natural:** (*அச்சு.*) இயற்கை வண்ணம்: சிறிதளவு செயற்கை வண்ணம் சேர்க்கப்பட்ட மரக்கூழின் இயற்கை வண்ணத்திலிருந்து கிடைக்கும் காகிதத்தின் வண்ணம்.

**Natural cement:** (*பொறி.*) இயற்கை சிமெண்ட்: சீமைச் சிமெண்ட் (போர்ட்லண்ட் சிமெண்ட்) எனப்படும் சீமைக்காரையிலிருந்து வேறுபட்டது. இது விரைவாக இறுகிக் கொள்ளும்; விலை மலிவானது; வெளிர் நிறமுடையது; வலிமை குன்றியது.

**Natural gas:** (*வேதி.*) இயற்கை வாயு: நிலத்திலிருந்து இயற்கையாக வெளிப்படும் வாயு. இது எண்ணெய்ப் படுகை மண்டலங்களில் ஏராளமாகக் கிடைக்கிறது. மிகுந்த வெப்பத்திறன் கொண்டது. மிகச் சிறந்த எரிபொருள்.

**Natural resins:** (*வேதி. குழைம.*) இயற்கைப் பிசின்: தாவரங்களிலிருந்து சுரக்கும் திடப்பொருள்; எளிதில் உடையக்கூடியது; கண்ணாடிபோல் பளபளப்புடையது. கிளிஞ்சலின் தன்மையுடையது; தண்ணீரில் கரையாதது; பல்வேறு உருகுந்திறன் கொண்டது.

**Nautical measure:** கடல் அளவை
6080.20 அடி = 1 கடல் மைல்
அல்லது அலகு:
3 கடல் மைல் = 1 லீக்
60 கடல் மைல் = 1 பாகை
(பூமத்திய ரேகையில்)

**N.B.** (*அச்சு.*) பி.கு. பின்குறிப்பு என்பதன் சுருக்கம் பின் வருவதை நன்கு கவனி என்பது பொருள்.

**Neat cement:** (*க.க.*) தூய சிமெண்ட்: மணல் கலக்காத தூய்மையான சிமெண்ட் காரை.

**Neat's-foot oil:** மாட்டுக் காலடி எண்ணெய்: எருது வகையைச் சேர்ந்த தூய்மையான கால்நடைகளின் காலடி மற்றும் முழந்தாள் எலும்புகளை நீரில் கொதிக்க வைப்பதன் மூலம் கிடைக்கும் ஒருவகை எண்ணெய். இது வெளிர் மஞ்சள் நிறமுடையது. இது தோலை மென்மைப்படுத்துவதற்கு முக்கியமாகப் பயன்படுகிறது.

**Neck:** (க.க.) தூண் கழுத்து: தூணின் தலைப்பை அடுத்த கீழ்ப் பகுதி.

(2) மரத்தண்டின் இடை இணைப் புப் பகுதி.

**Needle bearing:** ஊசித்தாங்கி: ஒருவகை உருள்தாங்கி. இதிலுள்ள உருளிகள் ஊசிகளைப்போல் மெல்லிதாக இருக்கும்.

**Needle point:** ஊசிப் பின்னல் வேலை: திரைச்சீலைகளில் கம்பளி இழைகளினால் செய்யப்படும் நுட்ப மான ஊசிப் பின்னல் வேலை.

ஊசிமுனை: (எந்.) எந்திரவியலில் ஊசிபோல் கூர்முனையுடைய ஒரு கருவி.

**Needle valve:** (எந்.) ஊசி ஓரதர்: ஒரு குண்டுசியை அல்லது ஊசி யைச் சீரமைவு செய்வதன் மூலம் திரவம் அல்லது வாயு பாய்வதை முறைப்படுத்தக்கூடிய ஓரதர். இது அடிப்பகுதியில் ஒரு சிறிய துவா ரத்தில் கூம்பு வடிவப் பள்ளத்தில் பொருத்தப்பட்டிருக்கும்.

**Negative:** மறிநிலைத்தகடு: ஒளிப் படக் கலையில் ஒளியும் நிழலும் நேர்மாறாகப் பதிந்திருக்கும் ஒளிப் பட உருவப்படிவம்.

**Negative brushes of a dynamo:** (மின்.) நேர்மின்னாக்கி மறி நிலைத் தூரிகை: எதிர்மின் வாயு டன் இணைக்கப்பட்டுள்ள மின் னோட்ட அலைகளைத் திருப்பி விடும் கருவியின் தூரிகை.

**Nagative garbon:** (மின்.) எதிர் மின் கார்பன்: ஒரு தொடர் மின் னோட்டச் சுடர் விளக்கில் கீழ் நிலைக் கார்பன்.

**Negative charge:** (மின்.) எதிர் மின்னேற்றம்: எலெக்ட்ரான்கள் சற்று மிகுதியாகவுடைய ஒரு மின் னழுத்த நிலை.

**Negative conductor:** (மின்.) எதிர்மின் கடத்தி: எதிர் மின்வாயிலி ருந்து செல்லும் ஒரு மின் கடத்தி.

**Negative ghosts:** மறிநிலை இரட் டைத் தோற்றம்: தொலைக் காட்சி யில் காலந்தாழ்த்தி அனுப்பப் பட்ட அடையாள அலையுடன் மின் அலை கலப்பதால் கறுப்பு வெள்ளைப் பகுதிகள் ஒன்றுக் கொன்று மாறி ஏற்படும் இரட் டைத் தோற்றக் குளறுபடி.

**Negativ plate:** (மின்.) எதிர்மின் தகடு: (1) ஒரு சேமக்கலத்தில் உள்ள கடற்பஞ்சு போன்ற ஈயத் தகடு. இது மின்னியக்கத்தின் போது எதிர்மின் தகடாக அல்லது எதிர்மின் வாயாகச் செயற்படு கிறது.

(2) ஓர் அடிப்படை மின்கலத்தில் கார்பன், செம்பு, பிளாட்டினம் முதலியவை எதிர்மின் வாயாகச் செயற்படுகின்றன.

**Negative side of circuit:** (மின்.) மின் சுற்றுவழியின் எதிர் மின்பாதை: ஒரு மின்சுற்று வழியில் மின்விசை நுகர்வுச் சாதனத்திலிருந்து மின் வழங்கும் ஆதாரத்திற்குத் திரும்பிச் செல்லும் மின் கடத்து பாதை.

**Neon light:** (*மின்.*) செவ்வொளி விளக்கு: மின் இழைக்குப் பதிலாக இரு மின் முனைகளைக் கொண்ட ஒருவகை விளக்கு. குழாயினுள்ளிருக்கும் செவ்வொளி வாயு அயனியாகும்போது ஒளி உண்டாகிறது. விளம்பரங்களில் இந்த விளக்குகள் பெருமளவில் பயன்படுகின்றன.

**Neon - lightignition timing:** (*தானி.*) செவ்வொளிச் சுடர்மூட்ட நேரம்: உந்து ஊர்தியின் எஞ்சினல் ஒரு சிறிய செவ்வொளி விளக்கினை கம்பிகள் மூலமாகத் தொடரிலுள்ள சுடர் மூட்டக் கம்பியின் துணையின் சுற்றுவழியின் கம்பிகளை முதல் எண் சுடர்ப்பொறிச் செருகுடன் இணைப்பதன் வாயிலாக, முறிப்பான் தொடும்போதும் விடும்போதும் ஒளி மின்னுகிறது. சமனுருள் சக்கரத்தில் அல்லது அதிர்வு அடக்கியில் உள்ள காலக் குறியீட்டில் நேரடியாக ஒளி மின்னும் போது எஞ்சின் உரிய இயக்க நேரத்தில் இருப்பதாகக் கண்டு கொள்ளலாம்.

**Nep:** பருத்தி முடிச்சு: பருத்தியில் குறைந்த உருட்சி அல்லது மட்டமான விதை நீக்கம் காரணமாக ஏற்படும் சிறிய முடிச்சுகள்.

**Nernst lamp:** (*மின்*) நெர்ன்ஸ்ட் விளக்கு: ஒருவகை வெண்சுடர் விளக்கு. இதிலுள்ள ஒளிரும் பகுதியில் அரிய மண்களின் உருகா ஆக்சைடுகளினாலான ஒரு பென்சில் இருக்கும்.



**Nested tables:** கூண்டு மேசை: பயன்படுத்தாதபோது ஒன்றுக்குள் ஒன்றைச் செருகிவைத்துக் கொள்ளத்தக்கவாறு அமைக்கப்பட்டுள்ள ஒரு மேசைத் தொகுப்பு. இது பொதுவாக நான்கு அடுக்குகளைக் கொண்டிருக்கும்.

**Nest of saws**(*மர வே.*) தொகுப்பு ரம்பம்: ஒரேகைப்பிடியில்பயன்படுத்தக் கூடிய, பல்வேறு நீளங்களைக் கொண்ட அலகுகள் அமைந்த வட்டவடிவ ரம்பங்களின் தொகுதி. இலேசான வேலைப் பாடுகளுக்குப் பயனபடுகிறது.

**Nest plate** (*குழை.*) தொகுப்புத் தகடு. வார்ப்படங்களை உட்செலுத்துவதற்குப் பயனபடும் உட்குழிவுப் பாளங்களுக்கான பள்ளப் பகுதியைக் கொண்ட காப்புத் தகடு.

**Neutral:** (*தானி.*) இயங்காநிலை: விசையூக்க எந்திரத்தில் இயக்கம் ஊட்டாது இயங்கும் பகுதியின் நிலை. இந்நிலையில் வேகமாற்றப் பல்லிணை பொருந்தாமலிருக்கும்.

மின்னியலில் நேர் மின்னாகவோ எதிர்மின்னாகவோ இல்லாமல் இருக்கும் நடுநிலை இணைவு.

**Neutral axis** (*பொறி.*) நொதுமல் அச்சு: ஓர் எளிய விட்டத்தில் மேற்புற இழைகள் எப்போதும் அமுக்கத்தில் இருக்கும். அப்புற இழைகள் எப்போதும் விறைப்புடனிருக்கும். எனவே, இழைகள் அமுக்கத்திலோ விறைப்புடனோ இல்லாத

ஒரு புள்ளி இருக்கவேண்டும். இந்தப் புள்ளிதான் அப்பகுதியின் "நொதுமல் அச்சு" எனப்படும்.

**Neutral flame:** நடுநிலைச் சுடரொளி: வாயுமூலம் பற்ற வைப்பதற்கான சுடரொளி. இதில் முழுமையான உள்ளெரிதல் இருக்கும்.

**Neutralization:** *(வேதி.)* செயலற்றதாக்குதல்: அமிலக் கரைசலில் காரத்தைச் சேர்ப்பதுபோல், மாறான விளைவினால் பயனற்றதாகவோ செயலற்றதாகவோ ஆக்குதல்.

**Neutral position;** *(தானி.)* நடுநிலை: உந்து ஊர்தியை இயக்காமல் எஞ்சின் மட்டும் ஓடிக்கொண்டிருப்பதற்கு இடமளிக்கும் வகையில் மாற்றுப் பல்லிணைகளை ஒன்றையொன்று தொடாமலிருக்கச் செய்யும் பல்லிணை மாற்று நெம்புகோலின் நிலை.

**Neutral wire:** *(மின்.)* நடுநிலை மின்கம்பி: சமநிலை மின்கம்பி. மூன்று கம்பிகள் கொண்ட மின் வழங்கு முறையில் கட்டுப்பாட்டு மின்கடத்தி. இந்தக் கம்பி சமநிலையற்ற மின்னோட்டத்தை எடுத்துச் செல்கிறது.

**Neutrodyne:** *(மின்.)* நடுநிலை விசையழுத்தம்: கொண்மிகளைச் செயலற்றதாக்குவதன் மூலம் தேவையற்ற பின்னூட்டத்தைக் கட்டுப்படுத்தும் ஒரு வானொலி மின் சுற்று வழி.

**Neutron:** *(இயற்.)* நியூட்ரான்/நொதுமம்: *(இயற்.)* மின்னியக்கமில்லாத சிற்றணு மூன்று அடிப்படை அணுத்துகள்களில் ஒன்று. இது புரோட்டான் போன்றே எடையுள்ளது. ஆனால் இதில் மின்னேற்றம் இராது.

**Newel:** *(க. க.)* நடுத்தூண்: சுழற் படிக்கட்டின் உச்சியில் அல்லது அடியில் உள்ள நடுக் கம்பம்.

**News:** பத்திரிகைக் காகிதம்: அடிமரக் கூழிலிருந்து தயாராகும் ஒரு வகைக் காகிதம். செய்தியிதழ்கள் அச்சடிக்கப் பயன்படுகிறது.

**News board:** செய்தியிதழ்க் காகித அட்டை: செய்தியிதழ்க் காகிதக் கழிவுகளிலிருந்து தயாரிக்கப்படும் ஒரு வகை மலிவான காகித அட்டை.

**Newsprint:** *(அச்சு.)* செய்தித் தாள் காகிதம்: செய்தித்தாள் அச்சிடுவதற்கான, மரக்கூழில் தயாரான தாள்.

**News stick:** *(அச்சு.)* செய்தி அச்சுக்கோப்புக்கட்டை: ஒரு குறிப்பிட்ட அளவுடைய அச்சுக் கோப்புக் கட்டை. பத்தி அகலத்தைக் கட்டுப்படுத்த பயன்படுகிறது. செய்தித்தாள் பணியில் பயன்படுத்தப்படுகிறது.

**Newton's laws of motion:** *(இயற்.)* நியூட்டன் இயக்க விதிகள்: முதல் விதி: புறவிசைகள் எவற்றுக்கும் உட்படாதிருக்கும் போது, ஒவ்வொரு பருப்பொருளும்

தொடர்ந்து அசையா நிலையிலோ, ஒரு நேர்கோட்டில் ஒரே சீரான இயக்கத்திலோ இருந்து வரும்.

இரண்டாம் விதி : "ஒரு பொருளின் முறுக்கமானது (அதாவது, அதன் வேக வளர்ச்சி வீதம்), அந்தப் பொருளின் மீதான நிகர விசையினை அந்தப் பொருளின் பொருண்மையினால் வகுப்பதால் கிடைக்கும் ஈவுக்குச் சமம்"

மூன்றாம் விதி : "ஒவ்வொரு வினைக்கும், அதாவது, ஒவ்வொரு வினைக்கும், அதாவது, ஒவ்வொரு இயற்பியல் விசைக்கும் சமமான எதிர்வினை உண்டு"

**Nibbler:** (*எந்.*) கொந்து கருவி உலோகத் தகடுகளைச் சிறுகச் சிறுகக் கொந்தி விசித்திரமான வடிவங்களை உருவாக்கப் பயன்படும் உலோக வேலைப்பாட்டுக் கருவி.

**Nibs:** பேனா அலகு: பேனாவின் கூர்மையான அலகு.

**Niche:** (*க.க.*) சுவர்மாடம்: சிலையுருக்கள் வைப்பதற்குரிய சுவர் மாடம்:

**Nichrome:** (*உலோ.*) நிக்ரோம்: நிக்கலும், குரோமியமும் கலந்த ஓர் உலோகக் கலவையின் வாணிகப் பெயர். இது எளிதில் பற்றிக் கொள்ளும். மின் அடுப்புகள், பிற மின் தடைச் சாதனங்கள் தயாரிக்கப்படுகிறது.

**Nickel:** (*உலோ.*) நிக்கல்: உலோகக் கலவைகளில் பெரிதும் பயன்படுத்தப்படும் கெட்டியான ஒளிரும் பொருள். இதன் ஒப்பு அடர்த்தி 8 69. நிக்கல் மூலாம்பூசவும், உலோகக் கலவைகள் தயாரிக்கவும் பயன்படுகிறது.

**Nickel aluminum:** நிக்கல் அலுமினியம்: 80 அலுமினியமும், 20% நிக்கலும் கலந்த உலோகக் கலவை. நிக்கல் கலப்பதால் அலுமினிய உலோகக் கலவைகளின் விறைப்பாற்றல் அதிகமாகிறது.

**Nickel copper:** (*உலோ.*) நிக்கல் செம்பு: நிக்கலும் செம்பும் கலந்த உலோகக் கலவை. அமிலம் அரிக்காத வார்ப்படங்கள் தயாரிக்கவும், உராய்வுத் தாங்கு வெண்கலமும் தயாரிக்கவும் பயன்படுகிறது. இதில் 60% நிக்கல், 33% செம்பு, 3.5% மாங்கனீஸ், 3.5% இரும்பு கலந்திருக்கும்.

**Nickel malybdenum iron:** (*உலோ.*) நிக்கல் மாலிப்டினம் இரும்பு: 20-%-40% மாலிப்டினம், 60% நிக்கல், சிறிதளவு கார்பன் கலந்த ஒருவகை உலோகக் கலவை. இது அமில அரிப்புத்தடுப்பானாகப் பயன்படுகிறது.

**Nickel plating:** (*மின்.*) நிக்கல் மூலாம்: உலோக மேற்பரப்பில் நிக்கல் மூலாம் பூசுதல். ஒரு நிக்கல் உப்பு நீரில் உலோகத்தை மூழ்க வைத்து குறைந்த அழுத்த மின்னோட்டத்தைச் செலுத்தினால் உலோகத்தில் நிக்கல் மூலாம் படியும்.

**Nickel silver:** நிக்கல் வெள்ளி: இதனை ஜெர்மன் வெள்ளி என்றும் கூறுவர். செம்பு, நிக்கல், துத்தநாகம் கலந்த உலோகக் கலவை.

**Nickel steel:** (*பொறி.*) நிக்கல் எஃகு: 3.5% நிக்கல் அடங்கிய எஃகு. மிக வலிமை வாய்ந்தது; முறையாகச் சூடாக்கிப் பக்குவப்படுத்தினால் திண்மையாக இருக்கும்.

**Nickel-tantalum alloy:** (*வேதி.*) நிக்கல் டாண்டாலம் உலோகக் கலவை: 70% நிக்கல், 30% டாண்டாலம் அடங்கிய கடினமான, ஆனால் ஒசிவுத்தன்மையுடைய உலோகக் கலவை. மின் தடைக் கம்பிகள் தயாரிக்கப் பயன்படுகிறது.

**Nitrate:** (*வேதி.*) நைட்ரேட்டு: (1) நைட்ரிக் அமிலத்தின் உப்புப் பொருள் சில்வர் நைட்ரேட்டு இந்த வகையைச் சேர்ந்தது.

(2) நைட்ரிக் அமிலத்துடன் அல்லது ஒரு கூட்டுப் பொருளுடன் மூல அடிப்பொருளோ வெறியமோ சேர்வதால் உண்டாகும் உப்பியற் பொருள்.

**Nitric:** (*வேதி.*) நைட்ரிக்: நைட்ரஜனிலிருந்து அல்லது நைட்ரஜன் தொடர்பான பொருள்.

**Nitric acid:** (*வேதி.*) நைட்ரிக் அமிலம்: சோடியம் அல்லது பொட்டாசியம் நைட்ரேட்டைக் கந்தக அமிலத்துடன் கலந்து சிதைத்து வடிப்பதால் உண்டாகும் அமிலம். நிறமற்றது. மிகுந்த அரிக்கும் தன்மை கொண்டது.

**Nitriding:** (*வேதி.*) நைட்ரஜனேற்றம்: இரும்பை ஆதாரமாகக் கொண்ட உலோகக் கலவைகளில் நைட்ரஜனை ஏற்றும் செய்முறை. உலோகக் கலவையை அம்மோனியா வாயுவுடனோ வேறேதேனும் நைட்ரஜனியப் பொருளுடனோ கலந்து சூடாக்குவதன் மூலம் நைட்ரஜன் ஏற்றலாம்.

**Ntrogen:** (*வேதி.*) நைட்ரஜன்: காற்று மண்டலத்தில் ஐந்தில் நான்கு பகுதியாகவுள்ள வாயுத் தனிமம் நிறமற்றது; மணமற்றது.

**Nitroglycerin:** (*வேதி.*) நைட்ரோ கிளிசரின்: வெடிப்பாற்றல் மிக்க மஞ்சட் கலவை நீர்மம். இளமஞ்சள் நிறத்திலோ நிறமற்றதாகவோ இருக்கும். எண்ணெய்ப்பசையுடையது. கிளிசரின், கந்தக அமிலம், நைட்ரிக் அமிலம் ஆகியவற்றிலிருந்து தயாரிக்கப்படுகிறது. மிகுந்த வெடிப்பாற்றல் வாய்ந்தது. களிமண்ணுடன் கலந்து சுரங்க வெடி தயாரிக்கப்படுகிறது.

**Noble metal** (*வேதி.*) துருப்படாத உலோகம்: விலையுயர்ந்த அல்லது தூய உலோகத்தைக் குறிக்கும் சொல். எளிதில் துருப்பிடிக்காத உலோகங்களையும் குறிக்கும்.

**Nodes:** (*மின்.*) அதிர்வு மையப் புள்ளி: அதிர்வுடைய பொருளின் அதிர்வு மையப் புள்ளி.

**Noheet metal:** செம்பத உலோகம்: இதனைச் "செம்பத ஈயம்" என்

றும் கூறுவர். இது சோடியத் துடன் கலந்து கெட்டியாக்கிய ஈயத்தைக் கொண்ட உராய்வுத் தடுப்பு உலோகம்.

**Noil:** கம்பளிச் சீவல்: குறுகிய கம் பளிச் சீவல். உல்லன் நூல்களுக் குப் பயன்படுகிறது.

**Nomenclature:** *(பொறி.)* கலைச் சொல்: ஒரு குறிப்பிட்ட கலையில் அல்லது அறிவியல் துறையில் பயன்படுத்தப்படும் தனிச் சொற் களின் தொகுதி.

**Nonconductor:** *(மின்.)* மின் கடத்தாப் பொருள்: தன்வழியாக மின்விசை செல்வதை அனுமதிக் காத ஒரு பொருள்.

**Noncorrosive flux:** அரித்திடா உருகு பொருள்: பற்றாசு வைத்தல், ஒட்டவைத்தல் போன்றவற்றில் பயன்படுத்தப்படும்போது அரி மானம் உண்டாக்காத ஒருவகை உருகும் கலவைப் பொருள்.

**Nondeforming steel:** *(உலோ.)* உருத்திரியா எஃகு: 1.5% மாங்க னீஸ் கலந்த கடினமாக்கிய எஃகு. இது கருவிகள் செய்யவும், வார்ப் படங்கள் செய்யவும் பயன்படு கிறது.

**Nonferous metals:** *(பொறி.)* அயமிலா உலோகங்கள்: இரும்பு அடங்கியிராத உலோகங்கள்.

**Noninductive circuit:** *(பொறி.)* தூண்டாமின் சுற்றுவழி: மின்னோட் டத்தின் காந்த விளைவு மிகக் குறைந்த அளவுக்குக் குறைக்கப் பட்டுள்ள அல்லது அடியோடு இல் லாமல் செய்யப்பட்டுள்ள ஒரு மின் சுற்றுவழி.

**Noninductive resistance:** *(பொறி.)* தூண்டா மின்தடை: தன் தூண்டலிலிருந்து விடுபட்ட மின் தடை.

**Noninductive winding:** *(பொறி.)* தூண்டாச் சுருணை: கம்பிச் சுரு ளின் ஒரு பகுதியில் பாயும் மின் னோட்டத்தில் ஏற்படும் காந்தப் புலம், மறுபாதியில் எதிர்த்திசை யில் பாயும் மின்னோட்டத்தினால் ஏற்படும் காந்தப் புலத்தின் மூலம் செயலற்றதாக்கப்படும் வகையில் அமைக்கப்பட்ட சுருணை.

**Nonmetallic sheath cable:** *(பொறி.)* உலோகமிலா உறை பொதிக் கம்பிவடம்: உலோகமல் லாத ஓர் உறையில் அல்லது தறி போன்ற உறையில் பொதியப்பட் டுள்ள இரண்டு அல்லது மூன்று மின் கடத்திகளைக் கொண்ட ஒரு வகை மின்கம்பிப் பொருள்.

**Nonpareil:** *(அச்சு.)* தனிநிலை அச்செழுத்து: அச்செழுத்தின் அளவு வகைகளில் ஒன்று. இது 6 புள்ளி அளவினைக் குறிக்கும்.

**Non pressure:** அழுத்தமிலா உரு கிணைப்பு: அழுத்தம் எதுவுமின்றிப் பற்றவைப்பதற்குரிய பற்றவைப்பு முறைகளில் ஒன்று.

**Nonrigid airship:** *(வானூ.)* விறைப்பிலா வான்கலம்: வாயுப்

பைகள், காற்றறைப்பைகள் போன்றவற்றிலுள்ள அக அழுத்தத்தின் மூலம் மட்டுமே வடிவம் பராமரிக்கப்படும் ஒரு வான்கலம்.

**Nordberg key:** (*எந்.*) நார்ட்பெர்க் திறவுகோல்: சக்கரத்தின் குடத்தைச் சுழல்தண்டுடன் பிணைத்துப் பூட்டுவதற்கான வட்டவடிவத் திறவுகோல். இது அடிக்கு 1/16″ என்ற அளவில் நுனிநோக்கிச் சிறுத்திருக்கும். பெரிய விட்டம சுழல்தண்டின் விட்டத்தில் ½ பகுதி 6″ வரை இருக்கும. பெரிய வடிவளவுகளில்: இத் திறவுகோல் சுழல்தண்டின் விட்டத்தில் ஐந்தில் ஒரு பகுதி என்ற அளவில் இருக்கும். பெரிய வடிவளவுகளில், இத் திறவுகோல் சுழல்தண்டின் விட்டத்தில் ஐந்தில் ஒரு பகுதி என்ற அளவில் இருக்கும்.

**Normal:** இயல்பளவு: நிலைநாட்டப்பட்ட சட்டம் அல்லது விதிக்கிணங்க அமைந்துள்ள நிலை.

(2) செங்குத்துக்கோடு: (*கணி.*) ஒரு வளைவுக்குச் செங்குத்தாக இருக்கும் ஒரு கோடு.

**Normalizing:** (*பொறி.*) இயல்பாக்குதல்: எஃகினை உயர்ந்த மாறுநிலை வெப்பத்திற்குக் கூடுதலாகச் சூடாக்கி, காற்றில் குளிர்வித்தல்.

**Normal loop:** (*வானூ.*) இயல்புக் கரண வளைவு: விமானம் இயல்பாகப் பறப்பதிலிருந்து தொடங்கி, ஏறி, தலைகீழாகக் கவிழ்ந்து, சறுக்கிப் பாய்ந்து மீண்டும் இயல்பாகப் பறக்கும் நிலைக்கு வருதல்.

**Normal or three-point landing:** இயல்பான அல்லது மும்முனைத் தரையிறக்கம்: தரையிறங்கும் பரப்பிற்குத் தொடுவரைபோற் செல்கிற ஒரு பாதையில் தரையிறங்குதல். இதில் பறக்கும் வேகத்தில் ஏறத்தாழத் தொடுங்கணத்திலேயே ஏற்படுகிறது.

**Normal solution:** (*வேதி.*) இயல்புக் கரைசல்: ஓர் அமிலத்தின் இயல்புக் கரைசலில் 1000 க.செ.மீ. கரைசலுக்கு ஒரு கிராம் ஹைடிரஜன் அயனிகள் அடங்கியிருக்கும். எடுத்துக்காட்டுகள்: 1000 க.செ.மீ.யில் 36.5 கிராம் ஹைட்ரஜன் குளோரைடு; (HCL) 1000 க.செ.மீ.யில் 49 கிராம் கந்தக அமிலம் ($H_2SO_4$). உற்பத்தியாகும் ஹைட்ரஜன் அயனிகளின் எண்ணிக்கையினால் அணு எடையை வகுப்பதன் மூலம் இந்த மதிப்புக் கிடைக்கிறது. ஓர் உப்பு மூலத்தின் இயலபுக் கரைசலில் 1000 க.செ.மீ.யில் 17 கிராம் ஹைட்ராக்கில் அயனிகள் அடங்கியிருக்கும். எடுத்துக்காட்டு: 1000 க.செ.மீ.யில் 40 கிராம் சோடியம் ஹைட்ராக்சைடு.

**Normal spin:** (*வானூ.*) இயல்பு சுழற்சி: விமானம் அனைத்துக் கட்டுப்பாடுகளுக்கும் எதிர்மாறாக இயல்பான நிலையிலிருந்து சுழன்று கொண்டே தலைகீழாக இறங்கும் இறக்கம். இதனைக் "கட்டுப்படுத்திய" சுழற்சி என்றும் அழைப்பர்.

**Norman :** (க.க.) நார்மானிய கட்டிடக் கலை: நார்மானியர் இங்கிலாந்தை வெற்றி கொண்ட பின்னர் இங்கிலாந்தில் உயர் நிலையை எட்டிய நார்மானிய பாணிக் கட்டிடக் கலை.

**Nose :** (பட்.) அலகு : ஆயுதங்கள், கருவிகள் போன்றவற்றின் கூர்மையான அலகுப் பகுதி. கடைசல் எந்திரத்தின் திருகிழை முனை, துளையிடு எந்திரத்தின் கதிர், துரப்பணத்தின் கூர் அலகு போன்றவை இதற்கு எடுத்துக் காட்டு.

**Nose - down :** (வானூ.) கீழ் நோக்கிப் பாய்தல் : பறக்கும் விமானத்தின் கூம்புப் பகுதியைக் கீழ் நோக்கிப் பாயும்படி செய்தல்.

**Nose heavy :** (வானூ.) கூம்பு இறக்கம் : விமானம் இயல்பாகப் பறக்கும் போது, அதன் கூம்புப் பகுதி கீழ் நோக்கி இறங்கும் போக்கு.

**Nose - over :** (வானூ.) கூம்பு ஏற்றம் : விமானம் தரையிறங்கும் போது அதன் கூம்புப் பகுதி தற்செயலாக மேல் நோக்கித் திரும்புவதைக் குறிக்கும் சொல்.

**Nose-up :** (வானூ.) கூம்பு உயர்வு: பறக்கு விமானத்தின் கூம்புப் பகுதியை உயர்த்துதல்.

**Nose wheel :** (வானூ.) கூம்புச் சக்கரம் : விமானத்தின் கூம்புப் பகுதியினைத் தாங்குவதற்காக முதன்மைச் சக்கரங்களுக்கு முன்னே அமைக்கப்பட்டுள்ள, திசையறிந்து திருப்பத்தக்க சக்கரம்.

**Nosing ;** (க.க.) படி வரிசை: படி வரிசை விளிம்பின் உலோக முகப்பு.

**Notation :** குறிமான முறை : குறியீடுகள், சைகைகள், உருவங்கள், எழுத்துகள் போன்றவற்றால் செய்திகளைத் தெரிவிக்கும் முறை.

**Notching machine:** வடுவெட்டுக் கருவி: உலோகத் தகடுகளில் வடுத்தடங்களை வெட்டவும், விளிம்புகளை மட்டப்படுத்தவும் பயன்படும் கருவி.

**Novolak:** (வேதி; குழை.) நோவோலக்: நிரந்தரமாக உருகி இளகக் கூடியதும், கரையத் தக்கதுமான ஃபினோல் லால்டிஹைட் பிசின். பினாலின் ஒரு மூலக்கூறுடன், ஃபார்மால்டிஹைடின் ஒன்றுக்குக் குறைவான மூலக் கூற்றுடனும், ஓர் அமில வினையூக்கியுடனும் வினைபுரிவதன் மூலம் கிடைக்கும் வினைபொருள் இது.

**Nozzle:** (எந்.பொறி.) கூம்பலகு: நீள் குழாயின் குழாய் முனை போன்ற கூம்பலகு.

**Nuclear energy:** (இயற்.) அணு ஆற்றல்: அணுவியல் வினையில் வெளிப்படும் ஆற்றல்.

**Nuclear turbojet:** (வானூ.) அணுவியல் விசையாழி: விசையாழி

யின் வழியாகவரும் காற்றினைச் சூடாக்குவதற்காக, உள்ளெரி அறைக்குப் பதிலாக, ஓர் அணு உலையைக் கொண்டிருக்கிற விசையாழி.

**Nucleus:** (*வேதி.*) மையக்கரு: அணுவின் உள்மையத்தில் செறிந்துள்ள அணுத்திரள். இதில் நியூட்ரான்களும், புரோட்டான்களும் செறிந்து சேர்ந்திருக்கும்.

**Number drills:** (*உலோ.வே.*) எண்ணிட்ட துரப்பணம்: 1 முதல் 80 வரையில் எண்ணிடப்பட்ட சிறிய துரப்பணங்கள். இவற்றின் விட்டம் ஓர் அங்குலத்தின் ஆயிரங்களின் பகுதியாகக் குறிக்கப் பட்டிருக்கும். எடுத்துக்காட்டாக 1 ஆம் எண் துரப்பணத்தின் விட்டம் 0.228"; 80ஆம் எண் துரப்பணத்தின் விட்டம் 0.0135".

**Numbering machine:** இலக்கமிடும் எந்திரம்: காசோலைகள், அனுமதிச் சீட்டுகள் முதலியவற்றில் தொடர்ச்சியாக இலக்கங்களை முத்திரையிடும் எந்திரம் அல்லது சாதனம்.

**Numerals:** (*அச்சு.*) எண்குறி: எண்குறித்த இலக்கத் தொகுதி. பெருவழக்காகப் பயன்படுவது 1,2,3,4,5,6,7,8,9,0 என்ற அராபிய எண் குறிகள். ரோமானிய எண்கள்: I (1), V (5), L (50), C (100), D (500), M (1000).

**Numerator:** (1) பின் மேல் இலக்கம்: பின்னத்தில் மேல் இலக்கத்தின் பகுதிகளைக் குறிக்கும். (2) எண்ணுபவர்.

**Numismatics:** நாணயவியல்: நாணயம், பதக்கம் ஆகியவற்றை ஆராய்ந்து வரலாற்றைக் கணிக்கும் அறிவியல்.

**Nut :** (*எந்.*) திருகாணி : சதுரமான அல்லது அறுகோண வடிவமுடையதும், உலோகத்தில் அல்லது வேறு பொருளினாலானது மான ஒரு சிறிய துண்டு. இதன் உள்புறத்தில் மரையாணியை ஏற்பதற்கான திருகிழைகள் அமைந்திருக்கும்.

**Nutarbor or nut mandrel:** (*எந்.*) ஆதார அச்சு : திருகாணிகளை வடிவமைப்பதற்குப் பயன்படும் சுழலும் முதன்மை ஆதார அச்சு.

**Nut machine** (*பட்.*) திருகாணிப் பொறி : ஓர் உலோகப் பட்டையிலிருந்து அல்லது உலோகத் தண்டிலிருந்து திருகாணிகளைத் தயாரிப்பதற்கு வெட்டவும், துளையிடவும், தட்டி விடவும் பயன்படும் ஓர் எந்திரம்.

**Nut shanks :** (*பட்.*) திருகாணித் துண்டு : பெரிய மரக்கைப் பிடிகளுடன் பயன்படுத்துவதற்கு வடிவமைக்கப்பட்ட திருகாணித்தண்டு அல்லது துண்டு.

**Nylon :** (*குழை.*) நைலான் : குழைமப் பொருள்களின் ஒரு குடும்பம். இதில் பல வகைகள் உண்டு. இரு காடி மூலங்களையுடைய கரிம அமிலங்களை டையாமின்களுடன் சேர்த்துச் செறிமானம் செய்வதன்

மூலம் ஒரு வகைப் பிசின் உண்டா கிறது. இந்தப் பிசின் கெட்டியானது; அதிக வெப்பத்தையும், உராய்வையும், வேதியியல் எதிர்ப்பையும் தாங்கக்கூடியது. இதன் இந்தப் பண்புகளினால் இழைகளில் மட்டுமின்றி, எண்ணெய் வயல், கடல் போன்ற இடங்களிலும் எந்திரங்களில் இதனைப் பெருமளவில் பயன்படுத்த முடிகிறது.

# O

**Oak :** (*மர.வே.*) கருவாலி : பல நோக்கங்களுக்குப் பயன்படும் மரம். இது கடினமானது; நீண்ட நாள் உழைக்கக்கூடியது; வலிமை மிகுந்தது; தட்ப வெப்ப மாறுபாடுகளைத் தாங்கக்கூடியது. அறை கலன்கள் தயாரிக்கவும், தளமிடுவதற்கும், உருச்செப்பமிடுவதற்கும் பயன்படுகிறது.

**Oakum :** (*கம்மி.*) : பழங்கயிற்றுச் சிலும்பு : பழங்கயிறுகளைப் பிய்த்துச் சிலும்புவாகச் செய்து கலப்பற்றாகப் பயன்படுத்துவதற்கான பழங்கயிற்றுச் சிதைவு.

**Obelisk :** (*க.க.*) சதுரத் தூபி : நான்முகக் கூர்நுனிக் கம்ப வடிவமைந்த மரம்.

**Oblique projection :** சாய்வுத் தளப் படிவாக்கம் : ஒரு பொருளின் முகம் பார்ப்பவருக்கு இணையாக வரும் வகையில் அமைக்கும் முறை. இதில் இந்த முன் முகத்திற்குச் செங்குத்தாகவுள்ள முகங்கள், முன் முகத்தின் அதே கோணத்திற்கும் அளவு கோலுக்கும் வரையப்படுகிறது இது.

**Oblong :** (*கணி.*) நீள் சதுரம் : உயரத்தைவிடக் குறுக்கு அகலம் மிகுதியாகவுடைய உருவம்,

**Obscuration :** (*வண்.*) மங்கலாக்குதல் : ஒரு வண்ணத்தின் அல்லது இனாமலின் மறைப்புத் திறன். ஒளி ஊடுருவாத வண்ணப் பொருளின் மறைப்பு ஆற்றல்.

**Obsidian :** (*கனிம.*) எரிமலைப் பாறை : எரிமலைக் கரும் பளிக்குப் பாறை. இது மிகவும் கடினமான பளபளப்பானது.

**Obstruction light :** (*வானூ.*) தடை விளக்கு : விமானங்கள் பறப்பதற்கு ஆபத்தான உயரத்தைக் குறித்துக் காட்டுவதற்கென வடிவமைக்கப்பட்ட சிவப்பு விளக்கு.

**Obtuse :** (*கணி.*) விரிகோணம் : கூர் விளிம்பற்ற கோணம். இரு செங்கோணத்திற்குக் குறைந்து ஒரு செங்கோணத்திற்குப் பெரிதான கோணம்.

**Obverse :** முகப்புப் பக்கம் : நாணயம், பதக்கம் ஆகியவற்றில் முகப்

புப்பக்கம். பின் புறத்திற்கு நேர் எதிரான முன்புறம்.

**Occasional furniture:** துணை அறைகலன்: பல்வேறு வடிவுகளி லுள்ள பல்வேறு பயன்பாடுகளுக் கான சிறிய அறைகலன். இக் காலத்தில் வரவேற்பு அறை, பகல் நேர அறை போன்றவற்றிலுள்ள அறைகலன்கள்.

**Ocher:** (வண்.) மஞ்சட்காவி: சதுப்பு நிலங்களில் இரும்பும் சுண் ணாம்பும் கலந்த நீரில் உண்டா கும் மஞ்சட்காவி மண். இதனை நேர்த்தியான தூளாகச் செய்து ஆளிவிதை எண்ணெயுடன் கலந்து வண்ணச் சாயம் தயாரிக்கப்படு கிறது.

**Octagan:** எண்கோணம்: எட்டுப் பக்கங்களும் எட்டுக் கோணங் களும் உடைய ஒருசமதள உருவம்.

**Octane selector:** (தானி.)நீர்க்கரி மத் தொடர்மத் தேர்வுமுறை: பல் வேறு தரமுடைய கேசோலினிலி ருந்து மிக உயர்ந்த அளவு திறம் பாட்டினைப் பெறுவதற்காக நேரத் தைச் சரியமைவு செய்வதற்கான ஒருமுறை.

**Octant:** (வானூ.) எண்ம வட்ட மானி: வானியலிலும் கடற்பயணத் திலும் பயன்படுத்தப்படும் அரைக் கால் வளாகம். 90° வரையில் கோண அளவுகளில் இருக்கும். இதன் செயற்கை வானவிவிம்பு குமிழில் வடிவில் இருக்கும்.

**Odd leg caliper:** (எந்.) இணை யிலாக்கால் விட்டமானி: மிதமான அளவில் விளைந்த கால்களை யுடைய விட்டமானி. இதில் இரு கால்களும் ஒரே திசையில் விளைந் திருக்கும். இது தலையடிப் பகுதித் தொலைவுகளை அளவிடுவதற்குப் பயன்படுகிறது.

**Odeum:** (க.க.) இசையரங்கு: பண்டையக் கிரேக்க ரோமானியர் களிடையே இசை நிகழ்ச்சிகளுக் கான அரங்கு. இக்காலத்தில் ஒரு மண்டபம்; நீண்ட அறைக்கூடம்.

**Odometer:** தொலைவு மானி: பய ணஞ் செய்த தொலைவினை அள விடுவதற்கான ஒரு சாதனம். இது சக்கரத்தின் குடத்துடன் இணைக் கப் பட்டிருக்கும்.

**Odontograph:** (எந்.) பல்லிணை ஆர அட்டவணை: பல்லிணைப் பற் களின் உருவரைகளை அமைப் பதற்கான ஆரங்களின் அட்ட வணை.

**O.D. pipe:** (பொறி.) புறவிட்டக் குழாய்: கொதிகலன் குழாய்களின் பெயரளவிலான வெளி அளவுகளைக் குறிக்கும். 12" விட்டத்திற்கு அதிக மான மென்குழாய்களையும் குறிக் கிறது.

**Oersted, Hans Christian(1777-1851):** ஓயர்ஸ்டெட், ஹான்ஸ் கிறிஸ் டியன் (1777-1851): டென்மார்க் நாட்டைச் சேர்ந்த மருத்துவ அறி ஞர். காந்த முள்ளின்மீது மின் னோட்டத்தின் விளைவுகளைக் கண்டுபிடித்தவர்.

**Oersted:** (மின்.) ஓயர்ட்ஸ்டெட்:

காந்தப்புலத்தின் செறிவினைக் குறிக்கும் திட்ட அலகு.

**Offset:** (க.க.) [1] உட்சாய்வு: சுவரில் திட்பக் குறைவு உண்டு பண்ணும் பக்க உட்சாய்வு:

(2) மாற்றுக்கறைப் படிவு: அழுத்தப் பட்ட தொய்வக உருளைமீது மை தடவி எதிர்ப்படியாக எடுக்கப்படும் கல்லச்சுமுறை.

**Offset paper:** மாற்று அச்சுத்தாள்: மாற்றுக் கல்லச்சு முறைக்குப் பொருத்தமான பண்பியல்புகளுள்ள தாள்.

**Offset printing:** மாற்று அச்சு முறை: அச்சுப்படிவத்திலிருந்து அச்சுமை நேரடியாகத் தாளுக்குச் செல்லாமல், ஒரு ரப்பர் பரப்பில் முதலில் பதிந்து, பின்னர் எதிர்ப் படியாகத் தாளில் பதியும் அச்சு முறை.

**Ogee:** (க.க.) இரட்டை வளைவு: பாம்பு வடிவான அல்லது 'ɔ' வடிவான இரட்டை வளைவு.

**Ogive:** கூர்முனை வளைவு. வளைவுக்கூடத்தின கூர்முனை வளைவு.

**Ohm:** (மின்.) ஓம்: மின் தடை அலகு.

**Ohm meter:** (மின்.) ஓம் மானி: மின்தடையின் அளவினை ஓம்களில் நேர்டியாகக் குறித்துக்காட்டும் ஒருவகை மின்னோட்ட மானி.

**Ohm resistance:** (மின்.) ஓம் தடை: ஒரு மின் சுற்று வழியில் (நேர் மின்னோட்டம்) ஓர் ஆம்பியர் மின்னோட்டத்தை ஓர் ஓல்ட் மின்னழுத்தம் உண்டாக்கும்போது அந்த மின்சுற்று ஓர் ஓம் தடையை உடையதாகக் கருதப்படும்.

**Ohm's law:** (மின்.) ஓம் விதி: "ஒரு மின்னோட்டத்தில் பாயும் மின்னோட்டம், அதிலுள்ள தடையின் அல்லது எதிர்ப்பின் விகித அளவில் இருக்கும்" என்னும் விதி. இந்த விதி பெரும்பாலும் கணிதத்தில் பயன்படுத்தப்படுகிறது.

**Oil** (வேதி.) எண்ணெய் : விலங்குகள், தாவரங்கள், கனிமங்களிலிருந்து கிடைக்கும் எண்ணெய்ப் பொருள். இது மசகுப் பொருளாகப் பயன்படுத்தப்படுவதுடன் தொழில்களிலும் மிகுதியாகப் பயன்படுகிறது.

**Oil control ring:** (தானி.) எண்ணெய்க்கட்டுப்பாட்டு வளையம்: இது ஒரு வகை உந்து தண்டு வளையம். இந்த வளையத்திலுள்ள வரிப்பள்ளத்தின் வழியாகவும், உந்து தண்டின் சுவரிலுள்ள சிறிய துவாரங்கள் வழியாகச் செல்லும் எண்ணெய் நீள் உருளைச் சுவரிலிருந்து பிறாண்டி எடுத்து திருகு கோட்டக் கலத்தினுள் வடிக்கும் வகையில் இது வடிவமைக்கப் பட்டுள்ளது.

**Oil cup** (எந்.) எண்ணெய்க் குவளை: இது உட்புழையான கண்ணாடி மேற்பகுதியையும், தகடு

களாலான அடிப்பகுதியையும் கொண்டது. இதனை திருகிழை கள் மூலம் ஒரு தாங்கியுடன் இணைந்து, தேவையானபோது எண்ணெய் இடைவிடாமலும் ஒரே சீராகவும் சொட்டுவதற்கு அனுமதிக்குமாறு செய்யப்படுகிறது.

**Oiler :** எண்ணெய்க் கலம்: சிறிய வடிவளவிலுள்ள எண்ணெய்க் கலம்.

**Oil filter:** (*தானி.*) எண்ணெய் வடிகட்டி: வடிகட்டும் பொருளுடைய நீள் உருளை. இது, இயக்கு பொறி ஓடிக் கொண்டிருக்கும் போது, மசகு எண்ணெய் இடைவிடாமல் வடிகட்டி வழியாகச் செல்லுமாறு செய்து துகள்களையும், அயல் பொருள்களையும் அகற்றும்வகையில் வடிவமைக்கப் பட்டிருக்கும். இந்த வடிகட்டும் அமைவு 8,000 மைல்தொலைவுக்கு ஒருமுறை புதுப்பிக்கப்பட வேண்டும்.

**Oil gauge** (*தானி.*) எண்ணெய் அளவுமானி: இந்த அளவுமானிகளில் இருவகை உண்டு. ஒன்று கொள்கலத்திலுள்ள எண்ணெயின் அளவினைக் குறிக்கப் பயன்படுகிறது. மற்றொன்று, பாயும் எண்ணெய் அழுத்த அளவுமானி பொதுவாக கருவிப்பலகைமீது பொருத்தப் பட்டிருக்கும். அளவு குறிக்கப் பட்ட ஒரு வட்டிகையில் இது இந்த அளவுகளைக் காட்டும்.

**Oil grinder:** எண்ணெய்ச் சாணை: கூர்மையான கருவிகளைச் சாணை தீட்டுவதற்குப் பயன்படும், விசையினால் இயங்கும். ஒருவகைச் சாணைக்கருவி.

**Oil groove:** (*எந்.*) எண்ணெய்த் துளை: ஓர் எந்திரத்தின் பித்தளை உள்முகத்திலும், அதன் சறுக்குப் பரப்பிலும் வெட்டப்பட்டுள்ள வரிப்பள்ளம். இது மசகிடுவதற்காக எண்ணெயை வழங்குவதற்குப் பயன்படுகிறது.

**Oil hardening:** (*எந்.*) எண்ணெய் இறுக்கம்: எஃகினை நீருக்குப் பதிலாக எண்ணெயில் ஊற வைத்துக் கெட்டியாக்குதல்.

**Oil hole:** (*எந்.*) எண்ணெய்த் துளை: மசகெண்ணெய் ஊற்றுவதற்குரிய எந்திரத்துளை.

**Oil-hole drills:** (*உலோ; வே.*) எண்ணெய்த் துளைத் துரப்பணம்: எந்திரத் தண்டிலிருந்து வெட்டு முனை வரைச் செல்லும் ஒன்று அல்லது இரண்டு துளைகளையுடைய துரப்பணம். ஆழமான துளைகளைத் துரப்பணம் செய்வதற்கு இது முக்கியமாகப் பயன்படுகிறது.

**Oilless-type bearings:** (*தானி.*) எண்ணெயிலாத் தாங்கிகள்: (1) நீண்ட இடைவெளிகளுக்குப் பின்னரே எண்ணெயிடுதல் தேவைப்படும் தாங்கிகள். இவை எண்ணெயை உறிஞ்சிக் கொள்ளும் நுண்துளையுள்ள உலோகத்தினால் செய்யப்படுகின்றன.

(2) காரீயகச் செருகிகள் கொண்ட வெண்கலத் தாங்கிகள்.

**Oil line:** (தானி.) எண்ணெய்க் குழாய் அமைவு: மசகு எண்ணெய்க்கான சுற்று வழியினையுடைய குழாயும் அதனுடன் இணைந்த சாதனங்களும்.

**Oil pump:** (தானி.) எண்ணெய் விசைக் குழாய். எண்ணெய் விசைக் குழாய்களில் பல்லிணை வகை, இதழ் வகை, குண்டல வகை எனப் பல வகை உண்டு. இவை பெரும்பாலும் எஞ்சினின் இணைபிரியா அங்கமாக அமைந்திருக்கும். சேமிப்புக் கலத்திலிருந்து எண்ணெயை மேல் மட்டங்களுக்கு இறைப்பதற்கு இவை பயன்படுகின்றன.

**Oil stone:** (மர. வே.) சாணைக்கல்: கருவிகள் முதலியவற்றை கூர்மையாக்குவதற்கான எண்ணெய் ஊட்டப்பட்ட தீட்டுக்கல்.

**Oil-tank vent:** (வானூ.) எண்ணெய்க் கலப்புழை: எஞ்சினிலிருந்து எண்ணெய்க் கலத்திற்கு எண்ணெய் ஆவிகளைச் செலுத்துவதற்குப் பயன்படுத்தப்படும் ஒரு பெரிய குழாய்.

**Oil tannage,** எண்ணெய்த்தோல் பதனிடல்: தோல் பதனிடுவதற்கான மிகப் பழைய முறை. இக்காலத்தில் சிலவகை எண்ணெய்களுடனும், மென் கொழுப்புகளுடனும், சேர்த்துப் பிசைந்து தோல் பதனிடப்படுகிறது. வரை மான்தோல், எருமைத்தோல், மான்தோல் ஆகியவற்றை பதனிட இம்முறை பயன்படுகிறது.

**Oil varnish:** (மர.வே.) எண்ணெய் வண்ண மெருகு: ஆளிவிதை எண்ணெய், மரப்பூச்செண்ணெய் போன்ற உலரும் எண்ணெய்களைக் கொண்ட வண்ண மெருகு. ஆக்சிகரணம் மூலமாக மெதுவாகக் கெட்டியாதல் நடைபெறுகிறது.

**Oleaginous:** (வேதி.) எண்ணெய்ப் பசை: எண்ணெயின் இயல்புடையது.

**Olefine:** (வேதி.) ஒலிஃபைன்: எத்திலின் குடும்பத்தைச் சேர்ந்த வேதியியற்பொருள்.

**Oleo gear:** (வானூ.) எண்ணெய்ப் பல்லிணை: எண்ணெய் பூசக்கூடிய ஒரு சாதனம். இது ஒரு துவாரத்தின் வழியாகச்செல்லும்எண்ணெய் பாய்ந்து பல்லிணைக்கு மசகிடுகிறது.

**Olive:** தேவதாரு: மெதுவாக வளரும் ஒருவகை மரம். நெருக்கமான குருணைமணிகள் உடையது. கனமானது. இளமஞ்சள் கலந்த பழுப்பு நிறத்தில் இருக்கும். அதில் அடர்பழுப்பு திறப்புள்ளிகளும் பட்டைகளும் அமைந்திருக்கும். நுட்பவேலைப்பாட்டுப் பொருள்கள் செய்யப் பயன்படுகிறது.

**Omega:** ஒமேகா: கிரேக்க நெடுங்கணக்கின் கடைசி எழுத்து

**Omnigraph:** தானியங்கிக் கத்தி: தானியங்கி அசிட்டிலின் கத்தி. இதில் ஓர் எந்திரமுனை அமைந்திருக்கும். அது கத்தியின் இயக்கத்திற்கேற்ப உருவங்களைச் செதுக்கும். இதன் உதவியுடன் ஒரே

சமயத்தில் பலபடித் தக்டுகளை வெட்டி எடுக்கலாம்.

**Oneside coated:** ஒரு பக்கப் படலத் தாள்: ஒரு பக்கம் மட்டுமே படலப் பூச்சுடைய கற்பாள அச்சுத்தாள்.

**Onion skin:** சருகுத் தாள்: தட்டச்சில படியெடுப்பதற்குப் பயன்படும் மிக மெல்லிய தாள்.

**Onyx:** (வேதி.) பல்வண்ண மணிக்கல்: பற்பல வண்ண அடுக்குகள் கொண்ட மணிக்கல் போன்ற சலவைக்கல்.

**Oolitic limestone:** (க.க.) மணிக்கல சுண்ணம்: மிக நுட்பமானக் கோளவடிவத் துகள்களினாலான பரல் செறிவுடைய சுண்ணக்கல்.

**Ooze leather:** தோல் மெருகு: தோல் பதனிடுவதற்கான ஒரு முறை. தோலுக்கு வெல்வெட்டு போன்ற மென்மையான தன்மையளிப்பதற்கு இந்த முறை பயன்படுகிறது.

**Opaci meter:** ஒளிபுகாத் திறன் மானி: காகிதத்தின் ஒளியை ஊடுருவிச் செல்லவிடாத திறனை அளவிடுவதற்கான ஒரு கருவி.

**Opacity:** (அச்சு.) ஒளிபுகாத் திறன்: காகிதத்தின் ஒளியை ஊடுருவிச் செல்லவிடாத தன்மை.

**Opaque:** ஒளிபுகா: ஒளியை ஊடுருவிச் செல்ல விடாத இயல்பு:

**Open circuit:** (மின்.) திறப்பு மின் சுற்று வழி: மின்சுற்று முழுமை பெறாமலும், மின்னோட்டம் இல்லாமலும் இருக்கும் ஒரு மின்சுற்று வழி.

**Open circuit cell:** (மின்.) திறப்பு மின்சுற்று வழிக்கலம்: இடையிடைப் பணிகளுக்காக திறப்புமின் சுற்று வழியில் வைக்கப்பட்டுள்ள மின் கலம்.

**Open hearth:** திறந்த உலை: ஆழமற்ற மூட்டு அனல் உலை: இது எஃகு செய்வதற்கான திறந்த உலை முறையில் பயன்படுகிறது.

**Open mold:** (வார்.) திறப்பு வார்ப்படம்: நீண்ட சலாகைகளும், தகடுகளும் தயாரிக்கப் பயன்படும் வார்ப்படம். சமதள மணற்படுகை அமைக்கப்பட்டு அதில் உருவமைக்கப்பட்டு அழுத்தப்படுகிறது. உருவமைப்பினை எடுத்துவிட்டு, அதில் உருகிய உலோகத்தை ஊற்றலாம்.

**Open string stairs:** (க.க.) திறப்பு மென் படிக்கட்டுகள்: ஒரு பக்கம் சுவரும் மறுபக்கம் கைப்பிடியும் உடைய மாடிப்படி, மிதி கட்டைகளும் செங்குத்துப் பகுதியும் பக்கவாட்டிலிருந்து புலனாகுமாறு கட்டப்படுகிறது.

**Open wiring:** (மின்.) திறப்பு வகை மின் கம்பியமைப்பு: மின் கடத்திகள் வெளி தெரியுமாறு மின் கம்பிகளை அமைத்தல். இந்த முறையில் மின்கடத்திகள் பீங்கான் குமிழ்களில் அல்லது முளைகளில் பொருத்தப்பட்டிருக்கும்.

**Operating speed:** (வானூ.) இயக்க வேகம்: விமானத்தில் எஞ்சின் வேகத்தின் 87.5% வேகத்திற்கு இணையாகப் பறக்கும் வேகம்.

**Operator:** (எந்.) இயக்குபவர்: அல்லது அவற்றின் இயக்கத்தைக் கட்டுப்படுத்துபவர்.

**Optical altimeter:** (வானூ.) விழாக்காட்சி உயரமானி: பொருத்தமான பார்வை முறை மூலம் கட்டுப்படுத்துவதை அடிப்படையாகக் கொண்ட ஒருவகை உயரமானி.

**Optical center:** (அச்சு.) விழிக்காட்சிமையம்: அச்சிட்ட பக்கத்தில் அல்லது வரைபடத்தில் நமது கண் நாடும் ஒரு மையப்பகுதி. இது உள்ளபடியான மையத்திற்கு மேலே, மொத்த உயரத்தில் எட்டில் ஒரு பகுதியாக இருக்கும்.

**Optical distortion:** (குழை.) காட்சித் திரிபு: ஒளி ஊடுருவும் பிளாஸ்டிக் வழியாகப் பார்க்கும் போது தோன்றும் தோற்றத் திரிபு. பிளாஸ்டிக்கின் ஒரு சீர்மையற்ற காட்சித் தன்மையினால் உண்டாகிறது.

**Optical pyrometer:** ஒளியியல் மின்முறை வெப்பமானி: கடும் வெப்பத்தினால் உண்டாகும் நிறத்தையும், மின்னோட்டத்தின் மூலம் ஒரு குறிப்பிட்ட அளவுக்குச் சூடாக்கப்பட்ட கம்பியின் நிறத்தையும் ஒப்பிட்டுப்பார்த்து உயர்ந்த அளவு வெப்பத்தை அளவிட உதவும் சாதனம்.

**Ordinate:** (கணி.) நாண்வரை: வரைவிளக்கப் படத்தில் நடுச்சுட்டு வரையிலிருந்து மற்ற நடுச்சுட்டுக்கு இணையானவரை.

**Ore:** (கனிம.) தாது: உலோகம் கலந்துள்ள பாறை. இதிலிருந்து உலோகங்கள் எடுக்கப்படுகின்றன.

**Organic:** (வேதி.) கரிமப் பொருள்: விலங்குகளிலிருந்தோ, தாவரங்களிலிருந்தோ இயற்கையாகவோ கரிமச்சேர்க்கையுடைய பொருள்.

**Oriel:** (க.க.) தொங்கற் பலகணி: சுவர் ஆதாரத் தண்டயக் கைகள் மீதமர்ந்த பல்கோணத் தொங்கற் பலகணி.

**Orient:** கீழ்த்திசை: கீழ்த்திசைக் குரிய.

**Oriental walnut:** கீழ்த்திசை வாதுமை: இது ஒருவகை மரம். இதனைக் 'கீழ்த்திசை மரம்' என்றும் கூறுவர். பெரிய வடிவளவில் வளரும் ஆஸ்திரேலிய மரவகை. அலங்கார அறைகலன்கள் தயாரிக்கப் பயன்படுகிறது.

**Orifice:** புழைவாய்: ஓர் உட்குழிவிலுள்ள ஒரு சிறிய துவாரம்.

**Ormolu:** பளபளப்பு வெண்கலம்: தட்டுமுட்டுச் சாமான்களை அணி செய்யப் பயன்படும் பளபளப்பான வெண்கலம்.

**Ornament:** அணிவேலைப்பாடு: அணி ஒப்பனை செய்யப் பயன்படும் அழகு வேலைப்பாடு.

**Ornithopter:** (வானூ.) ஆர்னித் தோப்டர்: ஒருவகைவிமானம். இது காற்றைவிடக் கனமானது. படபட என்று அடிக்கும் சிறகுகள் உடையது.

**Orometer:** ஒரோ மானி: கடல் மட்டத்திற்குமேல் உயரங்களைப் பதிவு செய்யக்கூடிய அனிராய்டு பாரமானி.

**Orthographic projection:** தொலைத் தோற்ற முறை: நிலப் படங்களில் உயர்ச்சியூட்டும் தொலைத் தோற்றமுறை. இதில் முகப்புத் தோற்றம். மேல்முகத் தோற்றம், வலப்பக்க தோற்றம் முதலியவற்றைக் காட்டலாம்.

**Ortho style:** (க.க.)நேர் வரிசைத் தூண்: நேர்கோட்டில் தூண்களை அமைக்கும் முறை.

**Oscillation:** (க.க.) ஊசலாட்டம்: ஓர் ஊசலைப்போல் முன்னும் பின்னுமாக ஊசலாடுதல்; இருமுனைகளுக்கிடையே இங்குமங்குமாக அசைதல்.

**Oscillator :** அலைவி : மாறு மின்னோட்டம் உண்டாக்குவதற்குப் பயன்படும் உயர் அலைவெண் உள்ள ஒரு மின் சுற்றுவழி.

**Oscillograph** (மின்.) அலைவுப் பதிப்பி : தங்கப் பேனாக்களின் முள் நுனிகளிலும், அரிமானத்தை எதிர்க்கும் உலோகக் கலவைகள் உற்பத்தியிலும் பயன்படுத்தப்படும் ஒரு கருவி.

**Osmosis :** (இயற்) ஊடு கலப்பு: துளைகள் உள்ள இடைத் தடுப்புக்கள் வழியாகத் திரவங்கள் தம்முள் கலந்திடும் தன்மை.

**Ottoman :** சாய்மான இருக்கை : சாய்மானம் அல்லது கைகள் இல்லாத மெத்தையிட்டுத் தைத்த மெத்தை. இது முதலில் துருக்கியில் பயன்படுத்தப்பட்டது என்பர்.

**Outboard motor :** புறப்பொறி ; கப்பலுக்கு அல்லது படகுக்கு வெளிப்புறத்தில் அமைக்கப் பெற்றுள்ள ஒரு பெட்ரோல் எஞ்சின், இதனை சிறிய படகுகளின் பின்புறத்தில் வேண்டும் போது பொருத்தி, வேண்டாத போது கழற்றி எடுத்துக் கொள்ளலாம். மிக வேகமாக ஓடும் பந்தயப்படகுகளில் இது பயன்படுத்தப்படுகிறது.

**Out let :** (மின்.) மின் வடிகால் : மின்கம்பி அமைப்பில் எந்த ஒரு புள்ளியிலிருந்தும் நுகர்வுக்கு மின் விசையை எடுக்கலாம். அவ்வாறு மின்விசை எடுக்கப்படும் புள்ளியை மின்வடிகால் என்பர்.

**Outlet box :** (மின்.) மின் வடிகால் பெட்டி : மின்கம்பிக் காப்புக் குழாய் அமைப்பில் செருகப்பட்டுள்ள ஓர் இரும்புப் பெட்டி. இதிலிருந்து விளக்கு போன்ற ஒரு சாதனத்திற்கு மின் விசையை எடுக்கலாம்.

**Out lined halftone :** (அச்சு.) திண்ணிழல் உருப்படிவம் : இது ஒரு நுண் பதிவுப் படம், இதிலிருந்து ஓர் உருவத்தின் எந்தப் பகுதியை

யும் சுற்றியுள்ள திரையை வெட்டி எடுக்கலாம்.

**Outlining :** உருவரை : (1) முக்கியக் கோடுகளை மட்டும் காட்டி வரைந்த திருந்தா உருவம்; (2) முக்கியக்கூறுகளை மட்டும் விவரித்துக் கூறுதல்; (3) உருமாதிரி வரைதல்.

**Out-put :** (*மின்; எந்.*) எடுப்பு அளவு : மின்னாக்க ஆதாரத்திலிருந்து ஒரு புறச்சாதனத்திற்கு வழங்குவதற்கு எடுக்கப்படும் மின் விசையின் அளவு.

**Outside caliper:** (*பட்.*) புற விட்டமானி: புற அளவுகளை அல்லது வடிவளவுகளை அளவிடுவதற்குப் பயன்படுத்தப்படும் விட்டமானி.

**Outside loop:** (*வானூ.*) புறக்கரண வளைவு: விமானம் இயல்பாகப் பறப்பதிலிருந்து கீழ்நோக்குப் பாய்ச்சல், தலைகீழாகப் பறத்தல், உயரே ஏறுதல், மீண்டும் இயல்பான நிலைக்கு வருதல் போன்று கரண வளைவுகள் செய்தல். இவ்வாறு செய்யும்போது விமானி பறக்கும் பாதையினின்றும் புறத்தே இருப்பார்.

**Oval:** (*கணி.*) நீள் உருளை வடிவம்: முட்டை வடிவ உருவம் நீள் உருளை வடிவம். இதன் வளைவுகளின் முனைகள் சமமின்றி இருக்கும்.

**Over-all lenth:** (*வானூ.*) முழு நீளம்: விமானத்தில் செலுத்தி, வால் பகுதி உள்ளடங்கலாக முன்புறத்திலிருந்து பின்புறக் கடைசி வரையிலான முழு நீளம்.

**Over hanging pulley:** தொங்கு கப்பி: தொங்கலாக இருக்கிற ஒரு சுழல் தண்டில் உருண்டு செல்லும் ஒரு கப்பி. இதில் ஒரு பக்கத்தில் மட்டுமே ஓர் ஆதாரத் தாங்கி இருக்கும்.

**Overaul:** (*எந்.*) எந்திரப்பகுப்பாய்வு: ஓர் எந்திரத்தைப் பகுதிபகுதியாகப் பிரித்து ஆராய்ந்து செப்பனிட்டு மீண்டும் ஒருங்கிணைத்தல்.

**Overhead cost:** அலுவலகச் செலவுகள்: வாடகை, வட்டி, முதலீடு, பராமரிப்பு, தேய்மானம் போன்ற செயலாட்சிக்கான செலவினங்களின் தொகை. இது தொழிலாளர்களுககும் மூலப் பொருள்களுக்கும் ஆகும் செலவைவிடக் கூடுதலான செலவாகும்.

**Overhead shafting:** (*பட்.*) தொங்கு சுழல் தண்டு: முகட்டில் தொங்கும் இடைச்சுழல் தண்டு, இதிலிருந்து எந்திரங்களுக்கு விசை அனுப்பப்படுகிறது.

**Overhead-valve motor:** (*தானி.*) மேல் ஓரதர் மின்னோடி: ஓரதர்கள் அனைத்தும் தலைப்பகுதியில் அமைந்திருக்கும் மின்னோடி.

**Overheating:** (*தானி.*) மிகைச் சூடாக்கம்: பாதுகாப்பாக இயங்குவதற்குத் தேவையான அளவுக்கு அதிகமாக ஓர் எஞ்சின் சூடாதல். இது பொதுவாக குளிர்விக்கும்

முறையில் ஏற்பட்டுள்ள கோளாறு அல்லது குறைவான மசகிடல் காரணமாக ஏற்படலாம்.

**Overload:** (*மின்.*) மிகை மின் சுமை: ஒரு மின்னியல் சாதனத்தின் வழியாக இயல்பான அளவுக்கு அதிகமாக மின்னோட்டம் பாய்தல்.

**Overload switch:** (*மின்.*) மிகை மின் சுமைவிசை: ஒரு மின்சுற்று வழியில் மிகையான மின்விசை பாயுமானால், மின்சுற்று வழியைத் தானாகவே முறித்துவிடும் விசை.

**Overrunning clutch:** (*தானி.*) விஞ்சியோடும் ஊடிணைப்பி: உள்ளும் புறமும் வளையங்களுடன் வடிவமைக்கப்பட்ட ஊடிணைப்பி. உள் ஊடிணைப்பில் பல முக்கோணவடிவக் காடிகள் வெட்டப்பட்டிருக்கும். அவற்றில் கடினமான எஃகு உருளைகள் செருகப்பட்டிருக்கும். இந்த அமைப்பின் மூலம் உள்வளையம் புறவளையத்தை உந்தித் தள்ளும். புறவளையும் உள்வளையத்தைவிட வேக இயங்குமானால், அது உள்வளையத்தை விஞ்சியோடும்.

**Ovolo:** (*க.க.*) கால்வட்டச் சித்திர வேலை: கால் வட்டவளை பகுதியுடைய சித்திர வேலைப்பாடு.

**Oxalic acid:** (*வேதி.*) ஆக்சாலிக் அமிலம்: நச்சுத் தன்மைவாய்ந்த அமிலம். மரத்தூள், கடுங்காரச் சோடா, கடுங்காரப் பொட்டாஷ் ஆகியவற்றின் கலவையிலிருந்து இது தயாரிக்கப்படுகிறது. இது சலவை, சாயமிடுதல், காலிக்கோ அச்சு ஆகியவற்றில் முக்கியமாகப் பயன்படுகிறது.

**Oxidation:** (*வேதி.*) ஆக்சிகரணம்: ஒரு பொருளை வேதியியல் முறைப்படி ஆக்சிஜனுடன் ஒருங்கிணையும்படி செய்தல்

**Oxide:** (*வேதி.*) ஆக்சைடு: தனிமம் அல்லது உயிர்ம அடிச்சேர்மத்துடன் ஆக்சிஜன் இணைந்த வேதியியற் பொருள்.

**Oxidizing:** ஆக்சிஜனேற்றுதல்: ஓர் அமிலக்கரைசல் மூலம் ஆக்சிஜனேற்றி ஓர் உலோக வேலைப்பாட்டுக்கு மெருகேற்றுதல்.

**Oxidizing agent:** (*வேதி.*) ஆக்சிஜனேற்று பொருள்: ஒரு பொருள் தன்னிடமிருக்கும் ஆக்சிஜனில் ஒரு பகுதியை உதறிவிட்டு இன்னொரு பொருளை ஓர் ஆக்சைடாகவோ வேறு கூட்டுப் பொருளாகவோ மாற்றுகிறது. இந்தப்பொருள் ஆக்சிஜனேற்று பொருள் எனப்படும்.

**Oxidizing flame:** ஆக்சிஜனேற்றுச் சுடர்: ஒரு வாயுப் பற்றவைப்புச் சுடர். இதில் முழுமையான உள்ளெரிதலுக்குத் தேவையான அளவைவிட அதிகமாக ஆக்சிஜன் அமைந்திருக்கும்.

**Oxyacetylene:** (*பொறி.*) ஆக்சி அசிட்டிலின்: மிகவும் சூடான சுடரை உண்டாக்கும் வகையிலான விகிதங்களில் ஆக்சிஜனும் அசிட்டிலினும் கலந்துள்ள ஒரு கலவை. உலோகவேலைத் தொழிலில் பற்ற

வைப்பதற்கும், வெட்டுவதற்கும் இந்த வாயு பயன்படுகிறது.

**Oxygen:** (*வேதி.*) ஆக்சிஜன் சுவையற்ற, நிறமற்ற வாயுத் தனிமம். காற்றின் கனஅளவில் ஐந்தில் ஒரு பகுதி ஆக்சிஜன். இது எரிவதை ஊக்குவிக்கிறது, உயிர்கள் உயிர்வாழ இன்றியமையாத வாயு. இதனால் இதனை 'உயிரகம்' என்றும் கூறுவர்.

**Ozocerite:** (*வேதி.*) மெழுகு அரக்கு: மெழுகுதிரி, மின்காப்பு ஆகியவற்றில் பயன்படும் மெழுகு போன்ற புதைபடிவ அரக்குப் பொருள். கரையாத பிசின் செய்யப் பயன்படுகிறது.

**Ozone:** (*வேதி.*) ஓசோன்: கார நெடி கொண்ட நிறமற்றவாயு $(O_3)$ சலவை எண்ணெய்கள், மெழுகுகள், மாவு, மரப்பொருள் முதலியவற்றில் பயன்படுத்தப்படுகிறது. சில சமயம், குடிநீரைக் கிருமி நீக்கம் செய்வதற்கும் பயன்படுகிறது. ஒரு தனிவகைச் சாதனத்திலுள்ள உலர்ந்த மற்றும் குளிர்ந்த காற்றின் வழியே உயர் அழுத்த மின்விசையைச் செலுத்துவதன் மூலம் இந்த வாயு தயாரிக்கப்படுகிறது.

# P

**Pack harden:** (*உலோ.*) கார்பனாக்குதல் (*1*) கார்பனாக்குதல் அல்லது கெட்டிப்படுத்துதல்

(*2*) மென் எஃகிற்குக் கடினமான புறப்பரப்பினைக் கொடுக்கும் முறை.

எஃகினை ஒரு கார்பன் பொருளுடன் சேர்த்துப் பக்குவப்படுத்தி எண்ணெயில் அமிழ்த்துவதன் மூலம் இது செய்யப்படுகிறது.

**Padlock:** பூட்டு: நாதாங்கியுடன் இணைவாகப் பயன்படுத்தப் படும் பிரித்தெடுக்கக்கூடிய ஒருவகைப் பூட்டு.

**Pad lubrication:** திண் மசகிடல்: எண்ணெய்ப் பூரிதமாகிய அடைபஞ்சுடன் இணைத்து மசகிடும் முறை.

**pad saw:** பொதி இரம்பம்: ஒருவகைக் கை ரம்பம். நீண்ட கூம்பு வடிவ அலகினைக் கொண்டிருக்கும் இந்த அலகு ஒரு குதை குழிக்குள் அல்லது பொதிவுக்குள் பொருத்தப்பட்டிருக்கும். பயன்படுத்தப்படாதபோது இந்த அலகு கைப்பிடியாகவும் பயன்படும்.

**Pagoda:** கூருருளையோடு: கூர்ங்கோபுரம் வடிவிலான ஒரு முகடு.

**Paint:** (*வேதி.*) வண்ணம்: எண்ணெய் அல்லது நீருடன் கலந்த அல்லது உலர்ந்த வண்ணப் பூச்சு.

**Paint base :** (வேதி.) வண்ண ஆதாரம் : ஈயம் அல்லது துத்தநாகம் போன்று, வண்ணத்தின் ஆதாரப் பொருள்.

**Paint drier :** வண்ண உலர்த்தி : வண்ணம் பூசியதும் அந்த வண்ணத்தை விரைவாக உலரும்படி செய்வதற்குப் பயன்படும் பொருள். பெரும்பாலான வண்ண உலர்த்திகள் ஈயத்தினாலும், மாங்கனீசினாலும் ஆனவை. இந்தப் பொருளை அளவோடு பயன்படுத்துவது நலம். அளவுக்கு மீறிப் பயன்படுத்துவது கெடுதல்.

**Paint for concrete :** கான்கிரீட் வண்ணம் : துத்தநாக ஆக்சைடை அல்லது பேரியம்சல்பேட்டை எண்ணெயுடன் கலந்து தயாரிக்கப்படும் வண்ணப் பொருள்.

**Painting :** வண்ணம் பூசுதல் : வண்ணம் பூசி அலங்கார வேலைப்பாடுகள் செய்தல்.

**Paint thinner :** வண்ண நெகிழ்ப்பான் : திண்ணிய வண்ணப் பொருள்களை எளிதாகப் பயன்டுத்துவதற்கு வசதியாக நெழ்வுறுத்துவதற்காகக் கற்பூரத் தைல அல்லது பெட்ரோலியச் சாராவிகள் பயன்படுத்தப்படுகின்றன. மலிவாகக் கிடைப்பதால் பெட்ரோலியச் சாராவிகளே பெரிதும் பயன்படுத்தப்படுகின்றன.

**Packtong:** பேக்டாங் : நிக்கல், துத்தநாகம், செம்பு கலந்த ஓர் உலோகம். ஜெர்மன் வெள்ளியை ஒத்தது. உலோக வேலைப்பாடுகளுக்குப் பயன்படுகிறது.

**Palladium:** (வேதி.) பல்லேடியம் : வெண்ணிறமான, கம்பியாக இழுக்கக்கூடிய, தகடாக்கக்கூடிய ஓர் அரிய உலோகம். இது பிளாட்டினத்துடன் கிடைக்கிறது.

**Pamphlet :** (அச்சு.) துண்டு வெளியீடு : அட்டைகளின்றி அல்லது கட்டுமானம் செய்யப்படாமல் காகிதத்தில் அச்சிடப்பட்ட ஒரு சிறு புத்தகம்.

**Pan:** தாலம்: (1) ஓர் ஒளிப்படக் கருவின் இயக்கம். இது ஒரு தொகுதியின் அடுக்கணிக்காட்சியைக் காட்டக்கூடியது.

(2) ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட விளக்குகள் பயன்படுத்தப்படும் ஒரு பிரதிபலிப்பு அலகு. இதில் பெரும்பாலும் நுண்ஊதாக் கதிரால் ஒளிரும் விளக்குகள் பயன்படுத்தப்படுகின்றன.

**Panchromatic:** (ஒ.க.) நிறப்பதிவுப் பசை: ஒளியின் நிறங்கள் அனைத்தையும் பதிவு செய்யக்கூடிய பசைக் குழம்புகள்.

**Panel board:** (மின்.) மின் விசைப் பலகை: மின்விசைகளும், உருகு கம்பிகளும் உடைய ஒரு கட்டுப்பாட்டுப் பலகை.

**Pantograph:** படப்படியெடுப்பான்: வரைபடங்களை பெரிதாக்கிய அளவிலோ, சுருங்கிய அளவிலோ படி

யெடுக்கப் பயன்படும் ஒரு சாத னம்.

**Pantometer:** (கணி.): கோண மானி: கோணங்கள், உயரங்கள் முதலியவற்றை அளவிடுவதற்கான ஒரு சாதனம்.

**Paper:** வரைதாள்: படங்கள் வரை வதற்குப் பயன்படும் வெள்ளை மற் றும் மஞ்சள் நிறத்தாள். இரண்டும் தட்டைத் தகடுகளாகவும் சுருள் களாக இருக்கும். நல்ல வரைதாள் முரடாகவும், பென்சிலையும் மை யையும் ஏற்கக் கூடியதாகவும், அழித்துத் திருத்த இடமளிப்பதாக வும் இருக்க வேண்டும். இதற்குப் பொதுவாகக் கையினால் செய்யப் படும் காகிதம் பொருத்தமாக இருக் கும்.

**Paper birch.** காகிதப் பிரம்பு மரம்: இதனை வெண்பிரம்பு மரம் என் றும் அழைப்பர். இது 50" முதல் 75" வரை வளரும். மரம் வலுவா னது; கடினமானது. இளம் பழுப்பு நிறத்தில் இருக்கும். காகிதத்கூழ் தயாரிக்க முக்கியமாகப் பயன்படு கிறது.

**Paper condenser:** (மின்.) காகி தச் செறிவுறுத்து சாதனம்: ஒன்றோ டொன்று இணைக்கப்பட்ட காகி தத்தினாலான மின்தடைப் பொருள் கொண்ட கெட்டிப்படுத்தும் சாத னம்.

**Paper cutter:** (அச்சு.) காகித் வெட்டி: காகிதத்தை வேண்டிய வடிவளவுகளில் வெட்டுவதற்குப் பயன்படும் ஓர் எந்திரம். இதனை கையினாலோ விசையினாலோ இயக்கலாம்.

**Paper drill:** (அச்சு.) காகிதத் துளைக் கருவி: அடுக்கிய காகிதங் களில் துளையிடுவதற்குப் பயன் படும் கருவி.

**Paper machine:** காகித எந்திரம்: காகிதத்தை வடிவமைக்கவும், அழுத்தவும், உலர்த்தவும், மெரு கூட்டவும். சுருள்களாக சுருட்ட வும், தகட்டுத் தாள்களாக வெட்ட வும் பயன்படும் எந்திரம்.

**Papier mache:** தாள் கூழ்: பல் வேறு வடிவங்களில் காகிதங் களைத் தயாரிப்பதற்குப் பயன் படும் காகிதக்கூழ்.

**Parabola:** (பொறி; கணி.) மாலை வளைவு: கூருருளையின் பக்கத் திற்கு இணையான தள வளைவு. ஒரு கூருருளையை பக்கத்திற்கு இணையாகச் செலுத்துவதன்மூலம் இது கிடைக்கிறது.

**Parabolic girder:** (பொறி.) மாலை வளைவு உத்தரம்: ஒரு மாலை வளைவுக்குள் வரையப் பட்ட பல கோண வடிவில் அமைந்த ஓர் உத்தரம். இது பாலங்கள் அமைப்பதற்குப் பயன் படுகிறது.

**Parachut:** (வானூ.) வான்குடை (பாராசூட்) வானிலிருந்து மெது வாக மிதந்து கொண்டே தரை யிறங்குவதற்குப் பயன்படும் குடை.

வடிவச் சாதனம். இதன் குடை வடிவம் வானிலிருந்து இறங்கும் போது காற்றை எதிர்த்து வேகத்தைக் குறைத்து மெதுவாகத் தரையிறங்குவதற்கு உதவுகிறது.

**parachute canopy:** (*வானூ.*) வான்குடை மேற்கட்டி: ஒரு வான் குடையின் முக்கிய ஆதார மேற் பரப்பு.

**Parachute flare :** (*வானூ.*) வான் குடை மின்னொளி : ஒரு குறிப்பிட்ட உயரத்தில் விமானத்திலிருந்து குதிக்கும்போது ஒரு பரந்த பரப் பளவில் மின்னொளி பரவும்படி வடிவமைக்கப்பட்ட சாதனம் பொருத்திய வான்குடை.

**Parachute harness :** (*வானூ.*) வான்குடைச் சேணம் : வான் குடையை அணிந்து கொள்பவர் தன்னோடு பிணைத்துக் கொள்ளப் பயன்படுத்தும் பட்டைகள் பட்டைப்பிடிகள், இணைப்பான்கள் அமைந்த ஒரு கூட்டு அமைப்பு.

**Paraffin :** (*வேதி.*) பாரஃபின் மெழுகு : பெட்ரோலியத்தைக் காய்ச்சி வடித்தல் மூலம் கிடைக்கும் ஒருவகை மெழுகு. இது ஒளி, ஊடுருவக்கூடியது; திண்மையானது.

**Parallax :** (*மின்.*) மாறு கோணத் தோற்றப் பிழை : நோக்கு மயக்கம்; பார்வைக் கோணத்தால் பொருள் நிலையில் தோன்றும் மாறுதல் கோண அளவு.

**Parallel:** இணைகோடு: ஒரு போக்குடைய இணைகோடுகள். இவை ஒரே திசையில் செல்பவை, எல்லா முனைகளிலும் இணை தொலைவுடையவை.

**Parallel circuit :** (*மின்.*) இணைச் சுற்று வழி : பொதுவான ஊட்டு வாயும், பொதுவான திரும்புவாயும் உடைய ஒரு மின்சுற்றுவழி. ஊட்டு வாய்க்குமிடையே இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட கருவிகள் இணைக்கப்படுகின்றன. ஒவ்வொரு கருவிக்கும் பொது ஊட்டு வாயிலிருந்து தனித்தனி அளவு மின்னோட்டம் பாயும்.

**Parallel connected transfor mer :** (*மின்.*) இணை இணைப்பு மின்மாற்றி : ஒரே மின் வழங்கு ஆதாரத்துடன் தொடக்கச் சுருணைகள் இணைக்கப்பட்டுள்ள ஒன்று அதற்கு மேற்பட்ட மின் மாற்றிகள். இதில் அழுத்தப் பெற்ற மின்னழுத்தம் ஒவ்வொரு நேர்விலும் மின் வழியிலுள்ள அதே அளவுக்கு இருக்குமாறு அமைக்கப் பட்டிருக்கும்.

**Parallel forces :** (*எந்.*) இணை விசை : இரண்டு விசைகள் இணையாக இருந்து, ஒரே திசையிலிருந்து தொடங்காமல் ஆனால் ஒரே திசையில் செயற்படுமானால், அதன் கூட்டு விளைவாக்கம் இரண்டு விசைகளுக்கும் இணையாகவும், அவற்றின் கூட்டுத் தொகைக்குச் சமமாகவும் இருக்கும். இரு விசைகளும் எதிர்த் திசைகளில் செயற் படுமானால், அப்போது கூட்டு விளைவாக்கம், அவ்விரு விசை

களுக்குமிடையிலான வேறுபாட்டிற்குச் சமமாக இருக்கும்.

**Parallel jaw pliers:** (பட்.) இணைத்தடை இடுக்கி: செங்கோணியக்க இணைப்புடைய இடுக்கி. இது வாயளவு எவ்வாறிருப்பினும் தாடைகள் இணையாக இருப்பதற்கு இடமளிக்கிறது.

**Parallelogram:** (கணி.) இணைவகம்: எதிர்ப்பக்கங்கள் சமமாகவும் இணையாகவும் உள்ள ஒரு நாற்கரம். பரப்பளவு = ஆதாரம் × செங்குத்து உயரம்.

**Parallelogram of forces:** (எந்.) இணைவக விசை: இரண்டு விசைகள் இணைந்து ஒரே விசையாகச் செயற்படும்போது திசையிலும் அளவிலும் மூல விசைகள் இரண்டும் ஓர் இணைவகத்தின் இரு புடைப் பக்கங்களுக்கும் இணை விசை அவற்றுக்கிடைப்பட்ட மூலை விட்டத்திற்கும் சமமாக இருக்கும் நிலை.

**Parallel rulers:** இணைகோடு வரைகோல்: ஒரு போகுக் கோடுகள் வரைவதற்குரிய, சுழல் அச்சால் இணைக்கப்பட்ட இரட்டை வரைகோல்.

**Paramount:** மேதகவு: அனைத்திற்கு மேலான தகைமை சான்று.

**Parapet:** (க. க.) கைப்பிடிச்சுவர்; மேல்முகடு, மேல்மாடி, அல்லது ஒரு பாலத்தின் பக்கத்தில் மறைப்பாகக் கட்டப்படும் தாழ்வான சுவர்.

**Parasite drag:** (வானூ.) ஒட்டு இழுவை: விமானத்தில் இறகுகளின் விரைவியக்கப் பகுதியிலிருந்து தனித்தியங்கும் இழுவைப் பகுதி.

**Parasol monoplane:** (வானூ.) விமானத்துள் விமானம்: விமானத்தின் கட்டுமானச் சட்டகத்திற்கு மேலே இறகு அமைந்துள்ள ஒரு குறு விமானம்.

**Parchment:** வரைதோல் தாள்: எழுதுவதற்காக விலங்குத் தோல் போல் பாடம் செய்யப்பட்ட காகிதம். காகிதத்தை வலுக்குறைந்த கந்தக அமிலக் கரைசலில் நனைத்து கெட்டித் தன்மையுடையதாகவும், நீர் புகாதவாறும் செய்யப்படுகிறது. இக்காகிதம் பளபளப்பாகவும், ஒளி ஊடுருவக்கூடியதாகவும் இருக்கும்.

**Pargeting:** (க.க.) சுண்ணச்சாந்து: சுவர்ப்பூச்சுச் சிற்ப ஒப்பனை வேலைப்பாடுகளுக்குப் பயன்படுத்தப்படும் அலங்காரக் காரை.

**Paring chisel:** (மர. வே.) செப்பனிடு உளி: சீவிச் செப்பனிடவும், தறித்து ஒழுங்குபடுத்தவும், விளிம்பு வெட்டவும் ஓரம் நறுக்கவும் பயன்படும் ஒரு நீண்ட உளி.

**Paris green:** (வேதி.) பாரிஸ் வண்ணம்: ($CuHAsO_3$): பூச்சிகொல்லியாகவும் வண்ணப்பொருளாகவும் பயன்படும் தாமிர ஆர்சனைட் என்ற நச்சு வேதியியற் பொருள்.

**Parquetry:** (க.க.) மரக்கட்டை எழில் விரிப்பு: தளங்களில் மரக்

கட்டையினால் எழிற்பரப்பு அமைத்தல்.

**Particle :** துகள் : சிறு துண்டு; அணுக்கூறு.

**Parting :** (வார்.) வகிடு : ஒரு வார்ப்படத்தின் இரு பகுதிகளைப் பிரிக்கும் இணைப்பு அல்லது பரப்பு.

**Partition :** (க. க.) தடுப்புச் சுவர்: ஒரு கட்டிடத்தைப் பல அறைகளாகப் பகுப்பதற்குக் கட்டப்படும் நிரந்தரமான உள்சுவர். வீடுகளிலும், தொழிற்சாலைகளிலும், அலுவலகக் கட்டிடங்களிலும் பல்வேறு கட்டுமானப் பொருள்களினால் வசதிக்கேற்பத் தடுப்புச் சுவர்கள் அமைக்கப்படுகின்றன.

**Party wall** (க.க.) இடைச் சுவர்: கட்டிடங்களுக்குப் பொதுவுரிமையாக வழங்கப்படும் இடைச்சுவர்.

**Pascal's law :** (இயற்.) பாஸ்கல் விதி : "ஒரு திரவத்தின் ஒரு குறிப்பிட்ட பரப்பளவில் செலுத்தப்படும் அழுத்தமானது, அந்தக் கொள்கலத்தின் அதே அளவுப் பகுதி ஒவ்வொன்றுக்கும் சற்றும் குறையாமல் செலுத்தப்படுகிறது" என்பது பாஸ்கல் விதி.

**Paste board :** தாள் அட்டை : இன்று நடுத்தர அளவு கனமுடைய கெட்டியான அட்டை எதனையும் இது குறிப்பிடுகிறது. முன்னர் பல தகட்டுத்தாள்களை அடுக்கி ஒட்டிய அட்டையை குறிக்கப் பயன்படுத்தப்பட்டது.

**Pastel :** வண்ணக்கோல் : வண்ணக் கோல்கள் செய்வதற்காகப் பசை நீரில் நிறமிகளைக் கலந்து உண்டாக்கப்படும் உலர் பசைக் கோல்.

**Patent:** காப்புரிமை : புதுமுறை ஆக்க விற்பனைகளுக்கு அரசு வழங்கும் தனிக்காப்புரிமை.

**Patenting:** மெருகிடல்: இரும்பை ஆதாரமாகக் கொண்ட உலோகக் கலவைகளை முட்டுபதன் அளவுக்குச் சூடாக்கி, பிறகு அளவுக்குக் குறைவாகக் காற்றிலோ அல்லது 700°ஃபா. வெப்பமுடைய உருகிய ஈயத்திலோ குளிர்வித்து மெருகிடுதல்.

**Patina :** பசுங்களிம்பு : பழைய வெண்கலப் பொருள்களில் காலத்தால் ஏறும் உலோகக் களிம்பின் மென்படலம்.

**Pattern :** (வார்.) தோரணி : ஓர் எடுத்துக்காட்டு வார்ப்பு. முன் மாதிரியாகக் கொண்டு ஒரே மாதிரியான பொருள்களை வார்ப்படம் மூலம் செய்வதற்கான படிவம்.

**pattern letter :** (வார்.) முன் மாதிரி எழுத்து : ஈயம், வெள்ளீயம் அல்லது பித்தளையில் செய்த எழுத்து. இது ஒரு தோரணையில் பொருத்தப்பட்டிருக்கும். அதிலிருந்து ஒரே மாதிரியான பெயர் அல்லது இலக்கத்தை வார்த்தெடுக்கலாம்.

**Pattern - making :** தோரணி வார்ப்படம் : வார்ப்படத் தொழிலில்

பல்வேறு மாதிரிகளை அல்லது உருவரைகளைத் தயாரிப்பதற்குப் பயன்படும் வார்ப்படம்.

**Pattern shop :** தோரணிப் பட்டறை : வார்ப்படங்கள் தயாரிக்கப் பயன்படுத்துவதற்கான மரந்தோரணிகளைத் தயாரிக்கும் பட்டறை.

**Pavement :** (க.க.) தள வரிசை : சாலை அல்லது ஓர நடைபாதையில் அமைக்கப்படும் கடினமான பாவு தளம்.

**Pavilion :** (க.க.) காட்சி அரங்கம்: முற்றிலும் சுவர்களினால் அடைக்கப்படாமல் கூடாரமிட்ட ஒப்பனைப் புறத் தாழ்வாரம். காட்சி அரங்காக அல்லது கேளிக்கை அரங்காக இது பயன்படும்.

**Pay load :** (வானூ.) வருவாய்ப் பகுதி : விமானத்தில் பயணிகள், சரக்குகள் போன்ற வருவாய் தரும் பாரத்தின் பகுதி.

**Payne's process :** தீத்தடைக் காப்பு முறை : மரத்தில் இரும்பு சல்பேட்டை ஊசிமூலம் செலுத்தி, அதன் பின் சுண்ணாம்புச் சல்பேட்டு அல்லது சோடா கரைசலை ஊசி மூலம் செலுத்தி தீத்தடைக்காப்பு செய்யும் முறை.

**Peak load :** (மின்.) உச்சமின் விசை : ஒரு மின்னாக்கி அல்லது மின்விசை உற்பத்தி அமைப்பு, 20 மணி நேரத்திற்கு ஒரு முறை என்பது சீரான இடைவெளிகளில், மிக உயர்ந்த அளவு வழங்கும் மின்விசையின் அளவு.

**Pearl:** (வேதி.) முத்து: இது அரும் பொருள்களில் ஒன்று. முத்துச் சிப்பியில் கால்சியம் கார்போனேட் என்ற வேதியியற் பொருளினால் உண்டாகிறது.

**Pearling:** இழை முடிப்பூவேலை: இழைமுடிக் கண்ணியிட்டுச் செதுக்கிப் பூவேலைப்பாடுகள் செய்தல்.

**Pearlite:** (உலோ ) பியர் லைட்: கார்பனும் இரும்பும் கலந்த எல்லாக் கலப்புக் கூறுகளையும் உடைய உலோகக் கலவை. இதில் 0.9% கார்பன் கலந்திருக்கும்.

**Pearwood:** பேரிமரம்: இளம் பழுப்பு நிறமுடைய, நெருக்கமான மணிக்கரண் அமைந்த ஒரு வகை மரம். மிதமான கடினத்தன்மையுடையது. வரைவாளர்கள் T-சதுரம், முக்கோணங்கள் முதலியவை செய்யப் பயன்படுகிறது.

**Peat:** (வேதி.) புல்கரி: ஓரளவு கார்பனாக்கிய தாவரக் கனிமப் பொருள். எரிபொருளாகப் பயன்படுகிறது. இதனைத் தோண்டியெடுக்கும்போது இதில் நீர்ச்சத்து மிகுதியாக இருக்கும். அதனால் இதனை அழுத்தி, உலர்த்தி எரிபொருளாகப் பயன்படுத்த வேண்டும்.

**Pebble dash:** (க க.) கூழாங்கல் பதிப்பு: சாந்து அல்லது சிமெண்ட்

பூசிய சுவர்களில் கூழாங் கற்களைப் பதித்து அலங்கார வேலைப்பாடு செய்தல்.

**Pedestal:** நிலை மேடை: தூண். சிலை போன்றவற்றின் அடிப்பீடம்.

**Pediment:** (க.க.) முக்கோண முகப்பு முகடு: பண்டையக் கிரேக்கக் கட்டிடக் கலைப் பாணியில் அமைக்கப்பட்ட வரி முக்கோண முகப்பு முகடு.

**Pedometer:** அடியீடுமானி: காலடி எண்ணிக்கை மூலம் தொலைவைக் கணக்கிட்டுக் காட்டுங் கருவி.

**Peen:** (எந்.) சுத்தி மென்னுனி: உலோக வேலைத் தொழிலாளர்கள் பயன்படுத்தும் சுத்தியல் தலைப்பின் மெல்லிய நுனி.

**Peg:** ஆப்பு: அறைகலன்களின் உறுப்புகளை ஒன்று சேர்த்து இணைப்பதற்கு ஆணிகளுக்குப் பதிலாகப் பயன்படும் மரத்தினாலான முளை.

**Pellucid** தெள்ளத் தெளிவான: தெள்ளத் தெளிவான; ஒளி எளிதில் ஊடுருவிச் செல்லக்கூடிய.

**Pendant switch :** (மின்.) பதக்க விசை: முகட்டிலிருந்து தொங்கும் ஒரு கயிற்றில் இணைக்கப்பட்டுள்ள ஒரு சிறிய அழுத்துப் பொத்தான் விசை. முகட்டிலுள்ள விளக்குகளை இயக்குவதற்குப் பயன்படுகிறது.

**Pendulum :** ஊசல்: ஒரு நிலையான புள்ளியிலிருந்து தொங்குகிற ஒரு பொருள். இது கடிகாரத்தின் ஊசல் போன்று இருபுறமும் தங்குதடையின்றி ஊசலாடக் கூடியது.

**Penetrating oil :** ஊடுரு எண்ணெய்: துருப்பிடித்த அல்லது அரிக்கப்பட்ட உறுப்புகளை எளிதாக இயக்குவதற்குப் பயன்படுத்தப்படும் ஊடுருவிச் செல்லக்கூடிய ஒரு தனி வகை எண்ணெய்.

**Penetrometer:** (குழை.) ஊடுருவுமானி: திடப்பொருள்களின் மேற்பரப்பில் ஊருடுவும் திறனை அளவிடுவதற்கான ஒரு கருவி.

**penny:** (மர.வே.) பென்னி: ஆணிகளின் நீளத்தைக் குறிக்கும் ஒரு சொல். பத்துப் பென்னி என்பது ஓர் ஆணியின் 3" நீளத்தைக் குறிக்கும். ஆதியில் 'பென்னி' என்பது நூற்றுக்கு விலையைக் குறித்தது.

**Penny-weight:** பென்னி எடை: இருபத்து நான்கு குன்றிமணி எடை அளவு.

**Pentagon:** (கணி.) ஐங்கோணம்: ஐந்து பக்கங்கள் கொண்ட ஓர் உருவம்.

**Penumbra:** அரைநிழல்: பூமி-நிலவு இணை நிழலான திண்ணிழற்பகுதி சூழ்ந்த அரைநிழல் வட்டம்.

**Percentage:** (கணி; எந்.) விழுக்காடு: நூற்றில் பகுதி; சதவீதம்: நூற்று விழுக்காடு.

**Perforating:** (அச்சு.) துளை யிடல்: தாளில் முத்திரைகளுக்கான சூழ்வரிசைத் துளையிடுதல்; கிழிப் பதற்கு வசதியான துளை வரிசை.

**Perforating machine:** (அச்சு.) துளையிடு கருவி: தாளைக் கிழிப்ப தற்கு வசதியாகத் தாளில் துளை யிடுவதற்குப் பயன்படும் ஒரு கருவி.

**Performance-type glider:** (வானூ.) செயல்திறன் சறுக்கு விமானம்: மிக உயர்ந்த அளவு செயல்திறன் வாய்ந்த ஒரு சறுக்கு விமானம்.

**Perimeter:** (கணி.) சுற்றளவு: வட்டமான உருவின் சுற்றுவரை நீளம்.

**Periodic arrangement:** (வேதி.) எண்மானப் பட்டியல்: ஒத்த வேதி யியற் பண்புகள் ஒரே ஒழுங்காகத் திட்டவட்டமாக வரையறுக்கப் பட்ட தனிமங்களின் அணு எண் படியான வரிசைப் பட்டியல்.

**Peripheral speed:** (எந்.) பரிதி வேகம்: ஒரு சக்கரம், அல்லது சுழல்தண்டு போன்ற உறுப்புகள் வட்டப்பரப்பின் சுற்றுக்கோட்டில் ஒரு நிமிடத்திற்குச் சுழலும் சுழற்சி களின் எண்ணிக்கையைக் குறிப் பிடும் வேகம்.

**Periphery:** (கணி.)பரிதி: வட்டம், நீள்வட்டம் போன்ற உருவங் களின் வட்டப்பரப்பின் சுற்றுக் கோடு.

**Periscope:** புறக்காட்சிக் கருவி: நீர்மூழ்கிக் கப்பலின் முகட்டு மேற் பரப்புக் காட்சிக் கருவி; பாதுகாப் புக் குழியின் புறக்காட்சிக் கருவி.

**Peristyle:** (க.க.) சுற்றுத் தூண் வரிசை: கோயில், மடம், மண்டபம் முதலியவற்றைச் சுற்றிலும் உள்ள தூண் வரிசை.

**Permanent load:** (பொறி.) நிலைச் சுமை: எந்திரத்தில் அதன் கட்டமைப்புச் சுமை போன்ற ஒரு போதும் மாறாத நிலையான சுமை யின் அளவு.

**Permanent magnet:** (மின்.) நிலைக் காந்தம்: ஒரு காந்த எஃகு தான் பெற்ற காந்த சக்தியை ஒரு போதும் இழக்காமல் ஒரு காந்தப் புலத்தின் ஆற்றலுடன் நிரந்தர மாக இருத்தி வைத்துக் கொள் கிறது. இக் காந்தம் நிலைக் காந் தம் எனப்படும்.

**Permanganate** (வேதி.) பெர் மாங்கனேட் ($HMnO_4$): பெர்மாங்க னிக் அமிலத்தின் உப்பு. இது அடர் சிவப்பு நிறத்தில் இருக்கும்.

**Permeability:** (மின்.) கசிவுத் திறன்: ஊறி உட்புக இடந்தரும் திறன்.

**Permutation:** (கணி.) முறை மாற் றம்: ஒரு தொகுதியில் அடங்கிய பொருள்கள் ஒன்று மாற்றி ஒன்று வரிசை மாறும் ஒழுங்கமைவு.

**Perpend:** (க.க.) ஊடுகல்:சுவரின் ஒரு கல்லிலிருந்து மற்றொரு பக்கத் திற்கு அதனூடே செல்லும் கல்.

**Perpendicular:** செங்குத்துக் கோடு: ஒழி கோட்டிற்கு அல்லது தளத்திற்குச் செங்குத்தாக உள்ள கோடு.

**Perron:** (க,க.) வாயிற்படிமேடை: ஒரு கட்டிடத்திற்கு வெளியே முதல் மாடிக்குச் செல்ல அமைந்துள்ள வாயிற்படி.

**Perspective:** பரப்புத் தோற்றம்: ஒரு சமதளப் பரப்பில் உள்ள பொருள்கள் கண்ணுக்குத்தோன்று கிற அதே தோற்றத்தில் காட்சிப் படங்களை வரைந்து காட்டுதல்.

**Pet cock:** அடைகுமிழ்: நீராவி முதலியவற்றை வெளியிடுவதற் கான அடைப்புக் குமிழ்.

**Petrography:** கற்பாறையியல்: கற்பாறைகளின் அமைப்பு, உரு வாக்கம் முதலியவற்றை ஆராய்ந் தறிதல்.

**Petrol:** கல்லெண்ணெய் [பெட் ரோல்]: பொறி வண்டிகளுக்கும், விமானம் முதலியவற்றுக்கும் பயன் படும் தூய்மையாக்கப்பட்ட நில எண்ணெய். அமெரிக்காவில் இதனை "கேசோலின்" என்பர்.

**Petroleum:** (வேதி.) பெட்ரோ லியம்: உள் வெப்பாலைகளிலும் பிறபொறிகளிலும் எரிபொருளாகப் பயன்படும் நிலப்படுகைக்குரிய தாது எண்ணெய்.

**Pewter:** (உலோ.) பியூட்டர்: வெள்ளீயமும் காரீயமும் கலந்த சாம்பல் நிற உலோகக் கலவை.

**Pharmaceuticals:** (வேதி.) ஆக்க மருந்து; மருந்துக் கடைகளில் ஆக்கம் செய்து விற்பனை செய்யப் படும் மருந்துகள் மற்றும் வேதி யியற் பொருள்கள்.

**Phase:** (மின்.) மின்னோட்டப் படிநிலை: மாறுபட்ட அலை இயக் கத்தில் செல்லும் மாற்று மின் னோட்ட இயக்கப் படி நிலை.

**Phase angle:** (மின்.) மாற்று நிலைக் கோணம்: மாற்று மின் னோட்டச் சுற்று வழியில் மின் னோட்ட இயக்கப் படிநிலையைக் குறிக்கும் கோணம்.

**Phase meter:** (மின்.) மின் னோட்டப் படிநிலை மானி: மின் சுற்று வழியில் அலைவெண்ணைக் குறிக்கும் மானி. இதனை அலை வெண் மானி என்றும் கூறுவர்.

**Phenol** (வேதி.) கரியகக் காடி ($C_6H_5OH$): ஒரு படிகப் பொருள். கரி எண்ணெயிலிருந்து (கீல்) ஓர ளவு எடுக்கப்படுகிறது. சோடியம் பென்சைன் சல்ஃபோனேட்டை காரச்சோடாவுடன் இணைத்துச் செயற்கை முறையிலும் தயாரிக்கப் படுகிறது. கிருமி நீக்கியாகப் பயன் படுகிறது.

**Phenolic resins molding type:** (வேதி. குழை.) பெனோலிக் பிசின் வார்ப்படம்: பிளாஸ்டிக் குடும்பத் தில் மிகப் பழமையானது; மிக முக் கியமானது. குறைந்த செலவில் கிடைக்கக்கூடியது; பயனுள்ள பண்பியல்புகளைக் கொண்டது.

இவற்றின் வெப்பத்தை எதிர்க்கும் தன்மையும், பெரும்பாலான அரிமானப் பொருள்களை எதிர்க்கும் தன்மையும் முக்கியமானது. இது மின் கடத்தாப் பொருளாகும். எனவே இதைக் கொண்டு மின் செருகிகள் இணைப்புக் கைபிடிகள், அடைப்பான்கள் போன்ற சாதனங்கள் தயாரிக்கப் பயன்படுகிறது.

**Pheno plast:** (வேதி; குழை.) பெனோபிளாஸ்ட்: பெனால் ஆல்டிஹைட் பிசின்களைக் குறிக்கும் பொதுவான சொல். இதனை "பெனோலிக்ஸ்" என்றும் கூறுவர்.

**Phosphor bronze:** (உலோ.) பாஸ்போர் வெண்கலம்: தாமிரம், வெள்ளீயம் ஆகியவற்றுடன் சிறிதளவு பாஸ்பரம் கலந்த ஓர் உலோகக் கலவை. இது பெரும்பாலும் தாங்கிகள் செய்யப்பயன்படுகிறது.

**Phosphorus:** (வேதி.) பாஸ்பரஸ்: இளமஞ்சள் நிறமுள்ள மெழுகு போன்ற திடப்பொருள். ஒப்பு அடர்த்தி 1.83; உருகுநிலை 44. 4°C. இது எளிதில் தீப்பிடிக்கக் கூடியது. இதனை எப்போது தண்ணீரிலேயே அமிழ்த்து வைத்திருக்கவேண்டும். இது சிறுசிறு குச்சிகளாக விற்பனை செய்யப்படுகிறது.

**Photo composing:** (அச்சு.) ஒளிப்பட அச்சுக்கோப்பு: ஒளிப்படமுறையில் அச்சுக்கோக்கும் முறை.

**Photo electric cell** (மின்.) ஒளி மின்கலம்: ஒலியாற்றலை மின்னாற்றலாக மாற்றக் கூடிய ஒரு சாதனம். ஒளி ஆதாரத்தின் மூலம் தானாகக் கட்டுப் படுத்துவதற்கு இது முக்கியமாகப் பயன்படுகிறது.

**Photo-engraving:** (அச்சு.) ஒளிச் செதுக்கு வேலை: ஒளிப்பட உத்தி மூலமாக செதுக்கு வேலைப்பாடுகள் செய்யும் முறை.

**Photography:** (வேதி.) ஒளிப் படக்கலை: ஒலியுணர்வுடைய தகடு, படச்சுருள், தாள் ஆகியவற்றில் ஒளி படியச் செய்து, சில வேதியியற் பொருள்களைக் கொண்டு அவற்றைப் பக்குவம் செய்வதன் வாயிலாக உருவங்களைப் பதிவு செய்யும் முறை.

**Photogravure:** (அச்சு.) ஒளிப் பட மறிபடிவத் தகட்டுச் செதுக்குரு: ஒளிப்பட மறிபடிவத்தை உலோகத் தகட்டில் பதியவைத்துச் செதுக்குவது மூலமாக ஒப்புருவம் எடுத்தல்.

**Photometer:** (இயற்.) ஒளிச் செறிவுமானி: ஒளியின் செறிவினை அளவிடுவதற்கு அல்லது பல்வேறு ஒளிகளின் செறிவினை ஒப்பிடுவதற்குப் பயன்படும் ஒரு கருவி.

**Photomicrograph:** (உலோ.) உருப்பெருக்கு ஒளிப்படம்: உருப் பெருக்காடியினால் விரிவாக்கம் செய்யப் பட்ட பொருளின் ஒளிப் படம். உருப் பெருக்காடியையும், ஒளிப்படக் கருவியையும், இணைத்து இந்தப்படம் எடுக்கப்

படுகிறது. உலோகப் பொருள்களின் வரிவாக்கம் 100 முதல் 500 மடங்குவரை அமைந்திருக்கும்.

**Photostat:** ஒளி நகல் படவுருப்படிவம்: ஆவணங்கள், வரிவடிவங்கள் முதலியவற்றின் படியுருவங்களை எடுப்பதற்கான ஒளிப்பட அமைவு.

**Photosynthesis :** (*வேதி.*) ஒளிச்சேர்க்கை : தாவரங்களின் இலைகளில் சூரிய ஒளிபடும் போது, நீரிலிருந்தும் கார்பன் டையாக்சைடிலிருந்தும் தாவரங்கள் கார்போஹைடிரேட்டுகளைத் தயாரித்துக் கொள்ளும் முறை.

**Physical Astronomy :** (*இயற்.*): இயற்பியல் வானியல் : வான் கோளங்களின் இயற்பியல் நிலையையும் வேதியியல் நிலையையும் ஆராயும் அறிவியல் துறை.

**Physical change :** (*இயற்.*) இயற்பியல் மாற்றம் : ஒரு பொருளின் தற்பணபுகள் மாறாத வகையில் ஏற்படும் மாற்றம். எடுத்துக்காட்டு: ஒரு பலகையை ரம்பத்தால் அறுத்துச் சிறு சிறு துண்டுகளாக ஆக்குதல்.

**Physical chemistry :** இயற்பியல் வேதியியல் : இயற்பியல் சார்ந்த வேதியியல் கூறுகளையும், வேதியியல் சார்ந்த இயற்பியல் பண்புகளை, வேதியியல் இயைபுகளோடு உடனாக ஏற்படும் இயற்பியல் மாற்றங்களையும் ஆராய்ந்தறியும் துறை.

**Physical geography :** (*இயற்.*) இயற்பியல் நிலவியம் : இயற்கை அமைப்புகளைப் பற்றிக்கூறும் நிலவியல்.

**Physical metallurgy :** இயற்பியல் உலோகவியல்: உலோகங்களின் இயற்பியல் மற்றும் வேதியியல் பண்புகளை ஆராய்ந்தறியும் துறை.

**Physics :** இயற்பியல்: இயற்பொருள், ஆற்றல் ஆகியவற்றின் இயல்புகளைப் பற்றி ஆராயும் அறிவியல் துறை.

**Pi :** (*கணி.*) பை: வட்டத்திற்கும் விட்டத்திற்கும் சுற்று வரைக்கும் உள்ள தகவினைக் குறிக்கும் 'பை' என்ற வட்டலகின் அடையாளம். இது 'பை' என்ற ஒலிப்புடைய கிரேக்க எழுத்தினால் குறிக்கப்படுகிறது.

பை ($\pi$) = 3.1416.

**Piano wire :** (*உலோ.*) பியானோ கம்பி : மிகவும் வலுவான ஒரு கம்பி. இதன் விறைப்பாக்க வலிமை ஒரு சதுர அங்குலத்திற்கு 3,00,000 முதல் 3,40,000 பவுண்டு ஆகும். இதில் கார்பன் 0.570, சிலிக்கன் 0.090, சல்பர் 0.011, பாஸ்பரம் 0.018, மாங்கனீஷ் 0.425 அடங்கியுள்ளது.

**Pica :** பிக்கா : ஓர் அங்குலத்தில் ஆறு வரிகள் அடுக்கக்கூடிய அளவுள்ள அச்சுருவப் படிவம்.

**Pickle:** வார்ப்படக் கரைசல்: வார்ப்படங்களைத் தூய்மையாக்குவதற்குப் பயன்படும் கரைசல். இரும்பு

வார்ப்படங்களுக்கு நீர்த்த கந்தக அமிலமும், பித்தளைக்கு நைட்ரிக் அமிலமும் பயன்படுகின்றன.

**Picric acid:** பிக்ரிக் அமிலம்; ($C_6H_2(NO_2)_3$, OH): ஒரே உப்பு மூலமுடைய அமிலம். பெனால்-சல்போனிக் அமிலத்தை நைட்ரிக் அமிலத்துடன் கலந்து தயாரிக்கப் படுகிறது. இது மஞ்சள் படிக வடிவில் இருக்கும். வெடி பொருள்கள் தயாரிப்பதற்கும், சாயத்தொழிலும் பயன்படுகிறது.

**Picture noise:** படஒலி: ஒளி வாங்கிப் பெட்டிகளில் படங்கள் தாறுமாறாக ஏற்படவும், ஒளிப்புள்ளிகள் உண்டாகவும் செய்யவும் சைகைக் குறுக்கீடுகள்.

**Picture signal:** படச் சைகை: தொலைக்காட்சியில் ஒளிப்படங்களை உருவாக்கும் மின் தூண்டல்கள்.

**Picture tube:** படக் குழல்: தொலைக்காட்சிப் பெட்டியில், ஒளிக்கற்றைச் செறிவு மாற்றத்தின் மூலம் உருக்காட்சிகளை உண்டாக்கும் எதிர்மின் கதிர்வகைக் குழல்.

**Piezoelectricity:** *(மின்.)* அழுத்த மின்விசை: சில படிகங்களின் மீது குறிப்பிட்ட திசைகளில் அழுத்தம் செலுத்துவதன் மூலம் மின்னேற்றம் உண்டாக்குதல்.

**Piezometer:** அழுத்தமானி: பாய்மங்கள் அல்லது திரவங்கள் மீதான அழுத்தத்தை அளவிடுவதற்கான ஒரு அளவு கருவி.

**Pig:** (உலோ.) இரும்புப் பாலம்: உலையிலிருந்து எடுக்கப்பட்ட நீள் இரும்புப் பாளம்.

**Pig iron:** (உலோ.) தேனிரும்பு: உருக்கும் உலையிலிருந்து வாணிகத்திற்கு வரும் வார்ப்பிரும்பு. இது பொதுவாக 45 கி.கி. எடையுள்ள பாளங்களாக இருக்கும்.

**Pigment** (வேதி; அச்சு.) நிறமி: வண்ணப் பொருளுக்கு அல்லது சாயப்பொருளுக்குச் நிறம் சேர்க்கச் சேர்க்கப்படும் பொருள்.

**Pigskin:** பன்றித்தோல்: பதனிட்ட பன்றித்தோல். வீட்டில் வளர்க்கப்படும் பன்றியின் தோலிலிருந்து நெடுநாள் உழைக்கக்கூடிய, தரமான தோலினைப் பதனிட்டு, கையுறைகள், சிகரெட் பெட்டிகள், கைப்பைகள் முதலியன தயாரிக்கிறார்கள்.

**Pigtail:** *(மின்.)* புரியிணைவு மின் கடத்தி: இணை மின்கடத்திகளின் அவிழ்முனைகளை புரியாகத் திரித்துத் தயாரிக்கப்படும் மின் கடத்திகள்.

**Pile driver:** பதிகால் எந்திரம்: கட்டிட அடிப்படை தாங்கும் நீண்ட பதிகால்களை அடித்திறக்குவதற்கான எந்திரம்.

**Pillar:** (க.க.) தூண்: ஒரு கட்டுமானத்தின் ஆதாரக்கால்.

**Pillow block:** (எந்.) முட்டுத் திண்டுக்கட்டை: ஒரு சுழல் தண்டுக்கு முட்டுக்கொடுப்பதற்கான திண்டுக்கட்டை.

**Pilot:** (வானூ.) விமானம் ஓட்டி: விமானம் பறப்பதைக் கட்டுப்படுத்தி இயக்குபவர்.

**Pilot balloon:** (வானூ.) திசையறி புகைக் கூண்டு: காற்றுவீசும் திசையையும் வேகத்தையும் கண்டறிவதற்காக மேலே பறக்கவிடப்படும் சிறு புகைக்கூண்டு.

**Pilot drill:** (கணி.) முன்னோடித் துரப்பணம்: ஒரு பெரிய துரப்பணத்தைச் செலுத்துவதற்கு வசதியாக ஒருமுன்னோடித்துளையிடுவதற்குப் பயன்படும் சிறிய துரப்பணம்.

**Pilot light:** (மின்.) வழிகாட்டி விளக்கு: ஒரு சுவர்ப்பெட்டியில் அல்லது கொள்கலத்தில் கட்டுப்பாட்டு விசையில் அதன் அருகே அமைக்கப்பட்டுள்ள ஒரு சிறு விளக்கு. இது அதனுடன் இணைக்கப்பட்டுள்ள சாதனம் இயங்குகிறதா என்பதைக் காட்டும்.

**Pincers:** குறடு: இரு கவர் உள்ள இடுக்குப் பொறி

**Pine:** தேவதாரு: பசுமை மாறாத ஊசி இலை மரம். கடினமானது; கனமானது; கனரகக் கட்டுமானத்திற்குப் பயன்படக் கூடியது.

**Ping:** (தானி.) விண்ணொலி: துப்பாக்கிக்குண்டு பாய்தல் அல்லது எஞ்சின் நீள் உருளை வெடித்தல் மூலம் உண்டாகும் விண்ணென்ற ஒலி.

**Pinion:** (பல்.) சிறகுப் பல்லிணை: வடிவளவு எவ்வாறிருப்பினும், சரிவாக்கிய அல்லது குதிமுள்ளுடைய ஒரு சிறிய பல்லிணை.

**Pinnacle:** (க.க.) கோபுரமுகடு: உயர்ந்த அல்லது மிக உயர்ந்த மோட்டு முகடு.

**Pin punch:** (பொறி.) முனைத் தமருசி: இறுக்கமாகப் பொருத்தியுள்ள முளைகளை வெளியே எடுப்பதற்குப் பயன்படும் ஒரு நீளமான மெல் தமருசி.

**Pin spanner:** (எந்.) முளைப்பு முடுக்கி: சுற்றுப்புறப் பரப்பில் புரி முடுக்கி முளைகள் நுழைவதற்குள்ள துவாரங்கள் கொண்ட வட்டமரையாணிகளை முடுக்குவதற்குப் பயன்படும் முளைப்புரி முடுக்கி.

**Pint:** பிண்ட்: நீர் முகத்தளவைச் சிற்றலகு ஒரு காலனின் எட்டில் ஒரு பகுதி.

**Pintle:** (எந்.) தாழ்கட்டை: சுழலுறுப்புக்கு ஊடச்சாக உதவும் தாழ்கட்டை.

**Pipe:** (உலோ.) குழாய்: திரவங்கள் முதலிய வற்றைக் கொண்டு செல்வதற்குப் பயன்படும் உட்புழையுடைய நீண்டகுழாய். குழாய்கள் எஃகு இரும்பு, செம்பு, பித்தளை, உலோகக் கலவைகள் முதலிய வற்றால் செய்யப்படுகிறது.

**Pipe coupling:** (கம்மி.) குழாய் இணைப்பி: இரு குழாய்களை இணைப்பதற்குப் பயன்படும் மறையுள்ள குழல்.

**Pipe cutter:** (கம்மி.) குழாய் வெட்டி: இரும்பு, எஃகுக் குழாய்களை வெட்டுவதற்குப் பயன்படும் கருவி. இதன் வெட்டுமுனை வளைவாக இருக்கும். இந்த முனையைக் குழியில் பதித்துச் சுற்றுவதன் மூலம் குழாய் வெட்டப் படுகிறது.

**Pipe die:** (கம்மி.) குழாய் மரை பொறிப்புக் கட்டை: குழாய்களில் திருகிழைகளைப் பொறிப்பதற்குப் பயன்படும் திருகு தகட்டுக் கருவி.

**pipe thread :**(எந்.) குழாய்த் திருகிழை: குழாய்களிலும், குழல்களிலும் பயன்படும் 'V' வடிவத்திருகிழை. இது இறுக்கமான இணைப்புகளை அமைக்கப் பயன்படுகிறது.

**Pipette:** (வேதி.)வடிகுழல்: சிறு அளவான நீர்மங்களை அளவாக ஊற்றப் பயன்படும் ஆய்வுக் கூடக் கூர்முகக் குழாய்க்கலம்.

**Pipe vise:** (கம்மி.) குழாய்க்குறடு: குழாய்க் குறடுகள் இருவகைப்படும்: (1) சிறிய குழாய்களுக்கான 'V' வடிவத் தாடைகளுடைய கீழ்ப் பக்கமுடைய வகை; (2) பெரிய குழாய்களுக்கான சங்கிலிவகை.

**Piston:** (பொறி.) உந்து தண்டு: ஓர் எஞ்சினில் அல்லது இறைப்பானில் உள்ள நீர் உருளைக்குள் இயங்குகின்ற தண்டு. இத்தண்டு சரியாகப் பொருந்தியிருப்பதைப் பொறுத்து அழுத்தத் திறம்பாடு அமையும்.

**Piston head :** (தானி.) உந்து தண்டு முனை : ஓர் உந்து தண்டின் மூடப்பட்ட மேல் முனை.

**Piston pin** (தானி.) உந்து தண்டு முளை : உந்து தண்டுடன் இணைப்புச் சலாகையை இணைக்கும் மேல் முனையை இணைக்கின்ற ஓர் உட்புழையுள்ள எஃகுச் சுழல் தண்டு. இது கெட்டிப்படுத்தப்பட்டதாகவும் மெருகேற்றப் பட்டதாகவும் இருக்கும். இதனை "மணிக்கட்டு முளை" என்றும் கூறுவர்.

**Piston pin bosses :** (தானி.) உந்து தண்டு முளைக்குமிழ் : உந்து தண்டு முளைக்குமிழ். முளைகளைத் தாங்கும் உந்து தண்டின் பகுதிகள்.

**Piston ring :** (எந்.) உந்து தண்டு வளையம் : ஓர் உந்து தண்டுக்குரிய வில்சுருள் பொதிந்த வளையம்.

**Piston rod :** (எந்.) உந்து தண்டுச் சலாகை : உந்து தண்டினை இயக்குகிற ஒரு சலாகை. இது கோட்டச் சுழல் தண்டின் குறுக்கு மேல் முனையுடன் இணைக்கப்பட்டிருக்கும்.

**Piston skirt :** (தானி.) உந்து

தண்டு விளிம்பு ; உந்து தண்டு முளைக்குக் கீழேயுள்ள பகுதி.

**Piston stroke :** (*தானி.*) உந்து தண்டு இயக்கம் : உந்து தண்டு அதன் நீள் உருளையில் ஒரு முறை முழுமையாக முன் பின் இயங்குதல்.

**Piston valve :** (*பொறி.*) உந்து தண்டு ஓரதர் : ஒரு நீள் உருளை இயங்கும் கூண்டினுள் காற்றுப் புழைகள் இருக்கும். இந்தப் புழைகள் உந்து தண்டு இயங்கும் போது திறந்து மூடும்.

**pitch :** (*வேதி;*) (*குழை*) நிலக்கீல்: கருநிறமான, சூட்டில் களியாக இளகும் தன்மையுடைய பசை போன்ற கட்டிப் பொருள் நீரில் கரையாதது. ஆனால் கார்பன் டை சல்பைடு, பென்சோல் முதலியவற்றில் ஓரளவு கரையக் கூடியது.

(2) இடைத் தொலையளவு : எந்திரங்களில் சக்கரப் பற்களின் இடைத் தொலையளவு.

**Pitchblende:** (*கனிம.*) பிட்ச் பிளண்டி: யுரேனிய ஆக்சைடு வகை. கருமைநிறக் கனிமப் பொருள். நிலக்கீல் போல் பளபளப்புடையது. யுரேனியமும், ரேடியமும் அடங்கிய ஒரு தாதுப் பொருள்.

**Pitch circle:** வீச்செறி வட்டம்: தூக்கி எறியும் வட்டக் கோட்டின் சுற்றளவு. வலைப் பின்னல் பல்லிணைத் தொடர்பு வட்டம்.

**Pitch diameter:** (*பல்லி.*) வீச்செறி வட்டவிட்டம் ஒரு பல்லிணைச் சக்கரத்தின் வீச்செறி வட்டத்தின் விட்டம்.

**Pitch indicator:** (*வானூ.*) வீச்செறி அளவி: ஒரு விமானத்தில் வீச்செறி விசை வேகம் இருப்பதைச் சுட்டிக் காட்டும் ஒரு கருவி.

**Pitch of a roof:** (*க.க.*) சாய்வளவு: மோட்டுச் சாய்வின் செவ்வு நிலை அளவு.

**Pitch of a screw:** (*எந்.*) திருகு இடைத்தொலையளவு: ஒரு திருகின் இழையில் ஒரு புள்ளியிலிருந்து அடுத்த சுற்றின் நேரிணையான புள்ளி வரையிலான தொலைவின் அளவு. இதனைத் திருகின் ஒரு சுழற்சிக்கான முன்னேற்ற அளவு என்றும் கூறலாம்.

**Pitch of gears:** (*எந்.*) பல்லிணை: இடைவெளியளவு: சக்கரப் பற்களின் வடிவளவினைக் குறிக்கும். பல்லிணைகளுக்கிடையிலான இடைவெளியளவு.

**Pitch ratio:** (*வானூ.*) வீச்செறி விகிதம்: விமானச் சுழல் விசிறியின வீச்செறிவுக்கும் அதன் விட்டத்திற்குமிடையிலான விகிதம்.

**Pitman:** (*எந்.*) இணைப்புக் கரம்: ஒரு சுழல் எந்திரத்தை அதன் நேரெதிர் உறுப்புடன் இணைக்கும் தண்டு அல்லது கரம்.

**Pitot tube:** (*வானூ.*) நீள் உருளைக் குழாய்: நீள் உருளை வடிவக்

குழாய். இதன் ஒரு முனை மேல் நோக்கித் திறந்திருக்கும். இதனால் காற்று இதனை வாயை நேரடியாகச் சந்திக்கும்.

**Pivoted casement:** (க.க) சுழல் முளைப் பலகணி: மேல் முனையிலும், கீழ்முனையிலும் சுழல் முளை மீது திருகி இயங்கும் அமைப்புடைய பலகணி.

**Pivot pin:** திருகுமுளை: திருகிச் சுழலும் ஆதாரமுடைய ஒரு முளை.

**Plan:** வரைபடம்: நகரம், நகரப் பகுதி, நிலம், கட்டிடம் முதலியவற்றின் நிலவரைப்படிவ உருவ வரைபடம்.

**Plane:** (1) சமதளம்: சரிமட்டமான சமதளப் பரப்பு. இரு புள்ளிகளை இணைக்கும்நேர்கோடு. அதே பரப்பில் அமைந்திருக்குமானால் அது சமதளம் ஆகும்.

(2) இழைப்புளி: உலோகம் அல்லது மரத்தை இழைத்துத் தளமட்டப் படுத்தும் கருவி.

**Plane trigonometry:** (கணி.)திரிகோண கணிதம்: முக்கோணத்தின் கோணச் சிறை விதங்களைக் கணித்து ஆராயும் கணிதவியல் பிரிவு. இதில் கோணங்களையும் பக்கங்களையும் தொடர்புபடுத்தி ஆறு சார்பலன்கள் வகுக்கப்பட்டுள்ளன. இவை கணிதத்தில் பெரும் முக்கியத்துவம் வாய்ந்தவை.

**Planimeter:** (கணி.) தளமட்டமானி: சமதளப்பரப்பு எதனின் பரப்பளவையும் அளவிடுவதற்கான ஒரு கருவி. இக்கருவியின் முள்ளை எல்லையோரமாக நகர்த்தி அளவுகோலைப் பார்த்து பரப்பளவை அறியலாம்.

**Planish:** (உலோ.) மெருகூட்டுதல்: உலோகப் பரப்புகளை சுத்தியால் அடித்து அல்லது உருட்டி மெருகூட்டுதல்.

**Plank:** (மர. மவே.) பலகை: ஓர் அட்டையை விடக் கனமான அகலமான மரப்பலகை. இது $1\frac{1}{2}''$-6" கனமாகவும், 6"அகலமாகவும் இருக்கும்.

**Plano meter:** (எந்.) தளப்பரப்புத் தகடு: தளப்பரப்பு அளக்கப் பயன்படும் வார்ப்பிரும்புத் தகடு.

**Plans and specifications:** (பட்.) வரைபடங்களும் தனிக் குறிப்பீடுகளும்: வரைபடங்களும் அதனுடன் இணைந்துள்ள முழுவிவர அறிவுறுத்தங்களும்.

**Plant engineer:** எந்திரப் பொறியாளர்: ஒரு குறிப்பிட்ட தொழிலுக்குரிய எந்திர நுட்பச் செயல் முறைகளைச் செயற்படுத்தும் பொறியாளர். தொழிற்சாலைக்குத் தேவையான எந்திரங்களைத் தயாரிப்பது இவரது பொறுப்பு.

**Plaster:** (க.க.) அரைச்சாந்து: கனிக்கல்லை (ஜிப்சம்) போதிய அளவு சூடாக்கி, அதிலுள்ள நீரை வெளியேற்றி, நீரற்ற எஞ்சிய பொருளைத் தூளாக்குவதன் மூலம் இது செய்யப்படுகிறது. இது சுவர்

களிலும் முகடுகளிலும் பூசுவதற்குப் பயன்படுகிறது.

**Plaster board:** (க.க.) சாந்து அட்டை: அரைச் சாந்தினால் செய்யப்பட்டு இருபுறம் காகிதம் ஒட்டிய அட்டை

**Plaster cast:** சாந்து வார்ப்படம்: வார்ப்புக் குடுவையாகவும் காரை மண்ணாகவும் பயன்படும் களிக்கல் தூளினாலான வார்ப்படம்.

**Plastering trowel:** சாந்துக் கரண்டி: சாந்து பூசப் பயன்படும் சட்டுவக் கரண்டி. இது எஃகினாலானது; 4"-5" அகலமும், 10"-12" நீளமும் உடையது. அலகுக்கு இணையாகக்கைப்பிடி கொண்டது.

**plaster lath:** (க.க.) சாந்துப் பட்டிகை. சுவர், தளம், மச்சு ஆகியவற்றில் சாந்து பொருந்துவதற்காக அமைக்கும் மரப்பட்டிகை.

**Plaster of paris:** (வேதி; க.க.) பாரிஸ் சாந்து: வார்ப்புக் குடுவையாகவும் காரை மண்ணாகவும் பயன்படும் களிக்கல் தூள். வார்ப்படங்களும், மாதிரிப் படிவங்களும் செய்யப் பயன்படுகிறது.

**Plastic:** (குழை.) பிளாஸ்டிக்: குழைத்து உருவாக்கத்தக்க வார்ப்புப் பொருள்.

**Plastic art:** குழைமக் கலை: உருவாக்கம் சார்ந்த சிற்பம், மட்பாண்டத் தொழில் முதலிய கலைகள்.

**Plasticine:** செயற்கைக் களிமண்: குழைவுருவாக்கத்திற்குரிய களிமண்ணினிடமாகப் பள்ளிகளில் பயன்படுத்தப்படும் செயற்கைக் குழைமப் பொருள்.

**Plasticity:** (இயற்.) குழை வியல்பு: எளிதில் உருமாறுந் தன்மை. வார்ப்பட உருவத்தை ஏற்று இருத்திக் கொள்ளும் திறன்.

**Plasticize:** (குழை.) குழைமமாக்குதல்: குழைபொருள் குழுமத்தை உருவாக்குதல் அல்லது வளமாக்குதல்.

**Plasticizers:** (குழை.) குழைமம உருவாக்கப்பொருள்: குழைபொருள் குழுமத்தை உருவாக்குகிற அல்லது வளமாக்குகிற பொருள்.

**Plastics:** குழை பொருட் குழுமம்: நிலக்கீல் முதல் சீமைக்காரை வரையில் பல்வேறு குழைவுப் பொருட்களின் தொகுதி. இவை சில அம்சங்களில் இயற்கையான பிசின்களை ஒத்திருப்பவை. எனினும், வேதியியல் மற்றும் இயற்பியல் பண்புகளில் வேறுபட்டவை. குழைம ஆதாரப் பொருட்களில் பல கூட்டிணைப் பொருட்கள் உள்ளன. எனவே, குழைமப் பொருட்களின் குடும்ப உறுப்பினர்களின் எண்ணிக்கை பெருகிக் கொண்டே இருக்கிறது. இவற்றின் முக்கிய பிரிவுகளாவன:

1. வெப்ப உருக்குழைமை: வெப்ப மூட்டப்பெற்ற நிலையில் உருக் கொடுக்கப்பெற்ற குழைமம். அமினோ, பாலிஸ்டர், ஆல்க்கிட், பைனோலிக் ஆகியவை இந்த வகையைச் சேர்ந்தவை.

2. வெப்பியல் குழைமம்: வெப்பத்

நால் இளகிக் குளிரில் இறுகும் தன்மையுடைய குழைமம். ஸ்டைரீன் மீச்சேர்மங்கள், கூட்டு மீச்சேர்மங்கள், செல்லுலோசிக்ஸ், பாலித்திலீன், வினைல், நைலான்கள், பல்வேறு புளோரோ கார்பன்கள் இவ்வகையைச் சேர்ந்தவை.

குழைமப் பொருள் குடும்பத்து ஒவ்வொரு பொருளுக்கும் சில குறிப்பிட்ட பண்புகள் உண்டு. சில கடினப் பரப்புடையவை; சில அரிமான எதிர்ப்புடையவை; சில நெகிழ்திறனுடையவை; சில முரடானவை; சில மின் அழுத்தத்தைத் தாங்கக் கூடியவை.

**Plastic wood:** (*மர. வே.*) குழைம மரக்கூழ்: காற்றுப் பட்டவுடனேயே கடினமாகிவிடக்கூடிய மரக்கூழ். இது வெடிப்புகளை அடைப்பதற்குப் பயன்படுத்தப்படுகிறது. இதனைப் பூசியவுடனேயே அதில் வண்ணம் பூசலாம்.

**Plastisol** (*குழை.*) பிளாஸ்டிசோல் : குழைமையாக்கும் பொருட்களுடன் கலந்து கலவைகளாகத் தயாரிக்கப்படும் எந்திரக் குழைமப் பொருள். இதைக் கொண்டு வார்ப்படம் செய்யலாம்; சுருள்கள் தயாரிக்கலாம். நெகிழ் திறனுடைய வார்ப்படங்கள் தயாரிக்கப் பெரும்பாலும் பயன்படுகிறது.

**Plate clutch :** (*தானி; எந்.*) தகட்டு ஊடிணைப்பி : இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட தகடுகளின் மூலம் விசையை அனுப்புகிற ஊடிணைப்பி. இத்தகடுகள் விற்சுருள்களின் அழுத்தத்தின் மூலம் பற்றி வைத்துக் கொள்ளப்படுகின்றன.

**Plate condenser :** தகட்டு மின் விசையேற்றி : மாற்று உலோகத் தகடுகளை இணைத்து இரு மின் முறைகள் ஏற்படுத்தப்பட்டுள்ள மின் விசையேற்றி, இத்தகடுகள் அபிரகம், மெழுகேற்றிய தாள், போன்றவற்றாலானதாக இருக்கும்.

**Plate current :** தகட்டு மின்னோட்டம் : தகட்டு மின்சுற்று வழியில் பாய்கிற அதிர்வு நேர் மின்னோட்டம்.

**Plate cylinder :** (*அச்சு.*) தகட்டு நீள் உருளை : ஒரு சுழல் அச்சு எந்திரத்தில் சுழல்கின்ற பகுதி. இதனுடன் வளைவுடைய அச்சுத் தகடுகள் இணைக்கப்படும்.

**Plated bar :** (*உலோ.*) தகட்டிரும்பு : காய்ப்புடைய தகட்டு எஃகு. இது சலாகைகளாக இருக்கும். உலோகத்தைச் சூடாக்கிச் சுத்தியலால் அடித்துக் கடினமாக்கப்படுகிறது.

**Platen :** (*எந்.*) தகட்டுப் பாளம் : (1) உலோக வேலைப்பாடுகளில் உலோகத்தை அழுத்தித் தகடாக்குவதற்குப் பயன்படும் தகடு (2) அச்சகத்தில் அச்சுத்தாள் அழுத்தும் தகட்டுப் பாளம்.

**Platen press :** (*அச்சு.*) தகட்டுப் பாள அச்சு எந்திரம் : அச்சிடும் போது காகிதமும் அச்சுப் படிவமும்

தட்டையாகப் பொருந்தியிருக்கக் கூடிய அச்சு எந்திரம்.

Platform : (க. க.) தள மேடை. தரையிலிருந்து உயரமாகக் கிடை மட்டத்தில் அமைக்கப்பட்டுள்ள மரத்தினாலான அல்லது கட்டு மானத்திலான ஒரு மேடை.

Plating : (உலோ.) முலாம் பூசுதல் : உலோகக் குழம்பில் அமிழ்த்துவதன் மூலம் அல்லது மின் பகுப்பு முறை மூலம் உலோக முலாம் பூசுதல்.

Platinite: (உலோ.) பிளாட்டினைட்: 46% நிக்கல் எஃகு அடங்கிய ஓர் உலோகம். இது பிளாட்டினத்தைப் போன்று அதே அளவு வெப்ப விரிவாக்கக் குணகம் உடையது. இதனாலேயே இது மின் விளக்குக் குமிழ்கள் தயாரிப்பதில் பிளாட்டினத்திற்குப் பதிலாகப் பயன்படுகிறது.

Platinoid: (உலோ.) பிளாட்டினாய்டு: செம்பு, துத்தம், ஜெர்மன் வெள்ளி, டங்ஸ்டன் முதலிய உலோகங்கள் அடங்கிய உலோகக் கலவை. அணிகலன்கள், அறிவியல் கருவிகள் செய்யவும், சில தொழில்துறைச் செயல் முறைகளிலும் பயன்படுகிறது.

Pliant: ஒசிவான: தொய்வான; முறியாமல் எளிதில் வளையக் கூடிய.

Pliers: (எந்.) சாமணம்: அகலமான, தட்டையான, சொரசொரப்பான தாடைகளுடைய இடுக்கி போன்ற ஒரு கருவி.

Plinth: (க.க.) தூண்பீடம்: ஒரு தூணை அல்லது பீடத்தை அடிப் பகுதியையொட்டியுள்ள சதுர வடிவப் பகுதி.

Plotting points: (கணி.) மனையிட முனைகள்: ஒரு வரைபடத்தில் மனையிடத்தை வரையறுக்கும் முனைகள்.

Plug: (மின்.) மின்செருகி: மின் கருவிகளுக்கும், மின் வழங்கு ஆதாரங்களுக்குமிடையே இணைப்பு ஏற்படுத்துவதற்கெனச் செருகிப் பொருத்துவதற்குரிய சாதனம்.

Plug fuse: (மின்.) செருகு மின் காப்பிழை: திருகு இழைத் தொடர்பு மூலம் நிலையில் பொருத்தபடும் மின் காப்பு இழை,

Plug gauge: (எந்.) செருகு அளவி: எந்திர வேலைப் பொருள்களின் உள் விட்டங்களை அளவிடுவதற்குப் பயன்படும் செருகு அளவி.

Plug tap (எந்.) செருகிநாடா: எந்திரங்கள் மூன்று வரிசைகளிலுள்ள இடையீட்டு நாடா: (1) தொடக்க நாடா; (2) செருகு நாடா; அடி நாடா.

Plug weld: (பற்.) செருகிபற்றாசு: எந்திர உறுப்புகளில் ஒன்றில் அல்லது இரண்டிலும் உள்ள துவாரத்தின் வழியே பற்றாசு பொருத்தி தகடுகளை இணைக்கும் முறை.

Plumb: (க.க.) செங்குத்து: சுவர் போன்று துல்லியமாக நேர் செங்குத்தாக இருக்கும் அமைப்பு.

**Pulumbago:** காரீயம்: எழுது கோலுக்காகப் பயன்படுத்தப்படும் ஈயத்தைப் போன்ற கரிவகை. இது மேற்பரப்புகளில் எளிதில் கடத்தாப் பொருளாகப் பூச்சு வேலைக்கும் பயன்படுகிறது.

**Plumb and level:** (க.க.) தூக்கு நூற்குண்டு: துல்லியமான கிடைமட்டத்தையும், துல்லியமான செங்குத்தையும் அறிவதற்காகப் பயன்படும் உலோக அல்லது மர நூற்குண்டு.

**Plumb bob:** (க.க.) ஈயக்குண்டு: கட்டிட வேலையில் பயன்படும் தூக்கு நூற்குண்டின் நுனியில் உள்ள ஈயக்குண்டு.

**Plumbing:** குழாய் வேலை: ஈயக் குழாய் முதலியவற்றைப் பொருத்துதல், பழுது பார்த்தல் போன்ற வேலை

**Plummet:** தூக்கு நூல்: செங்குத்து ஆழம் பார்ப்பதற்கான கருவியின் தூக்கு நூற்குண்டு,

**Ply:** படலம்: பல அடுக்குகளாக உருவாக்கிய திண்மையின் ஒரு படலம். இத்திண்மையின் ஒவ்வொரு அடையும் ஒரு படலம் ஆகும்.

**Plywood:** (மர.வே.) ஒட்டுப் பலகை: படலங்களின் இழைவரை ஒன்றற்கொன்று குறுக்காக வைத்து ஒட்டிச் செய்யப்படும் மெல்லிய வன் பலகை.

**Pneolator:** (எந்.) செயற்கைச் சுவாசக் கருவி: இடம்விட்டு இடம் கொண்டு செல்லக்கூடிய தானாக இயங்கும் செயற்கைச் சுவாசக் கருவி.

**Pneumatic :** (பொறி.) காற்றுப் பட்டை: காற்றடைத்த குழாய்ப் பட்டை.

**Pneumatic brakes :** (தானி.) காற்றுத் தடை : காற்று அழுத்தம் அல்லது வெற்றிடம் மூலம் இயக்கப்படும் தடை.

**Pneumatic dispatch :** காற்றழுத்த இயக்க முறை : காற்றழுத்தத்தினால் அல்லது காற்று வெளியேற்றத்தினால் இயக்கப்பட்டுக் குழாய்கள் வழியாகச் சிப்பங்கள் முதலியவற்றை இடம் பெயர்த்துக் கொண்டு செல்லும் முறை.

**Pneumatic tire** (தானி.) காற்றுக் குழாய்ப் பட்டை ; காற்றடைத்த குழாய்ப் பட்டை.

**Pneumatic tools** (பொறி.) காற்றழுத்தக் கருவி : காற்றழுத்தத்தின் மூலம் இயக்கப்படும் சாதனம்.

**Pneumatic trough :** வளிக் கொள்கலம் : நீர் அல்லது பாதரசப் பரப்பின் மேல் ஜாடிகளில் காற்றினைத் திரட்டுவதற்கான கலம்.

**Point :** (அச்சு.) அச்செழுத்துரு அலகு : அச்செழுத்துருவின் ஓர் அலகு. ஓர் அலகு = .031837 அங்.

**Pointing :** (க.க.) இணைப்புக் காரைப்பூச்சு : கட்டுமானத்தில்

இணைப்புக் காரைப் பூச்சு.

**Pointing trowel :** (க.க.) கூர் சட்டுவக்கரண்டி : சுவர் இணைப்பு களில் கூர்மையாகச் சாந்து பூச வும், எஞ்சிய சாந்தினை அகற்றிச் சுத்தப்படுத்தவும் பயன்படும் சிறிய சட்டுவக்கரண்டி.

**Polarity:** (மின்.) துருவ முனைப்பு: இருகோடிகளும் நிலவுலக முனைக் கோடிகளை நோக்கி முனைத்து நிற்கும் காந்தக்கல், காந்த ஊசி முதலியவற்றின் இயல்பு; மின் னூட்டு முனைக்கோடி இயல்பு.

**Polarization :** (மின்.) மின் முனைப்பாக்கம் : அடிப்படை மின் கலத்தில், நேர்மின் தகட்டில் ஹைட்ரஜன் குமிழ்கள் சேர்தல். இதனால், அகத்தடை அதி கரித்து, மின்னோட்ட வலிமை குறைகிறது.

**Polarized light :** (குழை.) ஒரு முக ஒளிக்கதிர் : போக்கின் திசை ஒருமுகப்படுத்தப்பட்ட ஒளிக் கதிர் கள்.

**Poles:** (மின்.) மின் முனைப்புக் கோடிகள்: ஒரு மின் சுற்று வழியின் மின்முனைப்புக் கோடிகள் (துரு வங்கள்)

**Pole shoes:** (மின்.) காந்த லா டம்: லாடம் போல் வளைந்த துருவ முனைக் காந்தம்.

**Polychrome:** பல்வண்ணக்கலை: பல வண்ணங்களைக் கொண்டு பூச்சு வேலைப்பாடுகள் செய்தல் இந்தக்கலை எகிப்தில் தோன்றி யது. இத்தாலியில் 16ஆம் நூற் றாண்டில் மிகுதியாகப் பயன்படுத் தப்பட்டது.

**Polyester:** (குழை.) பாலிபஸ்டர், குழைமக் குடும்பத்தைச் சேர்ந்த செயற்கை இழைவகை. இரு நீரக அணு ஆல்கஹால்களையும், இருகாடி மூலங்களுடைய அமிலங் களையும் எண்முகச் சேர்ம ஸ்டை ரீனுடனும் பிறவற்றுடனும் இணையுமாறு செய்து பூரிதமற்ற பாலியஸ்டர் தயாரிக்கப் படுகிறது. திரவ வடிவில் இதனை எளிதில் கையாளலாம். இது வெப்பத்தை யும், அரிமானத்தையும் தாங்கக் கூடியது. சிறிய மின்சாரச் சாதனங் கள், கட்டிடச் சேணங்கள் முதலியவை தயாரிக்கப் பயன்படு கிறது.

**Polyethylene:** (குழை.) பாலித் திலீன்: வெப்பத்தால் இளகிக் குளி ரில் இறுகும் இயல்புடையது. எத்தி லீன் மீச் சேர்மங்களாலானது. கெட்டியான மெழுகுபோன்றது. நீரினால் பாதிக்கப்படாதது. நெகிழ்வுடைய புட்டிகள் வெப்பத் தைத் தாங்கும் விரிப்புகள் தயாரிக் பயன்படுகிறது.

**Polygon:** பலகோணக் கட்டம்: நான்கிற்கு மேற்பட்ட பக்கங்களை யும், கோணங்களையும் உடைய வரைபடிவம்.

**Polygon of forces:** விசைகளின் பலகோணக் கட்டம்: விசைகளின் முக்கோணங்களின் வரிவாக்கம்,

ஒரு பல கோணக்கட்டத்தின் பக்கங்களால் வரிசைப்படி அளவிலும் திசையிலும் பல விசைகள் குறிப்பிடப்படுமானால், அவை சமநிலையில் இருக்கும்.

**Polymer:** (குழை.) மீச்சேர்மம்: ஒரே வகைப்பட்ட சேர்மங்களின் அணுத்திரள்கள் இணைந்து வேதியியல முறையில் மாறாமலே அணுத்திரள் எடைமானமும் இயற்பியல் பண்பும் மட்டும் மாறுபட்ட பிறதுருச் சேர்மம்.

**Polymerization:** (வேதி.) மீச்சேர்ம இணைவு: ஒரே வகைப்பட்ட சேர்மங்களின் அணுத்திரள்கள் எடைமானமும் இயற்பியல் பண்பும் மட்டும் மாறுபட்ட பிறி துருச்சேர்மமாக இணைதல். எடுத்துக்காட்டு: தாவரங்களில் ஒளிச் சேர்க்கையின் 6 பாரமால்டிஹைடு மூலக்கூறுகள் $(CH_2O)$ பச்சையம் மூலமாக ஒரு சர்க்கரை $(C_6H_{12}O_6)$ மூலக்கூறாக மாறுதல்.

**Polyphase:** (மின்.) பன்னிலை: இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மின்னோட்ட இயக்கப்படி நிலை அல்லது மின்னியல் முறையில் ஒன்றோடொன்று இணைக்கப்பட்ட இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மின் சுற்றுவழிகள்.

**Polystyrene :** (வேதி. குழை.) பாலிஸ்டைரீன் : வெப்பத்தால் இளகிக் குளிரில் இறுகும் இயல்புடைய அமிலத்தை எதிர்க்கக் கூடிய ஒருவகைப் பிசின். அமிலக் கொள்கலங்கள் தயாரிக்கப் பயன்படுகிறது.

**Poly technic :** பல தொழில் நுட்பப் பயிற்சியகம்: பல தொழில் நுட்பங்கள் பயிற்றுவிப்பதற்கான பள்ளி அல்லது நிறுவனம்.

**Polyvinyls :** (குழை ) பாலிவினில் பாலிவினில் குளோரைடு, பாலிவினில் அசிட்டால், பாலிவினில் ஆல்கஹால் போன்றவை அடங்கிய ஒரு வேதியியல் பொருள் குடும்பம் முதலாவது. வினில் குளோரைடு மீச்சேர்மங்கள் அடங்கிய ஒரு குழைமப் பொருள். இது நீர், ஆல்கஹால், அமிலங்கள், காரங்கள் ஆகியவற்றை எதிர்க்கக் கூடியது.

**Poplar :** (மர. வே.) நெட்டிலிங்கம்: ஒரு வகை மரம் மென்மையானது; எடை குறைந்தது. வெள்ளை அல்லது இளம் பசு மஞ்சள் நிறத்தில் இருக்கும். இதில் எளிதில் வேலைப்பாடுகள் செய்யலாம். கலைப்பொருட்கள் செய்யப் பயன்படுகிறது.

**Poppet :** (எந்.) கடைசல் தலை: கடைசல் எந்திரத்தின் தலைப் பாகம்.

**Poppy heads :** (க.க.) ஒப்பனை முகடு: திருக்கோயில் இருக்கை முனையின் ஒப்பனை முகடு.

**Porcelain :** பீங்கான் : சீனாக் களிமண் அல்லது வெண்களிமண்ணால் செய்யப்படும் பீங்கான கலங்கள்.

**Porch :** (க.க.) புகுமுக மண்டபம்: ஒரு கட்டிடத்தின் முகப்பில் தனிக் கூரையுடன் கூடிய மண்டபம்.

**Porosity :** கசிவுத் திறன் : உலோகம் அல்லது பிற பொருள்களின் வழியாக அழுத்தப்படும் போது காற்று, வாயு அல்லது திரவம் கசியும்படி செய்யும் திறன்.

**Port :** (தானி.) காற்றுப் புழை : எஞ்சினின் உள்ளெரி அறைக்குள் எரிபொருள் செல்வதை அனுமதிக்கக் கூடிய அல்லது வாயுக்கள் வெளியேற அனுமதிக்கக்கூடிய ஒரு வழிப்புழை.

**Portal:** (க.க.) நுழைவாயில்: அணி வாயிற்கதவம் அல்லது அணிகெழு வாயில், பொதுவாக பெரிய கட்டிடங்களில் உள்ளது.

**Portico:** (க.க.) மூடுமுன்றில்: தூண்கள் தாங்கும் கூரையுடைய இடம். பொதுவாக ஒரு கட்டிடத்தில் நுழைவாயிலிலுள்ள புதுமுக மண்டபம்.

**Portiere:** கதவத்திரை: கதவு நிலையில் பயன்படுத்தப் படும் ஒரு திரை.

**Portland cement:** (க.க.) சீமைக்காரை: சீமைச்சுண்ணாம்பு, களிமண் ஆகியவற்றால் செய்யப் படும் செயற்கைப் பசைமண்.

**Positive:** ஒளிப்பட நேர்படிவம்: ஒளிப்பட நேர்படிவத்தை ஒத்த உருப்படிவம். இது மறி நிலைப் படிவத்திற்கு எதிர் மாறானது.

**Positive electricity:** நேர்மின் ஆற்றல்: கண்ணாடியைப் பட்டுத்துணியால் தேய்ப்பதனால் ஏற்படும் மின் ஆற்றல்.

**Positive plate:** (மின்.) நேர்மின் தகடு: ஒரு சேமக்கலத்திலுள்ள தகடு. இது பொதுவாகப் பழுப்பு நிறத்தில் இருக்கும். மின் சுற்றுவழி முற்றுப் பெறும்போது இதிலிருந்து மின்விசை பாய்கிறது.

**Positive pole:** வடகாந்தமுனை காந்த வகையில் வடக்கு நோக்கிய முனை.

**Positron:** நேர் ஆக்கமின்மம்: மின் மங்களுக்கு ஆற்றலில் இணையாகத் தற்காலிகமாகக் கருவுளில் உருவாகும் நேர்மின் திரள்.

**Potassium** (வேதி.) பொட்டாசியம்: வெண்மையான மெழுகு போன்று வெண்மையான உலோகத் தனிமம். இது ஈரக்காற்றில் விரைவாக ஆக்சிஜனுடன் இணைந்து ஆக்சைடாகக் கூடியது. அதன் உருகுநிலை 63.5°C. வீத எடைமானம் 0.8621. இதன் பலவகை உப்புகள் மிகுந்த பயனுடையவை.

**Potential:** (மின்.) மின்னழுத்த நிலை: மின்னூட்டத்தின் அளவு அல்லது மின் அழுத்தத்தின் அளவு. வேண்டும்போது செயல் திறப்படுத்தப்படும் அடங்கிய மின்னாற்றல் வளம். இது ஓல்ட் என்னும் அலகுகளில் அளவிடப் படுகிறது.

**Potential difference :** (மின்.) மின்னழுத்த நிலை வேறுபாடு : நிகழக்கூடும் மின்னோட்டத்தின் ஏற்றத்தாழ்வு உச்ச நிலைகளின் வேறுபாடு. இது ஓல்ட் அலகுக ளில் அளவிடப்படுகிறது.

**Potential energy :** (இயற்.) உள்நிலை ஆற்றல : உள் சேமித்து வைக்கப்பட்டிருக்கும் ஆற்றல்.

**Potentiometer :** (மின்.) மின் னழுத்த ஆற்றல் மானி : மின்ன ழுத்த நிலைகளை ஒரு தரளவுடன் ஒப்பிட்டு அளவிடுவதற்குப் பயன் படும் ஒரு கருவி.

**Potters wheel :** வேட்கோத் திகிரி : குயவர்கள் களிமண்ணுக்கு உருக்கொடுக்கப் பயன்படுத்தும் சக்கரம்.

**Pottery :** மட்பாண்டத் தொழில்: சட்டி பானை செய்யும் மட்பாண் டத்தொழில் அல்லது களிமண் பாண்டத் தொழில்.

**Pound :** பவுண்ட் : 12 அவுன்ஸ் கொண்ட எடை அலகு.

**Power :** (மின்.) மின்விசை : மின்விசையின் அலகு வாட். மின் விசையினால் இயக்கத்தின் போது செய்யப்படும் வேலையின் விகிதத் தைக் கொண்டு இது அளவிடப்படு கிறது. எந்திரவியலில் விசை;

$$\text{இயக்குந்திறம்} \times \frac{\text{தொலைவு}}{\text{காலம்}}$$

**Power amplifier:** திறன்மிகைப்பி: ஒலிபெருக்கிக்குப் பெருமளவு விசை யை அளிக்கப் பயன்படுத்தப்படும் ஒருவகை மின் கருவி.

**Power brakes:** (தானி; எந்.) விசைத்தடை: மின்னியக்கச் செறிவு முறைமூலம் நீரியல் முறையில் இயக்கப்படும் தடை.

**Power factor:** (மின்.) திறன்கூறு: உண்மைத் திறனுக்கும் தோற்றத் திறனுக்குமிடையிலான விகிதம்.

$$\text{திறன்கூறு} = \frac{\text{உண்மைத்திறன் (W)}}{\text{தோற்றத்திறன் (V} \times \text{A)}}$$

**Power feed:** (எந்.) விசையூட்டம்: கடைசல் எந்திரம், திருகிழை வெட் டுங்கருவி போன்ற எந்திரங்களுக் குத் தானியக்கமுறையில் உட் செலுத்துதல்.

**Power hammer:** விசைச்சம்மட்டி: காற்று, நீர், எந்திரவிசை மூலம் இயக்கப்படும் சம்மட்டி. கரைசல் பணிகளில் பயன்படுத்தப் படு கிறது.

**Power landing:** (வானூ.) விசை இறக்கம்: விமான எஞ்சினின் நீரா விப் புழையின் வாயடைக்கப் பெற்று மெல்ல இயங்குமாறு செய்து விமானத்தைத் தரை இறங்கச் செய்தல்.

**Power pack:** (மின்.) திறன் அடைப்பு: வானொலிப் பெட்டி, பொது ஒலிபெருக்கி அமைப்பு முத லியவற்றுக்குத் தேவையான மின்

னிழையை அல்லது வெப்ப ஆற்றலை வழங்கும் ஒரு சாதனம்.

**Power plant:** (*தானி.*) விசை எந்திரம்: எரிபொருள், கரியச் சேர்மானச் செறிவு, எரியூட்டம் குளிர்விப்பு, மசகிடுதல் போன்றவற்றுக்கான அமைவுகள் அமைந்த எந்திரம்.

எந்திரவியலில் மின்விசையை உற்பத்தி செய்து, வழக்கீடு செய்வதற்கான கொதிகலன்கள், மின்னாக்கிகள் முதலியவை.

**Power steering:** *தானி*; (*எந்.*) விசை இயக்காழி: எஞ்சின் இயங்கும்போது சுதந்திரமாக இயக்குவதற்கு அனுமதிக்கும் இயக்காழி. இது இயக்காழி அலகுடன் இணைக்கப்பட்டுள்ள மின்னியக்கச் செறிவியின் மூலம் நீரியல் முறையில் இயக்கப்படுகிறது.

**Power transfomer:**(*மின்.*) விசை மின் மாற்றி: உயர்ந்த மின்னழுத்தத்தையும் குறைந்த மின்னோட்டத்தையும், உயர்ந்தமின்னோட்டத்துடனும், குறைந்த மின்னழுத்தத்துடனும் இணைப்பதற்கும், குறைந்த மின்னழுத்தத்தையும், உயர்ந்த மின்னோட்டத்தையும் உயர்ந்த மின்னழுத்தத்துடனும், குறைந்த மின்னோட்டத்துடனும் இணைப்பதற்கான ஒரு சாதனம். இவை பொதுவாக 60 சுழற்சி அலைவெண்ணுடன் பயன்படுத்தப்படுகிறது.

**Power tube:** விசைக் குழல்: ஒலி அலைவெண் மிகைப்பியில் கடைசிக் கட்டத்தில் பயன்படுத்தப்படும் வெற்றிடக்குழல். ஒலி பெருக்கி இயக்கத்திற்கு இது பெரிய அளவிலான ஒலி அலைவெண் அளிக்கிறது.

**Power unit:** (*மின்.*) மின்விசை அலகு: மின் சுற்றுவழிகளில் மின் விசையின் அலகு வாட். இது வினாடி ஒன்றுக்கு வேலை ஊக்க ஆற்றலின் ஓர் அலகு செயற்படும் வீதம் ஆகும்.

**Precipitate** (*குழை.*) வீழ்படிவு: வேதியியல் மாற்றம் காரணமாக ஒரு கரைசலில் கரையாத வண்டலாகப் படியும் மண்டிப்படிவு.

**Precision grinding:** (*எந்.*) துல்லியச் சாணை: எந்திரக் கூறுகளின் நுண்ணிடை வேறுபாட்டளவு மிகவும் நெருக்கமாக இருக்கக்கூடி எந்திரச் சாணை.

**Precision lathe:** (*எந்.*) துல்லியக் கடைசல் எந்திரம்: துல்லியமான கடைசல் வேலைப்பாடுகளைச் செய்வதற்கேற்ற சிறிய மேசைக் கடைசல் எந்திரம்.

**Prefabricated:** (*க.க.*) முன்னிணைப்பு: கட்டிடங்கள் அல்லது தொழிற்சாலைக்கு வேண்டிய பகுதிகளை அல்லது உறுப்புகளை தனித்தனியாக வேறிடங்களில் முழுமையாக உருவாக்கி, பயன்படுத்த வேண்டிய இடத்திற்குக் கொண்டுவந்து இறுதியாக ஒருங்கிணைத்து அமைத்தல்.

**Preforming:** (குழை.) முன்னுரு வாக்கம்: பிளாஸ்டிக் தொழிலில் வார்ப்படங்களை விரைவாகவும் மிகக் குறைந்த சேதாரத்துடன் உருவாக்கும் வகையில் வார்ப்படப் பொருட்களை செறிவுடையதாக்கும் முறை.

**Preignition:** (தானி.) முன்னிடு வெடிப்பு: உள்வெப்பாலை எரி பொருளின் உரிய நேரததிற்கு முற் பட்ட வெடிப்பு. சூடான கார்பன் படிவுகளாலோ, தவறான எரியூட் டத்தினாலோ இது நிகழலாம்.

**Pressed steel:** (உலோ.வே.) வடிவமைப்பு எஃகு: எஃகுத் தகடுகள் அல்லது படிவங்கள் மூலம் அழுத் தங் கொடுத்துப் பளபளப்பாக வடி வமைத்த பல்வேறு பொருட்கள் உருவாக்கப்படுகின்றன. இவை வடிவமைத்த எஃகு எனப்படும்.

**Press room:** (அச்சு.) அச்சடிப்பு அறை: அச்சடிக்கும் பணி நடை பெறும் அறை.

**Pressure:** (மின்.) மின்வலி இய லாற்றல் வேறுபாடு: மின்னியக்க விசை. இது பொதுவாக மின்னழுத் தம் எனக் கூறப்படும்.

இயற்பியலில் ஓர் அலகு பரப் பளவில் விசையழுத்தம்.

**Pressure airship:** (வானூ.) அழுத்த விண்கலம்: முழுமையாக வோ பகுதியாகவோ உள்ளழுத்தம் மூலம் தனது வடிவத்தைப் பேணிக் கொள்ளும் விண்கலம்.

**Pressure altitude:** (வானூ.) அழுத்த உயரம்: ஒரு தரநிலைப் படுத்திய வாயு மண்டலத்தில் ஒரு குறிப்பிட்ட அழுத்த நிலைக்கு நேரிணையான உயரம்.

ஒரு விண்கலத்தில் வாயுப் பை கள் முழுமையாக நிரம்பியிருக்கக் கூடிய உயரம்.

**Pressure cable:** அழுத்த வடம்.

**Pressure drop:** அழுத்த வீழ்ச்சி.

**Pressure nozzle:** (வானூ.) அழுத் தக் கூம்பலகு: காற்றில் விமானத் தின் வேகத்தை அளவிடுவதற்குப் பயன்படுத்தப்படும் ஒரு அளவிடு கருவி.

**Pressure welding:** அழுத்தப் பற்ற வைப்பு: அழுத்தத்தின் மூலம் பற்ற வைப்பு செய்யக்கூடிய பற்றவைப்பு முறை.

**Prick punch:** (எந்.) ஊசித் துளை: ஒரு சிறிய மையத் துளை. இதனை 'அமைப்புத் துளை' என்றும் கூறு வர்.

**Primary:** (மின்.) குறைமின் சுற்று வழி: குறைந்த அழுத்த (6 வோல்ட்ஸ்) மின் சுற்று வழியைக் குறிக்கிறது.

**Primary cell:** (மின்.) அடிப்படை மின்கலம்: வேதியியல் ஆற்றலை மின்னியல் ஆற்றலாக மாற்றக் கூடிய மின்கல அடுக்கு. இதில் ஒரு ஜாடியில் மின்பகுப்புக் கரைசலும் இரு மின் வாய்த் தகடுகளும் இருக் கும்.

**Primary coil:** (மின்.) அடிப்படைச் சுருள்: இந்தச் சுருளில் மூல ஆற்

றல் செலுத்தப்பட்டு, விசையின் காந்தக்கோடுகள் உண்டாக்கப் படுகின்றன. அவை இன்னொரு சுருளுடன் இணைக்கப்படும்போது அதில் ஆற்றல் தூண்டப்படுகிறது.

**Primary colours:** அடிப்படை வண்ணங்கள்: கலவை மூலக் கூறாய் உதவும் சிவப்பு, பச்சை, ஊதா, மஞ்சள் ஆகிய தலையாய வண்ணங்கள்.

**Primery planets:** அடிப்படைக் கோள்கள்: கதிரவனை மையயாகக் கொண்டு சுழலும் நேர்கோள்கள்.

**Primary-type glider:** *(வானூ.)* அடிப்படை வகைச் சறுக்கு விமானம்: சறுக்கு விமானிகள் அடிப்படைப் பயிற்சி பெறுவதற்காகத் திருத்தமின்றிச் செய்யப்பட்ட சறுக்கு விமானம்.

**Primavera:** *(மர. வே.)* சீமை நூக்கு: மத்திய அமெரிக்க மர வகை. மஞ்சள் நிறமுடையது; நாளடைவில் கருமை நிறம் பெறும். அலங்கார மேலடை மெல்லொட்டுப் பலகைகளுக்கும், சன்னல் கதவுகளுக்கும் அறைகலன்களுக்கும் பயன்படுகிறது.

**Prime number:** *(கணி.)* பகா எண்: பொதுக் காரணிகள் கொண்டிராமல் ஒருமை அளவுடைய எண்.

**Priming paint:** *(வண்.)* முற்சாயம்: முற்சாயமாகச் சாயக்காரர்கள் பயன்படுத்தும் கலவை. இது மேற்பரப்பிலுள்ள துவாரங்களை அடைப்பதற்கு முதல் சாயமாகப் பூசப்படுகிறது.

**Principle of moments:** *(பொறி.)* நெம்புதிறன் விதி: "ஒரு புள்ளியைச் சுற்றிச் சுழலும் பல்வேறு தாக்கு விசைகளின் இயற்கணிதக்கூட்டுத் தொகையானது, அந்தப் புள்ளியில் அவற்றின் கூட்டுவிளைவாக்கத்திற்குச் சமம்" என்னும் விதி.

**Printer's mark:** *(அச்சு.)* அச்சக முத்திரை: அச்சக வாணிக இலச்சினை அல்லது, அடையாள முத்திரை.

**Printing:** அச்சிடுதல்: தாள் முதலியவற்றில் எழுத்துகளையும் படங்களையும் அழுத்திப் பதியவைத்தல்.

**Printing press:** அச்சு எந்திரம்: அச்சிடும் எந்திரம். அச்சகம், அச்சிடும் தொழிற்சாலையையும் இது குறிக்கும்.

**Prism:** *(கணி.)* பட்டகை: மூன்று அல்லது மூன்றிற்கு மேற்பட்ட தட்டையான பக்கங்களையுடைய நீள் உருளை உரு.

**Prismatic colours:** *(வண்.)* பட்டகை வண்ணங்கள்: கதிரவன் ஒளியில் அடங்கியுள்ள சிவப்பு, ஆரஞ்சு, மஞ்சள், நீலம், பச்சை முதலிய வண்ண நிறங்கள்.

**Prismatic compass:** காட்சிக் கருவி: காட்சியின் போதே திசைக் குறிப்புத் தரும் நில அளவைக் கருவி.

**Prismatic powder:** கூழாங்கற் பொடி: அறுகோணப் பிழம்புரு வான வெடிமருந்துப் பொடி.

**Prismoid:** முரண்பட்டகை: முரண் இணைவகப் பக்கங்களையுடைய பட்டகை.

**Process annealing:** பதப்படுத்து முறை: இரும்பை ஆதாரமாகக் கொண்ட உலோகக் கலவை களைக் கட்டுப்படுத்தி ஆறவைத் தல் மூலமோ, நன்கு சூடாக்கி மெல்ல ஆறவிடுவதன் மூலமோ கடும் பதப்படுத்தும் முறை.

**Process or chemical metallurgy:** செய்முறை அல்லது வேதியியல் உலோகக் கலை: உலோகங்களை உருகவைத்து சுத்திகரிக்கும் முறை.

**Product:** (பொறி.) உற்பத்திப் பொருள்: தொழில்துறையில் உற் பத்தி செய்யப்படும் பொருள்களின் அளவு.

**Production:** உற்பத்தி: (1) உற் பத்தி செய்யும் செயல் முறை.

(2) உற்பத்தி செய்யப்படும் அல் லது தயாரிக்கப்படும் பொருள்.

(3) தொழிற்சாலைகளில் உற்பத்தி செய்யப்படும் பொருள்களின் அளவு.

**Production engineer** (பொறி.) உற்பத்திப் பொறியாளர்: உற்பத்திப் பிரிவினைப் பராமரித்து வருவதற் குப் பொறுப்பாகவுள்ள பொறியா ளர். மிகத் திறம்பட்ட உற்பத்தி முறைகளைக் கையாளும் வகையில் கருவிகளை இயக்குவதற்கும், கருவிகளை வடிவமைப்பதற்கும் இவர் பொறுப்பாக இருப்பார்.

**Productivity:** உற்பத்தித் திறன்: ஆள்பலம், மூலப்பொருள்கள், எந் திரங்கள் போன்ற பொருளாதார ஆதாரப் பொருள்களையும், ஊழியங்களையும் மிகத் திறமை யோடு பயன்படுத்தும் திறன்.

**Profile:** உருவரைப் படிவம்: பக்க வாட்டான உருவப் படிவம் அல் லது உருவரை.

**Profileometer:** தளப் பரப்பு அளவு மானி: ஒரு தளப்பரப்பின் வழவழப்பினை அல்லது சொர சொரப்பினை அளவிடுவதற்குப் பயன்படும் மிகத் நுல்லியமான தொரு கருவி. இதில் வைரமுனை யுடைய வரைபடக்கரம் தளப் பரப் பில் நகரும்போது, அந்தக்கரம் ஒரு மின்னியல் களத்தில் ஒரு சுருளை நகர்த்துவதன் மூலம், தளப் பரப்பின் சொரசொரப்புக் கேற்ப ஒரு மின்னோட்டத்தை குறி யீட்டு ஊசி சுட்டிக் காட்டுகிறது.

**Profiling machine:** (எந்.) உரு வரை வெட்டு எந்திரம்: உருவரை படிவத்தைப் வெட்டுவதற்குப் பயன்படுத்தப்படும் ஒருவகை எந் திரம். இது சிலவகை வேலைப் பாடுகளுக்கு மிகவும் பயனுள்ள எந் திரம்.

**Progression, arithmetical:** (கணி.) அளவு வளர்ச்சி: கணிதத் தில் கூட்டல் அல்லது கழித்தல்

மூலமாக ஒரு எண் வரிசை கூடிக் குறைந்துவரும் பாங்கு.

**Progression, geometrical:** பெருக்க வளர்ச்சி: நிலையெண்ணால் பெருக்கி வகுத்துக் கொண்டு போகும்போது பெருக்க ஏற்ற இறக்கத் தொடர்புப் பாங்கு.

**Progression, hormonic:** இசை இயைபுப் படிமுறை வளர்ச்சி: கீழ்வாய்ப் படிமுறை வரிசையின் கணக்கியல் மேல்வாய் மானப் பாங்கு.

**Projection:** எறிவுப்படம்: தளத்திலிருந்து தளத்தின்மீது படிவிக்கப்படும் எறிவுப்படம்.

**Projection receiver:** எறிவுப்பட வாங்கி: தொலைக்காட்சியில் ஒளியியல் எறிவுப்படத் தத்துவத்தை உள்ளடக்கிய படம் வாங்கிப் பெட்டி.

**Projection welding:** எறிவுப் பற்றவைப்பு: இரு தளப்பரப்புகளுக்கிடையே வெப்பத்தை ஒரு வரம்புக்குள் ஒருமுகப்படுத்தி எறிவுமூலம் பற்றவைப்பு செய்யும் முறை.

**Projector:** ஒளி எறிவுக் கருவி: ஒளி எறிவுக்கருவி அமைவு.

திரைப்பட ஒளியுருப்படிவுக் கருவி.

**Prony brake:** (*மின்.*) தலைகீழ் தடை: ஒரு தனிவகைக் கப்பித் தொகுதி, தடை இணைப்பு, ஒரு தராசு ஆகியவை கொண்ட ஒரு எந்திர சாதனம். இது ஒரு மின்னோடியுடன் இணைக்கப்பட்டிருக்கும். பாரம் ஏற்றியிருக்கும்போது இது உண்டாக்கும் குதிரைத் திறனை இது அளவிட்டுக் காட்டுகிறது.

**Proof:** (*அச்சு.*) மெய்ப்பு; அச்சுப்படி: பிழைதிருத்தம் செய்வதற்கான அச்சுப்படி அல்லது மெய்ப்புப்படி.

**Proof plane:** (*மின்.*) மின்னூட்ட அளவி: காப்புறையிட்ட கைப்பிடியின்மேல் மின்கடத்திப் பொருளின் மின்னூட்ட அளவு கருவி.

**Proof-reader:** (*அச்சு.*) பிழை திருத்துவர்: அச்சுப் பார்வைப்படி மெய்ப்புத் திருத்துபவர்.

**Propeller:** முற்செலுத்தி: கப்பல்களை முற்செலுத்த உதவும் இயக்குறுப்பு.

விமானத்தில் நீர் அல்லது நீராவியால் சுழலும் பொறி உருளையுடைய சுழல் விசிறி.

**Propeller-blade angle:** (*வானூ.*) முற்செலுத்து அலகு கோணம்: ஒரு சுழல் விசிறியின் நாண்வரைக்கும் சுழல் விசிறிச் சுழற்சி அச்சுக்குச் செங்குத்தாகவுள்ள ஒரு தளப் பரப்புக்குமிடையிலான கூர்ங்கோணம். இதனை "அலகு கோணம்" என்றும் கூறுவர்.

**Propeller efficiency:** (*வானூ.*) முற்செலுத்தித் திறம்பாடு: உந்து ஆற்றலுக்கும் முற்செலுத்தியின் உட்பாட்டு ஆற்றலுக்குமிடையிலான விகிதம்.

**Propeller hub:** (வானூ.) முற்செலுத்திக் குடம்: விமானச் சூழல் விசிறியின் மையப்பகுதி: இது இடைத்தொலைவு அளவினை மாற்றும் எந்திர அமைப்பு உடையது. இதனுடன் அலகுகளும் இணைக்கப்பட்டிருக்கும்.

**Propeller rake:** (வானூ.) முற்செலுத்திச் சாய்வுகோணம்: விமானத்தில் ஒரு சுழல் விசிறி அலகின் மையப்பகுதியை அச்சுக்குச் செங்குத்தான தளப்பரப்புடன் இணைக்கும் கோட்டின் சராசரிக் கோணம்.

**Propeller root:** (வானூ.) முற்செலுத்திக் கொளுவி: புடைப்புப் பகுதியின் அருகிலுள்ள முற்செலுத்தி அலகின் பகுதி.

**Propeller shaft:** (தானி.) முற்செலுத்திச் சுழல் தண்டு: இதனை "இயக்குச் சுழல் தண்டு" என்றும் கூறுவர். உந்துவிசையை பின்புற இருசுக்கு அனுப்பிவைப்பது இது தான்.

**Propeller thrust:** (வானூ.) முற்செலுத்தி உந்துவிசை: விமானத்தின் முற்செலுத்தியின் முன்னோக்கி உந்தித்தள்ளும் திறன்.

**Propeller tipping:** (வானூ.) முற்செலுத்திச் சரிவுக் காப்பு: முற்செலுத்தி அலகின் நுனியிலுள்ள, சாய்ந்து விழுவதைத் தடுக்கும் பாதுகாப்பு அமைவு.

**Propeller turbine:** (வானூ.) முற்செலுத்து உருளை: நீர் அல்லது நீராவியால் சுழலும் உருளையுடைய விமான எந்திரம்.

**Proportional dividers:** வீத அளவுக் கவராயம்: வரைபடங்கள் வரைவதற்குப் பயன்படும் கவராயம். இதில் இரு முனைகளுடைய கால்கள் ஒரு சுழல் முனையுடனும் திருகுடனும் இணைக்கப்பட்டிருக்கும். இந்தச் சுழல் முனையையும் திருகையும் கையாண்டு கவராயத்தை வேண்டிய நிலைக்குக் கொண்டுவந்து அளவிடலாம்.

**Proportional limit:** (உலோ.) வீத அளவு வரம்பு: உலோகங்களில், நீட்சியடைவது அல்லது பாரத்தின் வீத அளவில் இருப்பது அற்றுப் போகும் நிலை.

**Proportionately:** வீத அளவு: வடிவளவு, பெறுமானம், முக்கியத்துவம் ஆகியவற்றுக்கு உரிய சரிசமவீத அளவில் இருத்தல்.

**Propulsive efficiency** (வானூ.) உந்தெறிவுத் திறன்: விமானத்தில் உண்மையான உந்து திறனுக்கும் முற்செலுத்தத்திற்கு மிடையிலான விகிதம்.

**Proscenium:** அரங்கு முகப்பு: நாடக அரங்கின் முன்பகுதி, திரைக்குமுன்புள்ள மேடைக்கு மேலுள்ள கவான் பகுதியையும் இது உள்ளடக்கும்.

**Protein:** (வேதி.) புரதம்: கார்பன், ஆக்சிஜன், ஹைட்ரஜன், நைட்ர

ஜன், கந்தகம், சில சமயம் பாஸ்பரம், இரும்பு முதலிய உயிர்ச் சத்துகள் கொண்ட ஊட்டப் பொருள், எடுத்துக்காட்டு முட்டை வெண்கரு.

**Proton:** (*வேதி.*) புரோட்டான்: அணுவின் கருவினில் உள்ள நேர் மின்மம்.

**Protractor:** கோணமானி: கோணங்களை அளவிடுவதற்கும், காகிதத்தில் கோணங்களை வரைவதற்கும் பயன்படும் ஒரு கருவி. இதுபடம் வரைவதில் பயன்படுகிறது.

**Prussian blue:** (*வேதி.*) அடர் நீலம்: $(Fe_4(Fe(CN)_6)_3$. அய உப்பில் பொட்டாசியம் அய சயனைடு வினைபுரிவதன் மூலம் இது தயாரிக்கப்படுகிறது. அடர்ந்த நீல வண்ண வீழ்படிவாகக் கிடைக்கிறது, சாயப் பொருளாகவும், காகிதத்திற்கு வண்ண மூட்டவும் பயன்படுகிறது.

**Psychrometer:** ஈர உணக்கவெப்பமானி: ஈரக்குமிழுடன், ஈரம் நீக்கிய குமிழும் உடைய ஒருவகை வெப்பமானி. ஆவியாகும் வேகத்தை அளவிடுவதற்கு உதவுகிறது.

**Puddle:** (*பொறி.*) கலக்குதல்: (1) தேனிரும்பாக்குவதற்கு உருகிய இரும்பைக் கலக்குதல்.

(2) களிமண்ணையும் மணலையும் நீரோடு கலந்து பிசைந்து குழை சேறாக்குதல்.

**Pugging:** (*க.க.*) ஒலித்தடுப்பான்: ஒலி ஊடுருவாகாதவாறு தரைத் தளங்களிடையே வைக்கப்படும்களிமண், வாள்தூள், சாந்து முதலியவற்றின் கலவை.

**Puller:** (*தானி.*) இழுவைக்கருவி: இறுகப் பொருந்திய பாகங்களைப் பிரித்தெடுப்பதற்குப் பயன்படும் எந்திர அல்லது நீரியல் சாதனம். எடுத்துக்காட்டு; சக்கர இழுவை; பல்லிணை இழுவை.

**Pulley:** (*எந்; பொறி.*) கப்பி: பாரங்களை இழுப்பதற்குப் பயன்படும் உருளை அல்லது கப்பித் தொகுதி.

**Pulley lathe:** (*எந்.*) கப்பிக் கடைசல் எந்திரம்: நேரான அல்லது முனையுள்ள முகப்பினைக் கப்பிகள் மீது திருப்புவதற்குப் பயன்படும் ஒருவகைக் கடைசல் எந்திரம்.

**Pulley stile:** (*க.க.*) கப்பிக் கடவேணி: கதவு, சுவர், வேலி முதலியவற்றில் எடைகளை ஒரு புறம் ஏற்றி மறுபுறம் இறக்குவதற்காகக் கப்பித் தொகுதிகள் பொருத்தப்பட்டுள்ள நிலை வரிச் சட்டம்.

**Pulley tap:** (*எந்.*) கப்பி நாடா: மிக நீண்ட எந்திரத்தண்டு உடைய ஒரு நாடா. இது கப்பிகளின் குடத்தில் திருகிழைத் துளைகளைப் பொருத்துவதற்குப் பயன்படுகிறது.

**Pull-out:** (*வானூ.*) விளிம்பொட்டு இதழ்: ஒத்துப் பார்வையிடுவதை

எளிதாக்கும் பொருட்டுச் சுவடித் தாள்களின் முகப்பு விளிம்பிலிருந்து விரியும் பக்கம்.

**Pulp:** காகிதக்கூழ்: காகிதம் செய்வதற்கு மரத்துண்டுகள், கந்தைகள் முதலியவற்றைக் கொண்டு செய்யப்படும் ஒரு கலவைக் கூழ்.

**Pulpit:** (க.க.) உரை மேடை: திருக்கோயில் சமய உரை மேடை.

**Pulsating current:** (மின்.) துடிப்பு மின்னோட்டம்: மின்னோட்ட அளவு ஒரே அளவாக இல்லாமல், ஒரே திசையில் மின்னோட்டம் பாயக்கூடிய நேர் மின்னோட்டம்.

**Pulsation welding:** துடிப்புப் பற்றவைப்பு: அழுத்தம் கொடுக்காமல் அல்லது மின் முனைகளின் இடங்களை மாற்றாமல் பற்றவைப்பு மின்னோட்டத்தை ஒன்றுக்கு மேற்பட்ட தடவை இடையீடு செய்து தைப்பு முறையில் பற்றவைப்பு செய்யும் முறை.

**Pulse-jet engine:** (வானூ.) துடிப்புத் தாரை எஞ்சின்: ஒரு வகை அழுத்தத் தாரை எஞ்சின் இதில் உள்ளெரிதல் இடைவிட்டு நடைபெறும். இதனால் தொடர் வெடிப்புகள் மூலம் உந்துகை உண்டாகிறது. இதனை 'துடிப்புத் தாரை' என்றும் கூறுவர்.

**Pulsometer:** (பொறி.) வளிநீர் குழல்: நீராவியைக் கவான் குழாய் வழி கொண்டு செல்வதற்கான வளி நீர் குழாய். இது பெரும்பாலும் நீருக்கடியில் கடைகால் போட உதவும் நீர் புகாக்கூண்டு அமைவிலிருந்து நீராவியைக் காலி செய்வதற்குப் பயன்படுகிறது.

**Pumich:** மாக்கல்: மெருகேற்றுவதற்குப் பயன்படும் மாக்கல் வகை. இதனைப் பொடியாக்கிப் பயன்படுத்துவர்.

**Pump:** (எந்.) இறைப்பான்: திரவங்களைக் காற்றழுத்த ஆற்றல் மூலம் மேலெழச் செய்யும் விசைக் குழாய்.

**Punch:** (எந்.) தமருசி: தோல், உலோகம், தாள் முதலியவற்றில் துளையிடுவதற்கு எஃகினால் செய்த ஒரு கருவி.

**Punching:** துளையிடுதல்: தாள், தோல், உலோகம், முதலியவற்றில் தமருசியால் துளையிடுதல்.

**Punch press:** வார்ப்பழுத்துப் பொறி: வார்ப்புருவத் தாய்ப் படிவ அழுத்தும் பொறி.

**Punctuation:** (அச்சு.) நிறுத்தக் குறியீடு: வாக்கியங்களைச் சொற்றொடர்களாகப் பகுத்துக் காட்டுவதற்குப் பயன்படும் நிறுத்தக் குறியீடுகள்.

**Purlin:** (க.க.) உத்தர நெடுவிட்டம்: தாங்கணைவுகளுக்கிடையாகவும், கூரை உத்தரங்களுக்கு ஆதாரமாகவும் அமைக்கப்படும் தாக்கமைவுக் கட்டுமானம்.

**Push button:** (மின்.) மின்விசைக் குமிழ்: ஒரு சிறிய பொத்தானை அல்லது குமிழை அழுத்திக் கொண்டிருக்கும் வரை ஒரு மின்சுற்று வழியை நிறைவு செய்கிற ஒரு சாதனம்.

**Push-button starter:** (தானி.) அழுத்து பொத்தான் இயக்கி: உந்து ஊர்தியை ஒரு பொத்தானை அழுத்துவதன் மூலம் இயக்கத் தொடங்குவதற்குப் பயன்படும் சாதனம். இது காலால் இயக்கும் விசைக்குப் பதிலாகப் பயன்படுத்தப்படுகிறது.

**Push-button switch :** (மின்.) அழுத்த பொத்தான் விசை : மின்னியல் இணைப்புகளை ஒரு பொத்தானை அழுத்திதொடர்பேற்படுத்தவும் இன்னொரு பொத்தானை அழுத்தி இயக்கவும் பயன்படும் விசை.

**Pusher airplane :** (வானூ.) உந்து விசை விமானம் : முதன்மை ஆதார மேற்பரப்புகளுக்குப் பின்னால் முற் செலுத்தியை அல்லது முற்செலுத்திகளை உடைய ஒரு வகை விமானம்.

**Pusher propeller :** (வானூ.) உந்துவிசை முற்செலுத்தி : விமானத்தில் எஞ்சினின் பிற்பகுதியில் யில் அல்லது முற்செலுத்தி சுழல் தண்டின் பின் நுனியில் பொருத்தப் பட்டுள்ள முற்செலுத்தி அல்லது சுழல் விசிறி.

**Putlog :** (க.க.) சாரக்கட்டை : சாரப்பலகைகளைத் தாங்குவதற்கான குறுகிய வெட்டுமரத்துண்டு.

**Putty :** (வேதி; க.க.) மெருகு சுண்ணத்தாள் : கண்ணாடியை அல்லது உலோகத்தை மெருகிடுவதற்கான சுண்ணத்தாள் வகை.

**Puzzolan or slag cement :** எரிமலைச்சாம்பற்காரை : எரிமலைச் சாம்பல் அல்லது கொல்லுலைச் சாம்பற் கட்டி மூலம் தயாரிக்கப் படும் சீமைக்காரை அல்லது சிமென்ட். இது சீமைச் சுண்ணாம்பு, களிமண் ஆகியவற்றால் செய்யப்படும் சீமைக்காரை போல் அத்துணை வலுவுடையதன்று, இது பெருமளவில் பயன்படுத்தப் படுவதுமில்லை.

**Pyramid :** (கணி.) கூம்பு வடிவம்: ஒரு சமதள பல கோண முக் கோணத்தை ஆதாரமாகவும், பொதுவான முகட்டு முனையும் உடைய கூர்ங் கோபுர வடிவம்.

**Pyridine** (வேதி.) பைரிடின் : காசநோய் மருந்தாகப் பயன்படும் எலும்பு நெய் வடிம மூலப் பொருள். இது மஞ்சள் நிறமுடையது. இதனை ஆல்கஹாலின் இயல்பு நீக்கியாகவும் பயன்படுத்துகின்றனர்.

**pyrite :** (வேதி.) பைரைட் : அயச் சல்பைடுகளில் இயற்கையாகக் கிடைக்கும் பித்தளை போன்ற மஞ்சள் நிறப்பொருள். இதனை "முட்டாளின் தங்கம்" என்றும் "கந்தக வைரம்" என்றும் கூறுவர்.

**Pyrographing :** செதுக்கு வேலை: சூடாக்கப்பட்ட கருவியினால் தோல் அல்லது மரத்தின் மீது தீட்டப்பட்ட செதுக்கு வேலை.

**Pyrolusitc :** (உலோ.) பைரோ லூசைட் : முக்கிய மாங்கனீஸ் தாதுப்பொருள். பல நாடுகளில் இரும்பு போன்ற கரு நிறத்தில் கிடைக்கிறது. இது உலோக மாங்கனீஸ் தயாரிக்கப் பயன்படுவ துடன், மின்கலங்கள், வண்ண உலர்த்திகள் ஆகியவற்றிலும் பயன்படுகிறது.

**Pyrometer :** (எந்; பொறி.) உயர் வெப்பமானி : உலைகளில் உள்ளது போன்ற மிக உயர்ந்த வெப்ப நிலைகளை அளவிடு வதற்குப் பயன்படும் ஒரு கருவி.

**Pyroxylin :** (வேதி.) பைரோக் சிலின் : வண்ணநெய், செயற்கைத் தோல் ஆகியவற்றிற்கு வெறியத் தில் தோய்த்துப் பயன்படுத்தப் படும் மரச்சத்து வெடியகிப் பொருள். இது எளிதில் தீப்பற்றக் கூடியது; வெடிக்கத் தக்கது. ஒளிப்படச் சுருள்கள் தயாரிப்பதில் பயன்படுகிறது.

# Q

**Quad :** (அச்சு.) இடஅடைப்பு எழுத்துரு : அச்சுத் துறையில் இட அடைப்புக் கட்டையாகப் பயன் படும் எழுத்துரு. இது அச்சு எழுத் துருவின் உயரத்தைவிடக் குறை வான உயரத்துடன் இருக்கும். இது அச்சுவரி நீளங்களின் மடங்கு களாக வார்க்கப்படும். பத்தி களில் முடிவில் வரிகளிடையே இடைவெளியை அகலமாக்குவதற் கும், ஓர இடம் விடுவதற்கும் இது பயன்படுகிறது.

**Quadrangle :** (க.க.) நாற்கட்ட ரங்கம் : கல்லூரி விளையாட்டுத் திடல் போன்று நாற்புறமும் கட்டி டங்கள் சூழ்ந்த சதுரமான அல்லது நாற்கட்டமான இடப்பரப்பு.

**Quadrant :** (1) கால் வட்டம் : செங்கோண ஆரங்களுக்குட்பட்ட வட்டப்பகுதி; வட்டக்காற் சுற்று வரை.

(2) கோண மானி : உயரங்களை அளவிடப் பயன்படும் கருவி.

**Quadratic equations :** (கணி.) இருவிசைப்படிச் சமன்பாடு : அறி யப்படாத ஓர் அளவின் இருமடி வர்க்கத்தை மட்டும் கொண்டுள்ள ஒருசமன்பாடு, உருக்கணக்கியலில் இரு விசைப் படிமை சார்ந்துள்ள சமன்பாடு.

**Quadrilateral :** நாற்கரம் : நான்கு பக்கங்களையும் நான்கு கோணங்களையும் உடைய வரை வடிவம்.

**Quadruplane :** (வானூ) நாற் சிறகு விமானம் : ஒன்றன் மேல் ஒன்றாக நான்கு தொகுதி சிறகு களை உடைய ஒரு வகை விமானம்.

**Quadruple - expansion engine:** நான்மடி விரிவாக்க எஞ்சின்: நீராவி நான்கு மடங்காக விரிவாக்கமாவதற்கு இடமளிக்கும் ஒரு வகைக் கூட்டு எஞ்சின், முதலில் ஓர் உயர் அழுத்த நீள் உருளையிலும், பின்னர் அடுத்தடுத்து மூன்று குறைந்த அழுத்த நீள் உருளைகளிலும் இந்த விரிவாக்கம் நடைபெறும். இதில் தொடக்கத்தில் நீராவி அழுத்தம் குறைந்தது 200 பவுண்டு அளவுக்கு இருக்க வேண்டும்.

**Qualitative analysis:** (வேதி.) பண்பியல் பகுப்பாய்வு: வேதியியல் பொருளில் என்னென்ன தனிமங்கள் அல்லது கூறுகள் எந்த அளவுகளில் அடங்கியுள்ளன என்பதை அறிவதற்கான பகுப்பாய்வு.

**Quality:** தரநிலை: (1) பண்புத் தரம்.

(2) தனி இயல்பு அல்லது குணம்.

**Quantitative analysis:** (வேதி.) அளவைப் பகுப்பாய்வு: ஒவ்வொரு தனிமத்தின் அல்லது கூறின் மொத்த அளவினைக் கண்டறிவதற்கான பகுப்பாய்வு.

**Quantity:** அளவு: கூடவோ குறையவோ கூடிய பொருண்மை, கன அளவு, எண்ணிக்கை போன்ற இயல்பின் அளவீடு.

**Quarry:** (1) கற் சுரங்கம்: உடைத்தல், வெடித்தல் மூலம் கற்கள் எடுக்கப்படும் தொடுகுழி.

2) சன்னல் கண்ணாடி: நூல்களை வைப்பதற்கான சன்னல் முகப்புகளையுடைய 18ஆம் நூற்றாண்டு நூல் பேழை.

**Quarry-faced masonry:** (க.க.) பாவுகல் முகப்புக் கட்டுமானம்: கற்சுரங்கத்திலிருந்து எடுத்து, மெருகேற்றப்படாமல் அப்படியே பதித்த கல் முகப்புடைய கட்டுமானம்.

**Quarry tile:** (க.க.) உலா மேடை ஓடு: எந்திரத்தினால் செய்யப்பட்ட, மெருகிடப்படாத ஓடு. இது $\frac{3}{4}''$ அல்லது அதற்கு மேற்பட்ட கனமுடையதாக இருக்கும்.

**Quart:** முகத்தலளவை அலகு: கால் காலன் அல்லது இரண்டு பைண்டு அளவு. கால்காலன் அளவு கலம்.

**Quarter:** கால் பங்கு: ஒரு பொருளின் நான்கு சமமான பகுதிகளில் ஒன்று. கவராயத்தின் நான்கு முக்கிய முனைகளில் ஒன்று.

**Quartile:** கோள் இடைத்தொடர்பு: ஒன்றுக்கொன்று 90° இடைத்தொலைவுடைய இரு கோளங்களிடையிலான இடைத்தொடர்பு.

**Quarto:** (அச்சு.) நான்கு மடித்தாள்: நான்கு தாள்களும், எட்டுப் பக்கங்களும் அமையும் வகையில் இரு தடவை மடித்தாளின் அளவு.

நான் மடித்தாள் அளவுள்ள ஏடு.

**Quartz:** (கனிம.) படிகக்கல்: கன்ம ஈருயிரகையும் சிலசமயம் தங்கமும் கலந்த கனிமப் பொருள் ($SiO_2$).

இது கடினமானது; நிறமற்ற படிக வடிவிலானது.

**Quarzite:** (மண்.) படிகக்கல் தாது: உருத்திரிபடைந்த மணற்பாறை. பெரும்பாலும் படிகக் கல்கொண்ட அடர்த்தியான குருணை வடிவக் கல்.

**Quaternary steel:** (உலோ) நாற் தனிம எஃகு: இரும்பு, கார்பன், மற்றும் இரு சிறப்புத் தனிமங்கள் அடங்கிய ஒருவகை எஃகு உலோகக் கலவை.

**Quaternion:** நான்கன் தொகுதி: ஒரு தடவை இரண்டாக மடித்த நான்கு தாள்களின் தொகுதி.

**Quatrefoil:** (க.க.) நாற்கதுப் பணி: நான்கு இலை மலர் வடிவத்தில் செய்யப்படும் அணிவேலைப் பாடு.

**Queen closer:** (க.க.) அரைச் செங்கல்: (க.க.) செங்கல்லை நீளவாக்கில் இரண்டாக வெட்டிச் செய்த செம்பாதிச் செங்கல்;

**Queen truss:** (க.க.) அரசித் தாங் கணைவு: செங்குத்தான இரு கட்டுக் கம்பங்களுடன் கட்டமைப்பு செய்த ஒரு தாங்கணைவு. ஒரே யொரு கட்டுக்கம்பம் உடைய அரசுத் தாங்கணைவிலிருந்து இரு வேறுபட்டது.

**Quenching:** (எந்.) குளிர்விப்பு: எஃகைப் போதிய அளவு கெட்டிப் படுத்துவதற்காகச் சூடான எஃகை நீர், எண்ணெய் அல்லது வேறு திரவங்களில் நனைத்துக் குளிர்வித்தல்.

**Quenching oils:** குளிர்விப்பு எண்ணெய்: சூடாக்கிக் குளிர்வித்துக் கெட்டிப்படுத்துவதற்குப் பயன்படுத் தப்படும் எண்ணெய்கள். மீன் எண்ணெய் இதற்குப் பெரிதும் பயன்படுத்தப் படுகிறது. கனிம மீன், தாவர, விலங்கு எண்ணெய்கள் கலவைசெய்யப்பட்டு வாணிகப் பெயர்களுடன் விற்பனை செய்யப் படுகின்றன.

**Quick change:** (எந்.) துரித மாற்றம்: கடைசல் எந்திரங்களில் பல்லிணைகளை அகற்றி மாற்றுவதற்குப் பதிலாக நெம்பு கோல்களை இடம் பெயரச் செய்வதன் மூலம் ஊட்டத்தை மாற்றுவதற்கு அனுமதிக்கும் வகையில் பல்லிணைகளை அமைத்தல்.

**Quicklime:** (க.க.) நீற்றாத சுண்ணாம்பு: தூய்மையான சுண்ணாம்புக் கல்லிலிருந்து தயாரிக்கப் பட்ட நீற்றாத சுண்ணாம்பு.

**Quicksand:** உதிர்மணல்: ஒரு கணமான பொருளின் அளவுக்கு நீருடன் கலந்த உதிரிமணல்.

**Quicksilver:** (உலோ.) பாதரசம்: பாதரசம் என்ற திரவ உலோகம். முகம் பார்க்கும் கண்ணாடிகளின் பின்புறம் பூசப்படும் வெள்ளிய ரசக் கலவை.

**Quill:** (எந்.) புழைத்தண்டு: உட் புழையுள்ள சுழல்தண்டு கதிர்.

**Quill gear:** (எந்.) புழைப்பல்லிணை ஒரு புழைத்தண்டில் அல்லது குழவில் வெட்டப்பட்ட ஒரு பல்லிணை அல்லது துளை நுனி.

**Quire:** இருபத்து நான்கு மடிதாள் இருபத்து நான்கு கொண்ட எழுதுதாள்மடி. ஒரு தடவை மடித்து 8 ஆக்கப்பட்ட தாள் நான்கு தாள் தொகுதி.

**Quirefold:** மடிதாள்: ஒருதடவை மடித்து 8 ஆக்கப்பட்ட நான்கு தொகுதி.

# R

**Rabbet:** (மர.வே.) மூலைப் பொருத்துவாய்: இசைப்பு வாய் மூலம் இணைப்பதற்கு விளிம்பில் செய்யப்படும் இசைப்பு வாய் வெட்டு.

**Race rotation:** (வானூ.) இயங்கு சுழற்சி: விமானத்தில் முற்செலுத்தி மூலமாக அல்லது அதன் விளைவாகச் செல்லும் காற்றோட்டத்தின் மீது முற்செலுத்தியின் இயக்கத்தினால் உண்டாகும் சுழற்சி.

**Race May:** (மின்.) புழைவழி: காப்புக்குழாய், வார்ப்படக் குழாய் போன்ற உட்புழையுடைய பொருள்களைக் குறிக்கும் சொல். இவை பெரும்பாலும் மறைவாக இருக்கும். இவற்றின் வழியாக மின் கம்பிகள் ஒரு வெளிச் செல் வழியிலிருந்து இன்னொரு வழிக்குக் கொண்டு செல்லப்படுகின்றன.

**Rack:** அழிச்சட்டம்: 1) பொருள்களை வைப்பதற்கான கொள்கலச் சட்டம்.

(2) பற்கள் பொளிந்த கம்பி அல்லது சட்டம்.

(3) அச்செழுத்து அடுக்குப் பலகைகளை வைப்பதற்குப் பயன்படும் உலோகத்தாலான அல்லது மரத்தினாலான சட்டம்.

**Radar:** ராடார் (தொலைநிலை இயக்கம்: ஆற்றல்வாய்ந்த மின்காந்த அலை அதிர்வியக்கமூலம் தன்னிலையும், விமானங்கள், கப்பல்கள், கடற்கரைகள் முதலியவற்றின நிலைகளும் கண்டறிவதற்குரிய கருவி அமைவு.

**Radial:** மையவிலக்கு: மையத்திலிருந்து அல்லது இருசிலிருந்து புற நோக்கி விலகிச் செல்கிற அமைவு.

**Radial arm:** (எந்.) ஆரைக்கரம்: இயங்கும் பிடிமானம். இது ஆரை: துரப்பண எந்திரத்தில் துரப்பணச் சேணத்தைத் தாங்குகிறது.

**Radial axle:** (எந்.) ஆரை இருசு: பாதை வளைவுக்குத் தக்கபடி அமைந்த இருசு.

**Radial bar:** ஆரைச் சலாகை: இது ஒரு மரச்சலாகை. இதன் நுனியில் ஒரு பென்சில் இணைக்கப்பட்டிருக்

கும். இதனைக்கொண்டு பெரிய வளைவுகளை வரையலாம்.

**Radial drilling machine** : (*எந்.*) ஆரைத் துரப்பண எந்திரம்: ஒரு கனரகத் துரப்பண எந்திரம். துரப்பணம் செய்யப்படும் பொருளை நகர்த்தாமல் துரப்பணத்தின் நிலையைச் சரி செய்யக்கூடிய வகையில் இது அமைக்கப்பட்டிருக்கும்.

**Radial engine** : (*வானூ.*) ஆரை எஞ்சின்: நிலையான நீள் உருளைகளைக் கொண்ட எஞ்சின். இந்த நீள் உருளைகள் ஒரு பொதுவான வளைவுச் சுழல் தண்டினைச் சுற்றி ஆரை வடிவில் அமைக்கப்பட்டிருக்கும்.

**Radiant heat**: (*இயற்.*) தாவு வெப்பம்: மையத்தினின்றும் நாற்றிசையிலும் வெப்பம் தாவிச் சென்று பரவுதல்.

**Radiating surface** : கதிர்வீச்சுப் பரப்பு: வெப்பக் கதிர்களை வீசிப் பரப்புகிற பரப்பு.

**Rediation**: (*எந். பொறி.*) வெப்பக் கதிர்வீச்சு: வெப்பக்கதிர் வீசிப் பரவுதல்.

அணுக்கதிர்வீச்சு: அணுத் துகள் அல்லது கதிர்கள் மிக வேகமாக வீசிப் பரவுதல்.

**Radiator**: (*எந்.பொறி.*) வெப்பாற்றுப் பொறி: உந்துவண்டிப் பொறியின் வெப்பாற்றும் அமைவு.

**Radiator hose**: (*தானி.*) வெப்பாற்றுப் பொறி நெளிவுக் குழாய்: உந்து ஊர்தியில் வெப்பாற்றுப் பொறியினையும், எஞ்சினையும் இணைக்கும் நெளிவுக் குழாய்.

**Radical**: (*கணி.*) விசை மூல அளவு: எண்களின் வர்க்கமூலம் தொடர்பான அளவு.

மூல உறுப்பு: சேர்மத்தின் அடிப்படைக் கூறாக அமைந்து சேர்மத்தின் இயல்பான வேதியியல் மாற்றங்களின்போது மாறாமலே இருக்கும் தனிமம் அல்லது தனி அணு அல்லது அணுக்களின் கூட்டம்.

**Radio**: (*மின்.*) வானொலி: கம்பியில்லாச் செய்திப் பரப்பு; கம்பியில்லாச் செய்தி வாங்கும் அமைவு; வானொலிப்பெட்டி; வானொலி ஒலி பரப்பு.

**Radioctive**: (*மின்.*) கதிரியக்கமுடைய: பொருள்கள் நேர் மின்னேற்றமும், எதிர் மின்னேற்றமும் உடைய துகள்களை வெளியிடுதல்.

**Radioctivity**: (*வேதி.*) கதிரியக்கம்: ஒருவகை அணு இன்னொரு வகை அணுவாக மாறும்போது ஏற்படும் மாறுதல். இந்த மாற்றத்தின் போது அணுவின் உட்கருவிலிருந்து எரியாற்றல் வெளிப்படுகிறது.

**Radio astronomy** : கதிரியக்க வானியல் :

**Radio broadcasting:** வானொலி ஒலிபரப்பு: செவிப்புலன் ஆற்றலை வானொலி ஆற்றலாக மாற்றி வானொலி அலைகளின் வடிவில் அனுப்புதல்.

**Radio channel:** வானொலி அலை வரிசை: வானொலி, தொலைக் காட்சி அலை அடையாளக் குறியீடுகளை இடையீடின்றி அனுப்பித் தரும் அலை இடைப்பகுதி. இன்றையத் தொலைக்காட்சி வரையளவுகளின்படி, ஓர் அலைவரிசை என்பது 6 மெகாசைக்கிள் அகல் விரிவுடையது.

**Redio communication:** வானொலிச் செய்தித் தொடர்பு: வானொலி ஆற்றல் மூலமாக வாய்மொழிச் செய்தியை அல்லது குறியீட்டுச் செய்தியை அனுப்புதல்.

**Radio compass:** (*வானூ.*) வானொலித் திசை காட்டி: கதிரியக்கத் தத்துவத்தின் மூலம் திசைகளைக் குறித்துக் காட்டும் கருவி. இது வானொலி ஒலிபரப்புப் பெட்டியில் அமைந்திருக்கும். அதை நோக்கியே இதன் முள் திரும்பி இருக்கும். இதன் முள் வடக்குத் திசையை நோக்கி இருக்காது.

**Radio frequency:** (*மின்.*) வானொலி அலைவெண்: வானொலிச் சைகைகளை அனுப்புவதில் பயன்படுத்தப்படும் மின்னலைகளின் அலைவெண். இது ஏறத்தாழ வினாடிக்கு 40,000-க்கும் 30,000,000-க்கும் இடைப்பட்ட அதிர்வுகளைக் கொண்டிருக்கும்.

**Radio goniometer:** சைகை இயக்கமானி: கப்பல்களிலிருந்தும் விமானங்களிலிருந்தும் அனுப்பப்படும் கம்பியில்லாச் சைகைச் செய்திகளிலிருந்து அவை இருக்கும் திசையைக் கண்டுபிடிக்கும் கருவி.

**Radiogram:** கம்பியில்லா ஒலிபரப்புச் செய்தி: வானொலி வாயிலாக அனுப்பப்பட்டு, ஏதோவொரு வழியில் முகவரியாளருக்கு அஞ்சல் செய்யப்படும் செய்தி.

**Radiogrph:** வெயில்மானி: வெயிலின் செறிவையும் வெயில்காயும் நேரத்தையும் பதிவு செய்வதற்கான கருவி.

**Radioisotope:** (*வேதி.*) கதிரியக்க ஓரகத் தனிமம்: கதிரியக்கமுடைய ஒரு தனிமத்தின் வடிவம். இது தனிமத்திற்கு இயற்கையாக அமைந்திருக்கலாம் அல்லது அணுப்பிளப்பு போன்ற வேறு அணுவியல் மாறுதல்கள் மூலம் உண்டானதாக இருக்கலாம்.

**Radiometer:** கதிரியக்கச் செறிவு மானி: கதிரலை இயக்கம் இயக்க ஆற்றலாக மாறுவதைக் காட்டும் கருவி.

**Radio phony:** ஒலிவெப்பநிலை ஒலியாக்கம்: ஒலியலை வெப்பலைகளினால் ஒலியுண்டாக்கும் முறை.

**Radioscopy:** ஊடுகதிர் ஆய்வியல்:

**Radio network:** வானொலி இணைவனம்: ஒரு பொதுவான

நிகழ்ச்சியை ஒலிபரப்பும் நோக்கத்திற்காக அமைக்கப் பட்டுள்ள பல வானொலி நிலையங்களின் தொகுதி.

**Radio phone:** வானொலித் தொலைபேசி: வானொலி மூலமாக குரல் செய்தியை அனுப்புவதற்குப் பயன்படும் கருவி.

**Radio receiver:** வானொலிப் பெட்டி: வானொலி ஆற்றலை ஏற்று கேட்பு ஆற்றலாக மாற்றுவதற்குத் தேவையான சாதனம்.

**Radio sonde:** மீவளி நிலைமானி: வளிமண்டலத்தின் பல்வேறு தளங்களின் அழுத்தம், வெப்பநிலை, ஈர்மை நிலைகளைக் குறித்து ஒலிபரப்புவதற்காக விமானங்களிலிருந்து விமானக் குடை மூலம் இறக்கப்படும் சிறு வானொலிப் பரப்பமைவு.

**Radio station:** வானொலி நிலையம்: வானொலிச் செய்திகளை அனுப்பவும் பெறவும் பயன்படும் கருவி அமைந்துள்ள இடம்.

**Radio-telegram:** வானொலித் தந்தி: கம்பியில்லாத் தந்திமூலம் பெறப்படும் செய்தி.

**Radio-therapy:** ஊடுகதிர் மருத்துவம்: ஊடுகதிர் (எக்ஸ்ரே) கதிரியக்கம் மூலம் நோய்களைக் குணப்படுத்தும் மருத்துவமுறை.

**Radium :** (*வேதி.*) ரேடியம் (கதிரியம்) : தார், வண்டல் திரள்களிலிருந்து பெறப்படும் இயற்கையாகக் கதிரியக்கமுள்ள உலோகத் தனிமம். இது யுரேனியத்தை விட அதிகக் கதிரியக்கம் வாய்ந்தது. யுரேனியம் பெறப்படும் அதே தாதுப் பொருள்களிலிருந்து கிடைக்கிறது.

**Radium - therapy :** ரேடிய மருத்துவம் : கதிரியக்கத்தையோ, அதன் விளைபொருள்களையோ பயன்படுத்தி நோய் தீர்க்கும் முறை.

**Radius :** ஆரை : ஒரு கோளம் அல்லது வட்டத்தின் மையத்திலிருந்து அதன் சுற்று வரைக்கு அல்லது தளப்பரப்புக்குச் செல்லும் ஒரு நேர்கோடு.

**Radius gauge :** (*எந்.*) ஆரை அளவி : மேடான இடை விளிம்புகளையும், வளைவு முனைகளையும் அளவிடுவதற்கான ஒரு கருவி.

**Radius of gyration :** (*பொறி.*) சுழல் ஆரம் : மடிமைத் திருப்புமையை வெட்டுத்தளப்பரப்பினால் வகுப்பதன் மூலம் கிடைக்கும் ஈவின் வர்க்கமூலத்திற்குச் சமமானது.

$$R = \sqrt{\frac{I}{A}} \qquad R^2 = \frac{I}{A}$$

R = சுழல் ஆரம்

I : மடிமைத் திருப்புமை

A : பரப்பளவு

**Radius planer :** (*எந்.*) ஆரை இழைப்புளி : வட்டவரைகள், உந்துஊர்திகளின் இணைப்புகள் முதலியவற்றில் பயன்படுத்தப்படும் ஒரு தனிவகை இழைப்புளி.

**Rail :** தண்டவாளம்: இருப்பூர்தி களுக்கான தண்டவாளம்.

**Rainbow :** வானவில் : வெயில் அடித்துக் கொண்டு மழைத்தூறல் விழும் போது, நீர்த்துளிகளில் ஒளிச்சிதறல் ஏற்படுவதன் காரணமாக சூரியனுக்கு எதிர்த்திசையில் வில் போல் காணப்படும் ஏழு நிறங்களின் தொகுதி. இதில் செங்கரு நீலம், நீலம், ஊதா, பச்சை, மஞ்சள், ஆரஞ்சு, சிவப்பு ஆகிய ஏழு வண்ணங்கள் வரிசையாக அமைந்திருக்கும்.

**Rainbow, secondary:** எதிர் வானவில் : வானவில்லின் உட்புறமோ, வெளிப்புறமோ காணப்படும் தலைகீழான நிறவரிசையுடைய வானவில்.

**Raised printing :** (அச்சு.) புடைப்பு அச்சு முறை : எழுத்துகள் மேல் வந்து முனைப்பாக இருக்கும்படி அச்சிடும் முறை.

**Rake :** (பட்.) சம்மட்டம்: சம மட்டமாக்கப் பயன்படும் கருவி.

**Ram :** (எந்.) தூலப்பொறி : மதிற்சுவர்களைத் தகர்ப்பதற்குரிய உலோகப் பூணிட்ட பெருந்தூலம்.

**Rammer :** (வார்.) திமிசுக் கட்டை : மண்ணை அடித்து இறுக்கும் கருவி.

**Ramp :** (க,க.) கோட்டைச் சாய்தளம் : கோட்டை அரணில் இரண்டு தரைமட்டங்களை இணைக்கும் சாய்தளம்.

**Random :** தொடர்பின்மை : அங்கொன்றும் இங்கொன்றுமான முறைமை. ஒழுங்கற்ற அளவும் வடிவும் கொண்டிருப்பவை.

**Random joints :** தொடர்பற்ற இணைப்புகள் : மேலொட்டுப் பலகையில் அகலம் சமமாக இருக்கிறதா என்பதைக் கவனத்தில் கொள்ளாமல் தொடர்பின்றிச் செய்யப்படும் இணைப்புகள்.

**Random work :** (க.க.) ஒழுங்கற்ற வேலைப்பாடு : ஒழுங்கற்ற முறையில் அமைக்கப்படும் கல் வேலைப்பாடு. ஒருசீராக இல்லாத கற்களைக் கொண்டு ஒரு சுவர் கட்டுதல் போன்ற பணி.

**Range at full speed** (வானூ.) முழுவேக வீச்செல்லை : ஒரு விமானம் மிகச்சிக்கனமான வேகத்திலும் உயரத்திலும் பறக்கும்போது செல்லக்கூடிய உச்ச அளவு தூரம்.

**Rapeseed oil :** கடுகு எண்ணெய்: கடுகிலிருந்து பெறப்படும் கனமான பழுப்பு நிற எண்ணெய். இது மசகெண்ணெயாகவும், எஃகினைப் பதனப்படுத்துவதற்காகவும் பயன்படுத்தப்படுகிறது.

**Rasp :** (எந்.) முரட்டு அரம் : கரடு முரடான பரப்புடைய அரம் போன்ற கருவி.

**Raster :** (மின்.) எலெக்ட்ரான் ஒளிர்வு : படக்குழாய் திரையில் எலெக்ட்ரான் கற்றையை வீசுவதன் மூலம் உண்டாகும் ஒளிர்வு.

**Ratchet :** (எந்.) பற்சக்கரத் தடை: சலாகை மீது அல்லது சக்கரத்தின் மீது அமைந்த பற்களின் இயக்கத்துடன் ஒரு வழி அசைந்து மறு வழித் தடுக்கும் தடையமைவு.

**Ratchet bar :** (எந்.) பற் சக்கரத் தடைச் சலாகை : ஒரு வழித் தடைப் பற்சக்கரத்தில் உள்ளது போன்ற பற்கள் கொண்ட ஒரு நேர்ச் சலாகை. இது எந்திரப் பற்களைத் தடுக்கும் அடை தாழினை ஏற்றுக் கொள்ளும்.

**Ratchat brace :** பற்சக்கரப் பிணைப்புக் கட்டு.

**Ratchet drill :** (எந்.) ஒரு வழித் தடைப் பற்சக்கரத் துரப்பணம் : இது ஒரு நெம்பு கோலுடைய கையால் இயக்கப்படும் ஒரு துரப்பணம். இதன் ஒரு முனையில் ஒரு துரப்பணப்பிடி அமைந்திருக்கும். இது ஒரு வழித்தடைப் பற்சக்கரம், அடைதாழ் மூலம் சுழலக்கூடியது.

**Ratchet-wheel:** ஒரு வழித்தடைப் பற்சக்கரம்: ஒரு வழிப் பற்சக்கரத் தடை அமைக்கப்பட்ட சக்கரம்.

**Rated horse power of an engine:** (வானூ.) விசை மானம்: ஒரு குறிப்பிட்ட வகை எஞ்சினின் வேக அளவு கணிக்கப்பட்டிருந்து, அது முழுவேகத்தில் அல்லது ஒரு குறிப்பிட்ட உயரத்தில் அல்லது பெருகிய அழுத்தத்தில் இயங்கும் போது உண்டாகும் சராசரிக் குதிரை விசை.

**Rated revolutions:** (வானூ.) சுழற்சி வேகம்: விசைமானத்திற்கு இணையான சுழற்சிகளின் எண்ணிக்கை.

**Rate of climb:** (வானூ.) ஏறுமுக வேகம்: ஒரு விமானம் காற்றை எதிர்த்துச் செங்குத்தாக ஏறும் வேக வீதம்.

**Rate - of - climb indicator:** (வானூ.) ஏறுமுக வேகமானி; ஒரு விமானம் உயரே ஏறுகிற அல்லது உயரத்திலிருந்து இறங்குகிற வேக வீதத்தைக் காட்டும கருவி.

**Rate of speed:** (எந்.) வேகவீதம்: எந்திர வேலைகளில் வேகவீதம் ஒரு நிமிடத்தில் சுழற்சிகளின் எண்ணிக்கை அல்லது ஒரு நிமிடத்தில் அடி என்ற அளவில் கணக்கிடப் படுகிறது.

**Rating of alternators:** (மின்.) மாறுமின்னாக்கி வேகம்: மாற்று மின்னோட்டம் உற்பத்தி செய்யும மின்னாக்கிகளின் வேகம் கிலோ வாலட்-ஆம்பியர்களில் (KVA) கணக்கிடப்படுகிறது. இது ஆம்பியர் அளவினை மின்னழுத்தத்தின் மடங்குகளாகப் பெருக்கி ஆயிரத்தால் வகுத்துப் பெறப்படுகிறது.

**Ratio:** வீதத் தொடர்பு: ஒன்றோடு ஒன்றனுக்குள்ள அளவை யொட்டிய தொடர்பு.

**Ratio of transformation:** மின் மாற்று வீதம்: ஒரு மின்மாற்றியில் முதனிலைச் சுருளிலுள்ள சுழல்களின் எண்ணிக்கைக்குமிடையிலான வீத அளவு.

**Rawhide:** பதனிடாத் தோல்: பதனிடப்படாத தோல்.

**Rawhide gears:** (எந்.) தோல் பல்லிணை: இறுக்கமாக அழுத்தப்பட்ட பதனிடப்படாத தோல் வட்டுகளினாலான ஓசை எழுப்பாத பல்லிணை.

**Rawhide hammer:** தோல் சுத்தி: பதனிடப்படாத தோல் கொண்டையுடைய கைச்சுத்தி. உலோக உறுப்புகளில் இச் சுத்தியைப் பயன்படுத்தும்போது அந்தஉறுப்புகளில் கீறல்கள் ஏற்படாமல் இருக்கும்.

**Raw material:** மூலப்பொருள்: செய்பொருளுக்குரிய மூல இயற்கைப் பொருள்.

**Rayon:** ரேயான் (மரவிழைப்பட்டு): மரக்கூறினிலிருந்து இயற்றப்படும் செயற்கைப் பட்டு வகை.

**Reactance:** (மின்.)எதிர்வினைப்பு: ஒரு மாற்று மின்னோட்டச் சுற்று வழியில், மின்னோட்டத்தை எதிர்க்காமல், ஆனால் அதற்கும் அதன் மின்னியக்க விசைக்குமிடையிலான நிலைவேறுபாட்டினை உண்டாக்குகிற தடையின் உறுப்பு.

**Reaction:** எதிர் வினை: வேதியியலில் புறத்தாக்குதலால் ஏற்படும் இயல் மாறுபாடு.

**Reaction coil:** எதிர்வினைப்புச் சுருள்:

**Reaction voltage:** எதிர்வினைப்பு மின்னழுத்தம்.

**Reaction engine:** (வானூ.) எதிர்வினைப்பு எஞ்சின் (எதிர்வினைப்பு விசைப்பொறி): ஓர் எஞ்சின் அல்லது விசைப்பொறி வெளியேற்றும் பொருளுக்குத் தனது எதிர்வினைப்பு மூலம் உந்துவிசையை உண்டாக்குகிறது. இந்த எஞ்சின் எதிர்வினைப்பு எஞ்சின் எனப்படும்.

**Reaction turbine:**(வானூ.) எதிர்வினைப்பு விசையாழி: சுழலி அலகுகள் கூம்பலகுகளின் வளையமாக அமைந்த ஒருவகை விசையாழி. இந்த அலகுகளிடையிலிருந்து வெளியேற்றப்படும் திரவத்தின் எதிர்வினைப்பு மூலம் விசையாழி சுழல்கிறது.

**Reactor:**(மின்.) எதிர்வினைப்பான்: மாற்று மின்னோட்டங்களின் ஓட்டத்திற்கு எதிர்ப்பை அளிக்கும் ஒரு சாதனம். பொதுவாக, இரும்பு உள்ளீட்டின் மீதான கம்பிச் சுருள்களைக் கொண்டிருக்கும்.

**Reagent:** (வேதி.) வினையூக்கி: எதிர்த்தாக்காற்றல் மூலம் சேர்மத்தின் பொருட்கூறு கண்டுணர உதவும் பொருள். இது பகுப்பாய்வு வேதியியலில் பயன்படும் பொருள்.

**Rear axle:** (தானி.) பின் இருசு: பல்லிணைகள், இருசுச் சுழல் தண்டுகள், இயங்குபொறி ஆகியவற்றையும் தாங்கிகள், பட்டை வளையங்கள் போன்ற இயக்கு

வதற்குத் தேவையான` துணை உறுப்புகளையும் கொண்ட பின் இருசு.

Reaumur thermometer: (இயற்.) ரோமர் வெப்பமானி: ஐரோப்பிய நாடுகள் பலவற்றில் பயன்படுத்தப் படும். ஒரு வெப்பமானி. இதில் பனிக்கட்டியின் உருகுநிலை 0°; நீரின் கொதிநிலை 80°.

Receiver: (மின்.) செவிக்குழல்: தொலைபேசிச் செய்தியைக் கேட் பதற்கு காதருகே வைத்துக் கேட் கப்படும் கருவி.

(2) ஒலி-ஒலிப்பெட்டி: அலை பரப்பு களை ஒலியாகவோ ஒளியாகவோ மாற்றுவதற்கான அமைவு.

Receptacle: (மின்.) கொள் கலம்: வெண்சுடர் மின் விளக்கினைப் பொருத்துவதற்கான சுவர்க் குதை குழி.

Reciprocating: (எந்.) எதிரெதிர் இயக்கம்: முன்னும் பின்னும் மாறி மாறி இயங்குதல்.

Reconnaissance: முன்னாய்வு: நில அளவைப் பணியில் நில அள வைப் பணியைத் தொடங்குவதற்கு முன்பு நடத்தப்படும் முன்னீடான ஆய்வு.

Recording thermometer: பதிவு வெப்பமானி: வெப்பமாறுதல்களை நிரந்தரமாகப் பதிவு செய்து கொள்ளும் ஒரு வெப்பமானி. இது ஒரு காகிதப் பட்டையில் அல்லது சுருளில் தானாகவே வெப்பநிலை யைப்பதிவு செய்துகொள்ளும்.

Recrystallization: (உலோ.) மறுபடிகமாக்கல்: கெட்டியாக்கப் பட்ட உலோகத்தைக் கட்டுப் படுத்தி ஆறவைத்தல் மூலமா கவோ, நன்கு சூடாக்கி மெல்ல ஆறவிடுவதன் மூலமாகவோ பதப் படுத்தி அதன் இயல்பான பண் பியல்புகளுக்கும், கட்டமைப்புக்கும் மீண்டும் கொண்டுவருதல்.

Rectangle (கணி.) நாற்கரம்: நான்கு பக்கங்களைக் கொண்ட நாற்கட்ட வடிவம். இதன் கோணங்கள் செங்கோணமாக இருக்கும்; எதிர்ப்பக்கங்கள் சம மாகவும் இணையாகவும் இருக் கும். அண்டைப் பக்கங்கள் சம மாக இருக்க வேண்டியதில்லை.

Rectifier: (மின்.) மின்திருத்தி: மாற்றுமின்னோட்டத்தை நேர்மின் னோட்டமாக மாற்றும் கருவி.

Rectfier tube: மின் திருத்திக் குழாய்: மாற்றுமின்னோட்டத்தை நேர்மின்னோட்டமாக மாற்றுவ தற்குப் பயன்படும் ஒரு வெற்றிடக் குழாய்.

Red : சிவப்பு : நிறமாலையில் ஆரஞ்சு நிறத்திற்கும் வெங்கரு நீலத்திற்கும் இடைப்பட்ட அடிப் படை வண்ணம்.

Red brass : (உலோ.) செம்பித் தளை : சிறந்த வார்ப்பட இயல்பும் எந்திர வினைத்திறனும் உடைய உயர்ந்த செப்புப் பித்தளை. இதில்

86% செம்பும், வெள்ளீயம், ஈயம், துத்தநாகம் வெவ்வேறு அளவுகளிலும் கலந்திருக்கும்.

**Red lead :** (வேதி.) வங்கச் செந்தூரம் ; ($Pb_3O_4$) : ஈய மோனாக்சைடை அல்லது காரீயத்தைச் சூடாக்குவதன் மூலம் இது கிடைக்கிறது. கண்ணாடிக்கலம், இரும்பு துருப்பிடிப்பதைத் தடுக்கும் செஞ்சாயம் தயாரிக்கப் பயன்படுகிறது. குழாய் இணைப்புகளைக் கசிவுகளைத் தடுக்கும் பொருளாகவும் பயன்படுகிறது.

**rRed oak :** (பட்.) செங்கருவாலி: வெண்கருவாலியை விடக் கருமையாகவும், முரட்டுக் கரணைகளும் உடைய மரம். எளிதில் உடையக் கூடியது; நுண்துளைகளுடையது. கட்டிடங்களில் உள் அலங்காரத்திற்கும், அறைகலன்கள் தயாரிப்பதற்கும் பயன்படுகிறது.

**Reducer** செறிவு குறைப்பான் : ஒளிப்பட மறிநிலைத் தகட்டின் செறிவினைத் தளர்த்த உதவும் பொருள்.

**Reinforcement :** (குழை.) வலியூட்டும் பொருள் : பிளாஸ்டிக் பொருளுக்கு வலிவும், விறைப்பும அளிக்கக் கூடிய பொருள். இவை பெரும்பாலும் கண்ணாடி இழை உடையதாக இருக்கும். பிசின் இழை, நாரிழை, கல்நார் போன்ற பொருள்களும் இதற்குப் பயன்படுகிறது.

**Reinforcing steel:** (பொறி.) வலியூட்டும் எஃகு : கான்கிரீட் கட்டுமானத்தில் அதிக வலியூட்டுவதற்காகப் பயன்படுத்தப்படும் எஃகுச் சலாகைகள்.

**Relative humidity :** சார்பு ஈரப்பதன்: ஒரு குறிப்பிட்ட வெப்பநிலையில், காற்றில் இருத்தி வைத்துக் கொள்ளக்கூடிய மொத்த ஈரப்பதனுக்கும், காற்றிலுள்ள ஈரப்பதன் அளவுக்குமிடையிலான வீத அளவு.

**Relative inclinometer:** (வானூ.) சார்புச் சாய்வுமானி : விமானம் பறக்கும் உயரத்தை வெளிப்படைப் புவியீர்ப்பு அடிப்படையில் காட்டும் ஒரு சாதனம். விமானத்தின் முடுக்கு விசை, புவியீர்ப்பு விசை இவற்றின் கூட்டு விளைவாக்கம்.

**Relative motion:** (இயற்.) சார்பு இயக்கம்: ஒரு பொருளைச் சார்ந்து இன்னொரு பொருள் இயங்குதல்.

**Relay:** (மின்.) துணைமின்விசையமைவு: ஒரு முதன்மை மின் சுற்றுவழியில், குறிப்பிட்ட சூழ்நிலைகளில் ஓர் உள் சுற்றுவழியை உண்டாக்க அல்லது மூடப் பயன்படும் ஒரு துணைச் சாதனம்.

**Relay station:** அஞ்சல் நிலையம்: வானொலி அல்லது தொலைக்காட்சியில், இன்னொரு நிலையத்தின் ஒளி-ஒலி நிகழ்ச்சிகளை வாங்கி அஞ்சல் செய்யும் நிலையம்.

**Relief map:** புடைப்பியல் நிலப்படம்: வண்ணவரைக் குறியீடுகள்

மூலம் புடைப்பியல் தோற்றம் அளிக்கப்பட்ட நிலப்படம்.

**Relief printing:** (*அச்சு.*) புடைப்பியல் அச்சடிப்பு: வண்ணவரைக் குறியீடுகளால் அமைக்கப் படும் புடைப்பியல் தோற்ற அமைவுடன் அச்சடித்தல்.

**Reliving arch:** விடுவிப்பு வில் வளைவு: சுவரின் அடிப்பகுதிப் பளுக் குறைக்கும்படி உள்வரியாகக் கட்டப்படும் வில் வளைவு.

**Reluctance:** (*மின்.*) காந்தத்தடை: காந்தமேற்றிய பொருள், காந்தப் பாய்வுக்கு ஏற்படுத்தும் தடையின் அளவு.

**Remote control:** (*வானூ.*) தொலைக்கட்டுப்பாடு: மின்காந்த வியல், நெம்புகோல் போன்ற சாதனங்கள் மூலம் நெடுந்தொலைவிலிருந்து கட்டுப்படுத்தல்.

அஞ்சல் அல்லது பிற மின்காந்தச் சாதனங்கள் மூலம் மின்னியல் கருவிகளை அல்லது எந்திரத்தை இயக்குதல்.

**Rcmote pickups:** சேய்மை அஞ்சல்: தொலைக்காட்சி நிலையத்திற்கு வெளியேயுள்ள ஊர்தி ஒளி பரப்புச் சாதனம் அல்லது தொலைவில் நிரந்தரமாக நிறுவப்பட்டுள்ள சாதனம் மூலமாக நிகழ்ச்சிகளை ஒளி பரப்புதல்.

**Renewable fuse:** (*மின்.*) புதுப்பிக்கத்தக்க உருகி: உருகும் பொருளை எளிதில் மாற்றக் கூடிய வாறு, பொதிந்து வைக்கப்பட்டுள்ள உருகி.

**Repair kit:** செப்பனிடு கருவிக்கலம்: ஒரு குறிப்பிட்ட துறையில் பழுது பார்ப்பதற்குப் பயன்படும் கருவிகளும், உறுப்புகளும் அடங்கிய ஒரு கலம்.

**Replica:** உருவநேர்படி: ஓர் உற்பத்திப் பொருளின் நேர் பகர்ப்பு.

**Repousse:** (*உலோ.*) புடைப் பகழ்வு: மெல்லிய உலோகத்தில் புடைப்பகழ்வுச் சித்திரமாக மறுபுறமிருந்து அடித்து உருவாக்கப் பட்ட உலோக ஒப்பனை வேலைப் பாடு.

**Representative:** உருமாதிரி: மிகச் சிறந்த வகையின் அல்லது பாணியின் வகைமாதிரி.

**Reprint:** (*அச்சு.*) மறு அச்சுப் பதிப்பு: மூல அச்சுப்பதிப்பு காலியான பிறகு, அதிகத் திருத்தங்கள் இல்லாமல் முன்னையதைப் போல வே மறு அச்சுப்பதிப்பாக அச்சிடுதல்.

**Reproducing:** மறுபடி எடுப்பு: மீண்டும் படி எடுத்தல். திரும்பப் படியெடுத்து வழங்குதல்.

**Reptile press:** பணிமுறைசாரா செய்தித்தாள்: பணிமுறைசாராத அரசுச் சார்புடைய செய்தித்தாள்கள்.

**Repulsion:** (*மின்.*) புறவிலக்கு விசை: ஒரேமாதிரியாக மின்னேற்றஞ் செய்யப்பட்ட இரு பொருள்கள் தம்மிடையே ஒன்றையொன்று உந்தித்தள்ளும் ஆற்றல்.

**Repulsion motor:** புறவிலக்க மின்னோடி;

**Reredos:** பலிபீடத் திரை: பலிபீடத்தின் பின்புறச் சுவரை மறைக்கும் வேலைப்பாடுடைய திரை.

**Rasidual magnetism:** (*மின்.*) எஞ்சு காந்தம்: ஓர் இரும்புத் துண்டிலிருந்து காந்தவிசை நீக்கப்பட்ட பிறகு அதில் எஞ்சியிருக்கும் சிறிதளவு காந்தவிசை.

**Residue:** (*தானி.*) எஞ்சுபடிவு: எரித்த பிறகு படிந்திருக்கும் எச்சப் பொருள்,

**Resilience:** எதிர் விசைப்பு: வில்போல் நிமிர்ந்து எதிர்த்தடிக்கும் செயல் அல்லது ஆற்றல். ஒரு பொருள் நலிந்து தொய்வுற்ற பின்பு மீட்டெழுந்து முன்னுருப் பெறும் ஆற்றல்.

**Resin:** பிசின்: நீரில் கரையாமல், ஆல்ககால், ஈதர் முதலியவற்றில் கரையக்கூடிய மரப்பிசின் வகை.

**Resinoid:** (*குழை.*) செயற்கைப் பிசின்: இயற்கைப் பிசின்களிலிருந்து வேறுபட்ட செயற்கைப் பிசின் பொருள்கள்.

**Resistal:** (*உலோ.*) ரெசிஸ்டால்: மிக உயர்ந்த தரமுடைய துருப்பிடிக்காத எஃகு. இதில் காந்தம் ஏறுவதில்லை. இது அமிலத்தை எதிர்க்கக் கூடியது.

**Resistance:** (*மின்.*) தடை: மின்னோட்டம் பாய்வதைத் தடுக்கக் கூடிய ஒரு பொருளின் பண்பு.

**Resistance coil:** (*மின்.*) தடைச் சுருள்: குறிப்பிட்ட அளவு அதிகத் தடையாற்றல் கொண்ட கம்பிச் சுருள். நைக்ரோம் அல்லது இரும்பினாலான இந்தக் கம்பிச் சுருள், மின்னோட்டத்தைக் குறைப்பதற்காக ஒரு மின் சுற்றில் செருகப் பட்டிருக்கும்.

**Resistance unit:** (*தானி.*) தடை அலகு: எலெக்ட்ரான் பாய்வதை மிகுதியாகத் தடுக்கும் திறன் கொண்ட ஓர் உலோகத்தினாலான ஒரு சிறிய கம்பிச்சுருள் அல்லது ஒரு சிறிய கார்பன் சலாகை. இந்த அலகுகள், உந்து ஊர்தியின் மின்னியல் சுற்றுவழிகளில், மின்னோட்டத்தைக் குறைப்பதற்காகச் செருகப்படுகின்றன.

**Resistance welder:** தடைப்பற்றவைப்பு எந்திரம்: தடையமைப்பு கொண்ட ஒரு பற்றவைப்பு எந்திரம்.

**Resistance wdlding:** தடைப்பற்றவைப்பு: மின்னோட்டம் பாய்வதைத் தடுப்பதன் மூலம் உண்டாகும் வெப்பத்தின் வாயிலாக அழுத்தம் ஏற்படுத்திப் பற்றவைக்கும் முறை.

**Resistance wire:** (*மின்.*) தடைக்

கம்பி: மின் தடையுண்டாக்கும் நிக்கல்-குரோமியம் மின்தடைக் கம்பி.

**Resisting moment:** (பொறி.) சுழற்சித்தடை: எதிரெதிராக இயங்கும் இரண்டு உள்முக விசைகள் கொண்ட எந்திரத்தின் பகுதியில் விறைப்புச்சூழல் திறன் மூலம் சுழற்சிக்குத் தடை உண்டாக்குதல்.

**Resisting shear:** (பொறி.) தடைத் துணிப்பு: ஓர் எந்திரப் பகுதியின் செங்குத்துத் துணிப்புக்குச் சமமான எதிரெதிர் உள்முக விசை.

**Resolution:** படத் தெளிவு: தொலைக்காட்சிப் படத்தின் தெளிவுத் திறன்.

**Resolution of forces:** (இயற்.) விசைப் பிரிவீடு: இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட விசைகளின் பிரிவீடு. இவற்றின் கூட்டு விளைவானது, ஒரு குறிப்பிட்ட விசைக்குச் சமமாக இருக்கும்.

**Resonance:** (மின்.) ஒத்திசைவு ஒரு மின்சுற்று வழியில் தூண்டு எதிர்வினைப்பினை மட்டுப்படுத்தி, மின்னோட்டம் பாய்வதற்கு ஓம் தடையை மட்டுமே விட்டுச் செல்லும் நிலை.

**Retard:** இயக்கத் தடை: அலை இயக்கத்திற்குத் தடை ஏற்படுத்துதல்.

**Retort:** வாலை: காய்ச்சி வடித்தலில் பயன்படுத்தப்படும் கீழ்நோக்கி வளைந்த கழுத்துடைய கண்ணாடி வடிகலம்.

**Retractable wheel:** (வானூ.) உள்ளிழுப்புச் சக்கரம்: விமானத்தில், உடற்பகுதிக்குள் அல்லது சிறகுகளுக்குள் இழுத்துக் கொள்ளும் வகையில் அமைக்கப் பட்டுள்ள சக்கரம்.

**Return bend:** (பட்.) வளைகுழாய்: 'U' வடிவில் அமைந்த பொருத்தப் பட்டுள்ள வளைவுக்குழாய்.

**Reveal:** (க.க.) பக்கச் சுவர்ப் பரப்பு: கதவு, பலகணி ஆகியவற்றின் உட்புறப்பக்கச் சுவர்ப் பரப்பு.

**Reverse curve:** மறுதலை வளைவு: "S" வடிவ வளைவு.

**Reverse mold:** (வார்.) மறுதலை வார்ப்படம்: உள்ளபடியான வார்ப் படத்தைத் திணிப்பதற்குரிய ஒரு மாதிரி வார்ப்படம்.

**Reverse plate** (அச்சு.) மறுதலை அச்சுத்தகடு: கறுப்புப் பின்னணியில் வெள்ளை வடிவங்களைப் பதிவு செய்யும் வகையில் கறுப்பு, வெள்ளை வண்ணங்களை மறுதலையாக அச்சிடக் கூடிய அச்சுத் தகடு.

**Reversible propeller:** (வானூ.) மறுதலை முற்செலுத்தி: விமானத் தடை உண்டாக்குவதற்குப் பயன் படுத்தப்படும் மறுதலை அழுத்தம் விளைவிக்கும் வகையில் விசை மாற்றம் செய்யக்கூடிய முற் செலுத்தி அல்லது சுழலி,

**Reversing gear:** (எந்.) மறுதலைப் பல்லிணை: ஓர் எஞ்சினை அல்லது எந்திரத்தை எதிர்த்திசையில் இயங்குமாறு செய்யக் கூடிய பல்லிணை.

**Revolution:** (பட்.) சுற்றுகை: ஒரு பொருள் தனது அச்சில் ஒரு முழுமையான சுற்றினைச் சுற்றும் செயல். இது சுழற்சியிலிருந்து வேறுபட்டது. சுழற்சி என்பது ஒரு முழுச்சுற்றினையோ ஒரு சுற்றின் ஒரு பகுதியையோ குறிக்கிறது. சுழல் தண்டின் சுற்றுகை போன்ற ஒரு தொடர்ச்சியான சுழற்சியைச் சுற்று குறிக்கிறது.

**Revolution counter:** (எந்.) சுற்றுகை அளவி: ஒரு சுழல் தண்டின் சுற்றுகைகளின் எண்ணிக்கையை அளவிடுவதற்கான ஒரு சாதனம். ஒரு சுழல்தண்டின் முனையில் ஒரு முள்ளினை அழுத்துவதன் மூலம் சுற்றுகையின் எண்ணிக்கையான ஓர் எண் வட்டில் பதிவு செய்யப்படுகிறது.

**Revolutions per minute:** சுற்றுகை வேகம்: ஓர் எந்திரம் ஒரு நிமிடத்திற்குச் சுற்றும் வேகத்தின் வீதம்.

**Revolving field:** (மின்.) சுழல் புலம்: புருச்சுருள்களும் துருவங்களும் நிலையாக இருக்காமல் சுழன்று கொண்டிருத்தல்.

**Rf pickup:** வானொலி அலைவெண் அனுப்பீடு: ஒலி-ஒளிச் சைகைகளின் வானொலி அலைவெண் அனுப்பீடு:

**Rheo - stat :** (மின்.) தடை மாற்றி : உந்துபொறி முடுக்கும் வகையில் மின்வலி இயக்கக் கட்டுப்பாட்டமைவு.

**Rheostatic control :** (மின்.) தடை முறைக் கட்டுப்பாடு : ஒரு மின்னகத்தில் வேறுபட்ட மின் தடையின் அல்லது காந்தத் தடையின் மூலம் கட்டுப்படுத்தும் ஓர் அமைவு.

**Rhodium :** (உலோ.) ரோடியம் : பிளாட்டினம் குழுவைச் சேர்ந்த திண்ணிய வெண்ணிற உலோகத் தனிமம்.

**Rhom boid :** (கணி.) செவ்விணையகம் : எதிரெதிர்ப் பக்கங்களும் கோணங்களும் மட்டுமே சரி சமமாக இருக்கும் இணைவகம்.

**Rhombus :** (கணி.) செவ்விணைவகம் : அண்டைப் பக்கங்கள் சரி சமமாகவும், கோணங்கள் விரி கோணங்களாகவும் உள்ள ஒரு இணைவகம்.

**Riddle :** (வார்.) சல்லடை : கூலம், சரளைக்கல், கரித்தூள் முதலியன சலிப்பதற்கான பெரும்படி அரிதட்டு.

**Ridge :** (க.க.) கூடல் வாய் : இரு சரிவுகள் கூடும் மேல்வரை: நீண்ட மோட்டின் வரை முகடு.

**Ridge pole :** (க.க.) முகட்டு உத்தரம் : கூரை முகட்டு உத்தரம்:

**Ridge roof :** *(க.க.)* முகட்டுக் கூரை : மோட்டுக் கூடல் வாயில் உத்தரங்கள் சந்திக்கும் கூரை.

**Ridge tiles :** *(க.க.)* மோட்டு ஓடு : மோட்டுக் கூடல் வாய் ஓடு.

**Riffler :** *(உலோ.)* தக்கப் பள்ளம்: அரிகாரர் அரிப்பில் பொன்னைத் தேக்கிக் கொள்ளும் பள்ளம்.

**Right angle :** செங்கோணம்/நேர் கோணம் : ஒன்றுக்கொன்று செங் குத்தாக நிற்கும் கோடுகளினால் உண்டாகும் 90° கோணம்.

**Right-hand engine** *(வானூ.)* வலம்புரி எஞ்சின் : விமானத்தில் எதிரே நின்று பார்ப்பவருக்கு வலம் புரியாகச் சுழலும் முற்செலுத்தி யினைக் கொண்ட எஞ்சின்.

**Right - hand screw :** *(எந்.) :* வலம்புரியாணி : வலம்புரியாகச் சுழற்றும் போது முன்னேறும் அமைப்புடைய புரியாணி.

**Right-hand tools :** *(பட்.)* வலக் கைக் கருவி : வலது கையினால் கையாள்வதற்கேற்பச் செய்யப் பட்ட கருவி.

**Right line :** நேர்கோடு : இரு புள்ளிகளுக்கிடையிலான மிகக் குறுகிய தொலைவு.

**Rigidity :** விறைப்பு : வளைவு நெளிவுக்கு இடந்தராத கட்டிறுக் கத் தன்மை.

**Ring :** *(கணி.)* வளையம்: (1) ஒரே மையத்தைக் கொண்ட இரு சுற்று வட்டங்களிடையில் அடங்கிய சம தள உருவம்.

(2) சனிக்கோளின் தட்டு வளை யம்.

**Ring bolt :** வளைய மரையாணி : கண்வழியே ஒரு வளையம் கொண்ட கண்மரையாணி.

**Ring cowling :** *(வானூ.)* வளைய மேல்மூடி : வானூர்தியில் வளைய வடிவிலான எந்திர மேல் மூடி. இது காற்றினால் குளிர்விக் கப்படும் வட்டவடிவ எஞ்சினைச் சுற்றி வைக்கப்பட்டிருக்கும். இழு வையைக் குறைத்து, குளிர்ச்சியை அதிகரிக்கிறது.

**Ring gauge :** *(எந்.)* வளைய அளவி : புற விட்டங்களை அள விடுவதற்குப் பயன்படும் வளைய வடிவ அளவு கருவி.

**Ring gear :** *(தானி;)* வளையப் பல்லிணை : சூடம் அல்லது மையத் துவாரம் இல்லாத வளைய வடிவப் பல்லிணை.

**Rise and run:** *(மர.வே.)* சரிவு: செங்குத்தான நிலையினின்றும் சரிந்துசெல்லும் கோண அளவைக் குறிக்கும் சொல்.

**Riser :** *(க.க.)* படிநிலைக் குத்து: *(1)* இரண்டு படிகளின் மேற் பரப்புகளை இணைக்கும் செங்குத் துப் பகுதி.

(2) நீராவி, நீர், வாயு முதலிய வற்றைக் கொண்டு செல்வதற்

கான அமைப்பின் செங்குத்துக் குழாய்.

(3) ஒரு கட்டிடத்தின் ஒரு தளத்திலிருந்து இன்னொரு தளத்திற்குச் செல்லும் மின்கம்பிகள் அல்லது மின்கம்பி வடங்கள் அடங்கிய செங்குத்தான காப்புக் குழாய்.

**Rivet :** (உலோ. வே.) குடையாணி: மறுபுறம் தட்டிப் பிணைத்து இறுக்குவதற்கான ஆணி. இவை, தட்டையான அல்லது தட்டம் போன்ற அல்லது பொத்தான் போன்ற அல்லது காளான் போன்ற அல்லது வீங்கிய கழுத்துப் போன்ற கொண்டையுடையனவாக இருக்கும்.

**Rivet forge :** குடையாணி உலை: குடையாணிகளை அவை தேவைப்படுகிற இடத்தில் சூடாக்குவதற்காகக் கொதிகலன் செய்பவர்களால் அல்லது இரும்பு வேலை செய்பவர்களால் பயன்படுத்தப்படும் கையில் எடுத்துச் செல்லக் கூடிய உலை.

**Riveting :** குடையாணி அடிப்பு: குடையாணிகளைக் கொண்டு இறுக இணைத்தல் அல்லது பிணைத்தல்.

**Rivet set :** குடையாணி பொருத்தி: குடையாணிகளைப் பொருத்துவதற்குப் பயன்படும் குடைவான அல்லது கிண்ண முகப்புக் கொண்ட எஃகுக் கருவி.

**Roach :** (வானூ.) கப்பல் கவிவு: கப்பலில் சதுரப்பாயின் அடியிலுள்ள கவிவு. இதிலிருந்து கணமான நீர்த்தாரை நீர்ப்பரப்புக்கு மேலே பீச்சி எறியப்படும்.

**Road drag :** சாலை இழுவை: சாலையின் மேற்பரப்பினைச் சமப்படுத்துவதற்காக அதன் மேல் இழுக்கப்படும் சாதனம். இது சாலையைச் சுரண்டிச் சமனிடும் எந்திரத்திலிருந்து வேறுபட்டது.

**Roaster :** (தானி.) தங்குதுறை நாவாய்: கரையோரம் நங்கூரமிட்டு நிற்கும் கப்பல். இதில் இருவர் இருக்கலாம். பின்புறத்தில் சரக்குகள் வைப்பதற்கான அறை இருக்கும்.

**Roadster :** நீற்று உலை: கனியங்கள் அல்லது உலோகங்களிலிருந்து தீங்கு தரும் வாயுக்கள், கார்போனிக் அமிலம், கந்தக டையாக்சைடு ஆகியவற்றை விரைந்து ஆவியாக்கி நீக்குவதற்குப் பயன்படும் நீற்றுவதற்கான உலை.

**Roasting :** (உலோ.) நீற்றுதல். கனியங்கள் அல்லது உலோகங்களிலிருந்து தீங்கான வாயுக்கள், கார்போனிக் அமிலம், கந்தக டையாக்சைடு ஆகியவற்றை விரைந்து ஆவியாகச் செய்வதற்காகக் கையாளப்படும் செய்முறை.

**Robot :** எந்திர மனிதன்: மனிதன் செய்யும் காரியங்களைத் தானியங்கு எந்திர நுட்பங்கள் மூலம் தானே செய்திடும் எந்திரம். இத்தகைய கருவி மூலம் இயக்கப்படும் ஊர்தி அல்லது பொறி.

**Rock crystal:** (கனி.) படிகப்

பாறை: நிறமற்ற, ஒளி ஊடுருவக் கூடிய படிகக்கல் வகை.

**Rocket:** (*வானூ.*) உந்து கூண்டு [ராக்கெட்]: அக எரிபொருளாற்றலால் தொலைவுக்கு அல்லது உயரத்திற்கு உந்தித் தள்ளப்படும் உலோகத்தாலான நீள் வட்டு.

**Rococo:** (*க.க.*) மிகு ஒப்பணைக் கலைப் பாணி: மனைப்பொருள்கள், சிற்பம் முதலியவற்றில் 17, 18 ஆம் நூற்றாண்டுப் பாணியை அடியொற்றி மிகையான உருவரை ஒப்பனைகளைச் செய்தல்.

**Rod:** (*மர. வே.*) அளவுகோல்: செங்குத்துப் படிகளில் செங்குத்து உயரத்தைத் துல்லியமாக அளவிடுவதற்குப் பயன்படும் அளவுகோல்.

கட்டுமானத்தில் 11 முழம் நீளமுடைய அளவை அலகு.

**Rod assembly:** (*தானி.*) இணைப்புக்கோல் தொகுதி: இணைப்புக் கோல், உந்து தண்டு, உந்து தண்டு ஊசி, உந்துதண்டு வளையங்கள் போன்றவை அடங்கிய.

**Rod ends:** (*பொறி.*) இணைப்புக் கோல் நுனி: தாங்கிகளைக் கொண்ட இணைப்புக்கோல்களின் நுனிப்பகுதி. இதில் இணைப்புத் தகடு, திண்ணிய கொண்டை போன்ற வகைகள் உண்டு.

**Roll:** (*தானி.*) உருள்வு: சுழலும் பொருளின் சுழல்வான சாய் வட்டம். நீட்டுப்போக்கான ஓர் அச்சில் ஒரு முழுச் சுழல்வு சுழலுதல்.

**Rolled gold:** பொன்முலாம் உலோகம்: உலோகத்தின் மேலிடப்பட்ட மெல்லிய தங்கத் தகடு.

**Rolled iron:** (*பொறி.*) உருட்டு இரும்பு: உருட்டு முறையின் மூலம் தேவையான வடிவில் தயாரிக்கப்பட்ட இரும்புத் தகடு.

**Roller bearing:** (*பொறி.*) உருள் தாங்கி: குண்டு தாங்கிகளில் பயன்படுத்தப்படும் வட்ட எஃகுக் குண்டுகளுக்குப் பதிலாகக் கெட்டிப்படுத்திய எஃகு உருளைகளினாலான தாங்கி.

**Roller chain:** உருளைச் சங்கிலி: ஓசையையும், உராய்வையும் குறைப்பதற்காக நீள் உருளைகளினால் அல்லது உருளைகளினால் செய்யப்பட்ட கண்ணிகளைக் கொண்ட சங்கிலி.

**Rolley:** பாரப்பொறி வண்டி: நான்கு தட்டை உருளைப் பொறி வண்டி.

**Rolling mill:** உருட்டு ஆலை: உருட்டுதல் மூலம் இரும்பைத் தகடாக்கு ஆலை.

**Rolling-press:** அழுத்துப் பொறி:

**Rolling stock:** உருள் ஊர்தி: இருப்புப் பாதைமேல் உருண்டு செல்லும் இயக்கு பொறிகள், வண்டிகள் முதலியவற்றின் தொகுதி.

**Roman** (*அச்சு.*) ரோமன் அச்செழுத்து: எழுத்துருவில் விளிம்பிற்குக் கட்டுருக் கொடுக்கும் நுண் வரைமான முனைப்பாகவுள்ள அச்செழுத்து வகை.

**Roman-esque** (க.க.) ரோமானிய பாணி: பண்டைய ரோமானிய ரோமாபுரிப் பாணிக்கும் இடைநிலைக் காலத்திய 'கோதிக்' பாணிக்கும் இடைப்பட்ட நிலையில் வில் வட்ட வளைவுகளும் வளைவு மாடங்களும் நிறைந்த சிற்பப் பாணி.

**Roof boards or roofers:** (க.க.) கூரைப்பலகைச் சட்டம்: கூரை ஓடுகளுக்கு அடியிலுள்ள பலகைச் சட்டம்.

**Roof truss:** (க.க.) கூரைத் தாங்கணைவு: கூரைக்கு ஆதாரமாக ஒன்று சேர்த்துப் பிணைக்கப் பட்டுள்ள மரத்தினாலான அல்லது இரும்பினாலான ஆதாரக்கட்டு.

**Root:** (எந்.) வர்க்க மூலம்: கணிதத்தில் ஓர் எண்ணின் பெருக்க மூலம்.

**Root diameter:** (எந்.) ஆதார விட்டம்: ஒரு திரிகிழையின் ஆதார விட்டம்.

ஒரு பல்லிணைச் சக்கரத்தில் பல்லின் அடிப்புறத்தில் உள்ள விட்டம்.

**Rope drilling:** கயிற்றுத் துரப்பணம்: கயிற்றினால் இயங்கும் துறப்பணத்தால் துளையிடுதல்.

**Rope driving:** (எந். பொறி.) கயிற்று இயக்கம்: கயிற்றுப் பல் பல்லிணை மூலம் விசையை மாற்றம் செய்தல். இது வார்ப்பட்டை இயக்கத்திலிருந்து வேறுபட்டது.

**Rosebit:** (எந்.) துளையிடு கருவி துறப்பணத் துவாரங்களுக்கு மெருகேற்றும் திண்மையான நீள் உருளை வடிவ இணைத் துளையிடு கருவி.

**Rose cutter:** (பட்.) பட்டை வெட்டு கருவி: அரை உருள் வடிவில் பன்முகமாகச் செதுக்கப்பட்ட பட்டை வெட்டுகருவி,

**Rese-engine:** கடைசல் பொறி: ஒரு வகைக் கடைசல் பொறி அமைவு.

**Rosendale cement:** ரோசண்டேல் சிமெண்ட்: நியூயார்க் அருகிலுள்ள ரோசண்டேல் அருகில் கிடைக்கும் இயற்கை சிமெண்டுக்கு அளிக்கப்பட்டுள்ள பெயர்.

**Rose reamer:** (எந்.) பட்டைத் துளைச் சீர்மி: உலோகங்களில் துளையிடுவதற்கான பொறியமைவு. இதில் பக்கங்களுக்குப் பதிலாகச் சாய்வாகவுள்ள நுனி மூலம் வெட்டுதல் நடைபெறுகிறது.

**Rose window:** (க.க.) ரோசாப் பலகணி: ரோசாப்பூ வடிவில் அமைந்த பலகணி.

**Rosette:** (க. க.) ரோசாப்பூ வணி: ரோசா வடிவத்திலான பூவணி வேலைப்பாடு.

**Rose wood:** (மர.வே.) கருங்காலி: கறுப்பு நிறமுள்ள, கனத்த, கடினமான, எளிதில் உடையக்கூடிய மரம். மேலடை மெல்லொட்டுப் பலகையாகப் பயன்படுத்தப் படுகிறது.

**Rosin:** மண்டித்தைலம்: தேவதாரு மரங்களிலிருந்து பிசின் வடிவில் கிடைக்கும் பொருள். வெள்ளீய வேலைப்பாடுகளில் பற்ற வைப்பதற்கான உருகுபொருளாகப் பயன்படுகிறது. வண்ணங்கள், சோப்புகள் செய்வதற்கும் பயனாகின்றது.

**Roster:** வேலை முறையேடு: ஓர் அட்டவணை அல்லது பெயர்ப் பட்டியல்.

**Rostrum :** (க,க) உரை மேடை: பொதுவில் உரையாற்றுவதற்குப் பயன்படும் பேச்சு மேடை.

**Rotary :** சுழல் பொறி : ஒரு சக்கரம் போல் தனது அச்சில் சுழலும் பொறி.

**Rotary converter :** (மின்.) சுழல் ஒரு போக்கி : மாற்று மின்னோட்டச் சுற்று வழியுடன் இணைக்கப் பட்டுள்ள ஒரு தனிப்பொறி. இது நேர் மின்னோட்டத்தை அல்லது மாற்று மின்னோட்டத்தை வழங்கும்.

**Rotary cutter :** (எந்) சுழல் கத்தி : ஒரு சுழல் முனையுடன் இணைக்கப்பட்டுள்ள, சுழலும் கத்தி. இது சுழலும் போது வேலைப்பாடு செய்யப்படும் பொருள் வெட்டப்படுகிறது.

**Rotary engine :** (வானூ.) சுழல் எஞ்சின் : ஆரை வடிவில் அமைக்கப்பட்ட நீள் உருளைகள் கொண்ட ஓர் எஞ்சின். இந்த எஞ்சின் ஒரு நிலையான வணரி அச்சுத்தண்டினைச் சுற்றிச்சுழலும்.

**Rotary induction system:** (வானூ.) சுழல் தூண்டல் முறை: ஆரை எஞ்சின்கள் மீது பயன் படுத்தப்படும் எரி-வளி கலப்பித் தூண்டல் முறை. இதில் எரி பொருள் செறிவினை நீர் உருளைகளுக்குப் பகிர்மானம் செய்வதில் ஒரு சுழல் விசிறி உதவுகிறது.

**Rotary press:** (அச்சு.) சுழல் அச்சு எந்திரம்: சுழல் முறையிலான அச்சுப் பொறி. இதில் அச்சிடும் பரப்பு ஒரு சுழலும் நீள் உருளையுடன் பிணைக்கப்பட்டிருக்கும். ஓர் உருளைச் சுருளிலிருந்து காகிதம் ஊட்டப்படும்.

**Rotogravure:** (அச்சு.) சுழல் செதுக்குருவ அச்சு வேலை: ஒரு செப்பு நீர் உருளையில் செய்யப் பட்ட செதுக்கு வேலைப்பாட்டிலிருந்து ஒருசுழல் அச்சு எந்திரத்தின் மீது செதுக்குருவ அச்சுவேலை.

**Rotor:** (வானூ.) சுழலி: (1) விமானத்தில் ஒரு சுழல் சிறகு அமைப்பிலுள்ள முழுச் சுழற்சிப் பகுதி.

(2) ஒரு மாற்று மின்னோடியின் அல்லது மின்னாக்கியின் ஒரு சுழல் உறுப்பு.

**Rotor-craft:** (வானூ.) சுழலி விமானம்: எல்லா உயரங்களிலும் சுழலி அல்லது சுழலிகளினால் முழுமையாக அல்லது பகுதியாகத்

தாங்கப்படுகிற ஒரு விமானம். இதில் விமானத்தின் காற்றழுத்தத் தளம், ஓர் அச்சினைச் சுற்றிச் சுழல்கிறது.

**Rotten-stone:** மெருகுச் சுண்ண மணற்கல்: நுண்ணிய பொடியாக விற்பனை செய்யப்படும் சிதைந்த சுண்ணாம்புக்கல். இது பரப்புகளை மெருகிடுவதற்குப் பயன்படுகிறது.

**Rotunda:** (க. க.) வட்டக்கூடம்: வட்ட வடிவ அறை.

**Rouge:** (வேதி.) அய ஆக்சைடு: ($Fe_2O_3$) இது அயச் சல்பேட்டைச் ($FeSO_4$) சூடாக்குவதன் மூலம் உற்பத்தி செய்யப்படுகிறது. இது வண்ணச் சாயமாகவும், கண்ணாடி, உலோகம், நவமணிகள் ஆகியவற்றில் மெருகேற்றுவதற்கும் பயன்படுகிறது.

**Roughcast:** (க.க.) குத்துச் சாந்து: சுவருக்குப் பூசப்பெறும் சரளைச் சுண்ணாம்பு கலந்த குத்துச்சாந்து.

**Rough cut:** (எந்.) அராவுதல்: கரடுமுரடான பகுதிகளை அராவி அறைகுறையாக மெருகிடுதல்.

**Roughing tool:** (எந்.) அராவு கருவி: சொரசொரப்பான பகுதிகளை நீக்குவதற்கு எந்திரங்களை இயக்குபவர்கள் பயன்படுத்தும் கருவி. பொதுவாக வார்ப்பிரும்பு, தேனிரும்பு, எஃகு போன்றவற்றை வெட்டுவதற்கு இது பயன்படுகிறது.

**Rough lumber:** முரட்டு வெட்டு மரம்: ரம்பத்தினால் வெட்டப்பட்ட சீர்வடிவற்ற வெட்டு மரம்.

**Roundel:** பதக்கம்: வட்டவடிவமான ஒப்பனை வாய்ந்த விருதுப் பதக்கம்.

**Roundnose tool:** (எந்.) வட்ட முனைக் கருவி: சொரசொரப்பான பகுதிகளை வெட்டி நீக்குவதற்குப் பயன்படும் ஒரு வகைக் கருவி.

**Round-point chisel:** (எந்.) வட்ட நுனி உளி: எண்ணெய் வரிப் பள்ளங்களை வெட்டுவதற்குப் பயன்படும் வட்ட நுனி கொண்ட சிற்றுளி.

**Round-tube Radiator:** (தானி.) வட்டக்குழாய்க் கதிர்வீசி: சேமக் கலத்தின் மேற்புறத்திலிருந்து கீழ்ப்பகுதிக்குச் செல்லும் வகையில் மிக நெருக்கமாக அமைக்கப்பட்ட வட்டவடிவக் குழாய்கள் பயன்படுத்தப்படும் வெப்பம் கதிர்வீசி, வரிசையாக அமைந்த மென்தகடுகள் வழியே இந்தக் குழாய்கள் செல்லும் போதும் அவற்றில் ஆவிக் கசிவு ஏற்பட்டு, குளிர்விக்கும் அமைப்பில் உண்டாகும் வெப்பம் முழுமையான கதிர்வீச்சுக்கு உள்ளாகிறது.

**Roving:** (குழை.) முதிரா இழை: இழுத்துச் சற்றே முறுக்கப்படும் பஞ்சு, கம்பளம் முதலியவற்றன் சிம்பு.

**Rowlock:** (க.க.) உகைமிண்டு: படகுத் துடுப்பு உகைப் பாதாரமான அமைவு.

**Royal :** எழுது தாள் : எழுதுவதற்கான 24"×19" அளவுள்ள தாள்.

**Rubber :** (வேதி.) ரப்பர் : சில வகை வெப்ப மண்டலத் தாவரங்களிலிருந்து சுரக்கும் பாலிலிருந்து கிடைக்கும் ஹைட்ரோ கார்பன். இது நெகிழ்திறனும் வாயுவும் நீரும் ஊடுருவ முடியாத இயல்பும் கொண்டது. இதனாலேயே இது தொழில் துறையில் உந்து ஊர்திகளின் டயர்கள் செய்யவும், நீர் புகாத வண்ணம் காப்பு செய்யவும், மின் காப்பு செய்யவும் பயன்படுத்தப்படுகிறது.

**Rubber cement :** ரப்பர் சிமெண்ட் பல்வேறு நோக்கங்களுக்காக வெவ்வேறு முறைகளில் ரப்பர் சிமெண்ட் செய்யப்படுகிறது. கச்சா ரப்பரை சிறு சிறு துண்டுகளாக வெட்டி ஒரு கரைப்பானைச் சேர்ப்பதன் மூலம் சாதாரண ரப்பர் சிமெண்ட் செய்யப்படுகிறது. கரைப்பானாகப் பயன்படுத்த கார்பன் டை சல்பைடு மிகச் சிறந்தது; பென்சால் நல்லது; மிகவும் மலிவானது; கேசோலினும் கரைப்பானாகப் பெருமளவில் பயன்படுத்தப்படுகிறது.

**Rubble ;** (க.க) கட்டுமானக் கல் : கொத்தாத கட்டுமானக் கல்.

**Rubble masonry :** (க.க.) கற் கட்டுமான வேலை : கொத்தாத கட்டுமானக் கல் கொண்டு அடித்தளம் அமைதல் போன்ற நயமற்ற கட்டிட வேலை செய்தல்.

**Rubidium :** மென்மையான வெள்ளிய உலோகத் தனிமம்.

**Rubrication :** (க.க.) பின்புல வண்ணப் பூச்சு : இனாமல் அல்லது வண்ணப் பூச்சு மூலம் ஒரு பின்புலத்திற்கு வண்ணம் பூசுதல்.

**Rub - stone** சாணைக்கல் : சாணை பிடிப்பதற்குப் பயன்படும் கல்.

**Ruby :** கெம்புக்கல் : ஆழ்ந்த செந்நிறத்திலிருந்து வெளிறிய ரோசா நிறம் வரை உள்ள மணிக் கல் வகை.

**Rudder :** (வானூ.) சுக்கான் : விமானம் இடப்புறமாகவும் வலப்புறமாகவும் பறக்கும் திசையைக் கட்டுப்படுத்துவதற்காக விமானத்தின் பின்புறத்தில் இணைக்கப்பட்டுள்ள உறுப்பு.

**Rudder angle:** (வானூ.) சுக்கான் கோணம்: விமானத்தின் சுக்கானுக்கும் அதன் சமதள ஒரு சீர்மைக்குமிடையிலான கூர்ங்கோணம்.

**Rudder pedals:** (வானூ.) சுக்கான் மிதிகட்டை: சுக்கானைக் கட்டுப்படுத்தி இயக்குவதற்கான மிதிகட்டைகள்.

**Rudder torque:** (வானூ.) சுக்கான் முறுக்கம்: விமானத்தின் மீது சுக்கான் மூலம் செலுத்தப்படும் திரிபு முறுக்கம்.

**Rule:** (அச்சு.) இடைவரித்தகடு:

அச்சில் வாசக இடைவெட்டுக் குறிப்புக்கோடு.

Ruling machine: (அச்சு.) வரியிடு பொறி: அச்சுக்கலையில் தாளில் இணைவரிகள் இடுவதற் கருவி.

Rung: குறுக்குச் சட்டம்: ஏணியில் அல்லது நாற்காலியில் உள்ளது போன்ற குறுக்குச் சட்டம்.

Runic: (அச்சு.) அணிவரி அச்சுரு: பண்டைய ஜெர்மானிய இன வரி வடிவ எழுத்துப்பாணியில் அமைந்த திண்ணிய அணிவரி அச்சுரு.

Runner: (குழை.) வார்ப்புப் புழை: உலோக வார்ப்புச் சட்ட வார்ப்புப் புழை.

Running head: (அச்சு.) தொடர் தலைப்பு: ஒரு நூலில் பக்கந் தோறும் திரும்பத் திருப்பத் தொடர்ந்து வரும் தலைப்பு.

Runway: (வானூ.) ஓடுபாதை: விமான நிலையத்திலுள்ள எல்லாப் பருவ நிலைகளிலும் ஏறி இறங்குவதற்கான ஓடுபாதை.

Runway localizing beacon: (வானூ.) ஓடுபாதை ஒளிவிளக்கு: விமான நிலையத்தில் ஓடுபாதை நெடுகிலும் அல்லது தரையிறங்கு தளத்தில் அதற்குச் சற்றுத் தொலைவிலும் பக்கவாட்டில் ஒளி பாய்ச்சி வழிகாட்டுவதற்கான சிறிய ஒளி விளக்கு.

Rush: நாணற்புல்: நாற்காலிக்கு அடியிருவதற்குப் பண்டைக்காலம் முதல் பயன்படும் பிரம்பு வகை நாணற் புல்லின் தண்டு.

Rust: (வேதி) இரும்புத்துரு: நீருடன் இணைந்த அய ஆக்சைடு.

Rustication: (க.க.) மேற்பரப்பு அளி: கட்டுமான இணைப்புகளில் மேடுபள்ள வரையிட்டுக் கரடுமுரடான மேற்பரப்பு அளி.

Rusting: (வேதி.) வண்ணச் சாயமிடல்: நவச்சாரக் கரைசலில் அல்லது வலுக்குன்றிய ஹைட்ரோகுளோரிக் அமிலக் கரைசலில் பளபளப்பான உலோகத் தோரணிகளை நனைத்து, வண்ணப் பூச்சு உறிந்து விடாத வகையில் சாயமிடுதல்.

Rust joint: (கம்.) துருப்பிணைப்பு: கசிவைத் தடுப்பதற்கு அல்லது மிகுதியான அழுத்தத்தைத் தாங்குவதற்கு ஓர் ஆக்சிகரணியைப் பயன்படுத்திச் செய்யப்படும் பிணைப்பு.

Ruthenium: (உலோ.) ருதேனியம்: விழுப்பொன் வகையைச் சார்ந்த அரிய திண்மத் தனிமம். இது பிளாட்டினத்தைக் கெட்டிப்படுத்துவதற்கும், பேனாமுனை உலோகக் கலவைகள் செய்வதற்கும் பயன்படும் அரிய உலோகம்.

# S

**Saddle :** சேணம் : (1) மெருகிட்ட மட்பாண்டங்களைச் சுடும் போது அவற்றைத் தாங்கிக் கொள்வதற்குப் பயன்படுத்தப்படும் களிமண்ணினாலான கோல்.

(2) கடைசல் எந்திரத்தின் படுகையில் அமைந்துள்ள ஒரு சறுக்கு ஆதாரம்.

(3) ஓர் ஆரைத் துறப்பணத்தில் துறப்பணக்கதிரையும், பல்லிணைச் சக்கரங்களையும் கொண்டு செல்லும் சறுக்குத் தகடு.

**Saddle - boiler :** குடுவைக் கொதிகலம் : கருவி கலங்களைச் சூடாக்குவதற்குப் பயன்படும் மேற்கவிவான கொதிகலம்.

**Saddle stitch :** சேணத் தையல்: ஒரு துண்டு வெளியீட்டின் தாள்களைச் சேர்த்துத் தைப்பதற்கான ஒரு முறை. இதில் நடு மடிப்பில் நூல் அல்லது கம்பி மூலம் தைக்கப்படும். இவ்வாறு தைப்பதன் மூலம் துண்டு வெளியீட்டினைத் தட்டையாகத் திறந்திட முடியும்.

**S.A.E. formula :** உந்து ஊர்திப் பொறியாளர் கழகச் சூத்திரம் : கேசோலின் எஞ்சின்களின் குதிரைத் விசைத் திறனைக் கணக்கிடுவதற்கு உந்து ஊர்திப் பொறியாளர் கழகம் (S.A.E) வகுத்துள்ள சூத்திரம். அதாவது, ஒரு நிமிட உந்து தண்டின் வேகத்திற்கு 1000 அடி என்ற அடிப்படையில்,

$$\text{குதிரைத்திறன் (H.P)} = \frac{(D^2 \times N)}{2.5}$$

D= நீள் உருளையின் துவாரத்தின் விட்டம் (அங்குலத்தில்).

N: நீள் உருளைகளின் எண்ணிக்கை. 2.5 மாறாத எண்.

**S.A.E. or Society :** உந்து ஊர்திப் பொறியாளர் கழகம் (S.A.E.) : S.A.E. என்பது உந்து ஊர்திப் பொறியாளர் கழகம் Society of automotive engineers) என்பதைக் குறிக்கும். எந்திரவியல் உருப்புகளில் S.A.E. என்ற சுருக்கெழுத்துகள் இருந்தால், அந்த உறுப்பு இந்தக்கழகம் நிர்ணயித்துள்ள தர அளவுகளின் அடிப்படையில் தயாரிக்கப்பட்டுள்ளதாகக் கருதப்படும்.

**S.A.E. Steels:** எஸ்.ஏ.இ.எஃகு : உந்து ஊர்திப் பொறியாளர் கழகம் (S A.E.) எஃகினை வகைப்படுத்துவதற்கு ஒரு வகை எண்மான முறையைப் பயன்படுத்தி வருகிறது. இந்த எண்ணின் முதல் இலக்கம், ஓர் எஃகு பொதுவாக, கார்பன் எஃகு, நிக்கல் எஃகு, நிக்கல் குரோமியம் முதலியவற்றில் எந்த வகையைச் சேர்ந்தது என்பதைக் குறிக்கும். இரண்டாவது இலக்கம், உலோகக் கலவைகளில், முக்கிய

உலோகக் கலவைத் தனிமம் எது என்பதைக் குறிக்கும். கடைசி இரண்டு அல்லது மூன்று இலக்கங்கள், கார்பனின் அளவைக் குறிக்கிறது. எடுத்துக்காட்டாக, 2345 என்ற எண், 3% நிக்கல், 0.45% கார்பன் கொண்ட நிக்கல் எஃகினைக் குறிக்கும்.

**Safe carrying capacity:** (*க.க.*) காப்புச் சுமைத் திறனளவு : எல்லா வடிவளவுகளிலுமுள்ள செம்புக் கம்பிகளுக்கு மின்விசையை பாதுகாப்பாகக் கொண்டு செல்வதற்கான திறனவு அட்டவணைப்படுத்தப்பட்டுள்ளது. இந்தத் திறனளவு ஆம்பியர்களில் குறிக்கப்பட்டிருக்கும். மின் சுடத்திகளைப் பொருத்தும்போது இந்தத் திறனவுக்கு மேற்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

**Safe edge:** (*பட்.*) காப்புமுனை: ஓர் அரத்திலுள்ள வெட்டுமுனையல்லாத பகுதி. ஒரு முனைப்பகுதியில் அராவும் போதும் அண்டைப் பரப்பினை அரம அராவி விடாமல் இந்த முனை காக்கிறது.

**Safe load:** (*பொறி.*) காப்புப்பாரம்: எந்திரத்தில் செயற்படும் அழுத்தத்திற்கு மேற்படாத வகையில் ஒரு பகுதி தாங்கிக் கொள்ளக்கூடிய பாரத்தின் அளவு.

**Safety factors:** (*பொறி.*) காப்புறுதிக் காரணிகள் : எதிர்பாராத சூழ்நிலைகளில் எந்திரங்களில் பாரம் சற்று அதிகமாகி விட்டால், அதைத் தாங்கிக் கொள்ளும் வகையில் காப்புறுதியாக அமைக்கப்படும் காரணிகள்.

**Safety lamp:** (*கனி.*) காப்பு விளக்கு: சுரங்கத் தொழிலாளர்கள் பயன்படுத்தும் எளிதில் தீப்பற்றாத விளக்கு.

**Safety paper :** (*அச்சு*) இணை காப்புத் தாள் : பொருளகக் காசு முறிக்குரிய போலி செய்ய முடியாத தாள் வகை.

**Safety switch :** (*மின்.*) காப்பு விசை ; ஓர் இரும்புப் பெட்டியில் வைத்து, வெளிப்புறமாக இயக்கப்படும் ஒரு கத்தி முனை மின் விசை

**Safety valve:** (*பொறி.*) காப்பு ஓரதர்: கொதிகலனில் அழுத்த எல்லை மிகும் போது தானே திறந்து கொண்டு நீராவி அல்லது நீர் வெளியேற இடமளிக்கும் அமைவு.

**Sag :** புடை சாய்வு : பளுவினால் அல்லது அழுத்தத்தினால் அமிழ்ந்து தாழ்வுறுதல்.

காற்றொதுக்கப் பக்கமாகச் செல்லும் தன்மை.

**Saggar :** சூளைக்களிமண் உறை நுட்பமான களிமண் பொருள்களைச் சூளையில் சுடும் போது அவற்றை வைப்பதற்கான களிமண் உறை.

**Sal ammoniac :** (*வேதி.*) நவச்சாரம் : அம்மோனியம் குளோரைடு ($NH_4CL$). வாயு உற்பத்தியில் துணைப்பொருளாகக் கிடைக்கி

றது. பற்ற தைத்தல், சாயப் பொருள்கள் உற்பத்தி, காலிக்கோ அச்சு முதலியவற்றில் உருகு பொருளாகப் பயன்படுகிறது.

**Salon :** (க.க.) வரவேற்பு அறை: வரவேற்புகள் நடத்தவும் காட்சிப் பொருள்களை வைப்பதற்கும் பயன்படும் ஒரு பெரிய அறை.

**Sal soda :** (வேதி.) சலவைச் சோடா : கண்ணாடி தயாரிப்பு, சோப்பு உற்பத்தி, துணிகளைச் சலவை செய்தல், சாயமிடுதல், காகித உற்பத்தி போன்றவற்றில் பயன்படுத்தப்படும் சலவை சோடா.

**Salt :** (வேதி.) உப்பு: ஓர் உப்பு மூலத்தினால் ஓர் அமிலத்தைக் காடி - காரச் செயல்கள் இரண்டு மற்றதாகச் செய்யும்போது உண்டாகும் ஒரு பொருள். உலோகத் தனிமமும், அலோகத் தனிமமும் அடங்கிய ஒரு கூட்டுப் பொருள்.

**Salt of tartar :** (வேதி.) பொட்டாசியம் கார்பனேட்டு : புடமிடப் பட்ட சாம்பரக் கரியகை $CK_2CO_3H_2O$).

**Salt of vitriol :** துத்தக் கந்தகி.

**Salt of wisdom :** பாதரச நவச்சிய பாசிகை

**Saltpeter:** வெடியுப்பு: பொட்டாசியம் நைட்ரேட்டு ($KNO_3$) வெடி மருந்திலும் இறைச்சிக் காப்பிலும் மருந்துகளிலும் பயன்படும் வெண் படிக உப்பு.

**Samite:** பொன்னிழையாடை: பொன்னிழைகள் இடையிட்டு நெய்யப் பெற்ற இடைக்கால உயர் ஆடை வகை.

**Sandal wood:** சந்தன மரம்: நறுமணமுடைய நெருக்கமான அகவரி வண்ண நெருக்கமுடைய கனமான மரம். கிழக்கிந்தியத் தீவுகளில் தோன்றியது.

**Sand blasting:** மணல் ஊதைப் பீற்று: கண்ணாடி முதலியவற்றின் மேற்பரப்பைத் திண்ணிதாக்க வழங்கப்பெறும் அழுத்த வளியுடன் கூடிய மணல் பீற்று.

**Sanding:** மணல் மெருகு: மேற்பரப்புகளுக்கு மணல் மூலம் மெரு கூட்டுதல்.

**Sand paper:** உப்புத் தாள்: கூர்மையான மணல் பூசிய தாள். இது உராய் பொருளாக, முக்கியமாக மரவேலைப்பாடுகளின் மேற்பரப்புகளுக்கு மெருகிடு பொருளாகப் பயன்படுகிறது. இதனைப் "பளிங்குத்தாள்" என்றும் கூறுவர்.

**Sandstone:** மணற்பாறை: சிலிக்கா அய ஆக்சைடு, சுண்ணாம்புக் கார்பனேட்டு ஆகியவற்றின் மூலம் பிணைக்கப்பட்டு அழுத்த முற்ற மணல் அடுக்குக்கல் கட்டிடக் கல்லாகப் பயன்படுகிறது. இயற்கை மணற்பாறையினால் சாணைக் கற்கள் செய்யப்படுகின்றன.

**Sanitary:** சுகாதாரம்: உடல் நல மேம்பாட்டிற்குரிய; சாக்கடைக் கழிவுநீக்கத்திற்குரிய.

**Sanitary sewer:** சாக்கடை நீர்க் கால்: கழிவு நீரை வெளியேற்றுவதற்கான குழாய் அல்லது சுரங்க வழி.

**Sanitation:** (பொறி.) சாக்கடை நீக்கம்: சாக்கடைக் கழிவு நீக்கத் திற்குரிய ஏற்பாடுகள்.

**Sans-serif:** (அச்சு.) மொட்டை அச்சுரு: அச்சுருவகையில் ஓரங் கட்டாத மொட்டை முனையுடைய அச்சுரு.

**Sap:** தாவர உயிர்ச் சாறு: தாவரங் களின் வளர்ச்சிக்கு இன்றியமை யாத சாறு.

**Sap wood:** மென்மரம்: புறமரத் தின் மென்மையான உட்பகுதி.

**Sash:** (க.க.) பலகணிச் சட்டம்: பல கணியின் சறுக்குக் கண்ணாடிச் சட்டப் பலகை.

**Sesh chain:** பலகணிச் சட்ட சங்கிலி: சறுக்குப் பலகணிச் சட்டம் இயக்கும் பளுவேந்திய சங்கிலி.

**Sash weight:** பலகணிச் சட்ட இயக்கு பளு: சறுக்கு பலகணிச் சட் டத்தின் இயக்கு பளு.

**Satellite:** துணைக் கோள்: ஒரு கோளைச் சுற்றிச் சுழலும் சார்புக் கோள்.

**Satellite television station:** செயற்கைக் கோள் தொலைக்காட்சி நிலையம்: ஒரு தொலைக்காட்சி நிலையத்தில் நேரடி ஒளிபரப்பு நிகழ்ச்சிகள் அனைத்தும் ஒரே இணைவனத்திலிருந்து ஒளிபரப்பப் படுமானால் அதனைச் செயற்கைக் கோள் தொலைக்காட்சி நிலையம் என்பர். இந்த நிலையம் இணை வன நிகழ்ச்சிகளோடு, உள்ளூர்ச் செய்திப் படங்களையும் ஒளிபரப் பும். இந்நிலையம், ஒரு தலைமை நிலையத்தின் ஒளிப்பரப்புப் பகு திக்குவெளியேயுள்ள சமுதாயத்திற் கும் பணிபுரிய முடியும்.

**Satin wood:** முதிரை மரம்: ஒரு வகை மென்மரம். முக்கியமாக இலங்கையில் காணப்படுகிறது. கனமானது; வெண்மைகலந்த நிற முடையது. மெல்லிழை போன்ற கோடுகளுடையது. உயர்தரமான அறைகலன்கள் தயாரிக்கப் பயன் பயன்படுகிறது.

**Saturated steam:** பூரித நீராவி: ஒரு குறிப்பிட்ட அழுத்த நிலைக்கு நேரிணையான கொதி நிலை வெப் பத்தில் உள்ள நீராவி.

நீராவி எந்த நீரிலிருந்து உண் டாகிறதோ அந்த நீருடன் தொடர்பு கொண்டுள்ள நீராவி.

**Saturation:** (மின்.) செறிவு நிலை: பொருளில் மின்னாற்றல் செறிந் துள்ள நிலை. இந்த நிலையை எட்டியபின் ஆம்பியரை அதிகரித் தாலும் காந்தவிசைக் கோடுகளின எண்ணிக்கை அதிகரிப்பதில்லை.

**Sawhorse:** (மர. வே.) அறுப் பணைப்புச் சட்டம்: தச்சர்கள் பயன் படுத்தும் வழக்கமான சாய்கால்.

சில சமயம் இது 'X' வடிவ சட்டத்தையும் கொண்டிருக்கும்.

**Saw set:** (மர.வே.) ரம்ப நெளிவுக் கருவி: ரம்பப் பற்களை இரு பக்கமும் திருப்புவதற்கான கருவி.

**Saw toothed skylight:** (க.க.) ரம்பப்பல் சாளரம்: இரம்பப் பற்களின் வடிவத்தில் முகப்புடைய மேல்தளச் சாளரம்.

**Saw trimmer:** (அச்சு.) ரம்பக் கத்திரி: அச்செழுத்து வரிப்பாளங்களையும், தகடுகளையும் செம்மையாகக் கத்திரித்து விடுவதற்குப் பயன்படும் ஒருவகை எந்திரம்.

**Sawyer:** (மர.வே.) மரம் அறுப்பவர்: ஆலையில் அல்லது களத்தில் ஒரு வட்ட ரம்பத்தை இயக்கி மரம் அறுப்பவர்.

**Scaffold:** (க.க.) சாரக்கட்டு: கட்டுமானப் பணிகளில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளர்களுக்கு ஆதாரமாகப் பயன்படும் தற்காலிகக் கட்டமைப்பு.

**Scagliola:** (க.க.) செயற்கை ஒப்பனைக்கல்: ஒப்பனைக்கல் போலியாகச் செய்யப்படும் பசை நீற்றுக் கலவை வேலைப்பாடு. தளங்கள், தூண்கள் முதலியவற்றை அழகுபடுத்துவதற்கும், பிற உள் அலங்கார வேலைகளுக்கும் பயன்படுகிறது.

**Scale:** அளவுகோல்: (1) சிறு அளவுக் கூறுகள் குறிக்கப்பட்ட அளவுகோல்.

(2) குறியீட்டு முறையின் அடிப்படையிலான அளவுத் திட்டம்.

(3) உலோகக் கலையில் அளவுப் படிநிரை

(4) உலோகக் கலையில் ஒரு வார்ப்படத்தின் புறப்பூச்சு.

**Scaled drawing:** படி விழுக்காட்டு வரைபடம்: ஒரு பணியினை சிறிய அளவு வீதங்களில் வரைந்த வரைபடம்.

**Scalene:** (கணி.) ஒவ்வாச்சிறைமுக் கோணம்: எந்த இரண்டு பக்கங்களும் சமமாக இல்லாத ஒரு முக்கோணம்.

**Scalene cone:** அடிசாய்வு கூம்பு: அச்சு அடியை நோக்கிச் சாய்ந்துள்ள கூம்பு.

**Scalene cylinder:** அடிசாய்வு நீள் உருளை: அச்சு அடியை நோக்கிச் சாய்ந்துள்ள நீர் உருளை.

**Scanning:** தொலை நுண்ணாய்வு: தொலைக்காட்சியில் தொலைக் கனுப்பும்படி நிழல்-ஒளிக்கூறுகளைத் தனித்தனியாகப் பிரித்தெடுத்து, இடமும் வலமும், மேலும் கீழுமாக கடும் வேகத்தில் செலுத்தி, உருக்காட்சி தோன்றும்படி செய்தல்.

**Scanning line:** நுண்ணாய்வுக் கோடு: தொலைக் காட்சியில்

தொலைவுக்கனுப்பப்படும்படத்தின் இடம் வலம் செல்லும் ஒரு கோடு.

**Scantling:** (க.க.) மரப்பட்டியல்: 5 அங்குலத்திற்குக் குறைவான அகலத்திட்டங்களையுடைய மரப்பட்டியல்.

**Scarehead:** பரபரப்புத் தலைப்பு: செய்தித்தாள்களில் பரபரப்பூட்டக் கூடிய கொட்டை எழுத்துச் செய்தித் தலைப்பு.

**Scarfing:** சமநிலைப் பொருத்தீடு: மரம், தோல், உலோகம் முதலிய வற்றில் வாய்களைச் சமநிலைப் படுத்தி ஒன்றாக இணைத்துப் பொருத்துதல்.

**Scientific:** அறிவியல் முறையான: அறிவியல் சார்ந்த திட்பநுட்பம் வாய்ந்த.

**Sclerometer:** (பொறி.) உலோகத் திண்மைக்கணிப்புமானி: உலோகங்களின் கடினத் தன்மையைக் கணித்தறிவதற்கான ஒரு கருவி. உலோகத்தின் மேற்பரப்பில் இதனை ஒரு முறை முன்னேயும் பின்னேயும் பாய்ச்சிக் கிடைக்கும் சிம்பினை ஒரு தர அளவுடைய சிம்புடன் ஒப்பிட்டுப் பார்த்துக் கடினத் தன்மை கணக்கிடப்படுகிறது.

**Sconce:** மெழுகுத்திரி: அலங்கார மெழுகுவர்த்தி விளக்கு.

**Scored cylinders:** உள்வரி நீள் உருளை: (தானி. எந்.) உந்து ஊர்தி போன்றவற்றின் எஞ்சின்களிலுள்ள பளபளப்பான நீர் உருளைகளின் சுவர்களில், நீர் உருளைக்குள் அயல் பொருள்களை உட்செலுத்துவதற்காக உள்வரியிடுதல். இவ்வாறு உள்வரியிட்ட உருளைகள் உள்வரி நீள் உருளைகள் எனப்படும்.

**Scoring of pistons and cylinders:** (தானி.) உள்வரியிடல்: நீள் உருளைகளுக்கும், சுழல் தண்டுகளுக்கும் முறையாக மசகிடுவதற்காக உள்வரியிடுதல்.

**Scotia:** (க.க.) தூண்டிக் குழிவு: ஒரு தூணின் அடிப்பகுதியில் காணப்படும் குழிவான வார்ப்படம்.

**Scrap:** உலோகச் சிம்பு: இரும்பு வார்ப்படத் தொழிற்சாலை அடுப்பில, பயனற்றதென ஒதுக்கித் தள்ளப்படும் தேனிரும்புத் துண்டுகள். இத்துண்டுகளை மீண்டும் உருக்கலாம்.

**Scrap iron:** (உலோ.) துண்டு இரும்பு: ஒதுக்கித் தள்ளப்படும் இரும்பு அல்லது எஃகுத் துண்டுகள் அனைத்தையும் இது குறிக்கும். இதனைப் புதிய எஃகு தயாரிக்கப் பயன்படுத்துவார்கள்.

**Scraper:** செதுக்குக் கருவி: மரத்தின் பரப்புகளை வழவழப்பாக்குவதற்குப் பயன்படுத்தப்படும் எஃகினாலான சுரண்டு கருவி. உலோகத் தொழிலாளர்களும் இதனைப் பயன்படுத்துவர்.

**Scraper plane:** (மர. வே.) செதுக்கு இழைப்புளி: இழைத்து

மெழுகுமழப்பாக்குவதற்குப் பயன்படும் இழைப்புக் கருவி. தளங்களையும், பெரிய பரப்புகளையும் மட்டப்படுத்துவதற்கும் இது பயன்படுகிறது.

**Scratch:** கீறல்: மேற்பரப்பில் ஏற்படும் கீறல், கீறுதடம் அல்லது கீற்றுவரி.

**Scratch awl:**(பட்.)கீற்றுத்தமருசி: உலோகத்தில் குறியிடுவதற்குப் பயன்படுத்தப்படும் கூர்முனையுடைய எஃகுத் தமருசி.

**Scratch brush:** கீற்றுத் தூரிகை: உலோகப் பரப்புகளிலிருந்து அயல் பொருள்களை அகற்றுவதற்குப் பயன்படுத்தப்படும் கம்பியிலான தூரிகை.

**Scratch coat:** (க.க.)கீற்றுப்பூச்சு: அடுத்துவரும் பூச்சுகளுக்குப் பிடிப்பு ஏற்படுத்துவதற்காகக் கீற்றுக் கீற்றாகப் பூசப்படும் முதற்பூச்சு.

**Screen:** (அச்சு.) கண்ணாடித் திரை: ஒளி, நிழல் மாறுபாட்டளவைக் காட்டுகின்ற நுண்பதிவுப் படச் செதுக்ககோவிய அச்சடிப்பில் பயன்படுத்தப்படும் வரியிட்ட கண்ணாடித் திரை.

**Screenings:** சல்லடைக் கழிப்பு: சிப்பங்கட்டவும் அட்டை போடவும் பயன்படும் மலிவான காகிதம்.

**Screw:** (எந்.) திருகாணி: மேல்வரி அல்லது அகல்வரிச்சுற்றுடைய திருகுசுரை.

**Screw adjusting caliper:** (எந்.) திருகு விட்டமானி: திருகு அமைப்புடைய வட்டமானி. இதில் நுட்பமானச் சீரமைவுக்கேற்ற வில்சுருள் அமைந்த திருகாணி அமைப்பு உள்ளது.

**Screw cutting lathe:** (எந்.) திருகுவரிக் கடைசல் எந்திரம்: திருகாணி வரிகளை வெட்டுவதற்கேற்றகடைசல் எந்திரம்.

**Screw driver:** திருப்புளி: திருகாணிகளின் கொண்டையிலுள்ள வரிப்பள்ளத்தில் நுனியை வைத்துத் திருப்புவதற்கான எஃகுக் கருவி.

**Screw jack:** (பொறி.) திருகு கோல்: வண்டிச்சக்கர இருசினைத் தூக்குவதற்கான திருகு நிலை உதை கோலமைவு.

**Screw plate:** (எந்.) திருகுவெட்டுத் தகடு: திருகுபுரிகளை வெட்டுவதற்கான துளைகளையுடைய எஃகுத் தகடு.

**Screw threads:** (எந்.) திருகுபுரி: திருகாணிச் சுரையின் உட்சுற்றுத் திருகுபுரி.

**Scribe awl or scriber:** வரை கோல்: மரக்கட்டை, செங்கல் முதலியவற்றில் கோடுகள் வரைவதற்கான கூர்மையான கருவி.

**Script:** (அச்சு.) அச்சுருக்கையெழுத்து: கையெழுத்து போன்று வடிவமைத்த அச்சுரு.

**Scroll:** சுருள் போதிகை: சுருள்வடி

அணியொப்பனை செய்த போதிகை.

**Scroll saw:** (மர.வே.) மெல் லிழை வாள்: சித்திர அறுப்புவேலை யில் மெல்லிய பலவகை அட்டை களை அறுக்கப் பயன்படுத்தப் படும் ஒடுங்கிய இழைவாள்.

**Scroll shears:** (உலோ.வே.) சுருள் கத்திரி: ஒழுங்கற்ற வடிவு களை சீராக வெட்டுவதற்காக வடி வமைக்கப்பட்ட, கையினால் இயக் கக் கூடிய கத்திரி.

**Scroll work:** சுருளொப்பனை: மென்தோல் சுருளில் செய்யப்படும் ஒப்பனை வேலைப்பாடு.

**Scutcheon or escutcheon:** காப் புத் தகடு: சாவித் துளையில் சுழ லும் காப்புத் தகடு.

**Sea coal:** (வார்.) கடல் நிலக்கரி: நியூகாசில் என்னுமிடத்திலிருந்து கடல் மூலம் முன்பு கொணரப்பட்ட மென்மையான நிலக்கரி.

**Sealing compound:** (மின்.) காப் புப் பொருள்: சேம மின்கலங்களில் அமில மின்பகுப்பான்கள் சிந்தா மல் தடுப்பதற்காக மின்முனைகளில் பயன்படுத்தப்படும் பிளாஸ்டிக்கி னாலான, அமிலத்தை எதிர்க்கக் கூடிய, மின்கடத்தாத கூட்டுப் பொருள்.

**Sealing wrappers:** காப்பு உறைக் காகிதம்: சிப்பங் கட்டுவதற்காக வும் காப்பு உறையிடுவதற்காகவும் பயன்படும் பளபளப்பான காகிதம்.

**Seam:** முட்டுவாய்: ஓர் உலோகத் தகட்டின் ஒரு முனை இன்னோர் உலோகத் தகட்டின் மடித்த முனையுடன் இணைத்துப் பொருத் திய முட்டுவாய்.

**Seaming iron:** (உலோ.வே.) முட்டுவாய் இரும்பு: உலோகத் தகட்டு வேலையின் வரிப்பள்ளம் வெட்டுவதற்குப் பயன்படும் கருவி.

**Seam welding:** முட்டுவாய்ப் பற்ற வைப்பு: ஓர் உலோகத் தகட்டின் ஒரு முனையை இன்னோர் உலோ கத் தகட்டின் மடித்த முனையுடன் இணைத்துப் பற்றவைக்கும் முறை.

**Seaplane:** (வானூ.) முங்கீர் விமா னம்: கடலிலிருந்தே ஏறி இறங்கும் அமைப்புடைய வானூர்தி.

**Seasoning modeling:** பதப்படுத் திய உருப்படிவம்: வார்ப்படங் களுக்கு அரைச்சாந்து உருப்படி வங்களை உருவாக்கும் முறை. இதில் வார்ப்படங்களும், ஊன் பசை வார்ப்படங்களுக்கான கூடு களும் உறிஞ்சுவதைத் தடுக்கும் ஒரு பொருளினால் செய்யப்படும்.

**Seasoning of lumper:** (மர.வே.) வெட்டுமரப் பதப்பாடு: மரத்தைச் சூளையில் உலரவைப்பதன்மூலம் பதப்படுத்துதல். இது வெட்டு மரத் தைக் காற்றில் காய விடுவதன் மூலம் இயற்கையாகப் பதப்படுத்து வதிலிருந்து மாறுபட்டது.

**Secant:** (கணி.) வெட்டுக்கோடு:

செங்கோண முக்கோணத்தின் பிறிது கோண வகையில் சாய்வரை அடி வரைகளின் விகிதம்.

**Secondary:** (மின்.) கிளர்மின் கம்பிச்சுருள்: கிளர் மின்னோட்டத்தைத் தாங்கிச் செல்லும் கம்பிச் சுருள். இது, 'அடிப்படைக் கம்பிச் சுருள்' எனப்படும் மற்றொரு மின் கம்பிச் சுருளுடன் காந்த முறையில் இணைக்கப்பட்டிருக்கும்.

**Secondary colour:** (அச்சு.) கலவை நிறம்: சிவப்பு, மஞ்சள், ஊதா ஆகிய முதன்மை நிறங்களில் இரு நிறங்களைக் கலப்பதால் உண்டாகும் நிறம். மஞ்சளையும், ஊதாவையும் கலப்பதால் பச்சை நிறம் உண்டாகும்.

**Secondary-type glider:** (வானூ.) துணைமைச் சறுக்கு விமானம்: முதனிலைச் சறுக்கு விமானத்தை விட அதிக வானூர்தி இயக்கத் திறனுடையதாக வடிவமைக்கப் பட்ட சறுக்கு விமானம்.

**Second-class lever:** (எந்.) இரண்டாம் நிலை நெம்புகோல்: ஆதாரத்திற்கும் விசைக்குமிடையே எடையை வைப்பதற்குள்ள நெம்பு கோல்.

**Seconds :** மட்டச்சரக்குகள் : முதல் தரமாக அல்லாத சரக்குகள். அச்சுத் தொழிலில் "மட்டச் சரக்குகள்" என்பது காகிதத்தைக் குறிக்கும்.

**Section :** (க.க; எந்.) வெட்டுவாய் வரைபடம் : ஒரு பொருள் செங்குத்தாக அல்லது கிடைமட்டமாக வெட்டப்பட்டது போன்று, அப்பொருளின் உள்ளுறுப்புகளைக் காட்டும் வரைபடம்.

**Sector :** (கணி.) வட்டகோணப் பகுதி : இருபுற ஆரை எல்லையுடைய வட்டக்கூறு.

**Sediment :** படிவு : ஒரு திரவத்தின் அடியில் வண்டலாகப் படியும் மண்டி.

**Sedimentary rock :** (கணி.) படிவுப் பாறை : நீருக்கு அடியில் அழுத்தம் காரணமாக உண்டாகும படிவியற்படுகைப் பாறை.

**Segment :** வெட்டுக்கூறு : ஒரு வட்டத்தின் நாண் வரைக்கும் அதன் வில்வரைக்கும் உள்ளீடான பகுதி.

**Segmental arch:** (க.க.) பிறை வில் வளைவு : மையம் உள்ளடங்கலாக இல்லாத பிறை வில் வளைவு.

**Seismagraphy:** (இயற்.) நிலநடுக்கக்கருவி : நில நடுக்கத்தைத் தானாகவே பதிவு செய்யக்கூடிய ஒரு கருவி.

**Seismogram :** (இயற்) நிலநடுக்கப் பதிவு: நிலநடுக்கக் கருவி தரும் நிலநடுக்கப் பதிவு.

**Seismography :** (இயற்.) நிலநடுக்க ஆய்வியல் : நிலநடுக்கம் பற்றிய ஆய்வியல் துறை.

**Selectivity :** தேர்திறம்:

வானொலிகளின் பெறலமைவில் குறிப்பிட்ட நீள அலையினை மட்டும் பற்றிச் செயற்படும் திறம்.

**Self - acting :** தற் செயற்பாடு : புறத்தூண்டுதல் இல்லாமல் தானாகவே செயற்படுதல்.

**Self - excitation :** (மின்.) தற் கிளர்ச்சி : நேர்மின்னோட்ட மின்னாக்கியின் இணைப்புகளிலிருந்து பெறும் நேர்மின்னோட்டத்தினை, அதன் மின் காந்தப்புலனுக்கு மின்னோட்டம் அளிப்பதற்காக அளித்தல்.

**Self - excited :** (மின்') தற் கிளர்ச்சி மின் பொறி : தனது புலத்திற்கு அளிப்பதற்காகத் தனது சொந்த மின்னோட்டத்தை உண்டாக்கிக் கொள்ளும் பொறி.

**Self - excited alternator :** (மின்.) தற்கிளர்ச்சி மாறு மின்னாக்கி : இது ஒரு மாற்று மின்னோட்டம் உண்டாக்கும் கருவி. இது தனது முதன்மைப் புலங்களுக்கு காந்தமூட்டுவதற்காக, நேர்மின்னோட்டம் உண்டாக்கும் பலவழிமுறைகளில் ஒன்றின் மூலம் நேர்மின்னோட்டத்தை உண்டாக்குகிறது.

**Self-hardening steel:** (உலோ.) தானாகக் கெட்டிப்படுத்திய எஃகு : காற்றில் குளிர்விப்பதன் மூலம் தானாகக் கெட்டிப்படுத்தப்படுத் ஒரு கலவை எஃகு. இது கருவிகள் செய்வதற்குப் பயன்படுகிறது.

**Self-induced current** (மின்.) தற்தூண்டல் மின்னோட்டம் : ஒரு மின்கம்பிச் சுருளில் காந்தப்புலம் திசையில் அல்லது செறிவில் மாற்றமடையும்போது அதே கம்பிச் சுருளில் அமைந்துள்ள தந்தூண்டல் மின்னியக்கு விசையினால் உண்டாகும் மின்னோட்டம்.

**Self-inductance :** (மின்.) தற் தூண்டம் : ஒரு மின் சுற்று வழியில் கம்பிச்சுருளின் திருப்பங்களிடையே நிகழும் மின்காந்தத் தூண்டல் என்னும் நிகழ்வு.

**Self-induction:** (மின்.) தற் தூண்டல்: ஒரு மின் கம்பிச்சுருளின் காந்தப்புலம் அதன் மீதே ஏற்படுத்தும் தூண்டல் விளைவு.

**Selvage :** ஆடை விளிம்பு : ஆடை கிழிப்பதற்குரிய திண்ணிய ஊடுவிளிம்பு.

**Semaphore :** விளக்கக் கைகாட்டி : அசையும் கைகளும் சைகை விளக்கமைப்பும் கொண்ட இருப்புப் பாதைக் கைகாட்டி மரம்.

**Semichord :** அரைநாண் : ஒரு வட்ட வரையின் நாணின் நீளத்தில் சரி பாதி.

**Semicircle:** அரைவட்டம்: வட்டத்தின் சுற்றுவரைக் கோட்டுக்கும் விட்டத்திற்கும் உள்ளடங்கிய அரைவட்டம்.

**Semicircular arch:** (க.க.) அரை வட்டக் கவான்: வளை முகட்டின் உட்புற வளைவு அரைவட்டமாகவுள்ள கவான்.

**Semi transparent:** ஓரளவு ஒளி ஊடுருவும் பொருள்: ஒளி ஓரளவு ஊடுருவிச்செல்லக்கூடிய பொருள். இதில் பொருள் அறைகுறையாக வே தெரியும்.

**Sensible heat :** *(பொறி.)* உணர் வெப்பம் : வெப்பமானி மூலம் அளவிடக்கூடிய வெப்பம். இது உட்செறி வெப்பத்திற்கு மாறா னது.

**Separately excited generator :** *(மின்.)* பிறிதின் கிளர்ச்சி மின் னாக்கி : தனது காந்தப் புலத் திற்குத் தேவையான மின்னோட் டத்தை அதற்கு வெளியிலுள்ள ஆதாரத்திலிருந்து எடுத்துக் கொள்ளும் ஓர் எந்திரம்.

**Separators :** *(தானி; மின்.)* பிரிப்புக் கருவி : ஒரு மின்கலத்தின் தகடுகளுக்கிடையே மின்காப்பு களாகப் பயன்படுத்தப்படும் கருவி. இவை மரத்தினாலோ வேறு சிறப் புப் பொருள்களாலோ செய்யப்பட் டதாகவும், மின்பகுப்புப் பொரு ளின் சுழற்சியை அனுமதிக்கக் கூடிய நுண்துளைகளை உடைய தாகவும இருக்கும்.

**Sepia :** *(வண்.)* பழுப்பு வண்ணம்: சிவப்பு நிறங்கலந்த பழுப்பு வண் ணம்.

**Septic tank** *(கம்.)* நச்சுத்தடை மலக்குழி : திடக்கழிவுப் பொருள் களை மட்கும்படி செய்வதற்கான ஓர் அமைப்பு. இதில் கழிவுப் பொருள்களை இயற்கையான பாக்டீரிய நடவடிக்கை மூலம் திர வமாகவும், வாயுவாகவும்மாற்றி மட் கும்படி செய்யப்படுகிறது. இது முழுமையாகச் சுகாதார முறைப் படி அமைந்ததாகும்.

**Sequence :** வரிசை முறை : திட்டமிட்ட நிரலொழுங்கு முறை.

**Serial taps :** *(எந்.)* : தொடர் குழாய்கள் : 1, 2, 3 என்ற வரிசை அமைக்கப்பட்ட தொடர்கள். 1 ஆம் எண் குழாய் கூம்பு வடிவில் இருக்கும். 2ஆம் எண் குழாய் நுனியில் மட்டும் சற்றுக் கூம்பி யிருக்கும். 3ஆம் எண் குழாய் திருகிழை அமைந்ததாக இருக்கும்

**series :** *(மின்.)* மின்கல அடுக்கு வரிசை : ஒன்றிலிருந்து இன் னொன்றுக்கு வரிசையாக மின் னோட்டம் பாயுமாறு அமைந்த மின்கல அடுக்கு வரிசை.

**Series circuit :** தொடர்மின் சுற்றுவழி :

**Series dynamo** *(மின்.)* தொடர் நேர் மின்னாக்கி : இது ஒரு நேர் மின்னாக்கி, இதில் மின்னகமும், புலமும் உள்முகமாகத் தொடர் வரிசையில் இணைக்கப்பட்டிருக் கும்.

**series motor :** *(மின்.)* தொடர் மின்னோடி : மின்னகமும் புலமும் தொடர்வரிசையில் இணைக்கப் பட்டுள்ள ஒரு நேர்மின்னாக்கி மின் உயர்த்திகள் போன்ற வெவ் வேறு பாரங்கள் ஏறும் சாதனங் களில் இது பயன்படுத்தப்படுகிறது.

பாரத்தின் ஏற்ற தாழ்வுக்கேற்ப இதன் வேகம் அமையும்.

**Series parallel circuit :** (மின்.) தொடர் இணைமின்சுற்று வழி : தொடர் மின்கல அடுக்கு வரிசையில் இணைக்கப்பட்டுள்ள இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட இணை மின்சுற்றுவழிகளைக் கொண்ட ஒரு மின் சுற்றுவழி.

**Series resonance :** தொடர் ஒத்திசைவு.

**Series welding :** தொடர் பற்றவைப்பு : மின் தடையுடைய பற்றவைப்பு முறை. இதில், தனியொரு பற்றவைப்பு மின்மாற்றி மூலம் இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட பற்றவைப்புகளைச் செய்யலாம். இதில் ஒவ்வொரு பற்றவைப்பின் வழியாகவும் மொத்த மின்னோட்டமும் செல்லும்.

**Series wound generator:** தொடர் சுருணை மின்னாக்கி:

**Serif:** (அச்சு.) முனைக்கட்டு: எழுத்துருவில் விளிம்பிற்குக் கட்டுருக் கொடுக்கும் நுண்வரைமானம்.

**Serration:** இரம்பப் பல் விளிம்பு: ரம்பத்தில் உள்ளது போன்ற பல் விளிம்பு அமைப்பு.

**Service main:** மின்நுகர்வாய்.

**Service pipe:** நீர்பாய் குழாய்: நீர்-காற்று வகையில் முதன்மைக் குழாயிலிருந்து கட்டிடத்திற்குச் செல்லும் தனிக்குழாய்.

**Service switch:** (மின்.) கட்டுப்பாட்டு விசை: ஒரு கட்டிடத்தின் மின் கருவிகள் முழுவதையும் கட்டுப்படுத்தும் வகையில் அக்கட்டிடத்தின் மின் கம்பி அமைப்பின் நுழைவாயில் நுனியில் செருகப்பட்டுள்ள இணைப்பு விசை.

**Service tank:** (வானூ.) எரிபொருள் கலம்: ஒவ்வொரு மின் நிலையத்திற்கு அருகிலும் அமைந்துள்ள நிலையான எரிபொருள் கலம். இதனுள் மற்ற கலங்களிலிருந்து எரிபொருள் இறைத்துச் செலுத்தப்படும். இக்கலத்திலிருந்து எஞ்சினுக்கு எரிபொருள் எடுத்துக் கொள்ளப்படும்.

**Service wires:** (மின்.) மின் வழங்கு கம்பிகள்: ஒரு கட்டிடத்திலுள்ள மின் சுமையுடன் இணைந்த மின் வழங்கீட்டுக் கம்பிகளை ஒரு மின்மாற்றியிலிருந்து மின் வழங்கீட்டு ஆதாரத்துடன் இணைக்கும் மின்கம்பிகள்.

**Servo control:** (வானூ.) பணிப்புக் கட்டுப்பாடு: வளிவியக்கம் சார்ந்த அல்லது எந்திரவியல், இடைமாற்றீடு மூலம் விமானம் ஓட்டியின் முயற்சிக்கு ஆதாரவளிக்கும் வகையில் வடிவமைக்கப் பட்டுள்ள கட்டுப்பாட்டுச் சாதனம்.

**Servo motor:** பணிப்பு முன்னோடி.

**Ses quiplane:** (வானூ.) குறையலகுப் பரப்பு விமானம்: ஒரு சிறகின் பரப்பளவு இன்னொரு சிறகின் பரப்பளவில் பாதிக்கும் குறைவாக வுள்ள ஒருவகை இருதள விமானம்.

**Set screw:** (எந்.) சதுரத் திருகு: சதுர வடிவ அல்லது வேறு வடிவக்

கொண்டையுடைய சமதளங் கொண்ட திருகு. இது நகர்த்திச் சரியமைவு செய்யக் கூடிய உறுப்புகளை உரிய நிலையில் நிறுத்தி இறுக்குவதற்குப் பயன்படுகிறது. இது பெரும்பாலும் வெப்பப்பதனாக்கம் மூலம் தயாரிக்கப்படுகிறது.

**Set square:** முக்கவர்: செங்கோண முக்கோண வடிவ வரைகருவி.

**Setting hammer:** *(உலோ.)* பொருத்துச் சுத்தி: ஒருமுனை கூரிய முனையுடன் சாய்தளமான கொண்டையுடையதாகவும், இன்னொரு தட்டையான முனையுடையதாகவும் சதுரமான அடிக்கட்டையுடன் செய்த சுத்தி. இது முனைகளில் அல்லது கோணங்களில் வேலைப்பாடு செய்வதற்குப் பயன்படுகிறது.

**Settle:** விசிப்பலகை: உயர் சாய்மானமும் கைகளும் அடியில் அறைப் பெட்டிகளும் உடைய விசிப் பலகை.

**Settlement:** *(மர. வே.)* அமிழ்வு: நிலம், கட்டிடம், சுவர் ஆகியவற்றின் அமிழ்வு. பொதுவாக அடித்தளத்தின் வலுக்குறைவு, கட்டுமானப் பொருள்களின் தரக் குறைவு, பதப்படுத்தப்படாத மரம் ஆகியவற்றினால் இது ஏற்படுகிறது.

**Severy:** *(க.க.)* குவிமாடமோடு: பல்கெழு வளைவுக் குவிமாடமோட்டுப் பகுதி.



**Sevres:** சீனமங்கு: விலைமிகுந்த, சீனக்களிமண்ணினாலான அலங்கார மங்குப்பாண்டவகை.

**Sewer:** *(கம்.)* கழிவு நீர்க்கால்: நகரக் கழிவுநீர்க் குழாய்.

**Sextant:** *(கணி.)* மாலுமிக் கோணமானி: மாலுமிகள் பயன்படுத்தும் நிலப்பரப்பாய்வுக் கோணமானி.

அறுகோண வட்டப்பகுதி: வட்டத்தின் ஆறில் ஒரு பகுதி.

**Shackle:** *(எந்.)* சங்கிலிக் கொளுவி: ஓரளவு இயங்குவதற்கு அனுமதிக்கக் கூடிய, சங்கிலிப் பூட்டும் கொளுவி.

**Shackle bolt:** *(எந்.)* முளையில் கொண்டி: முளையில்லாத மாட்டும் தாழ்.

**Shade:** நிறத்திண்மை: வண்ணங்களில் செறிவான அல்லது மங்கலான வண்ணப்படி நிலை.

**Shaft:** *(எந்.)* சுழல் தண்டு: எந்திரங்களில் சுழலும் உறுப்புகளுக்கு ஆதாரமுள்ள சுழல்தண்டு.

**Shake:** மரவெடிப்பு: வெட்டுமரத்திலுள்ள ஒரு வெடிப்பு அல்லது முறிவு. இது மரத்தில் ஆண்டு வளையங்களுக்கிடையே ஒரு பிளவை உண்டாக்குகின்றன.

**Shakes:** *(க.க.)* அரை ஆப்பு: கையினால் செய்த அரை ஆப்பு.

**Shank:** (*எந்.*) எந்திரத் தண்டு: ஒரு கருவியை அதன் கைப்பிடியுடன் அல்லது குதை குழியுடன் இணைக்கும் உறுப்பு. கருவியின் வெட்டிடைப் பகுதி.

**Shaper:** (*எந்.*) வார்ப்புப் பொறி: உலோகங்களுக்கு உருவங்கொடுக்கும் கடைசல் வார்ப்புப் பொறி.

**Shapes:** (*பொறி.*) உலோக உருவப் படிவம்: உலோகத்தில் செய்யப் படும் பொருள்களின் உருமாதிரிப் படிவம்.

**Sharp sand:** (*க.க.*) கூர்மணல்: கூர்மையான கோணங்களையுடைய தூய்மையான மணல்.

**Shatter-proof glass:** (*தானி.*) உடையாத கண்ணாடி: அதிர்ச்சியைத் தாங்கி உடையாமலிருக்கும் ஒருவகைக் கண்ணாடி. இது இப்போது உந்து ஊர்திகளில் பயன்படுத்தப்படுகிறது. இது அதிர்ச்சியைத் தடுப்பதற்காக நடுவில் பிளாஸ்டிக் தகட்டினைக் கொண்ட இரு கண்ணாடித் துண்டுகளினாலானது.

**Shear:** (*பொறி.*) தடை விசை: இரு நேரிணையான விசைகள் எதிர்த்திசைகளில் இயங்குவதன் மூலம் ஒரு பொருள் வெட்டப் படுவதை எதிர்க்கும் தடை விசை.

கத்திரி: கத்திரிமூலம் வெட்டுதல்.

சறுக்குப் பெயர்ச்சி: அழுத்தங் காரணமாகப் பொருளின் மெல் லடுக்குகளின் ஒத்திணைவான சறுக்குப் பெயர்ச்சி.

**Shears:** உலோகக் கத்திரி: உலோகங்களைக் கத்திரிப்பதற்குப் பயன்படும் கருவி.

**Sheave wheel:** (*பொறி.*) கப்பிச் சக்கரம்: வட்டம் அல்லது சங்கிலி ஓடுவதற்கான பள்ளம் உடைய சக்கரம்.

**Sheeter lines:** (*குழை.*) நறுக்குக் கோடுகள்: பிளாஸ்டிக் தகடுகளில் கணிசமான பரப்பளவில் பரவலாகவுள்ள இணைக்கீறல்கள் அல்லது புடைப்பு வரைகள். இவை துண்டுகளாக நறுக்கும்போது ஏற்படும் கோடுகள் போன்று அமைந்திருக்கும்.

**Sheet metal gauge:** (*எந்.*) உலோகத்தகடு கன அளவுமானி: உலோகத்தகட்டின் கனத்தை அளவிடுவதற்குப் பயன்படும் ஒரு வகை மானி.

**Sheet metal working:** உலோகத் தகடு வேலைப்பாடு: தகட்டு வடிவிலுள்ள உலோகங்களில் செய்யப்படும் வேலைப்பாடுகள்.

**Sheet steel:** (*உலோ. வே.*) தகட்டு எஃகு: உலோகத்தகட்டு வேலைப்பாடு செய்யும் தொழிலாளர்கள் பயன்படுத்தும் மெல்லிய எஃகுத் தகடுகள். இதன் எண்ணிக்கையைக் கொண்டு இதன் கனம் கணக்கிடப்படும். கனமான தகடுகள் பாளங்கள் எனப்படும்.

**Sheet tin:** (*உலோ. வே.*) வெள்

ளீயத்தகடு : அரிமானத்தைத் தடுப்பதற்காக வெள்ளீய முலாம் பூசப்பட்ட மெல்லிய இரும்பு அல்லது எஃகுத் தகடு.

**Shellac :** அவலரக்கு : மெருகு எண்ணெய் செய்வதற்குப் பயன்படும் தகட்டு வடிவாக்கப்பட்ட அரக்கு. இது பொதுவாக வெள்ளை நிறத்திலும், ஆரஞ்சு நிறத்திலும் இருக்கும்.

**Shellac varnish :** அவலரக்கு வண்ணம் : அவலரக்கினை ஆல்கஹாலில் கரைத்துச் செய்யப்படும் வண்ணப்பொருள். இதனை வடிவமைப்பாளர்கள் பெரிதும் பயன்படுத்துகின்றனர்.

**Shell drill :** (எந்.) உட்புழைத் துரப்பணம் : சக்கரம் சுழலும் இருசு அல்லது கதிரில் செய்யப்படும் உட்புழையான துரப்பணம் செலுத்தப்படும் துவாரங்களை விரிவாக்கம் செய்வதற்குப் பயன்படுகிறது.

**Sherardize:** (உலோ.) நாகமுலாமிடல் : உலர் வெப்ப முறையில் மின்பகுப்பு மூலம் துத்தநாக முலாம் பூசுதல்.

**Sheraton :** அலங்கார நாற்காலி : பதினெட்டாம் நூற்றாண்டுப் பாணியிலமைந்த நாற்காலி. இதனை தாமஸ் ஷெராட்டான் (1751-1806) உருவாக்கினார்.

**Shifter forks :** (பட்.) இடமாற்றுக் கவடு : ஒரு வார்ப்பட்டையில் கால்பரப்பி, அதனைக் கப்பியை இறுக்குவதற்கும், இறுக்கமான கப்பியைத் தளர்த்துவதற்கும் பயன்படும் கரம்.

**Shim :** (எந்.) சிம்பு: பொறிப் பகுதிகளைப் பொருத்துவதற்குப் பயன்படும் மெல்லிய துணுக்கு.

**Shimmy** (தானி.) முன் சக்கர அதிர்வு : உந்து ஊர்திகளில் முன் சக்கரங்கள் அதிர்வுறுதல், சீரற்ற கம்பிச்சுருள் அமைப்பு, டயரில் சமனற்ற காற்றழுத்தம், மறையாணிகள் கழன்றிருத்தல் போன்ற பல காரணங்களால் ஏற்படலாம்.

**Shingles :** (க.க.) அரையாப்பு: கூரைகளையும், பக்கச் சுவர்களையும் மூடுவதற்குப் பயன்படும் மரத் துண்டுகளிலான அல்லது பிற பொருள்களினாலான சிறியதுண்டு. இதன் கனம் 1/16" முதல் 1/2" இருக்கும்.

**Shipping measure :** கப்பல் அளவை : ஒரு கப்பலின் உள் கொள்ளளவினை அளவிடுவதற்கான அளவு முறை.

1 பதிவு டன் = 100 கன அடி

கப்பல் சரக்குகளை அளவிடுவதற்கு :

1 யு. எஸ். கப்பல் டன் = 40 கன அடி = 32.143 யு.எஸ். புஷல்கள்

**Shipplane :** (வானூ.) கப்பல் விமானம் : கப்பலின் மேல் தளத்திலிருந்து ஏறவும், அதில் வந்து

இறங்கவும் ஏற்ற வகையில் கட்டப் பட்ட விமானம்.

**Shock :** (பொறி.) அதிர்வு : திடீரென விசையைப் பயன்படுத்து வதால் ஏற்படும் திடீர் அதிர்ச்சி.

**Shock absorber :** (வானூ.) அதிர்வு தாங்கி : விமானம் தரை யில் இறங்கும்போதும், தரையிலி ருந்து ஏறும்போதும் ஏற்படும் அதிர்ச்சியைத் தாங்கும் வகையில் அமைக்கப்பட்டுள்ள பகுதி.

**Shoe:** (எந்.) உராய்வு தடைக் கட்டை: ஊர்திகளின் சக்கர உராய்வு தடைக் கட்டை.

**Shopwork:** பட்டறைப்பணி: பட் டறையில் செய்யப்படும் எந்திர வியல் பணி.

**Shore:** (பொறி.) உதைவரிக்கால். கப்பல்கட்டு தளத்தில் கப்பலைத் தாங்கி நிற்கவைப்பதற்காக விலாப் பக்கத்தினைத் தாங்கிச் சாய்த்து நிற்கவைப்பதற்காக விலாப்பக்கத் தினைத் தாங்கிச் சாய்த்து நிறுத்தப் படும் வரிக்கைக் கட்டைகள்.

**Shoring:** (க.க.) உதை வரிக்காலி டுதல்: உதை வரிக்கால் கொடுத்து தாங்கி நிறுத்துதல்.

**Short circuit:** (மின.) மின் குறுக் குப் பாய்வு: மின் சுற்றுவழியில் குறுக்கு வெட்டாக நிலம்பாவி மின் னோட்டம் நின்றுவிடுதல்.

**Short circuit fault:** மின் முடிப்புப் பிழை:

**Short line:** குறுமின்வழி:

**Short-time duty:** (மின்.) குறுகிய நேர மின்னோட்டப் பணி: ஒரு குறிப் பிட குறுகிய காலத்திற்கு ஒரே சீரான அளவில் மின்னோட்டம் தேவைப்படும் பணி.

**Short ton:** குறு எடையளவு: இரண்டாயிரம் கல் எடை அளவு.

**Short-wave radio:** குற்றலை· பத்து முதல் நூறு மீட்டர் வரை நீளமுள்ள வானொலிச் சிற்றலை.

**Short weight:** குற்றெடை: ஒன் றுக்குக் குறைந்த அலகுடைய சில்லறை எடை.

**Shrine:** (க,க.) கோயில்: புனிதப் பேழை:

**Shrinkage:** (வார்.) அளவுக்குறுக் கம்: வார்ப்படத்தைக் குளிர்விக் போது அதன் வடிவளவையும், எடையையும், உருவத்தையும் துல்லியமாக இருத்தி வைத்துக் கொள்வதற்காகச் சுருங்கும் அளவு.

**Shrinkage crack:** (வார்.) சுருங்கு வெடிப்பு: வார்ப்படத்தின் உறுப்பு களை ஏற்றதாழ்வுடன் குளிர்விக் கும்போது வார்ப்படத்தில் உண் டாகும் வெடிப்பு.

**Shrink holes in castings:** (வார்.) வார்ப்படச் சுருங்கு துளை கள்: ஏற்றத்தாழ்வான குளிர்விப்பு மூலம் வார்ப்பட உறுப்புகளில்

ஏற்படும் பள்ளங்கள்.

**Shrinking:** (எந். வார்.) சுரிப்பு: குளிர்விக்ும்போது வார்ப்படத்தில் ஏற்படும் சுருக்கம்.

**Shroud:** (எந்.) தட்டை விளிம்பு: பல்லிணைச் சக்கரத்தின் பற்களின் முனைகளில், அப்பற்களின் வலிமையை அதிகரிக்க அல்லது வழுவழுப்பான இயக்கத்திற்கு வசதி செய்ய இணைக்கப்படும் அல்லது வார்ப்பு செய்யப்படும் தட்டையான விளிம்பு.

**Shunt:** (எந்.) இணை: இரு மின்னோட்டங்களை இடைத தடுத்திணைக்கும் மின்கடத்து கட்டை.

**Shunt for ammeter:** (மின்.) அம்மீட்டர் இணை: மின்மானி வழியாகச் செல்லும் மின்னோட்டத்தைக் கட்டுப் படுத்துவதற்காக அம்மீட்டருடன் இணையாகப் பொருத்தப்பட்டுள்ள தடை.

**Shunt cenerator:** (மின்.) இணை மின்னாக்கி; காந்தப்புலம் உண்டாக்குவதற்கான கம்பிச் சுருள், சுழலும் கரத்திற்கு இணையாகச் சுற்றப்பட்டுள்ள மின்னோட்டம் உண்டாக்கும் ஒரு எந்திரம்.

**Shunt-wound motor:** (மின்.) இணைச் சுருணை மின்னோடி: மின் சுமை மாறுபட்டிருப்பினும் மின்னோடியின் வேகம் ஒரே அளவில் இருக்கும் வகையில் பயன் படுத்தப் படும் மின்னோடி.

**Shutter:** ஒளித்தடுப்புத் திரை: ஒளிப்படக் கருவியில் ஆடிவழியாக ஒளி புகுந்து செல்வதைக் கட்டுப் படுத்துவதற்கான ஒரு சாதனம்.

**Side head:** (அச்சு.) ஓரத் தலைப்பு: அச்சுப் பக்கங்களில் மையத்தில் அல்லாமல் பக்கத்தின் ஓரத்தில் அச்சடிக்கப்படும் தலைப்பு.

**Side milling cutter :** (எந்.) பக்கத்துளை வெட்டுக் கருவி : பக்கங்களிலும் சுற்றுக் கோட்டிலும் வெட்டுவதற்குப் பயன்படும் குறுகிய முகப்புக் கொண்ட வெட்டுகருவி. சுழல் இருசு மீது இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட வெட்டு கருவிகளை அமைத்திருந்தால் அவை "கவட்டு வெட்டுக் கருவி" எனப்படும்.

**Side rake :** (எந்.) பக்கவெட்டுச் சரிவு : கடைசல் எந்திரம், இழைப்புளி, வடிவாக்கக் கருவிகள் போன்றவற்றின் மேல் முகப்பின் மீதான வெட்டு முனையிலிருந்து விலகிச் செல்லும் குறுக்குச் சரிவு.

**Siderite :** (உலோ.) சைடரைட் ($F_3CO_3$): குறைந்த அளவு இரும்பு கொண்ட ஓர் உலோகத் தாதுப் பொருள்.

**Side stick :** (அச்சு.) பக்க அச்சுக்கோப்புக் கட்டை : அச்சுப் பணியில் அச்சுப் படிவங்கள், நீர் அச்சுப் படிவங்கள், ஆகியவற்றை இறுக்குவதற்குப் பக்கவாட்டில் அடித்திறுக்கப் பயன்படும் ஆப்பு போன்ற நீண்ட கட்டை.

**Side stitch :** (அச்சு.) பக்கத் தைப்பான் : நூல்களைக் கட்டு மானம் செய்யும்போது, கட்டு மான முனை நெடுகிலும் எந்திரத் தின் மூலம் பொருத்தப்படும் கம்பி இழைகள்.

**Siding :** (க.க.) புடைமரம் : கட் டிடத்தின் புறச் சுவர்களுக்கு மெரு கூட்டுவதற்குப் பயன்படும் வெட்டு மரம்.

**Sieve :** (க.க.) சல்லடை : மணலிலிருந்து பெரிய கற்களைப் பிரித்தெடுப்பது போன்று, பொருள் களை வடிவளவுக்கேற்பப் பிரித் தெடுப்பதற்குப் பயன்படும் சலித் துப் பிரிக்கும் கருவி.

**Signal:** தொலைக்காட்சி சைகை : தொலைக் காட்சிகளை ஒளி பரப்பு வதில் இரு வகைச் சைகைகள் உண்டு. ஒன்று பட அல்லது ஒளிச் சைகை; இன்னொன்று ஒலிச் சைகை. ஒவ்வொரு சைகையும் அது ஒலியை அல்லது ஒளியை அனுப்புவதற்கேற்ப மின்னியல் தூண்டல்களைக் கொண்டிருக் கும்.

**Signature :** (அச்சு.) அச்சு முழுத்தாள் வரிசைக் குறி : ஒரு நூலில் பல்வேறு பிரிவுகள் எந்த வரிசையில் தொகுக்கப்பட்டுள்ளன என்பதைக் காட்டுவதற்காக ஒவ் வொரு பக்கத்திலும் அச்சிடப்படும் எண் குறியீடுகள்.

**Silica :** சிலிக்கா ($SiO_2$) : மண லிலும் பளிங்குக் கல் வகைகளிலும் பெருங் கூறாய் அமைந்த மணற் சத்து.

**Silicon :** (கனி.) சிலிக்கன் : உலோகமல்லாத, மணற்சத்து பெருமளவாகவுள்ள ஒரு தனிமம். கார்பனையும், பளிங்குக்கல்லையும் ஒரு மின் உலையில் சூடாக்குவதன் மூலம் இது கிடைக்கிறது. எஃகுத் தயாரிப்பில் கெட்டியாக்குவதற்கும் ஆக்சிகர நீக்கத்திற்கும் இது பயன் படுகிறது.

**Silicon carbide :** சிலிக்கன் கார்பைடு; மின் உலையில் மணல், கல்கரி, மரத்தூள் ஆகியவற்றை, உப்பை உருக்கு பொருளாகப் பயன்படுத்தி, உருக்குவதன் மூலம் இது பெறப்படுகிறது. இது மின் தடை உண்டாக்கும் ஒரு வகைப் பொருள். இது உயர்வெப்பம் ஏற் கும் பொருளாகவும் உராய்வுப் பொருளாகவும் பயன்படுகிறது. இது கார்போரண்டம், கிறிஸ்டோ லான் கார்போஃபிராக்ஸ், கார் போரா, கார்போரைட், கிரிஸ் டோலைட் என்று பல பெயர்களில் விற்பனை செய்யப்படுகிறது.

**Silicon copper :** (உலோ.) சிலிக்கன் செம்பு : துவாரங்கள், புடைப்புகள், இல்லாமல் சுத்த மான, திண்மையான வார்ப்படங் கள் தயாரிப்பதற்காக உருகிய செம்புடன் சேர்க்கப்படும் செம்பு மிகுதியாக அடங்கிய ஒரு வகை உலோகக் கலவை.

**Silicon steel:** (உலோ.) சிலிக் கன் எஃகு: 1% முதல் 2% வரை

சிலிக்கன் அடங்கிய எஃகு. இது கம்பிச் சுருள்கள் தயாரிக்கப் பயன் படுகிறது. 3% முதல் 5% வரை சிலிக்கன் அடங்கிய எஃகு காந்த இயல்புகளைக் கொண்டது. இது மின்காந்தங்களில் பயன்படுகிறது.

**Sill:** (க.க.) பலகணிப்படிக்கட்டை: கதவு அல்லது சன்னல் அடியி லுள்ள மரத்தினாலான அல்லது கல்லினாலான அடித்தளம்.

**Sill high:** (க.க) வாயிற்படிக்கல் உயரம்: தரைமுதல் வாயிற்படிக் கட்டைவரையிலான உயரம்.

**Silt:** வண்டல்: ஓடும் தண்ணீரி னால் படியும் நுண்ணிய சேற் றுப் படிவு.

**Silumin** (உலோ.) சிலுமின்: அலு மினியமும், சிலிக்கனும் கலந்து ஒருவகை ஜெர்மன் உலோகக் கலவை. மிகுந்த நெகிழ்திறனுடை யது; குறைவாகச்சுருங்கக்கூடியது. இதனால் நுட்பமான வார்ப்படங் கள் செய்யப் பயன்படுகிறது.

**Silver:** (வேதி.) வெள்ளி (Ag): வெள்ளை நிறம் கொண்ட, நெகிழ் திறன் கொண்ட, தகடாக்கக் கூடிய ஓர் உலோகம். இதன் உருகு நிலை 1750° F. ஒப்பு அடர்த்தி தூய்மைக்கேற்ப 10 முதல் 11.

**Silver solder:** வெள்ளிப் பற்றாசு: ஒரு பகுதி செம்பும், 2 முதல் 4 பகுதிகள் வரை வெள்ளியும் கொண்ட சிறு திற உலோகக் கல வை. அணிகலன் தயாரிப்போர் இத னை பற்றவைப்பதற்கான உலோக மாகப் பயன்படுத்துகின்றனர்.

**Silver white:** வெள்ளிப் பூச்சு: வெண் ஈயத்தின் தூய்மையான வகை. வெள்ளிப் பூச்சுக் கலவை யாகப் பயன்படுகிறது. தூளாக்கிய நேர்த்தியான சிலிக்கா.

**Similar poles:** (மின்.) ஒத்த துரு வங்கள்: ஒன்றையொன்று எதிர்க் கும் இரு காந்தத்துருவங்கள். ஒத்த துருவங்கள் எனப்படும். இவை காந்தமுறையில் ஒத்திருப்பவை.

**Simple equation:** (கணி.) நேர் சமன்பாடு: கணிதத்தில் விசைப் பெருக்க உரு இல்லாத சமன்பாடு.

**Simple machine:** (எந்.) விசை யாக்கமற்ற பொறி: விசை உற்பத்தி செய்யாமல், நெம்புகோல், புல்லி, சாய்தளம், திருகு, சக்கரம், அச்சு, ஆப்பு போன்றவற்றில் ஒன்றின் செயலினால் இயங்கும் பொறி.

**Sine:** (கணி.) நிமிர் வீதம்: செங் கோண முக்கோணத்தின்மீது பிறிதுகோண எதிர் வரை அடி வரை வீத அளவு.

**Sine bar:** (கணி.) நிமிர் வீத அளவு கருவி கோணங்களைத் துல்லிய மாக அளவிடுவதற்கான ஒரு சாதனம்.

**Single acting:** (எந்.) ஒரு திசை இயக்கம்: நீராவி எந்திர வகையில் உந்து தண்டின் ஒரு பக்கம் மட்டு மே நீராவி ஏற்கிற இயக்கம்.

**Single bar current transformer:** ஒற்றைச் சலாகை மின்னோட்ட மாற்றி,

**Single-cut file:** (*உலோ. வே.*) ஒரு திசை வெட்டுவரி அரம்: ஒரு திசை வெட்டுவரிகளை உடைய அரம். இதில், பற்கள் அரத்தின் முகப்புக்கு மூலைவிட்டமாக 65° கோணத்தில் ஒரே திசையில் இணையாக வெட்டப் பட்டிருக்கும்.

**Single layer winding:** ஒற்றையடுக்குச் சுருணை:

**Single phase:** (*மின்.*) ஒருநிலை மின் சுற்றுவழி: ஒரு நிலையான மாற்று மின்னோட்டச் சுற்றுவழி.

**Single-phase alternating current:** (*மின்.*) ஒரு நிலை மாற்று மின்னோட்டம்: ஒரு மாற்று மின்னாக்கியிலிருந்து கிடைக்கும் மின் விசை, ஒரு தொடர் சுருள். அல்லது சுருள்களிலிருந்து கிடைக்குமானால், அது ஒருநிலை மின்னோட்டம் எனப்படும்.

**Single phase induction motor** (*மின்.*) ஒரு நிலை தூண்டுமின்னோடி: மின்னகச் சுருணைகளில் எதிர்காந்தப் புலத்தை உண்டாக்கக்கூடிய களக்காந்த முறையைக் கொண்டுள்ள மாற்று மின்னோட்ட மின்னோடி.

**Single-pole switch:** (*மின்.*) ஒரு முனை விசை: ஒரு மின்சுற்றுவழியில் ஒரு பக்கத்தில் மட்டுமே திறப்பும் அடைப்பும் உடைய விசை.

**Single-thraed screw:** (*எந்.*) ஓரிழைத் திருகு: ஒரே திருகிழையினையுடைய திருகு. இதில் புரியிழை இடைவெளியளவும், முற்செல் தொலைவும் சமமாக இருக்கும்.

**Sinkage:** (*அச்சு.*) தொடக்கக் காலியிடம்: ஒரு நூலின் ஓர் அத்தியாயத்தின் தொடக்கத்தில் உள்ள காலி இடம்.

**Sinking speed:** (*வானூ.*) இறங்கு வேகம்: ஒரு குறிப்பிட்ட சம நிலையில் விமானம் உயரத்திலிருந்து சறுக்கிக் கீழே இறங்கும் வேக வீதம்.

**Sinter:** வெங்நீரருவிப் படிவம்: ஒத்திசைவான திடப்பொருளைத் துகள்களாக மாற்றுவதற்கு, அதனை உருக்காமல் சூடாக்குவதன் மூலம் மாற்றுதல்.

**Siphon:**(*எந். பொறி.*) தூம்பு குழாய்: மேல்வளைந்து புறக்கிளை மட்டம் தாழ்ந்துள்ள குழாய். வாயுமண்டலக் காற்றழுத்தத்தின் உதவியால் திரவங்களை உறிஞ்சி இழுப்பதற்கு இது பயன்படுகிறது.

**Siphon barometer:** தூம்பு குழாய் பாரமானி: அடி சிறிது மேல் வளைந்த அழுத்தமானி.

**Siphon-gauge:** நீர்த்தேக்க அழுத்த மானி: பாதரசம் அடங்கிய கவான் குழாய் மூலம் நீர்த்தேக்க அழுத்தம் காட்டும் அமைவு.

**Sisal fiber:** தாழையிழை: தாழை இனத்தைச் சேர்ந்த தாவ

ரத்திலிருந்து எடுக்கப்படும் நாரிழை, இது வலிமை வாய்ந்தது; நெடுநாள் உழைக்கக் கூடியது.

**Site** (க.க.) மனை : ஒரு கட்டிடம் அமைந்துள்ள அல்லது ஒரு கட்டிடம் கட்டப்படவிருக்கிற எல்லை வரையறுக்கப்பட்டுள்ள இடம்.

**Size :** (1) தாள் மெருகு : காகிதத்திற்கு மெருகுப் பசையிட்டு பளபளப்பாக்குவதற்குப் பயன்படும் பிசின் பொருள்.

(2) தாள் வடிவளவு : குறிப்பிட்ட நீள அகல அளவுடைய தாள் வடிவளவு.

**Size control :** வடிவளவுக் கட்டுப்பாடு : தொலைக்காட்சியில் கிடைமட்டத்திலும், செங்குத்தாகவும் படத்தின் வடிவளவை அதிகரிக்கவோ குறைக்கவோ அமைக்கப்பட்டுள்ள கட்டுப்பாட்டு அமைவு.

**Sizing :** வகைப்படுத்துதல் : காகிதத்தை, அதன் நீர் அல்லது மை எதிர்ப்புத் தன்மைக்கேற்ப வகை மாதிரிப்படுத்துதல்.

**Skeletonizing :** (அச்சு.) மென்கீற்று அச்சுருவாக்கம் : ஓர் அச்சுப் படிவத்தில் வண்ணப் பகுதிகளை நீக்கி விட்டு, மென்கீற்று அச்சுருவை மட்டும் பதிவு செய்வதற்காகப் பூட்டி வைத்தல். இதனால் பல்வேறு வண்ணங்களில் அச்சிட இயலும்.

**Skelp** (உலோ.) குழாய்த்தகடு குழாய்கள் செய்வதற்கான எஃகு அல்லது இரும்புத் தகடு.

**Sketch :** திட்ட உருவரை : முதல் நிலை மாதிரி; புனையா ஓவியம்; நினைவு வரிக்குறிப்பு.

**Skew :** (எந்.) ஓரச்சாய்வு : செங்கோணத்தில் இல்லாத சாய்வு.

**Skew back:** (க.க.) சாய்வுதைவு: கவானின் இருமுனைகளிலுமுள்ள சாய்வுதைவுப் பரப்பு.

**Skew back saw :** சாய்வுதைவு ரம்பம் : எடை குறைவாக இருக்கும் வகையில் முதுகுப்புறம் வளைந்துள்ள கைரம்பம்.

**Skew bridge:** சாய் குறுக்குப் பாலம்: இருபுறப் பக்கங்களிடையே சாய்வாகச் செல்லுங்கட்டுமானம்.

**Skew chisel:** (மர.வே.): சாய்வுளி: வெட்டு முனை செங்கோணமாக இல்லாமல், மையப்பகுதியிலிருந்து சாய்கோணத்தில் அமைந்துள்ள உளி.

**kew curve:** முப்படைச் சாய்வு வளைவு: தன் தளங்கடந்த சாய்வுடைய மூவளைவை வளைவு.

**Skew wheel :** சாய்பற்சரிவுச் சக்கரம் : ஒன்றையொன்று இயக்கும்படி அமைக்கப்பட்ட வேறு வேறு தளத்தில் சுழலும சாய்பற் சக்கர அமைவு.

**Skid:** (வானூ.) விமானச் சறுக்குச்

சக்கரம்: விமானம் ஓடுபாதையில் ஓடும்போது அல்லது தரையிறங்கும் போது அதற்கு உதவியாக இருக்கும் தரையிறங்கு பல்லிணையின் ஓர் உறுப்பு.

உந்துவிசைக் கட்டை: உந்து ஊர்தியில் சக்கரத்தை உந்தித் தள்ளும் சாய்வு உந்துவிசைக் கட்டை.

**Skid fan:** சக்கரச் சுழற்சித் தடை காப்பு:

**Skid fin:** (வானூ.) சறுக்கு நிமிர் நேர் விளிம்பு: விமானத்தில் கிடைமட்ட உறுதிப்பாட்டை அதிகரிப்பதற்காகச் சிறகுக்குமேலே பொருத்தப்பட்டுள்ள நிமிர்நேர் விளிம்புடைய தகடு.

**Skidding:** (வானூ.) பக்கச் சறுக்கு: விமானம் திரும்பும்போது பக்கவாட்டில் சறுக்குதல்.

**Skimmer :** (வார்.) ஏடு எடுக்கும் கரண்டி : வார்ப்பட வேலையில் உருகிய உலோகத்தின் மேற்பரப்பில் படிந்திருக்கும் அழுக்குப் படலத்தை மேலீடாக எடுப்பதற்குப் பயன்படும் கரண்டி.

**Skimming :** (வார் ) ஏடு எடுத்தல்: உருகிய உலோகத்தை ஊற்றும்போது படியும் அழுக்குப் படலத்தை மேலீடாக எடுத்தல்.

**Skin :** மென்தோல் : விலங்கிலிருந்து எடுக்கப்பட்ட பதப்படுத்திய அல்லது பதப்படுத்தாத மெல்லிய தோல்.

**Skinning :** (மின்.) மின்காப்பி உரிப்பு : மின்னிணைப்பிகள் கொடுப்பதற்கு முன்பு மின் கடத்திகளிலிருந்து மின்காப்பிகளை உரித்தெடுத்தல்.

**Skirting :** (க.க.). அகச்சுவரோரப்பட்டி : சுவரும் தரையும் சந்திக்குமிடத்தில் சுற்று விளிம்பாக அமைக்கப்பட்டுள்ள பட்டை.

**Skiver :** தோலாடை : தோலைச் சீவிப் பெறப்படும் மென்தோல் இது புத்தகக் கட்டுமானத்திற்குப் பயன்படுகிறது.

**Skiver leather :** சீவிய மென் தோல் : தோலைச் சீவிப் பட்டையாக எடுத்த மெல்லிய தோல். அட்டைப்பெட்டிகள், பணப்பை முதலியவற்றில் உள்வரியிடவும், புத்தகக்கட்டுமானத்திலும் பயன் படுகிறது.

**Skylight :** (க க.) மேல்தளச் சாளரம் : கட்டிட மேல் முகட்டில் அல்லது கூரையில் வெளிச்சத்திற்காக அமைக்கப்படும் கண்ணாடிச் சாளரம்.

**Skyscraper :** (க.க.) வானளாவி : இன்றுள்ள அலுவலகக் கட்டிடங்களைப் போன்று பல அடுக்கு மாடிகளைக் கொண்ட உயர்ந்த கட்டிடம்.

**Sky sign :** மீமுகட்டு விளம்பரம் : உயர்கட்டிடங்களின் உச்ச உயர் இடங்களில் காட்டப்படும் ஒளி விளக்க விளம்பரம்.

**Sky writing :** (வானூ.) புகைவரி எழுத்து: வானூர்தி விளம்பரங் களில் பயன்படுத்தப்படும் புகைக் கோட்டு எழுத்து முறை.

**Slab:** பாளம்: தட்டையான மேற் பரப்புடைய கல், பளிங்குக் கல், கான்கிரீட் போன்றவற்றினாலான சிலாத்துண்டம்.

**Slab-stone:** பாளக்கல்: பாளம் பாளமாகப் பிளவுறும் கல்.

**Slack:** (எந்.) முனைப்புக் குறைவு: எந்திரத்தில் நீக்கப்பட வேண்டிய உறுப்புகள் தளர்வுறுதல்.

**Slag:** (வார்.) உலோகக் கசடு: வார்ப்படத் தொழிற்சாலைகளில் உருக்கிய சுரங்க உலோகக் கசடு.

**Slag cement:** சாம்பல் சிமெண்ட்: ஊதுலைச் சாம்பற் கட்டியினா லான சிமெண்ட்.

**Slag wool:** கனிம இழைக்கம்பிளி: உலோகக் கிட்டப்பாகூடான நீராவியால் இழைக்கப்படும் செயற் கைக் கம்பளி.

**Sledge-hammer:** கொல்லுலைச் சம்மட்டி: இரு கைகளினாலும் கை யாளப்படும் நீண்ட கைப்பிடியுள்ள சம்மட்டி. இது கருமானின் கொல் லுலைக் கூடத்தில் பயன்படுத்தப் படுகிறது.

**Sleeker:** (வார்.) மெருகு கருவி: வார்ப்படங்களில் சொரசொரப் பான பகுதிகளைப் பளபளப் பாக்குவதற்கும், வார்ப்படத்தி லிருந்து மணலை அகற்றுவதற்கும் பயன்படும் கருவி.

**Sleeper:** (க.க.) குறுக்குக் கட்டை: தண்டவாளக் குறுக்குக் கட்டை; குறுக்கு விட்டம்.

**Sleeve:** (எந்.) பெருங்குழல்: கம்பி உருளையினுள் செருகப்பட்ட குழல்.

**Sleeve nut:** (பொறி.) இடை யிணைப்பு உறழ்சுரை: இரு சலாகை களை இணைப்பதற்குப் பயன் படும் வலம் - இடம் புரியிழைகள் உடைய, தக்கவாறு அமைத்துக் கொள்ளக்கூடிய நீண்ட சுரை யாணி.

**Sleeve valve motor:** (தானி.) இழையுருளைத் தடுகிதழ்மின்னோடி: உறழ்சுரைகளையும் உந்து தண்டு களையும் கொண்ட தடுக்கிதழ் அமைவுடைய ஒரு மின்னோடி.

**Slice or slice bar:** (பொறி.) சுரண்டுகோல்: உலைக்களத்தில் பயன்படுத்தப்படும் துப்புரவுக் கரண்டி.

**Slide caliper:** நுண்விட்டமானி: நழுவு நுண்படிக் கலமுடைய விட்ட மளக்கும் கருவி,

**Slide rule:** (பொறி.) உழற்படிய ளவைக் கோல்: நுண்ணளவு காட் டும் நழுவுபடியுடைய அளவுகோல்,

**Slide valve:** (பொறி.) இழை வடைப்பு: நழுவு இயக்கத்துடன் செயற்படக் கூடிய தடுக்கிதழ்.

**Sliding-keel:** இழைவுகட்டை: படகு பக்கவாட்டில் சாயாமல் தடுக்கும் அடிமட்ட மையப்பலகை.

**Sliding seat:** நெகிழ்விருக்கை: பந்தயப் படகில் துடுப்பு வலிப்பவரின் உடலசைவுக் கேற்ப நெகிழ்ந்தசைந்து கொடுக்கும் அமர்வுபீடம்.

**Slip rings:** (*மின்.*) வழுக்கு வளையம் : சுழலும் மின் சுற்று வழிக்கு மின்னோட்டத்தைக் கடத்தும் முறை.

**Slip stream :** (*வானூ.*) பின்கால் விசை : வானூர்திச் சுழல் விசிறியின் பின்னுந்து காற்றோட்டம்.

**Slitter :** (*அச்சு.*) நெக்குவெட்டுருளை : தகடுகளை இடையிட்டு அழுத்திக் கீறும் உருளை இணைக் கருவி.

**Slitting saw for metal :** (*எந்.*) உலோக நெக்குவெட்டு ரம்பம் : உலோகங்களை வெட்டுவதற்குப் பயன்படும் மெல்லியவெட்டுக்கருவி.

**Slot :** (*வானூ.*) இயைவடுப் பள்ளம் : எந்திரத்தில் மற்றொரு பகுதியுடன் பொருந்தி இயைவதற்கான துளை அல்லது கீறல் அல்லது பள்ளம்.

**Slot screwing :** துளை விளிம்பு திருகு : திருகாணியின் கொண்டை தெரியாதபடி அதைப் பொருத்துவதற்கான ஒரு முறை.

**Slot - machine :** துளைவிளிம்பு பொறி : துளைவிளிம்பில் காசு போடுவதனால் இயங்கும் எந்திரம்.

**Slot - meter :** காசுவீழ்வு அலகு மானி : காசு வீழ்வதனால் அலகு குறித்துக் காட்டுகிற கருவி.

**Slow sand filter :** (*பொறி.*) சுணக்க வடிகட்டி : நீரைத் தூய்மையாக்குவதற்கான ஒரு வடிகட்டி. இது விரைவாக வடிகட்டும் பெரிய வடிகட்டிகளிலிருந்து அமைப்பில் வேறுபட்டது.

**Sloyd knife :** (*மர.வே.*) மரச் செதுக்குக் கத்தி : மரச்செதுக்கு வேலைப்பாடுகளில் பயன்படுத்தப் படும் கத்தி; அமெரிக்க மரச்செதுக்கற் பயிற்சிக்கு முன்னோடி.

**Sludge :** குழைசேறு : கொதிகலனில் படிவது போன்ற கசடு.

**Slug:** (*அச்சு.*) உலோக வரிப் பாளம் : உருக்கச்சு எந்திரத்தில் கோத்த வரிப்பாளம்.

**Slug casting machine :** (*அச்சு.*) வரிஉருக்கச்சுப் பொறி : அச்சுருக் கோப்பு இல்லாமல் எழுத்துக்களை வரிப்பாளங்களாக உருக்கு வார்த்து அடிக்கும் அச்சுப்பொறி:

**Slur :** (*அச்சு.*) மறைகறை ; தெளிவற்ற மறைப்புத் தன்மை, எழுத்தின் மேல் எழுதித் தெளிவற்றதாக்குதல்.

**Slurry :** மின் உள்வரிச் சாந்து ; மின்னோட்டத்தை மாற்றியமைக்க உதவும் பொறியின் உள்வரி

யினைச்சீர் செய்யப் பயன்படுத் தப்படும் நுண்மணல், களிமண் கலந்த அரை நீர்மக் கலவை.

**Slushing oil :** குழை எண்ணெய்: உலோகங்கள், எந்திர உறுப்புகள் முதலியவற்றில் அரிமானம் ஏற் படாமல் தடுப்பதற்குப் பயன்படும் எண்ணெய்.

**Slush molding :** (குழை.) குழை வார்ப்படம் : வெப்பத்தால் இளகிக் குளிரில் இறுகும் இயல் புடைய பிசினைச் சூடான வார்ப் படமாக வார்ப்பதற்கான ஒரு முறை.

**Small caps** (அச்சு.) குறுந் தலைப்பெழுத்துகள் : குறுந்தரத் தலைப்பு வடிவ எழுத்துகள்.

**Small piea :** (அச்சு.) அச்செழுத் து வடிவளவு : "புள்ளி அளவு டைய அச்செழுத்து வடிவளவு.

**Smalt :** (அச்சு) நீலவண்ணப் பொடி : வண்ணம் பூசுபவர்களும் விளம்பர எழுத்தாளர்களும் அலங் கார வேலைப்பாடுகளுக்காகப் பயன்படுத்தும் நீலவண்ணப் பொடி. வண்ணம் பூசிய பகுதி களை காற்றும், வெயிலும் அரித்து விடாமல் பாதுகாக்கவும் இது பயன்படுகிறது.

**Smashing :** (அச்சு.) அச்சு வரி அழுத்தம்: அச்சு முழுமடித் தாள் வரிசை எண் தட்டையாக அமை யும்படி அழுத்தி விடுதல்.

**Smelting :** (உலோ.) உருக்கு தல் : சுரங்கப் பொருள்களை உருக்கி அவற்றிலிருந்து உலோகங் களைப் பிரித்தெடுத்தல்.

**Smoking :** புகைப் பதனம் : பச்சையான மண்பாண்டங்களி லிருந்து ஈரத்தை அகற்றுவதற்கு முதற்கட்டமாகப் புகையாவி பிடித் தல்.

**Smoothing plane:** (மர.வே.) இழைப்புளி: தச்சர்கள் பயன்படுத் தும், 9" நீளமும் $1\frac{3}{4}$" முதல் $2\frac{1}{4}$" வரை அகலமும் உடைய இரும் பினாலான இழைப்புளி.

**Smooting trowel:** பூசுகரண்டி: சாந்துப் பூச்சுப் பரப்புகளைச் சமப் படுத்துவதற்காகப் பயன்படும் கரண்டி.

**Snakewood:** அரவமரம்: பாம்பின் தோல் போன்று வண்ணமுடைய கடினமான தென் அமெரிக்க மர வகை.

**Snap gauge:** விரைவு அளவு கருவி: உட்புற, வெளிப்புற வடிவளவு களைக் கணித்தறிவதற்கான, தக்கவாறு அமைத்துக் கொள்ள முடியாத அளவீட்டுக் கருவி.

**Snap-bolt:** விற்பூட்டு: கதவை மூடும் பொழுது தானே பூட்டிக் கொள்ளும் வில்லமைவுத் தாழ்ப் பாள்.

**Snap-hook:** பற்றிவிடாக் கொளுவி: விற்சுருள் மூலம் இயங்கும் தானே பூட்டிக்கொள்ளும் கொளுவி.

**Snap switch:** (*மின்.*) விரைவு மின்விசை: குமிழை அல்லது விரல் கட்டையை வலப்புறமாகத் திருப்புவதன்மூலம், விரைவான இயக்கத்துடன் மின் தொடர்புகளை ஏற்படுத்துகிற அல்லது முடிக்கிற மின் விசை.

**Snarling iron:** (*உலோ. வே.*) புடைப்பு இரும்பு: உலோகக் குடுவையின் உட்புறத்தே கொட்டுவதன் மூலம் புறத்தே புடைப்பு வேலைப்பாடு அமைத்து அழகு செய்வதற்கான இரும்பு.

**Snips:** (*உலோ. வே.*) உலோகத் திரி: உலோக வேலைப்பாட்டுத் தொழிலாளர்கள் பயன்படுத்தும் உலோகத் தகடுகளை வெட்டுவதற்கான கத்திரி.

**Snubber:** (*தானி.*) அதிர்ச்சி தாங்கி: விற்சுருளின் பின்னதிர்வைக் குறைத்து, ஆட்டத்தைக் குறைப்பதற்காக அச்சுக்கும் சட்டகத்திற்குமிடையில் இணைப்பாகப் பயன்படுத்தப்படும் எந்திரஅமைவு. இது ஒரு முரசு, விற்சுருள், உராய்வுப் பட்டை ஆகியவற்றைக் கொண்டிருக்கும்.

**Soaking:** (*தானி.*) தோய்வுறுத்தல்: எஃகில் முழுமையான, ஒரே சீரான ஊடுபரவல் ஏற்படும் வரையில் எஃகை ஒரு குறிப்பிட்ட வெப்ப நிலையில் வைத்திருத்தல்.

**Soar:** (*வானூ.*) வானில் வட்டமிடல்: விமானம் தற்செலுத்தமின்றி உயர் வானவெளியில் மிதந்து தவழ்தல்.

**Socket:** (*மின்*) குதைகுழி: வெண்சுடர் விளக்கின் அல்லது செருகின் திருகிழைப் பகுதி பொருத்தப்பட்டுள்ள கொள்கலம். இதனைப் பொதுவாக "ஊர்திக்கொள்கலம்" என்பர்.

**Socket chtsel:** (*மர. வே.*) குதை குழி உளி: தச்சர்கள் பொதுவாகப் பயன்படுத்தும் உளி. இதன் மேற்பகுதி ஒரு குதைகுழிக்குள் செருகப்பட்டு, அதில் கைபிடி பொருத்தப்பட்டிருக்கும்.

**Socle:** (*க.க.*) அடிப்பீடம்: ஒரு சுவர் அல்லது தூணின் அடிப்பீடப் பகுதி.

**Soda ash:** சோடாக்காரம் ($Na_2CO_3$): தூய்மையான சோடியம் கார்போனேட். இது சலவை நோக்கங்களுக்கும், உராய்வு, வெட்டு வேலைகளில் மசகுக் கரைசலாகவும், தூசு தடுப்புப் பொருளாகவும் பயன்படுகிறது.

**Soda or sodium carbonate:** (*வேதி.*) உவர்க்காரம் (சோடா): இதனை சோடியம் கார்போனேட் என்றும் கூறுவர். இது வீடுகளிலும், தொழில்களிலும் பயன்படுத்தப்படும் பல்வேறு வேதியியல் கூட்டுப் பொருள்களைக் குறிக்கும். உவர்க்காரம் உப்பிலிருந்து தயாரிக்கப்படுகிறது. கண்ணாடித் தயாரிப்பிலும், தூய்மைப்படுத்தும் பொருளாகவும் சோடியம் கார்போனேட் பயன்படுகிறது.

**Soda pulp:** உவர்க்காரக்கூழ்: மை ஒட்டுத்தாள், பருமனான புத்தகத்

தாள்கள் முதலியவற்றுக்கு உவர்க்கார முறையில் தயாரிக்கப்படும் ஒருவகை மரக்கூழ்.

**Soda - water mixture:** (எந்.) உவர்க்கார நீர்க் கலவை: உப்பு உவர்க்காரமும் நீரும் கலந்த ஒரு கரைசல். இதனுடன் மெல்லிய சோப்பு அல்லது பன்றிக்கொழுப்பு எண்ணெய் கலந்து மசகுத்தன்மை அதிகரிக்கப்படுகிறது. கடைசல், அரவை எந்திரங்களில் குளிர்விக்கும் பொருளாகவும், மசகுப் பொருளாகவும் பயன்படுகிறது.

**Sodium chloride:** (வேதி.) சோடியம் குளோரைடு (NaCl): சாதாரண உப்பு அல்லது பாறை உப்பு.

**SOF:** திரைப்பட ஒலி: திரைப்படத்தில் இணைக்கப்படும் ஒலி.

**Soffit:** (க.க.) அடிச்சிற்பம்: வளைவு, படிக்கட்டு, விட்டம் ஆகியவற்றின் அடியிலுள்ள சிற்பம்.

**Soft brass:** (உலோ.) மென பித்தளை: கம்பியாக இழுக்கத்தக்கதாகப் பதப்படுத்தப்பட்ட பித்தளை.

**Soft coal:** மட்கரி: நிலக்கீல் தரும் கற்கரி வகை.

**Soft corn:** தொய்வாணி.

**Soft solder:** மென்பற்றாசு: இளங்கொதி நிலைப்பற்றாசு. வெள்ளீயத் தகடு பிற உலோகத் தகடுகள் போன்ற எளிதில் உருகும் உலோகங்களைப் பற்றவைப்பதற்குப் பயன்படுத்தப்படும் பொருத்துப் பொருள். இது பாதி வெள்ளீயமும், பாதி ஈயமும் கலந்ததாகவோ, 90% வெள்ளீயமும் 10% ஈயமும் கலந்ததாகவும் இருக்கும். இதனுடன் சிறிதளவு ஆன்டிமனியும் சேர்ப்பதுண்டு.

**Soft steel:** (பொறி.) மென் எஃகு: கார்பன் அளவு குறைவாகக் கலந்துள்ள எஃகு. இது வளைவதில்லை.

**Soft stone:** இரும்பு:

**Soft water:** மென்னீர்: கார்பொனேட்டு, சுண்ணாம்பு சல்ஃபேட்டு இல்லாத நீர்.

**Softwood:** ஊசியிலை மரம்: ஊசியிலைக் காட்டு மரங்கள். இவை ஊசி அல்லது செதிர் போன்ற இலைகளை உடையவை. இதனை மென்மரம் என்பர். மென்மரம் என்பது மரத்தின் மென்மையைக் குறிப்பதில்லை.

**Soil pipe:** (கம்.) கழிநீர்க்குழாய்: வீடுகளில் கழிநீர் செல்வதற்காகப் பயன்படுத்தப்படும் 5' நீளமுள்ள வார்ப்பு இரும்புக்குழாய்.

**Sol:** (குழை.) இழுதுப்படலம்: ஒரு திரவத்தின் கரைசல் அல்லது இழுதுநிலைப் படலம்.

**Solar engine:** (எந் பொறி.) சூரிய ஒளி எந்திரம: பெருமளவு கண்ணாடிப் பரப்பில் சூரியஒளி படுவதால் உண்டாகும் வெப்பத்தினால் இயங்கும் எந்திரம்.

**Solarium:** (க.க.) கதிரொளிக் கண்ணாடி மனை: மருத்துவ நிலம்

கருதிய கதிரொளிக் கண்ணாடி மனை.

**Solder:** (உலோ.) பற்றாசு: உலோகங்களை வெப்பத்தின் மூலம் பற்ற வைத்து இணைக்கப் பயன்படும் சிறுதிற உலோகக் கலவை. இது பொதுவாக ஈயமும், வெள்ளியமும் சம அளவில் கலந்ததாக இருக்கும். இதன் உருகுநிலை சுமார் 188°C (370.4°F)

**Soldering:** (எந்.) இடையிணைப்பு: ஒத்திராத உலோகங்களை அல்லது உலோகக் கலவைகளை உரிய வெப்ப நிலையில் பற்றாசு வைத்து இணைத்தல்.

**Soldering copper:** (எந்.) பற்றாசுச் செம்பு: பற்றாசுவைத்து இணைப்பதில் பற்றாசினை உருகும்படி செய்வதற்குப் பயன்படும் ஒரு கருவி. இதனை 'இடையிணைப்பு இரும்பு' என்றும் அழைப்பர்.

**Soldering iron:** பற்றாசுச் சூட்டுக் கோல்: பற்றாசு வைக்கப் பயன்படும் கொதிநிலைச் சூட்டுக்கோல்.

**Sole:** (க.க.) அடிக்கட்டுமானம்: குமிழ் முகப்பினைத் தாங்குவதற்கான அடித்தளத்தின் உச்சியில் அமைக்கப்படும் அடிக்கட்டுமானம்.

**Solenoid:** (மின்.) மின்கம்பிச் சுருள் உருளை: ஒரு மின்காந்தத் திருகு சுழல். ஒரு நேரான அல்லது வளைவான அச்சினைச் சுற்றி ஒரே திசையில் சமமான வட்ட மின்னோட்டம் பாயும் ஓர் அமைப்பு.

**Solenoid relay:** (தானி; மின்.) மின்உருளை அஞ்சல்: சேற்றுத் தடைக்கட்டையிலுள்ள ஓர் அழுத்துபொத்தான் மூலம் இயக்கப்படும் தொடக்க மின்னோடி மின் சுற்று வழியை முழுமைப்படுத்துவதற்குப் பயன்படும் ஒருவகை விசை.

**Sole blate:** (பொறி.) எந்திர அடித்தட்டு: ஓர் எந்திரத்தை வைத்து பிணைப்பதற்கான ஓர் அடித்தட்டு.

**Solid angle:** பல்தளக்கோளம்: ஒரு புள்ளியில் சந்திக்கும் பல்தளக் கோளங்களின் தொகுதி.

**Solid bearing:** (எந்.) திடத் தாங்கி: ஒரே துண்டான கெட்டியான தாங்கி. திடத்தாங்கிகள் பொருத்தப்படும் உறுப்புகளில் திடத்தாங்கிகளை அழுத்திப் பொருத்தியதும் அது இருசு உருளை எனப்படும்.

**Solid friction:** (எந்.) திட உராய்வு: ஒரு திடப்பொருளின் மேற்பரப்பு, இன்னொரு திடப் பொருளின் மேற்பரப்பின் குறுக்கே நகரும் போது உண்டாகும் உராய்வு.

**Solo:** (வானூ.) தனிப்பறப்பு விமானத்தில் துணையில்லாமல் தனியாகவே பறத்தல்.

**Soluble:** கரையத்தக்க: ஒரு திரவத்தில் கரையத் தக்க.

**Soluble glass:** படிக்ககிக் கலவை: செயற்கைக் கற்களைக் கடினப் படுத்தத் தயாரிக்கும் வெடியப் படிக்ககிக் கலவை.

**Solute :** (*வேதி.*) **கரைவம் :** *கரைசலில் கரைந்துள்ள பொருள்.*

**Solution :** (*வேதி.*) **கரைசல் :** இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட பொருள்கள் பிரிக்க முடியாதவாறு ஒன்றாகக் கலந்து கரைந்த கலவை.

**Solvent :** (*வேதி.*) **கரைமம் :** ஒரு பொருளைக் கரைப்பதற்குப் பயன்படும் மற்றொரு பொருள் கரைமம் ஆகும். உப்பை நீர் கரைக்கும். நீர் ஒரு கரைமம்.

**Soot :** புகைக்கரிக் கறை

**Sorts** (*அச்சு.*) **தனி எழுத்துரு :** *தனி எழுத்துருத் தொகுதி.*

**Sounding balloon:** (*வானூ.*) **மீவிசும்பு ஆய்வுக் கூண்டு:** *மீவிசும்பு நிலை ஆய்வுக்காக அனுப்பப்படும் சிறு கூண்டு.*

**Sounding - board:** **ஒலித்தடைத் தட்டி:** *மேடைமீது ஒலிபரவுதலைத் தடுத்து முன் செலுத்தும் மென் பலகை.*

**Sounding-lead:** அடி ஈயக்குண்டு: கடல் ஆழ்மானியின் அடி ஈயக் குண்டு.

**Sounding - line (Sounding - apparatus or Soundiug machine :** கடல் ஆழமானி: கடல் ஆழம் காண்பதற்குப் பயன்படும் கருவி.

**Sounding-rod:** அடித்தேக்கமானி: கப்பலில் அடித்தேங்கு நீரள வினைக் காணும் கருவி.

**Sound - ranging altimeter:** (*வானூ.*) ஒலி வீச்சு உயரமானி: ஓர் ஒலியலை விமானத்திலிருந்து பூமிக்குச் சென்று திரும்புவதற்குத் தேவைப்படும் நேரத்தைக் கணக் கிடுவதை அடிப்படையாகக் கொண்ட குறியீடுகளைக் காட்டும் உயரமானி.

**Sound track:** ஒலி வரி: திரைப் படத் தட்டின் ஒலிவரி.

**Sound wave :** ஒலி அலை

**Space:** (*அச்சு.*) **எழுத்திடை வெளி:** *அச்சில் எழுத்துகளுக்கிடையிலான இடைவெளி. தட்டச்சில் சொற் களுக்கிடையிலான இடைவெளி.*

விண்வெளி ; விண்ணிலுள்ள அகன்ற இடப்பரப்பு.

**Space ship :** விண்வெளிக் கலம் : விண்வெளிக்குச் செலுத்தப்படும் விசையூர்தி.

**Space - travel:** விண்வெளிப் பயணம் : விண்வெளி விசையூர்தி களில் விண்வெளிக்குப் பயணம் செய்தல்.

**Spacing:** (*அச்சு.*) இடையிடம் விடல்: அச்சில் அழகான தோற்

றப் பொலிவு ஏற்படும் வகையில் சொற்களுக்கும், வரிகளுக்குமிடையில் இடையிடம் விட்டு அமைத்தல்.

**Spall:** (க.க.) சிம்பு/சிராய்: செங்கற்களை அல்லது கற்களை நொறுக்கி ஆக்கிய சிம்பு.

**Span:** (வானூ.) இடையகலம்: விமானத்தில் ஒரு இறக்கை முனையிலிருந்து மற்றொரு இறக்கை முனை வரையிலான இடையகல அளவு.

கட்டிடக் கலையில் ஆதாரக் கம்பங்களிடையேயுள்ள தனி வளைவு அளவு.

**Spandrel:** (க.க.) கவான் மூக்கு: கவான் வளைவுக்கும் அது கவிந்த செங்கோணவட்டத்திற்கும் இடைப்பட்ட மூலையிடம்.

**Spanner:** புரிமுடுக்கி: திருகு முடுக்கும் அல்லது கழற்றும் கருவி.

**Spare:** (பட்.) உதிரி உறுப்பு: எந்திரங்கள், பொறிகள், ஊர்திகள் வகையில் வேளைக் காப்பீட்டு உதிரி உறுப்பு.

**Spark:** (தானி.) மின்விசைப் பொறி: எஞ்சினில் எரிபொருள் எரிதல் உண்டாக்குவதற்கான மின் விசைப்பொறி.

**Spark arrester:** மின்பொறி காப்பமைவு: மின் கருவிகளில் தீப்பொறியால் சேதம் உண்டாகாதபடி தடுக்கும் அமைவு.

**Spark coil:** (மின்.) அனற்பொறிச் சுருள்: மிகுந்த செறிவான அனற்பொறி உண்டாக்குவதற்கான மின் கம்பிச்சுருள்.

**Spark plug:** (தானி.) அனற்பொறி அமைவு: உந்துபொறி, உள் வெப்பாலைகளில் வெடிக்கலவைக்கு அனற்பொறியூட்டும் அமைவு.

**Spark-plug electrodes:** (தானி.) அனற்பொறி மின்வாய்கள்: மின் அனற்பொறி தாவிப் பாய்வதற்கான உலோக மின்வாய்கள்.

**Spatula:** தட்டலகுக் கரண்டி: வண்ணங்களைக் குழைக்கப் பயன்படும் நெகிழ்வான அலகுடைய கத்திபோன்ற கரண்டி.

**Specification:** தனிக்குறிப்பீடு: தனித்தனி விவரக் குறிப்பீடு,

**Specific cravity:** (இயற்.) ஒப்பு அடர்த்தி: ஒரு பொருளின் வீத எடைமானம். திடப் பொருள்களையும், திரவங்களையும், நீருடனும், வாயுக்களைக் காற்றுடனும் ஒப்பிட்டு அடர்த்தி கணக்கிடப்படுகிறது.

**Specific heat:** வீத வெப்பமானம்: குறிப்பிட்ட அளவை ஒரு பாகை வெப்பத்திற்கு உயர்த்துவதற்கான வெப்ப அளவை நீரொப்பீட்டெண்.

**Specimen bar:** (பொறி.) மாதிரி உலோகச் சலாகை: சோதனை எந்திரத்தில்சோதனைசெய்வதற்காகத் தனியாகத் தயாரிக்கப்பட்ட மாதிரி உலோகச் சலாகை.

**Spectro photometer:** வண்ண அளவுமானி: வண்ணச் செறிவினை அளவிட்டறிய உதவும் சாதனம்.

**Spectrogram:** வண்ணப் பட்டைப் பதிவு ஒளிப்படம்.

**Spectrograph:** வண்ணப்பட்டை ஒளிப்பதிவுக் கருவி.

**Spectrography:** வண்ணப்பட்டைப் பதிவு ஒலிப் படப்பிடிப்பு.

**Spectroheliograph:** ஓரலைப் பதிவு ஒளிப்படக் கருவி: கதிரவன் ஒளி வண்ணப்பட்டையின் ஓரலைப் பதிவு ஒளிப்படக் கருவி.

**Spectrohelioscope:** ஓரலை நீர்க் காட்சிக் கருவி: கதிர்மண்டல ஓரலை நீளக்காட்சி.

**Spectroscope:** (*வேதி.*) வண்ணப் பட்டை ஆய்வுக் கருவி: வண்ணப் பட்டை அளவாய்வுக்கான கருவி.

ஆவியான பொருள்கள் உண்டாக்கும் வண்ணப்பட்டை அவற்றின் அமைப்பை ஆராய்வதற்குப் பயன்படுகின்றன.

**Spectroscopy:** வண்ணப்பட்டை ஆய்வியல்:

**Syectrum:** (*இயற்.*) நிறமாலை: சூரிய ஒளியை அதில் அடங்கியுள்ள ஏழுவண்ணங்களாகப் பகுக்கலாம். இந்த ஏழுவண்ணங்களையும் வானவில் வண்ணங்களில் காணலாம். இந்த வண்ணங்களின் தொகுதி நிறமாலை எனப்படும்.

**Spectrum analysis:** நிறமாலைப் பகுப்பு.

**Speculum metal:** (*உலோ.*) பளிங்கு உலோகம்: தொலை நோக்காடி உருப்பளிங்கின் உருநிழல் காட்டும் செம்பும் வெள்ளீயமும் கலந்த கலவை.

**Speed:** (*இயற்.*) வேகவீதம்: ஒரு பொருள் விரைந்து செல்லும் வேகத்தின் வீதம்.

**Speed control:** வேகக் கட்டுப்பாடு: தொலைக்காட்சிப் பெட்டியில் படங்களை கிடைமட்டத்திலும் செங்குத்தாகவும் நிலைப்படுத்தி ஒழுங்குபடுத்துவதற்கான சாதனம்.

**Speedometer:** (*தானி.*) வேகமானி: வேகவீதத்தை ஒரு மணிக்கு இத்தனை மைல் என்ற வீதத்தில் பதிவுசெய்து காட்டும் ஒரு கருவி.

**Spelter:** (*உலோ.*) துத்தநாகம்: வாணிக வழக்கில் 'ஸ்பெல்ட்டர்' என்று அழைக்கப்படும் உலோகம். துத்தநாகமும், செம்பும் சம அளவில் கலந்த உலோகக் கலவையையும் இது குறிக்கும்.

**Sphalerit:** (*கனி.*) நாகக் கனிமம்: 'ஸ்பாலிரைட்' எனப்படும் துத்தநாகத்தின் மிக முக்கியமான தாதுப் பொருள்.

**Sphere :** கோளம்: பந்து வடிவப் பொருள். இதன் ஒவ்வொரு பகுதியும் அதன் மையத்திலிருந்து சம தூரத்தில் இருக்கும்.

பரப்பு : விட்டத்தின் இருமடி ×3.1416

கனஅளவு : விட்டத்தின் மும்மடி ×0.5236

**Spheroid :** நெட்டுருளை : நீள் வட்டச் சுழற்சி வடிவம்.

**Sphero meter :** நுண்விட்ட மானி.

**Spider gears :** (*தானி.*) சிலந்திப் பல்லிணை : சிலந்தி வலைப் பின்னல் போன்று அமைக்கப்பட்ட இரண்டு, மூன்று, நான்கு பல்லிணை அமைப்புகள். இதன் மூலம், பின் இருசில் வேறுபட்ட செயல் முறைகள் பெறப்படுகின்றன.

**Spiegeleisen :** (*வேதி.*) கன்மவார்பபிரும்பு : கன்மம் அடங்கிய வார்ப்பிரும்பு. இதில் அதிக அளவு கார்பனும், மாங்கனீசும் அடங்கியிருக்கும். மாங்கனீசின் அளவு 15-20 சதவீதத்திற்கு மிகைப்படும் போது,அது அய மாங்கனீஸ் எனப்படும்.

**Spigot :** (*கம்.*) மூடுகுமிழ் : ஒரு குமிழுக்குள் பொருந்தக்கூடிய ஒரு குழாய்முனை.

**Spike:** (*க.க.*) தடியாணி : தடித்த பெரிய ஆணி.

**Spile :** (*பொறி.*) முளைத்தடி : நிலத்தில் அடித்திறக்குவதற்கான பெரிய வெட்டு மரம்.

**Spin :** (*வானூ.*) சுழல் இறக்கம் : விமானம் சுழன்று கொண்டே தலைகீழாக இறங்கும் இறக்கம்.

**Spindle :** நூற்புக் கதிர் : நுனியில் கூம்பிச் செல்லும் கழிசுற்று நூற்கோல்.

**Spinet :** 16—18ஆம் நூற்றாண்டுகளிலிருந்து பயன்படுத்தப்படும் விரல்கட்டை உடைய இறகு வடிவ நரம்பிசைக் கருவி.

**Spinning lathe:** (*உலோ. வே.*) சுழல் கடைசல் எந்திரம்: உலோகத் தகடுகளில் வேலைப்பாடுகள் செய்வதற்குப் பயன்படும் சுழலும் கடைசல் எந்திரம்.

**Spiral:** திருகு சுருள்: திருகு சுருளாகச் செல்கிற சுருள் வட்ட வளைவு.

விமானம் திருகு சுருளாகக் கீழாக இறங்குதல்.

**Spiral balance:** சுருள்வில் எடைக் கோல்: சுருள்வில்லின் முறுக்கினால் நிறையளக்கும் துலாக்கோல்.

**Spiral coupling:** (*எந்.*) திருகு சுருள் இணைப்பு: ஒரு திசையில் மட்டுமே சுழற்றும் போது இணைந்து கொள்ளும் அமைப்புடைய தாடை இணைப்பு.

**Spiral gear:** (*பல்.*) திருகு சுருள் பல்லிணை: திருகுசுழல் வட்டத்தின் ஒரு பகுதியாகப் பல் அமைந்துள்ள பல்லிணை. இதனைத் 'திருகுப் பல்லிணை' என்றும் அழைப்பர்.

**Spiral instability:** (வானூ.) சுழல் உறுதியின்மை: சில வகை விமானங்களில் வழித்தடுமாற்றம் காரணமாக ஏற்படும் உறுதியின்மை.

**Spiral spring:** (எந்.) சுழல் விற்சுருள்: கடிகாரம் அல்லது கைக் கடிகாரங்களில் உள்ளது போன்ற சுழல் விற்சுருள்.

**Spiral wheel:** சுழல் சக்கரம்: ஊடச்சுக்குக் குறிப்பிட்ட கோணத்தில் வெட்டப்பட்ட பற்களை யுடைய சக்கரம்.

**Spire:** (க.க.) தூபி முனை: கூம்பு வடிவக் கோபுரம்.

**Spirit level:** (க.க.)குமிழி மட்டம்: கிடைமட்டத்தையும், செங்குத்து மட்டத்தையும் துல்லியமாக அளவிடுவதற்குப் பயன்படும் கருவி. இதில் ஒரு மர அல்லது உலோகப் பெட்டியில் வெறியம் ஏறத்தாழ முழுமையாக நிரப்பப்பட்டிருக்கும். குமிழி மையத்தில் நிலைகொண்டு நிற்குமானால், மட்டம் சரியாக இருக்கிறது என்பதைக் குறிக்கும்.

**Spirit varnish:** (மர. வே.) வெறிய மெருகெண்ணெய்: கற்பூரத் தைலம், ஆல்ககால் போன்ற விரைந்து ஆவியாகக்கூடிய கரைமங்கள் அடங்கிய மெருகெண்ணெய்.

**Splash lubrication:** (தானி.) தெறிப்பு மசகு: மசகுப் பொருளை வாரித் தெரித்து மசகிடும் முறை.

**Splay:** (க.க.) தளச்சாய்வுக் கோட்டம்: கதவு, பலகணி முதலியவற்றில் விளிம்பு புறக் கோட்டச் சாய்வு.

**Splice:** (மின்.) புரியிணைவு மின்கடத்திகளை முறுக்கிப் புரியிணைவு செய்து ஒன்றுபடுத்துதல்.

**Spline:** இணையாப்பு: ஊடச்சுடனும் சக்கரத்துடனும் இழைந்து சென்று அவை தனித்து உருளாது இணைந்து உருளச் செய்யும் ஆப்பமைவு.

**Split field:** (மின்.) பிளவுப் புலம்: இரு துருவப் புலம் பொதிவு உடைய மின்னாக்கி. இதில் ஒரு புலம் ஒரு புலம் ஒரு மூன்றாம் தூரிகையுடனும், மற்றொரு புலம் முதன்மைத் தூரிகையுடனும் இணைக்கப்பட்டிருக்கும். இந்த வகை மின்னாக்கியில் மூன்றாம் தூரிகையின் மின்னோட்டக் கட்டுப்பாட்டு அம்சங்கள் நிலைத்திருக்கும்.

**Split gear:** (பல்) பிளவுப் பல்லிணை: இரு பிளவாகச் செய்யப்பட்ட பற்சக்கரம்.

**Split nut:** (எந்.) பிளவு மரையாணி: நீளவாக்கில் பிளவுடைய ஒரு மரையாணி. இது திருகில் நழுவிச் சென்று விரைவாக நகர்வதற்கு உதவுகிறது. இது பெரும்பாலும் விற்சுருள் விட்டமானியில் பயன்படுத்தப்படுகிறது.

**Split phase:** (எந்.) பிளவு மின்னோட்டப் படிநிலை; ஒரேமாற்று

மின்னோட்டப் படிநிலை மின்னியக்க விசையுடன் இணைக்கப் கப்பட்டுள்ள பல்வேறு மின் சுற்று வழிகளில் வேறுபட்ட மாற்று மின்னோட்ட இயக்கப் படிநிலைகளை உண்டாக்கும் மின்னோட்டங்கள்.

**Split pulley:** (*எந்.*) பிளவுக் கப்பி: இரு பாதிகளாக அமைக்கப்பட்டு மரையாணியால் பிணைக்கப்பட்டுள்ள கப்பி.

**Split ring:** (*எந்.*) பிளவு வளையம்: ஓர் உந்து தண்டிலுள்ள பலகூற்று வளையம்.

**Split wheel:** பிளவுச் சக்கரம்: இரு பிளவாகச் செய்யப்பட்ட சக்கரம்.

**Spoke:** (*எந்.*) ஆரை: சக்கரத்தின் குருக்குக்கை. குடத்துடன் வெளி விளிம்பை இணைக்கும் கரம்.

**Spoking machine:** சாய்வு எந்திரம்: பழுக்களுககு ஒத்த சாய்வு வழங்க உதவும எந்திரம்.

**Sponginess:** (*வார்.*) நிறை உள் துளை உடைமை: உலோகங்களின் செறிவற்ற தன்மை.

**Sponson:** (*வானூ.*) புற உந்து தளம்: கப்பலில் தளத்தின் புறத்தே உந்தும் பகுதி.

**Spontaneous combustion:** தன்னக உள்ளெரிதல் : தன்னிடத்திலேயே எழும் வெப்பத்தினால்தீப்பற்றி கொள்ளும் இயல்பு.

**Spoon bit:** கரண்டித் தமரூசி: கூர்மையான முனைகளுடன் பிறை வடிவத்திலுள்ள துளையிடுவதற்கான தமரூசி. இது காகிதம், அட்டைகள் போன்றவற்றில் துளையிடுவதற்குப் பயன்படுகிறது.

**Sport roadster:** (*தானி.*) பந்தய ஊர்தி: இது சாதாரண உந்து ஊர்தி போன்றது. இதன் பின்புறத்தள அடுக்கு மட்டும் சாமான்கள் வைப்பதற்கான இடமாக இல்லாமல், பின் இருக்கையாக அமைந்திருக்கும்.

**Spot:** ஒளிப்புள்ளி : தொலைக் காட்சியில் ஒளிக் கற்றையானது இடமிருந்து வலமாக ஒரு கோட்டினை அல்லது உருக்காட்சியை அலகிடும்போது, எதிர்மின் கதிர் படக் குழாயின் ஒளியுமிழ் திரையின்மீது எலெக்ட்ரான் கற்றையினால் உண்டாக்கப்படும் ஒளி.

**Spotting tool:** (*எந்.*) குறிகாட்டுக் கருவி: இதனை "மையங் காட்டும் மற்றும் முகப்புக் காட்டும் கருவி" என்றும் கூறுவர். இது எந்திரப் பகுதிகளின் அடிக்கட்டையின் முனையில் மையத்தை அல்லது முகப்பினைக் குறிப்பதற்குப் பயன்படுகிறது.

**Spout:** (*வார்.*) கொண்டிவாய்க் குழாய்: இரும்பு வார்ப்படத் தொழிற்சாலை அடுப்பிலிருந்து கட்டுவதற்கு திரவ உலோகம் பாய்வதற்கான கொண்டிவாய்க் குழாய்.

**Spraying liquid:** (*தானி.*) தெளிப்புத் திரவம்: எண்ணெய்கள் துப்புரவுத் திரவங்கள், வண்ணங்கள்

உட்பட மெருகேற்றுவதற்குப் பயன்படும் திரவப் பொருள்கள்.

**Sprig :** (மர. வே.) எடைக் கருவி: திருத்தப்பட்ட விறைப்புவிற்சுருள். ஒரு கூட்டில் அடைக்கப்பட்டுள்ள ஓர் எடை பார்க்கும் கருவி. இதில் அளவு குறிக்கப்பட்ட அளவு கோலில் ஒரு முள் எடையைக் காட்டும்.

**Spring chuck or spring collet :** (எந்.) விற்சுருள் கவ்வி : திருகு பொறிகளில் பயன்படுத்தப்படும் ஒருவகைக் கவ்வி. இதில் நீளவாக்குப் பகுதியின் வழியே அகஞ்செருகிய குழல் இருக்கும். இது கூம்பு வடிவக் கொண்டையில் வேலைப்பாடு செய்யப்படவேண்டிய பொருளில் பொருத்தி அழுத்தி மூடப்படும் அழுத்தம் தளர்த்தப்படும்போது விற்சுருள் போதிய அளவு விரிந்து பொருள் விடுவிக்கப்படுகிறது.

**Spring clip:** (தானி.) விற்சுருள் பற்றுக் கருவி : விற்சுருளை இருசுடன் இணைப்பதற்குப் பயன்படும் U-வடிவ மரையாணி. இருசுடன் விற்சுருளை இணைப்பதற்கு இரு பற்று கருவிகள் பயன்படுத்தப்படும் ஒவ்வொரு விற்சுருளையும் பொருத்துவதற்கு இரு பற்று கருவிகள் பயன்படுத்தப்படுகின்றன.

**Springer :** (க. க.) கவான் அடிக் கல்: மஞ்சடைப்பு மேல் முகட்டின் அடிக்கல்.

**Spring hangers :** (தானி.) விற்சுருள் கொக்கி: உந்து ஊர்தியின் சட்டத்தில் விற்சுருள்கள் இணைக்கப்படுவதற்குப் பொருத்தப்பட்டுள்ள கொக்கி.

**Spring hinge:** (க.க.) விற்சுருள் கீல்: உள்ளே ஒரு விற்சுருள் பொருத்தப்பட்டுள்ள ஒரு கீல். திரைக் கதவுகளைத் தானாகவே மூடுவதற்குப் பயன்படுத்தப்படுகிறது.

**Spring leaf:** (எந்.) விற்சுருள் அலகு: உந்து ஊர்திகளில் பயன்படும் விற்சுருளின் தட்டை அலகு.

**Sprinkler system:** (தானி.) விற்சுருள் இருசு: விற்சுருள்கள் பொருத்தப்படும் இருசுகளின் தட்டையான மேற்பரப்புகளில் ஒன்று.

**Sprinkler system:** (க.க.) தெளிப்புக் குழாய்: தீப்பிடிக்கும் போது தானாகவே நீரைத் தெளிக்கும் தெளிப்பு முனைகளுடைய குழாய் அமைப்பு.

**Sprocket:** (எந்.) கண்ணிப் பல்: சங்கிலிக் கண்ணிச் சக்கரப் பல்.

**Sprocket-wheel:** சங்கிலிக் கண்ணிப் பற்சக்கரம்:

**Spruce:** (வார்.) உலோக வார்ப்புக் குழி: உருகிய உலோக வார்ப்புக் குழி.

**Spur :** (மர. வே.) பலகை வெட்டி: நீண்ட மரக்கட்டைகளிலிருந்து பல்வேறு நீளங்களில் மென்வெட்டுப் பலகைகளை வெட்டுவதற்குப் பயன்படும் கூரிய முனையுடைய கருவி.

**Spur center :** (மர.வே) சுழல் மையம்: மரக்கடைசல் எந்திரத்தில் சுழலும் பகுதிகளிலுள்ள உராய்வு தாங்கி உருளைகளின் தொகுதியில் பயன்படுத்தப்படும் மையம்.

**Spur wheel :** (பல்.) பற்சக்கரம்: பற்கள் புறவிட்டத்திலும், சக்கரத்தின் பக்கங்களுக்குச் செங்கோணத்திலும் அமைந்திருக்கும் பற்சக்கரம்.

**Spurling-line :** பயின் சுட்டுவரி: கப்பலில் பயின்கட்டை திருப்பும் சக்கர நிலையைக் காட்டும் கல இயக்கவழி இணைந்த கம்பி வடம்.

**Sputnik :** புடவித் துணைக்கோள்: பூமியைச் சுற்றும்படி ரஷ்யா 1957-இல் முதன் முதலில் விடுத்த செயற்கைக்கோள்.

**Spy :** ஒற்றுத்துளை: நுண்தேர்வு நோட்டங்களை நோக்குவதற்குப் பயன்படும் சிறிய துவாரம். இது அடைத்து வைக்கப்பட்டிருக்கும்.

**Spy glass :** சிறு தொலை நோக்காடி: ஒற்றியறிவதற்குப் பயன்படும் சிறு தொலை நோக்காடி.

**Squab :** பஞ்சுறைப்பீடம்: திண்டு போன்ற மெத்தைத் தவிசு.

**Square :** (கணி.) [1] இருமடிப் பெருக்கம்: ஓர் எண்ணை அதே எண்ணால் பெருக்குவதால் கிடைக்கும் பெருக்க விளைவு.

[2] சதுரம்: சரிசம நாற்கர வடிவம். இதில் அனைத்துப் பக்கங்களும் சமம். எதிர்ப்பக்கங்கள் இணையானவை. கோணங்கள் செங்கோணங்களாக இருக்கும். இக்கோணங்களின் கூட்டுத் தொகை 360°.

**Square measure :** சதுர அளவை: மிகைப் பெருக்கக் கணிப்பு.

**Square number :** மிகைப்பெருக்க எண்: எண்ணின் தற்பெருக்க விளைவான தொகை.

**Square root :** (கணி.) மிகைப் பெருக்க மூலம் (வர்க்கமூலம்): எண்ணை மிகைப்பெருக்கமாகக் கொண்ட மூல எண்.

**Square soil :** உப்பற்பாய்: பாய் மரத்திற்குக் குறுக்காகத் தொங்க விடப்படும் நாற்கட்டமான உப்பற்பாய்.

**Square-threaded screw:** (எந்.) சதுரப் புரியிழைத் திருகு: புரியிழை நாற்கர வடிவிலுள்ள திருகு.

**Squeezer :** (வார்.) பிழிவு எந்திரம்: ஒரு வகை வார்ப்பட எந்திரம்.

**Squinch :** (க.க) உள் வளைவுக் கட்டுமானம்: மூலை விட்டத்தில் அமைந்திருக்குமாறு அமைக்கப்பட்ட சிறிய கவான் அல்லது தண்யக்கட்டு.

**Squirrel-cage rotor** (மின்.) அணில் கூட்டுச் சுழலி: சாதாரணத் தூண்டு மின்னோடி சுழலும் உறுப்பு.

**Stability :** திடநிலை : உறுதிப் பாட்டுடன் அல்லது திடத் தன்மை யுடன் இருக்கும் நிலை.

விமானத்தில் சமநிலையூட்டும் மீட்சியாற்றல்.

**Stabilizer :** (வானூ.) விமானச் சமநிலையமைவு : விமானத்தின் சம நிலையூட்டும் மிகைத்தளம். இது விமானத்தின் பின்புறத்தில் அமைக்கப்பட்டிருக்கும். இது விமானம் தலைகுப்புறக் கவிழாமல் தடுக்கிறது.

**Stable equilibrium:** உறுதிச் சமநிலை : பொருள்கள் எளிதில் அசைக்க முடியாமல், உறுதியான பீடத்தில் இருத்தல்.

**Stable oscliation :** (வானூ.) உறுதியான ஊசலாட்டம் : வீச்சளவு அதிகரிக்காமல் இருக்கும் ஊச லாட்டம்.

**Stack :** (க.க.) புகைக் கூம்பு : தொழிற்சாலைகளில் உள்ளது போன்ற புகையை வெளியேற்று வதற்கான பெரிய புகைக்கூம்பு. இது செங்கல், கல் அல்லது உலோ கத் தகட்டினால் அமைக்கப்பட்டி ருக்கும்.

**Staging :** (க.க.) சாரக்கட்டு : கட்டிடத்திற்கான சாரங்கட்டுதல்.

**Staging port:** இடைத் தங்குதளம்: விமானப் பயணத்தில் நிலவரமான இடைத்தங்குதளம்.

46

**Stainless steel :** (உலோ.) துருப்பிடிக்கா எஃகு : குரோமியம் அதிக அளவிலும் நிக்கலும், செம் பும் சிறிதளவிலும் அடங்கிய உலோகக் கலவை. இந்த எஃகு கடினமானது; உரமானது; நிலை யான மெருகுடையது.

**Stairs ;** (க.க.) படிக்கட்டு: ஏணிப் படிகளின் தொகுதி. ஒரு தளத்தி லிருந்து இன்னொரு தளத்திற்கு வளைவின்றிச் செல்லும் படிக்கட்டு "நேர் படிக்கட்டு". திருகு சுழலா கச் செல்லும் ஏணிப்படி "சுழற் படிக்கட்டு".

**Stakes:** (உலோ. வே.) மரமுளை: உலோகத் தகட்டில் வேலை செய் யும் தொழிலாளர்கள், வளைப்பதற் கும், வடிவமைப்பதற்கும் பலகை மீது பயன்படுத்தும் பல்வேறு வடி வளவுகளிலுள்ள மரமுளை.

**Stake-boat.** நெறிகுறிப் படகு : படகுப் பந்தயப் பாதை குறிப்பிட் டுக் காட்டுவதற்காக நிறுத்தப்பட் டுள்ள படகு.

**Staking out:** (க.க.) எல்லை குறித்துக் காட்டுதல் : கட்டுமானம் கட்டுவதற்கான அடித்தள எல்லை யைக் குறித்துக் காட்டுதல்.

**Stalagmit:** பொங்கூசிப் பாறை கடலோரக் குகைகளில் பாறையின் கரைசல் துளி வீழ்வால் நிலத்தி னின்றும் மேல்நோக்கி ஊசி வடி வில் வளரும் சுண்ணக் கரியகப் பாறை.

**Stall :** (வானூ.) விமான விசை யிழப்பு : பறப்பதற்குப் போதிய விமான வேகம் குறைபடுதல்.

**Stalling speed :** (வானூ.) விசை யிழப்பு வேகம் : விமானத்தின் மிக உயர்ந்த செந்தூக்கான குணக உயரத்தில் விமானம் சீராகப் பறக் கும்போது அதன் வேகம்.

**Stamping press:** (அச்சு.) புடைப் பச்சு எந்திரம் : புடைப்புருப்படச் செதுக்கு அச்சு எந்திரம்.

**Stanchion :** கம்பம் : பலகணிச் செங்குத்துச் சலாகை.

**Standard :** திட்ட அளவு : துல்லிய மான இலக்களவு; முத்திரை நிறை யளவு.

முன்மாதிரி உயர்வு நயம்.

**Standard atmosphere** (வானூ.) திட்ட அளவு வாயு மண்டலம் : விமா னத்தின் செயல்முறையை ஒப்பீடு செய்வதற்குப் பயன்படும் வாயு மண்டலம்.

அமெரிக்காவில் தற்போது பயன் படுத்தப்பட்டு வரும் திட்ட அளவு வாயுமண்டலம் என்பது, 40° உய ரத்தில் காணப்படும் சராசரி நிலை மைகள் ஆகும்.

**Standard international atmos phere:** (வானூ.) திட்ட அளவு பன்னாட்டு வாயுமண்டலம்: பன் னாட்டுத் திட்ட அளவு வாயு மண் டலம் எனப் பயன்படுத்தப்படுவது: சராசரிக் கடல் மட்டத்தில், 15°C வெப்பநிலையில், 1,013.2 மில்லி பார் அழுத்தத்தில், கடல் மட்டத் திலிருந்து 11 கி.மீ. வரையில் கிலோ மீட்டருக்கு 6 5°C இழப்பு வீதத் தில், அதன்பிறகு-56.5°C வெப்ப நிலையில் நிலவும் காற்றழுத்த நிலை.

**Standardized cell:** (மின்.) தர அளவு மின்கலம: துல்லியமாகச் சோதனைகள் செய்வதற்கு, மின் னழுத்தம் மாறாமல் நிலையாக இருக்கக்கூடிய மின்கலம் தேவை. நடைமுறையில் இந்த மின்கலத் திலிருந்து குறிப்பிடும்படியான மின் னோட்டம் எதுவும் எடுத்துக்கொள் ளப் படுவதில்லை. கிளார்க் மின் கலத்தை முதலில் தர அளவு மின் கலமாகப் பயன்படுத்தினார்கள். இப்போது பொதுவாக வெஸ்டன் மின்கலம் பயன்படுத்தப்படுகிறது.

**Standard lamp:** தொலை ஒளி விளக்கு: தொலை ஒளி நிலைக் கம்ப விளக்கு.

**Standing matter:** (அச்சு.) நிலுவை அச்சுரு: மேற்கொண்டு அச்சடிப் பதற்கு அச்சுக் கோத்து வைக்கப் பட்டுள்ள அச்செழுத்துத் தொகுதி.

**Stand pipe:** (பொறி.) நிலை குத் துக் குழாய்: நீர்த்தேக்கத் தொட்டி போன்று பயன்படுத்தப்படும் செங் குத்தான பெரிய குழாய் அல்லது நீர்க்கோபுரம். குடிநீர் வழங்குவதில் ஒரே சீரான அழுத்தம் கிடைப்ப தற்கு இது பயன்படுகிறது.

**Stanniferous:** வெள்ளீயம் அடங் கிய பொருள்:

**Staple:** தைப்பு முள்: மரத்தினுள் செலுத்துவதற்கான கூர்மையான நுனிகளுடைய U-வடிவக் கம்பி அல்லது இரும்புத் துண்டு.

**Star connection:** (மின்.) மும்முனை இணைப்பு: மூன்று நிலை மின்னாக்கிகளிலும், மின்மாற்றிகளிலும் மூன்று சுருள்கள் உண்டு. இவை முக்கிளை, Y, டெல்ட்டா எனப்படும். ஒவ்வொரு சுருளின் ஒரு முனையானது ஒன்றாக இணைக்கப்பட்டு மற்ற மூன்று முனைகளும் தனித்தனியாகப் பிரிக்கப்படும்போது அது முக்கிளை இணைப்பு அல்லது Y-இணைப்பு எனப்படும்.

**Star drill:** முக்கிளைத் துரப்பணம்: கல்லில் அல்லது கட்டுமானத்தில் துரப்டணம் செய்வதற்குப் பயன்படும் நட்சத்திர வடிவ முனை கொண்ட ஒரு கருவி.

**Starling:** (க.க.) திண்டுவரி: காலத்தின் திண்டைச் சுற்றிப் பாதுகாப்பிற்காக இடும் பெருந்தூண் தொகுதி.

**Starter:** (தானி.மின்.) தொடக்கி: எந்திர இயக்கத்தைத் தொடங்கி வைக்கிற அமைவு.

**Starting circuit:** (தானி.) தொடக்க மின்சுற்று வழி: தொடக்க விசையை நிறுத்தியவுடன் நேர் மின் முனையிலிருந்து மின்விசைக்கும் தொடக்க மின்னோடிக் களச் சுருணைக்கும். மின்னகத்திற்கும், மின்தொடு விசைக்கும் பாய்கிறது. அது பின்னர் மின்கலத்தின் எதிர் மின்முனைக்கு வருகிறது.

**Starting motor:** (தானி.) தொடக்க மின்னோடி: மின்சுற்று வழியை மூடுவதன் மூலம் எஞ்சினைத் திருப்புவதற்குப் பயன்படும் மின்னோடி.

**Starting newel:** (க.க.) தொடக்க நடுத் தூண்: ஒரு படிக்கட்டின் அடியில் கைப்பிடிச் சுவரைத்தாங்கி நிற்கும் தூண்.

**Starting torque:** (மின்.) தொடக்கு திருக்கை: மின்னோட்டத்தின் தொடக்க நிலையில் ஏற்படும் மின்காந்த விளைவின் மூலமாகத் தனது சுழல் தண்டின் மீது ஒரு மின்னோடி உண்டாக்கும் திருப்பு விளைவு.

**Startix:** (தானி.) மின்கம்பிச் சுருள் உருளை: சுடர்மூட்ட விசையைப் போட்டதும் தொடக்க மின்னோடி விசையைத் தானாகவே மூடிவிடும் மின்கம்பிச்சுருள் உருளை.

**Static ataxia:** தடுமாறு நிலை: விழாமலோ தடுமாறாமலோ நிற்க முடியாத நிலை.

**Static balance:** நிலைச் சமநிலை: ஒரு கப்பித் தொகுதியின் அல்லது சுழல் தண்டின் எடையானது சமச்சீராகப் பரப்பப்பட்டிருக்கும்போது உள்ள சமநிலை.

**Static balanced:** (வானூ.) நிலைச் சமநிலைப் பரப்பு: பொருண்மையின் மையமானது. நீள் அச்சில் அமைந்துள்ள கட்டுப்பாட்டுப் பரப்பு.

**Static ceiling:** (வானூ.) நிலை முகடு: திட்ட அளவு வாயு மண்டலத்தில் அகற்றக்கூடிய எடைகள் அனைத்தையும் அகற்றிய பிறகு. வான்கலம் நிலைச் சமநிலையில் இருக்கும் உயரம்.

**Static electricity:** நிலையியல் மின்னாற்றல்: இயக்காத நிலையிலுள்ள மின்னாற்றல். இது ஓட்ட மின்னாற்றலிலிருந்து வேறுபட்டது. இது உராய்வுத் தொடர்பு மூலம் உண்டாக்கப்படுகிறது. பட்டுத் துணியில் அல்லது கம்பளித் துணியில் ஒரு கண்ணாடிக் கோலைத் தேய்ப்பதால் உண்டாகும் மின்னாற்றல் இதற்குச் சான்று.

**Static friction:** நிலையியல் உராய்வு: இரு பொருள்கள் ஒன்றை விட்டு ஒன்று விலகிச் செல்லும் போக்கில், ஆனால் உண்மையில் விலகிச் செல்லாதிருக்கிற நிலையில் அவற்றுக்கிடையிலுள்ள உராய்வு.

**Static load:** நிலையியல் சுமை: அசையா நிலையிலுள்ள சுமை அல்லது எடை.

**Statical electricity:** நிலையியல் மின்னாற்றல்.

**Statical pressure:** நிலையியல் அழுத்தம்.

**Statics:** நிலையியல்: இயங்கா நிலையமைதி அல்லது சமநிலையமைதி கொண்ட பொருள்களின் தன்மைகளை ஆராயும் இயற்பியலின் பகுதி.

**Static stability:** நிலையியல் உறுதிப்பாடு: விமானம் தனது வழக்கமான உயரத்தில் அச்சிலிருந்து தமது ஈர்ப்புமையத்தின் மூலம் சற்றே சாய்ந்திடும்போது, அது முதலிலிருந்த உயரத்திற்குத் திரும்பி வருவதற்குரிய உறுதிப்பாட்டு நிலை.

**Static thrust:** நிலையியல் உந்துகை: விமானத்தில் ஒரு சுழலி திசையியக்கமின்றிச் சுழலும்போது உண்டாகும் உந்து ஆற்றல்.

**Stationary engine:** நிலை எஞ்சின்: நிலையான அடித்தளத்தின் மீது பொருத்தப்பட்டுள்ள ஓர் எஞ்சின். இது இடம்விட்டு இடம் கொண்டு செல்லும் எஞ்சினிலிருந்து வேறுபட்டது.

**Statistics:** புள்ளியியல்: புள்ளி விவரங்களைத் தொகுக்கும் அறிவியல்.

**Stator:** (மின்.) உந்து மின்கல நிலைக்கூறு: மின்னாற்றல் பிறப்பிக்கும் பொறியில் அசையாதிருக்கும் பகுதி.

**Stator armature:** சுழல்விலா உந்து மின்கலம்.

**Statoscope:** நீரில்லாத நுண்ணழுத்தமானி: விமானம் பறக்கும் உயரத்தின நுட்பவேறுபாடுகளையும் காட்டும் நீரில்லாத காற்றழுத்தமானி.

**Stay bolt:** அண்டைக்கட்டு: எந்திரக் அண்டைகட்டு.

**Steady rest:** (எந்.) உறுதி

ஆதாரம் : நீண்ட, நுண்ணிய பொருள்கள் மீது கடைசல் வேலைப்பாடுகள் செய்யும்போது, அதைத் தாங்குவதற்கு இருவழிகளி லும் பொருத்தப்பட்டுள்ள உதை கால்.

**Steam :** நீராவி: நீரைக் கொதிக்க வைப்பதால் உண்டாகும் ஆவி.

**Steam boat :** நீராவிப்படகு : நீராவியால் இயங்கும் படகு.

**Steam boiler :** நீராவிக் கொதி கலம் : எந்திர நீராவிக் கொதி கலம்.

**Steam - box :** நீராவிக் கொள் கலம் : கொதி கலத்திலிருந்து இயக்குருளைக்கு நீராவி செல்லும இடையிலுள்ள கொள்கலம்.

**Steam bronze :** (உலோ.) நீராவி வெண்கலம் : ஓரதர்களும், பொருத் துகருவிகளும் தயாரிக்கப் பயன் படும் உலோகக் கலவை. இதில் 85% செம்பு, 5% துத்தநாகம், 5% ஈயம், 5% வெள்ளீயம் அடங்கியுள் ளது.

**Steam gun :** நீராவித் துப்பாக்கி : நீராவியால் இயக்கப் பெறும் துப் பாக்கி.

**Steam hammer :** நீராவிச் சம் மட்டி : நீராவி அழுத்தத்தினால் மேலும் கீழும் இயங்கும் சம்மட்டி.

**Steam cylinder :** நீராவி இயக்கு நிலை : நீராவிப் பொறியின் இயக் குருளை.

**Steam engine :** நீராவி எந்திரம்: நீராவி விசையாக்கப் பொறி.

**Steamer :** நீராவிக் கப்பல் : நீராவியால் இயங்கும் கப்பல்.

**Steam gas :** வெப்ப நீராவி : பெருமளவு சூடேற்றப்பட்ட நீராவி:

**Steam guage :** நீராவி அழுத்த மானி : நீராவியின் அழுத்த நிலை யை அளவிடப் பயன்படும் கருவி.

**Steam heat :** நீராவி ஆக்க வெப் பம் : வெப்பமூட்டும் பொறியில் நீராவி வெளியிடும் வெப்பத்தின் அளவு

**Steaminess :** நீராவி படிவு நிலை: நீராவி நிரம்பிய நிலை.

**Steam jacket :** நீராவிச்சட்டை: நீராவி இடை வழி ஊடு சென்று வெப்பமூட்டும்படி அமைக்கப்பட்ட எந்திர இயக்குருளையின் புறத தோடு.

**Steam main :** நீராவி முதன்மைக் குழாய் : கொதிகலத்திலிருந்து எஞ் சின்களுக்கு நீராவியைக் கொண் டும் கிடைமட்டத்திலுள்ள குழாய்.

**Steam packet :** நீராவிக்கலம் : சில துறைமுகங்களிடையே மட்டுமே இயங்கும் நீராவிக்கலம்.

**Steam power :** நீராவி ஆற்றல்.

**Steam roller :** அமைப்புப் பொறி யுருளை.

**Steam table :** நீராவி மேசை : பாள அச்சு அட்டைத் தகட்டு அச் சடிப்பு முறையில் பயன்படுத்தப்

படும் அச்சு வார்ப்புரு அட்டைகளை உலர வைப்பதற்கான மேசை.

**Steam turbine :** (*பொறி.*) நீராவி விசையாழி : நீராவி ஓர் உந்து தண்டின் மீதுசெயற்படுவதற்குப்பதிலாக ஒரு சுழலும் விசையாழியின் மீது செயற்படுகிற நீராவி எஞ்சின்.

**Steel :** (*உலோ.*) எஃகு : 1.7% வரை கார்பன் கொண்ட இரும்பின் ஒரு வடிவம். இதில் குறைந்த அளவு கார்பன் உள்ள நெகிழ் திறனற்ற எஃகு, அதிக அளவு கார்பன் அடங்கிய நெகிழ் திறன் மிகுந்த எஃகு ஆகியவை அடங்கும்.

**Steel alloys:** (*பொறி.*) எஃகு உலோகக் கலவைகள் : சில தனி நோக்கங்களுக்காகத் தயாரிக்கப் படும்சிறப்பு எஃகு வகைகள். இவற்றில் வலிமைக்காக மாங்கனீஸ், விறைப்புத் திறனுக்காக நிக்கல், வெப்பத் தடைக்காக டங்ஸ்டன், அதிர்ச்சியைத் தாங்குவதற்காக குரோமியம், நலிவடையாதிருக்க வனேடியன் போன்ற பொருள்கள் சேர்க்கப்படுகின்றன.

**Steel belt :** (*எந்.*) எஃகுப் பட்டை : 0.008'' முதல் 0.035'' வரைக்கனமும், 7/8'' முதல் 8'' வரை அகலமும் உடைய மெல்லிய, தட்டையான எஃகுப் பட்டைகள். இந்தப் பட்டைகள் நிமிடத்தில் 10,000 அடி வேகத்தில் ஓடக்கூடியவை.

**Steel casting:** (*பொறி.*) எஃகு வார்ப்படம்: அதிர்ச்சிக்கு உள்ளாகக் கூடிய எந்திர உறுப்புகள் செய்வதற்கான எஃகு வார்ப்படம்.

**Steel converter:** (*பொறி.*) எஃகுத் திரிகலம் : தேனிரும்பை எஃகாக மாற்றுவதற்குப் பயன்படும், உயர் வெப்பம் ஏற்கும் பொருள் பூசிய கொள்கலம்.

**Steel engraving :** (*அச்சு.*) எஃகுச் செதுக்கு வேலைப்பாடு : எஃகுத் தகட்டில் கலைச்செதுக்கு வேலைப்பாடுகள் செய்தல்.

எஃகு செதுக்கு வடிவமைப்புகள் செய்தல்.

செதுக்கு எஃகுத் தகட்டிலிருந்து படங்களை அச்சடித்தல்.

**Steel girder:** (*பொறி.*) எஃகுத் தூலம்: தூலமாகப் பயன்படும் இரும்புப் பாளம்; பாலங்களுக்கும் மோடுகளுக்கும் ஆதாரமான எஃகுக் கட்டுமானச் சட்டம்.

**Steel pulley:** (*எந்.*) எஃகுக் கப்பி: எஃகினாலான கப்பித் தொகுதி. எடை குறைவாக இருப்பதற்காகவும்,எளிதான இயக்குவதற்காகவும் இது பயன்படுத்தப்படுகிறது.

**Steel rule:** (*எந்.*) எஃகுவரைகோல்: நெகிழ்திறனுடைய அல்லது விறைப்பான எஃகுவரைகோல். இதில் பல்வேறு அளவுகள் குறிக்கப்பட்டிருக்கும். இந்த அளவுகள் அங்குலங்களிலும், அங்குலங்களின் பின்னங்களிலும் அமைந்திருக்கும்

**Steel square:** எஃகுச் செங்கோண அளவி: எந்திர நுட்பப் பணியாளர்கள் பயன்படுத்தும் எஃகினாலான மூலை நுட்பப்பலகை.

**Steel wool:** (பட்.) எஃகுஇழைப்பாய் போல் முடையப்பட்ட நுண்ணிய எஃகு இழைகள். இது மர அல்லது உலோகப் பரப்புகளை பளபளப்பாக்குவதற்குப் பயன்படுகிறது.

**Steelyard:** தராசுப்பொறி: எடை பார்ப்பதற்குப் பயன்படும் ஒரு வகைத் தராசுப்பொறி. இதில் சமமற்ற நீளமுடைய இரு கரங்கள் ஒரு நீண்ட நெம்புகோலுடன் இணைக்கப்பட்டிருக்கும்.

**Steeple:** (க.க.) ஊசிக்கோபுரம்: தேவாலயங்களில் உள்ளது போன்ற கூம்பு வடிவக் கோபுரக் கூம்பு.

**Steeple jack:** தூபி பழுதுபார்ப்பவர்: தூபி முகடேறிப் பழுதுபார்ப்பவர்.

**Steering column:** இயக்குத் தூண்: உந்துகல இயக்காழி பொருத்தப்பட்டிருக்கும் தூண் அல்லது கம்பம். இது, வழிச்செலுத்து இயக்கத்தை முன் சக்கரங்களுக்குக் கொண்டு செல்லும் பல்வேறு உறுப்புகளுடன் இணைக்கப் பட்டிருக்கும்.

**Steering cear:** (தானி.எந்.) இயக்கு பல்லிணை: உந்துகல இயக்காழியை இருசுடன் இணைக்கும் உறுப்புகளின் தொகுதி அனைத்தையும் இது குறிக்கும். இதன் மூலமாகவே உந்துஊர்தியைச் செலுத்த முடிகிறது.

**Steering wheel:** (தானி. எந்.) உந்துகல இயக்காழி: உந்து ஊர்தியின் முன் சக்கரங்களுடன் பல்வேறு பல்லிணைகள், நெம்புகோல்கள் மூலம் இணைக்கப்பட்டுள்ள கையினால் இயக்கக்கூடிய சக்கரம். இதன் மூலமாகவே உந்து ஊர்தியின் இயக்கத்தைக் கட்டுப்படுத்த முடிகிறது.

**Stellite:** (பொறி.) ஸ்டெல்லைட்: குரோமியத்தையும், கோபால்டையும் பெருமளவிலும், சிறிதளவு மாலிப்டினத்தை அல்லது டங்ஸ்டனையும் கொண்ட ஒருவகை உலோகக் கலவை. இது கருவிகளும், வெட்டுக் கருவிகளும் தயாரிக்கப் பயன்படுகிறது. இதனை வார்ப்படமாகச் செய்யலாம்; ஆனால், காய்ச்சி அடித்து உருவாக்க இயலாது. இதனை அராவித் தீட்டலாம்.

**Stencil:** படியெடு தாள்: எழுத்துகளை அல்லது ஒப்பனை உருக்களை உள்வெட்டுத் தகட்டுப் படியெடுத்துப் படியெடுப்பதற்கான உலோகம் அல்லது பிற பொருள்களினாலான மெல்லிய தகடு.

**Step down transformer:** (மின்.) குறைப்பு மின்மாற்றி: மின்வழி மின்னோட்ட அளவை அல்லது மின்னழுத்த அளவைக் குறைந்த அளவுக்கு மாற்றுகிற மின்மாற்றி.

**Stepping round:** (எந்.) வளைவரைப்பகுப்புஃவில், வளைகோடு அல்

லது வட்டத்தைக் கவராயத்தின் மூலம் பல பகுதிகளாகப் பகுக்கும் முறை. பல்லிணைச் சக்கரத்தை உருவாக்குவதில் இந்த முறைபயன் படுகிறது.

**Stereography :** திட்பக் காட்சி அமைவு முறை.

**Stereoscope:** திட்ப காட்சிக்கு அமைவு முறை : இரு கண்ணாலும் இருகோண நிலைப்படங்கள் காணப்படுவதன் மூலம் மொத்தத் திட்பக்காட்சி தோற்றுவிக்கும் கருவி.

**Stereophonic:** பல திசைத் தொனி: ஒலிவகையில் பலதிசைகளிலிருந்து வருவது போலமைந்த தொனி யமைப்பு முறை. இந்த முறையில் உண்டாகும் தொனியில் ஆழமும், அழுத்தமும், செழுமையும் ஏற்படு கிறது.

**Stereopsis:** இருவழி இயைகோணக் காட்சி : இருவிழி இருகோண நிலைப் படக் காட்சியமைவு முறை.

**Stereotype:** (அச்சு.) பாள அச்சு அட்டைத் தகடு : உருவச்சில் அடித்த பகுதியைப் பாளமாக அட்டை முதலிய படிவுப் பொருள் களில் எடுத்து மறுஅச்சிற்குப் பயன்படுத்தப்படும் தகடு.

**Stereotyping :** (அச்சு.) பாள அச்சுப் பதிவுமுறை: பாள அச்சு முறையில் அச்சடித்தல். இதில் வெப்பமுறை பொதுவாகப் பெரு மளவில் பயன்படுகிறது.

**Sterling:** ஸ்டர்லிங் வெள்ளி: வெள்ளியின் தூய்மைத் தரத்தைக் குறிக்கும் ஓர் அளவுத் திட்டமுறை $\frac{925}{1000}$ பகுதி நேர்த்தியான வெள்ளியும் $\frac{75}{1000}$ பகுதி செம் பும் அடங்கியது ஸ்டர்லிங் வெள்ளி யாகும். அணிகலனின் ''ஸ்டர்லிங்' என்ற முத்திரை இருக்குமாயின் அது அதன் தரத்திற்கு உத்தர வாதமாகும்.

**Stet:** (அச்சு.) மூலப்படி விடுக : அச்சுப் பணியில் பிழை திருத்து வோர் பயன்படுத்தும் சொல். அச் சுப்படியில் இவ்வாறு குறிப்பிட் டிருந்தால், அடித்ததை அடியா நிலையில் ''முன்போல் நிற்க'' 'விட்டு விடுக' என்று பொருள்படும்.

**Stick:** (அச்சு.) அச்சுக் கோப்புக் கட்டை: அச்சுக் கோப்பவர்கள் அச்சு எழுத்துகளைக் கோத்து அடுக்குவதற்குப் பயன்படும் சிறிய கைச்சட்டகம்.

**Stickful:** (அச்சு.) அச்சுக்கோப்புக் கட்டை நிறைவு அளவு: அச்சுக் கோப்புக் கட்டையில் அச்சு எழுத்துகளை முழுவதுமாகக் கோத்து நிறைவுசெய்துள்ள நிலை.

**Sticking of valves:** (தானி;மின்.) ஓரதர் அடைப்பு: மசகுக் குறைவி னாலும் கார்பன் படிவதாலும் ஓர தர்கள் முறையாகத் திறக்கவும் மூடவும் முடியாமல் அடைத்துக் கொள்ளுதல்.

**Stick shellac:** குச்சி அவலரக்கு: மெருகூட்டுவதற்குப் பயன்படும் குச்சிவடிவ அவலரக்கு. இது வெடிப்புகள், கீறல்கள் முதலியவற்றை அடைப்பதற்குப் பயன்படுகிறது.

**Stiffener:** (பொறி.) விறைப்பாக்கும் பொருள்: விறைப்புத் தன்மையை அதிகரிப்பதற்காக ஓர் உறுப்புடன் பிணைக்கப்படும் கனுக்கால், தகடு அல்லது பிற வடிவப் பொருள்.

**Stile:** (க.க.) கடவேணி: சுவரின் அல்லது வேலியின் மீது ஒரு புறம் ஏறி மறுபுறம் இறங்குவதற்கான படி அல்லது படிக்கட்டுகளின் தொகுதி.

**Stillson wrench:** (கம்.) ஸ்டில்சன் திருக்குக் குறடு: குழாய்களைத் திருக்குவதற்குச் சாதாரணமாகப் பயன்படும் குறடு. இதனைக் கண்டுபிடித்த ஸ்டில்சன் பெயரால் இது அழைக்கப்படுகிறது.

**Stipple:** புள்ளி ஓவியம்: கோடுகளுக்குப் பதிலாகப் புள்ளிகளிட்டுப் படம் வரைதல் அல்லது செதுக்கு வேலைப்பாடு செய்தல்.

**Stipple-graver:** செதுக்கோவியர் புள்ளியிடு கருவி: செதுக்கோவியர்கள் புள்ளிகளிட்ட வேலைப்பாட்டுக்காகப் புள்ளியிடுவதற்குப் பயன்படுத்தும் கருவி.

**Stippler:** புள்ளிமுறை ஓவியம்: புள்ளிகளால் படம் வரையும் முறை.

**Stirrup:** (பொறி.) அங்கவடி: உத்திரம் சலாகை, கதிர் போன்றவற்றுக்கு ஆதாரப் பிடிப்பாகவுள்ள ஒரு பட்டை அல்லது வளையம்.

**Stirrup-pump:** தீயணைப்பு மிதிப் பொறி:

**Stitch-wheel:** தைப்புச் சக்கரம் துளைபோடுவதற்கான சேணம் தைப்பவரின் வெட்டு வாய்ச் சக்கரம்.

**Stoa:** (க.க.) சிற்ப வாயில்: சிற்ப வேலைப்பாடுடைய வாயில் முகப்பு நுழைமாடம், முக மண்டபம்.

**Stone:** ஸ்டோன்: 6. 350 கி.கி. எடை.

**Stone blue:** வெளிறு நீலம்: வெண்மை கலந்த அவுரி நீலம்.

**Stone-butter:** படிக்காரம்: படிக்காரத்தின் ஒருவகை.

**Stone-pitch:** கெட்டிக்கீல்: கெட்டியான கீல் வகை.

**Stone-saw:** கல் இரம்பம்: மணல் உதவியோடு கல் அறுக்க உதவும் பல் இல்லா இரும்பு இரம்பம்.

**Stool:** (க.க.) ஓரச்சட்டம்: பலகணி ஓரச் சட்டம்,

**Stoop:** (க.க.) வாயிற்குறடு: வீட்டின் வாயிலில் உள்ள படிவாயில்

அல்லது வாயிற்படி.

**Stop:** (எந்; க.க.) தடுப்புக்குமிழ்: ஒரு குறிப்பிட்ட நிலைக்கு அப்பால் செல்லாமல் கட்டுப்படுத்தும் தடுக்கிதழ். ஒரு பட்டறையிலுள்ள எந்திரத்தில் அல்லது ஒரு கட்டிடத்தின் கதவில் உள்ள தடைக்கருவி போன்றது.

**Stop-clock :** நிறுத்தமைவுக் கடிகாரம்: தேவையானபோது நிறுத்தவும் ஓட்டவும் அமைவு கொண்ட கடிகாரம். விளையாட்டுப் பந்தயங்களில் இது பயன்படுத்தப்படுகிறது.

**Stop cock:** (கம்.) நெகிழ்வுக்குழாய்: மூடவும் திறக்கவும் வல்ல குழாய்.

**Stop-collar:** (எந்.) தடைக்கட்டு வளையம்: எந்திர உருளையின் இயக்கத்தை எல்லைப்படுத்திக் காக்கும் தடையமைவு.

**Stop-cylinder:** (அச்சு.) தடை அச்சுப் பொறி: அச்சுப் பொறி வகை.

**Stop-drill:** தடுப்புத் துரப்பணம் : சுழல்வெல்லைத் தடுக்குடைய துளையிடு கருவி.

**Stop-plate :** இருசு வரைத் தகடு: உராய்வுத் தடைக் குழைகள் மீது மோதாமல் இருசுதடுக்கும் அமைவு.

**Stop-valve:** தடுக்கிதழ் அடைப்பு : நீர்மத் தடுக்கிதழ் அடைப்பு.

**Stop watch:** விசையழுத்த மணிப்பொறி: ஓட்டப் பந்தயங்களில் நினைத்த கணம் துவக்குவதற்கும் நிறுத்தத்திற்கும் உரிய பொறியமைவுடைய கைக்கடிகாரம்.

**Storage battery :** (மின்.) சேம மின்கலத் தொகுதி: சேம மின்கலங்களின் ஒரு தொகுதி. இக் கலங்கள் ஒவ்வொன்றிலும் நேர்மின் தகடுகளும் நீர்த்த கந்தக அமில மின் பகுப்பானில் மூழ்க வைக்கப்பட்டிருக்கும்.

**Storage cell:** (மின்.) சேமமின் கலம்: ஒரு சேம மின்கலத் தொகுதியின் ஒரு பகுதி.

**Storage life :** (குழைம.) மசிவுக் காலம் : ஒரு குறிப்பிட்ட சேம வெப்ப நிலையைப் பொறுத்து, ஒரு பிசினை அதன் குண இயல்புகளோ, மசிவுத்தன்மையோ குன்றாமல் சேமித்து வைக்கக் கூடிய கால அளவு.

**Stored energy welding :** சேம ஆற்றல் பற்றவைப்பு : ஒரு வகைத் தடைப் பற்றவைப்பு. இதில் பற்ற வைப்பதற்குத் தேவையான மின்னாற்றல், பொருத்தமானதொரு சேமக்கலத்தில் பற்ற வைப்பதற்கு முன்பு குறைந்த வீதத்தில் சேர்த்து வைக்கப்பட்டு, பற்ற வைப்பதற்கு அதிக வீதத்தில் சேர்த்து வைக்கப்பட்டு, பற்ற வைப்பதற்கு அதிக வீதத்தில் வழங்கப்படுகிறது.

**Storm door :** (க.க.) வன்புற மிகைக் கதவு : புயல் குறிக் கூம்புடன் கடும்புயல் எச்சரிக்கையாக

இணைத்துக் காட்டப்படும் வட்டு ருளை அடையாளம்.

**Storm sash :** (க.க.) புறப் பல கணிச் சட்டம் : கடுங்குளிர்ப் பருவத்தில் பாதுகாப்புக்காகப் பயன் படுத்தப்படும் மிகையான அல்லது புறப் பலகணிச் சட்டம்.

**Storm signal :** புயல் எச்சரிக்கைச் சைகை : புயல் வருவதை முன்னரே அறிவிக்கும் அடையாளம்.

**Stove bolt :** கணப்பு மரையாணி: சுரையில்லாத மரையாணி, எந்திரத் திருகாணி எனப்படும். சுரையுடன் கூடிய மரையாணி கணப்பு மரையாணி எனப்படும். கணப்பு மரையாணிகள் பொதுவாக எந்திரத் திருகாணிகளை விடச் சற்று சொரசொரப்பான புரியிழையினைக் கொண்டிருக்கும்.

**Stove-pipe :** கணப்புப் புகைசெல் குழாய் : கணப்படுப்புப் புகை செல்வதற்குரிய குழாய்.

**Straddle milling :** (எந்.) கவட்டு துளையிடு கருவி : உலோகத் தகடுகளில் துளைகளிடுவதற்கும் பள்ளம் வெட்டுவதற்கும் பயன்படும் கவடு போன்ற வெட்டுக்கருவிகள் கொண்ட கருவி.

**Straight-edge :** (எந்.) நேர் நுட்பக்கோல் : ஆய்வியல் முறையில் நேர் நுட்பமான ஒரு புறம் கொண்ட அளவு கோல்.

**Straight-eight engine:** (தானி.) எண்வட்டு உந்துகலம் : வரிசையாக எட்டு நீள் உருளைகளைக் கொண்ட உந்து ஊர்தி.

**Straight jet :** பீற்று விமானம் : சுழல் விசிறியற்ற பீற்று விமானம்

**Strain :** (பொறி.) இழுவிசை : உரிய வரம்புக்கு அப்பால் நெட்டிழுத்தல். வடிவம் அல்லது கன அளவில் மாறுதல் ஏற்படும் அளவுக்கு எல்லை கடந்து வலிந்து இழுத்தல்.

**Straining - beam :** இடைக்கூம்பு விட்டம் : மோட்டு விட்டக்கூம்பின் இரு நிமிர் கால்களை இணைக்கின்ற கிடைமட்ட உத்தரம்.

**Strake:**(உலோ.வே.)நீர்வரிப்பட்டி: கப்பலின் முன் பகுதியிலிருந்து பின் பகுதி வரையுள்ள தொடர்ச்சியான பலகை அல்லது தகட்டு அடைப்பு.

**Stranded wires :** (மின்.) சரக் கம்பி : பின்னிய அல்லது முறுக்கிய பல சிறு கம்பிகளைக் கொண்ட கம்பிச்சரடு அல்லது கம்பி வடம்.

**Strap work :** வார் ஒப்பனை : வார்முடைவுப் போலி அணி ஒப்பனை.

**Strata :** படுகைகள் : இயற்கையான அல்லது செயற்கையான நில அடுக்குப் படுகைகள்.

**Stratification :** அடுக்கமைவு : அடுக்கடுக்கான படுகைகளாக அமைதல்.

**Stratiform :** அடுக்கியல் வடிவு : படுகையடுக்குகளாக உருவாகிற வடிவம்.

**Stratigraphy :** அடுக்கியல் ஆய்வு : அடுக்கியற் படிவாக்கக் கூறுகளின் தொகுதி பற்றிய ஆய்வு.

**Stratocruiser :** மீவளி மண்டல வானூர்தி : காற்று மண்டலத்தின் மேன்முகட்டுத் தளத்திற்குச் செல்லத் தக்க விமானம்.

**Stratosphere :** மீவளி மண்டலம் : தட்பவெப்ப நிலை உயரத்திற் கேற்ப மாறாமல் நிலையாக இருக்கும் காற்று மண்டலத்தின் ஏழு கல்லுயரத்திற்கு மேற்பட்ட அடுக்கு.

**Strawboard :** வைக்கோல் அட்டை : முற்றிலும் வைக்கோல் கூழினாலான அட்டை.

**Stream-anchor :** இழுவை நங்கூரம் : கப்பலை நிலம் நோக்கி இழுக்கும்போது பயன்படும் சிறு நங்கூரம்.

**Streamline :** (வானூ.) இழை வரி : ஒழுகு நீர்மம் பின்பற்றும் இயல்தளக்கோடு.

**Strength of current :** (மின்.) மின்னோட்ட வலிமை : ஒரு மின் சுற்று வழியாகப் பாயும் மின்னோட்டத்தின் ஆம்பியர் எண்ணிக்கை. இது நீர்க் குழாயில் ஒரு நிமிடத்தில் பாயும் நீரின் காலன் அளவு போன்றது.

**Stress :** (மின்.) இறுக்கவிசை : ஒரு பொருளின் வடிவத்தை அல்லது வடிவளவை மாற்றுவதைத் தடை செய்கிற அகவிசை.

**Stress accelerated corrosion :** (உலோ.) இறுக்கவிசை முடுக்கு அரிமானம் : உலோகத்தில் இறுக்கவிசை அதிகரிப்பதால் உலோகத்தின் அரிமானம் முடுக்கி விடப்படுகிறது. இந்த அரிமானம் சில உலோகக் கலவைகளை விட எஃகில் அதிகம்.

**Stretch :** நீட்சி : வினை வேகத்தைக் குறைத்தல்.

**Stretcher:** கிடைச் செங்கல் சுவர்: முகப்பு நீளவாட்டுக் கிடைச் செங்கல்.

**Stria:** (குழை.) படுகைவரி: மேற்பரப்பில் உள்ள படுகைக் கோட்டு வரி அடையாளம்.

**String course or sailing course:** சுற்றுவரி மேடை: கட்டடச் சுற்றுவரி மேடை, செங்கல் அல்லது கல்லினாலான அலங்கார அமைப்பு.

**Stringer :** (க.க ) இடையிணை தளம்; படிக்கட்டுகளிலுள்ள இடையிடைதளம்.

**Stroke:** (தானி. பொறி ) உகைப்பு: உந்துதண்டு ஒருமுறை உகைத்துச் சுழலும் இயக்கம்.

**Struetural load:** (*பொறி.*) கட்டமைப்புப் பளு: எந்திரத்தின் கட்டமைப்பினால் உண்டாகும் பளு. இது ஏற்றிய பளுவிலிருந்து வேறுபட்டது.

**Structural steel:** (*பொறி.*) கட்டமைப்பு எஃகு: பாலங்கள், கட்டிடங் கட்டுவதற்குப் பொறியியல் வல்லுநர்கள் பயன்படுத்தும் பல்வேறு கட்டமைப்புகள் கொண்ட எஃகு வடிவங்கள். இவை I, H, Z முதலிய பல்வேறு வடிவங்களில் அமைந்திருக்கும்.

**Strut:** விட்டக்காழ்: விட்டத்தின் குறுக்காக உறுதி நாடி இடப்படும் இரும்பு அல்லது மர ஆப்பு.

**Strut girder:** விட்டக்காழ் தூலம்: குறுக்குச் சட்டத் தூலம். இதன் உச்சி உறுப்பும், அடி உறுப்பும் செங்குத்தான விட்டக்காழ்களால் இணைக்கப்பட்டிருக்கும்.

**Strut tenon:** (*மர. வே.*) விட்டக்காழ் பொருத்து முளை: கனமான வெட்டு மரங்களில் உறுதி நாடி விட்டத்தின் குறுக்காக இடப்படும் பொருத்து முளை.

**Stucco :** குழைகாரை : சுவர்ப் பூச்சுச் சிற்ப ஒப்பனைக்குரிய அரைச் சாந்து.

**Stuckmolding:** (*க.க.*) ஒட்டுவார்ப் படம : தரைத் தளத்திலோ மேசையிலோ ஒட்டிக் கொள்ளக்கூடிய வடிவத்தில் அமைந்த வார்ப்படம்.

**Stud :** (*க.க.*) குமிழ் முகப்பு : ஒப்பனைக் குமிழ் முனைப்புப் பரப்பு.

**Stud bolt :** மரை திருகாணி : திருக்குக் குறடு பற்றிக்கொள்வதற்கு இடமளிக்கும் வகையில் இருமுனைகளிலும் வெற்றிடத்துடன் திருகிழை அமைக்கப்பட்ட மரையாணி.

**Stud gear :** (*எந்.*) குமிழ்ப் பல்லிணை : குமிழ் மீது அமைந்த ஓர் இடைநிலைப் பல்லிணை.

**Stuffing box :** (*எந்.*) உள் திணிப்புப் பொறியமைவு : காற்று முதலியவை உட்புகாதவாறு இயங்கவல்ல உள் திணிப்புப் பொறியமைவு.

**Stuffing regulator :** உள் திணிப்பு ஒழுங்கியக்கி : மெத்தை திண்டு வேலைப்பாட்டில் உள் திணிப்பில் ஏற்படும் மேடு பள்ளங்களைச் சீராக்கிச் சமப்படுத்தப் படும் கருவி. இது 6'' முதல்'' 10'' நீளத்தில் கூம்பு வடிவில் ஊசி போல் அமைந்திருக்கும்.

**Stunt or dunt :** திடீர் வெடிப்பு: குளிர்விக்கும்போது திடீரென ஏற்படும் வெடிப்பு அல்லது பிளவு.

**Style :** பாணி : ஒரு குறிப்பிட்ட காலத்தில் செல்வாக்குப் பெற்ற ஒப்பனைப் பாணி அல்லது கலைப் பண்பின் மாதிரி.

**Sub-base :** (*க.க.*) அடித்தள அகடு : ஓர் அடித்தளத்தின் அடிப் பகுதி.

**Sub cloud car:** (*வானூ.*) முகிலடி ஆய்வு ஊர்தி: விண்கலத்திலிருந்து மேகத்திற்குக் கீழே ஒரு நிலைக்குக் இறக்கக்கூடிய ஓர் ஆய்வு ஊர்தி

**Sub head:** (*அச்சு.*) துணைத் தலைப்பு: அச்சுப் பணியில் உட் தலைப்பு.

**Submarine:** நீர்மூழ்கி: கடலில் மேற்பரப்படியே மூழ்கிச் சென்று தாக்க வல்ல போர்க் கப்பல்.

**Sub-strato-sphere:** அடி மீவளி மண்டலம் : மீவளி மண்டலத்திற்குக் கீழே உள்ள பூமி மண்டலத்தின் படுகை. இதில் மிக உயரப் போக்குவரத்து நடவடிக்கைகள் நடத்தப் பெறுகின்றன.

**Substratum:** கீழடுக்கு: அடித்தள அடுக்கு.

**Substructure:** (*க.க.*) கீழ்க் கட்டுமானம் : ஒரு கட்டுமானத்தின் கீழ்ப்பகுதி. இதன் மேல் எதனையும் கட்டுவர்.

**Subtangent :** தொடுவரை நீட்டம் : ஊடுவரையில் தொடு வரை நீட்டம்.

**Suction :** பற்றீர்ப்பு : உறிஞ்சி எடுத்தல்.

**Suction - fan :** பதர் உறிஞ்சி : தானியத்திலிருந்து பதர் வாங்கி விட உதவும் உறிஞ்சு விசிறி.

**Suction stroke:** உறிஞ்சு வீச்சு : நீள் உருளைக்குள் எரிபொருளை உறிஞ்சி இழுக்கும் வீச்சு.

**Suede calfskin :** வறுதோல் : கையுறை, காலுறை முதலியவற்றிற்குப் பயன்படுத்தும் பதனிப் படாத வெள்ளாட்டுக் குட்டித் தோல், இது உயர்தரமான தோல். இது நேர்த்தியான உள்வரித் துணியாகப் பயன்படுத்தப்படுகிறது.

**Sulphated battery:** (*க.க.*) கந்தகி மின்கலத் தொகுதி : மின்னேற்றக் குறைவு அல்லது குறைந்த நீர் மட்டம் அல்லது இவ்விரண்டும் காரணமாக வெள்ளை நிறக்கந்தகி (சல்பேட்) பூசப்பட்ட தகடுகளுடைய சேம மின்கலத் தொகுதி.

**Sulphate paper:** கந்தகிக் காகிதம் : முற்றிலும் கந்தகிக் (சல்பேட்) கூழினால் செய்யப்பட்ட காகிதம். இது சில சமயம் சலவை வெண்மையாகவும், பழுப்பாகவும், சாயமிட்டதாகவும் இருக்கும்

**Sulphite bond:** கந்தகியத் தாள்: உறுதி வாய்ந்த உயர்தரத்தாள். இது நான்கு வகைகளில் கிடைக்கும். முதலிரு உயர்வகைகள் எழுது தாள் உற்பத்தி வாணிக மரபுகளுக்கேற்ப நீர்க் குறியிடப்பட்டிருக்கும்.

**Sulphite pulp :** கந்தகியக் கூழ் : ஊசியிலை மரம் மற்றும அது போன்ற மரங்களிலிருந்து சல்பைட் செய்முறை மூலம் தயாரிக்கப்படும் மரக்கூழ்.

**Sulphur :** (*வேதி.*) கந்தகம் [S]: இரும்பிலும் எஃகிலும் கந்தகம் அடங்கியிருப்பதால் எப்போதும் விரும்பத்தகாத விளைவுகளே ஏற்

படுகின்றன. இது வார்ப்பிரும்பை கடினமானதாகவும், வெண்மையானதாகவும் ஆக்கி விடுகிறது. மெல்லிரும்பில் அல்லது எஃகில் கந்தகத்தில் கந்தகம் மிகச் சிறிதளவு இருந்தாலும், அதனால் சிவப்புக் குறைபாடு உண்டாகிறது.

**Sulphuric acid :** (வேதி.) கந்தக அமிலம் ($H_2So_4$) : இது கந்தகத் திராவகம், கந்தகத்தை அனலில் வாட்டி அல்லது அயப் பைரைட்டை அல்லது பிற சல்பைடுகளை அனலில் வாட்டி, அதனால் உண்டாகும் டையாக்சுடன் ஆக்சிஜனைச் சேர்த்து, அந்தக் கலப்புப் பொருளை நீருடன் கலப்பதன் மூலம் இந்த அமிலம் தயாரிக்கப்படுகிறது. கலை வேலைப்பாடுகளிலும், சேம மின் கலத்தில் மின் பகுப்பானாகவும், மசகு எண்ணெயாகவும் பயன்படுகிறது.

**Sump :** கட்டுதொட்டி : சுரங்கம், எந்திரம் ஆகியவற்றில் மழை நீர், கழிவு நீர் ஆகியவற்றைச் சேகரிப்பதற்கான கட்டுகுழி.

**Sun compass :** (வானூ.) சூரியத் திசைகாட்டி : காந்த வட, தென் துருவ திசைக்குப் பதிலாக சூரியனின் திசை பயன்படுத்தப் படும் திசை காட்டி.

**Superbronze** (உலோ.) மிகு நேர்த்தி வெண்கலம் : இது அரிமானத்தை எதிர்க்கக்கூடிய மிகுந்த விறைப்புத் தன்மை வாய்ந்த, அலுமினியமும், மாங்கனீசும் அடங்கிய, வலுவான பித்தளை.

**Super charge** (வானூ.) மீவிசையேற்றம் : உந்துகலம், விமானம் முதலியவற்றில் நிலவர அழுத்தத்திற்கு அதிகமாக காற்று அல்லது கலவையை அடைத்தல்.

**Supercharged engine :** (வானூ.) மீவிசையேற்ற எஞ்சின் : விமானம் மிக உயரத்தில் பறப்பதற்காக எஞ்சினுக்கு மீவிசையேற்றம் செய்தல்.

**Super heated steam :** மிகு வெப்ப நீராவி: நீராவி எந்த அழுத்த நிலையில் உண்டாகியதோ அந்த அழுத்தத்திற்கு நேரிணையான வெப்ப நிலையை விட அதிக வெப்ப நிலையுடைய நீராவி.

**Super imposition :** மேற் சுமத்தீடு : தொலைக்காட்சியில் ஓர் ஒளிப்படக் கருவியிலிருந்தும் உருக்காட்சியின் மீது இன்னொரு ஒளிப்படக் கருவியிலிருந்து வரும் உருக்காட்சி படியச் செய்தல். உருக்காட்சிகளை வேண்டிய அளவுக்கு ஒருங்கிணைத்தல்.

**Superior figures or letters :** (அச்சு.) வரிமேல உருவம் அல்லது எழுத்து : அச்சுக்கோப்பில் ஒரு வரிக்கு மேலாக அமைக்கப்படும் சிறிய உருவம் அல்லது எழுத்து. $B^3$;$C^n$.

**Super structure :** மேற்கட்டுமானம் : ஒரு கட்டிடத்திற்கு மேலே கட்டப்படும் கட்டுமானம்.

**Supplement of an angle :** துணைக்கோணம் : கோணத்துடன் இணைந்து நேர்க்கோணமாகும் துணைக்கோணம்.

**Surd :** (*கணி.*) பகுபடா எண் : பதின்கூற்றில் தீராக் கீழ்வாய்ப் பின்னம்.

**Surface action :** (*இயற்.*) மேற்பரப்பு வினை : மேற்பரப்பில் விளைவுகளை உண்டாக்கும் வினை. எடுத்துக்காட்டு: வண்ணம் பூசிய பரப்பில், புகை, ஈரம் முதலியவற்றின் வினை.

**Surface gauge :** மேற்பரப்பு அளவி : எந்திர நுட்பாளர்கள் உள்வரியிடுவதற்குப் பயன்படுத்தும் கருவி.

**Surface grinding :** (*உலோ.*) மேற்பரப்புச் சாணை : தட்டையான உலோகப் பரப்புகளைச் சாணையிட்டுத் தீட்டுதல்.

**Surfaces speed :** (*எந்.*) மேற்பரப்பு வேகம் : ஒரு மேற்பரப்பு ஒரு நிமிடத்திற்கு எத்தனை அடி நகர்கிறது என்பதைக் குறிக்கும் இயக்க வீதம். இது ஒரு நேர்கோட்டில் இயங்கும் பரப்பையோ, நீள் உருளைவரை கோட்டில் இயங்கும் பரப்பையோ குறிக்கும். எடுத்துக் காட்டாக, ஒரு சக்கரத்தின் மேற்பரப்பு வேகத்தைக் கணக்கிடுவதற்கு அடிக்கணக்கிலான அதன் சுற்றளவை, அது ஒரு நிமிடத்தில் சுழலும் சுழற்சிகளின் எண்ணிக்கையினால் பெருக்குதல் வேண்டும்.

**Surveying:** நில அளவை: நிலத்தை அளவிடும் அறிவியல்.

**Surveyors compass:** நில அளவையாளர் திசைகாட்டி: கிடைமட்டக் கோட்டிற்கும் ஒரு காந்தமுள்ளுக்குமிடையில் திசை வேறுபாட்டைக் குறிக்கும் கருவி. இதனை அளவையாளர்கள் பயன்படுத்துகிறார்கள்.

**Suspension:** (*வேதி.*) மிதவல்: நீர்மத்தில் மேலுமில்லாமல் கீழுமில்லாமல் இடைமிதவலாக மிதக்கும் மிதவைப் படலம்.

**Swab :** (*வார்.*) ஒத்துப்பட்டை: வார்ப்படத்தில் ஒரு தோரணியைச் சுற்றியிருக்கும் மணலை ஈரத்தில் ஒற்றியெடுக்கும் துணித்துண்டு அல்லது உறிஞ்சு பஞ்சு.

**Swag :** தோரணம் : அறைகலன்களை அலங்காரமாகச் செய்வதற்கான தோரண வடிவமைப்பு.

**Swage :** பணியிரும்பு : பதிவச்சுப் பொறியினால் வடிவம் கொடுப்பதற்குப் பயன்படும் பணியிரும்பு.

**Swage block:** பதிவச்சுருக் கட்டை: பணியிரும்பை உருவாக்குவதில் பயன்படும் துளை பள்ளங்களையுடைய கட்டை.

**Swash letters:** (*அச்சு.*) வளைவுக் கோட்டு எழுத்து: அச்சுப் பணியில் வளைவு கோடுகளினாலான அலங்கார எழுத்துக்கள்.

**Sweating :** (*உலோ.*) உலோக இணைப்பு : உலோகப் பகுதிகளைப் பரப்பின் இழைவாய் ஒன்றுபடுத்திப் பொருத்துதல்.

**Swedish iron :** (*உலோ.*) சுவீடிஷ் இரும்பு : பாஸ்வரம், கந்தகம் சிறிதும் இல்லாத மிக உயர்ந்த தரமான இரும்பு.

**Sweep :** அக வளைவியக்கம் : ஒரு தொலைக்காட்சிப் பட அல்லது ஒளிப்படக் குழாயில் எலெக்ட்ரான் கற்றையின் இயக்கம்.

**Sweet oil :** (*வேதி.*) ஒலிவ நெய் : குறைந்த தரமுடைய, கெட்டியான ஒலிவநெய். இது மருந்துப் பொருளாகவும், சமையலுக்காகவும் மசகுப் பொருளாகவும் பயன்படுகிறது.

**Sweet or red gum :** (*மர.வே.*) செம்மெழுகு மரம் : செம்மெழுகு தரும், மலையில் வளரும் மரம். இது பெரிதாக வளரும். இது மென்மையானது; எனினும் வலுவானது. இது அழகான வடிவம் பெறும்; எனினும் உருத்திரிந்து வளரும்.

**Swell :** (*வார்.*) புடைப்புரு : வார்ப்படத்தைப் போதிய அளவு அழுத்தம் கொடுக்காததால் ஏற்படும் புடைப்பு.

**Swing saw :** (*மர.வே.*) ஊசல் ரம்பம் : மேலிருந்து தொங்கவிடப்பட்டிருக்கும் கீழுள்ள சட்டகத்தில் பொருத்தப்பட்டுள்ள வட்ட வடிவ ரம்பம். வேலைப்பாடு செய்ய வேண்டிய பொருள் நிலையாக இருக்க, ரம்பத்தை அங்குமிங்கும் அசைத்து இயக்கி அறுப்பு வேலை செய்யப்படுகிறது.



**Switch :** (*மின்.*) மின் விசை : மின்சுற்று வழியை இணைக்கவும் முறிக்கவும் பயன்படும் சாதனம்.

**Switch board :** (*மின்.*) மின் விசைப் பலகை : பல மின் தொடர்பு இணைப்புகள் கொண்ட பலகை. இதில் மின்மானியும் பொருத்தப்பட்டிருக்கும்.

**Switch box :** (*மின்.*) மின் விசைப் பெட்டி :மின்விசை அமைப்பினைப் பாதுகாக்கவும், மின்னோட்டம் செல்லும் உறுப்புகள் ஒன்றையொன்று தொட்டு விடாமல் தடுக்கவும் பயன்படும் இரும்புப் பெட்டி.

**Swivel :** (*எந்.*) சுழல் திருகு : ஒன்றின் மீது ஒன்று சுழலும்படி அமைந்த திருகு அமைப்பு.

**Swivel vise :** (*பட்.*) சுழல் குறடு : இது ஒரு மேசைக்குறடு. இது சுழன்று தான் பற்றியிருக்கும் பொருளைத் தேவையான நிலைக்குக் கொண்டு வரும்.

**S wrench :** (*எந்.*) S - திருகுக் குறடு : "S" என்ற ஆங்கில எழுத்தின் வடிவிலுள்ள திருகுக் குறடு. இது நிலையானதாக அல்லது தக்கவாறு அமைத்துக் கொள்ளத் தக்கதாக அமைந்திருக்கும்.

**Sycamore :** (*மர. வே.*) அத்தி மரம் : 150' உயரம் வளரக்கூடிய மிகப்பெரிய மரம். மிதமான அளவு கனமுடையது; இதனைப் பிளப்பது மிகக் கடினம். ஒரு கன அடியின் எடை சுமார் 8கி.கி. இருக்கும். அழகான வரிகளுடையது; இளம் பழுப்பு நிறமுடையது. அறைகலன்கள் தயாரிக்கப் பெரிதும் பயன்படுகிறது. விமானங்கள் செய்வதிலும் பயன்படுத்தப்படுகிறது.

**Symbol:** சின்னம்: சுருக்கக் குறியீடாகப் பயன்படுத்தப்படும் அடையாளக் குறியீடு.

**Symmetrical:** செவ்வொழுங்கு: உறுப்புகள் இருபுடைய ஒத்திசைவாக அமைந்திருந்தல்.

**Synchronization:** ஒருங்கிசைவுறுத்தல்: தொலைக்காட்சியிலும், திரைப்படக் காட்சியிலும், ஒளியும் ஒலியும் ஒன்றி ஒருங்கிசைந்து இயங்கும்படி செய்தல்.

**Synchrotron:** மின்காந்த இணையமைவு: மின்மவிசைப் பெருக்கமூட்டப் பயன்படும் மின்காந்த விசை இணையமைவு.

**Synchronous motor:** (*மின்.*) இணக்க மின்னோடி: மின் வழங்கும் மின்னாக்கியின் வேகம் நிலையாக இருக்கும் வரையில் வேகம் நிலையாக இருக்கும் மின்னோடி.

**Syncline:** (*மண்.*) மை வரை மடிவுப் படுகை: பாறை கீழ்முகமாக மடிந்திருத்தல்.

**Synthesis:** செயற்கைப் பொருளாக்கம்: தனிமங்களிலிருந்து அல்லது தனிக்கூட்டுப் பொருள்களிலிருந்து ஒரு செயற்கைச் சேர்மப் பொருளை ஆக்குதல்.

**Sinthetic:** (*குழைம.*) செயற்கைப் பொருள்: தனிமங்களிலிருந்து அல்லது எளிய கூட்டுப் பொருள்களிலிருந்து செயற்கையாகச் செய்யப்பட்ட வேதியியல் கூட்டுப் பொருள்.

# T

**Tab:** (*வானூ.*) கட்டுப்பாட்டுத் துணைப் பகுதி: கட்டுப்பாட்டு விசையைக் குறைக்க அல்லது விமானத்தைச் சமநிலப்படுத்துவதற்குக் கட்டுப்பாட்டுப் பரப்புடன் இணைக்கப்பட்ட துணைக் கட்டுப் பாட்டுப் பகுதி.

**Tabernacle:** (*க.க.*) தொழுகைத் தலம்: கிறிஸ்துவர்களின் சர்ச் அல்லது தொழுகைத் தலம்.

**Tabernacle:** (*க.க.*) வழிபடு யறை: வழிபாட்டுக்கான உருவம் வைக்குமிடம்.

**Taboret:** (*மர. வே.*) சிறுமேசை: சிறிய முக்காலி அல்லது உயரம் குறைந்த மேஜை. பெரும்பாலும் தாவரங்கள், அலங்காரப் பொருட்கள் முதலியவற்றை வைப்பதற்குப் பயன்படுவது.

**Tabular matter:** (*அச்சு.*) அட்டவணை மானி: பெரும்பாலும் கோக்கப்பட்ட எண்கள் பத்திகளாக அடுக்கப்பட்டவை.

**Tabulate:** பட்டியலிடு: பொருட்களை அல்லது தகவல்களை அட்டவணையாக அல்லது பட்டியலாக வகைப்படுத்து.

**Tachometer:** (*பொறி.*) விசை மானி: தண்டுகளின் வேகத்தை ஒரு நிமிடத்துக்கு எத்தனை சுழற்சிகள் என்று காட்டும் கருவி.

**Tackle:** (*எந்.*) பாரந் தூக்கு கலன்: பளுமிக்க பொருட்களைக் கட்டித் தூக்குவதற்குப் பயன்படும் சங்கிலி: கயிறு, கப்பி அல்லது பிளாக்குகள்.

**Tack:** (*அச்சு.*) பசைப்பு: அச்சு மையில் அடங்கிய வார்னிஷ் சற்று கெட்டியாவதால் அச்சு மையில் ஏற்படும் பிசு பிசுப்பு.

**Taenia:** (*க.க.*) தலைப்பட்டி: கிரேக்க டோரிக் பாணி கட்டடங்களில் தூண்கள் மேல் அமைந்த உத்தரத்துக்கும் அதற்கும் மேலே உள்ள சிறு சுவர்களுக்கும் நடுவில் அமைந்த தட்டையான பட்டை.

**Tail:** (*வானூ.*) விமான வால்: விமானத்தின் பின்புறப் பகுதி. பொதுவில் நிலைப்படுத்தும் பலகைகள் அல்லது துடுப்புகள் அடங்கியது இவற்றுடன் விமானத்தின் தூக்கிகள், சுக்கான்கள் ஆகிய கட்டுப் படுத்தி பரப்புகள் இணைக்கப்பட்டிருக்கும்.

**Tail beam or tail joist:** (*க. க.*) வால் உத்தரம்: தலை உத்தரத்துடன் வந்து சேருகிற உத்தரம்.

**Tail boom:** (*வானூ.*) வால் தண்டு வால் பகுதிகளையும், பிரதான

ஆதாரப் பிரிவுகளையும் இணைக்கிற தண்டு.

**Tail heavy:** (*வானூ.*) வால் இறக்கம்: (விமானம்) காற்றை விட எடைகூடிய விமானம் பறக்கும் போது நீளவாட்டு கட்டுப்பாடு விடுபடும்போது வால்புறம் கீழ் நிலையில் இருக்கும். அப்போது விமானி குறிப்பிட்ட உயரத்திலேயே இருக்கவிரும்பினால் கண்ட்ரோல் தடியை இயக்கியாக வேண்டும்.

**Tailing:** (*க.க.*) புடைப்புக்கல் : சுவரில் செருகப்பட்டு வெளியே துருத்தி நிற்கும் செங்கல் அல்லது கல்லின் பகுதி.

**Tail joist:** (*க.க.*) வால் உத்தரம் : ஒரு முனை தலை உத்தரத்துடன் வந்து முடிகிற உத்தரம்.

**Tailless airplane:** (*வானூ.*) வாலில்லா விமானம்: நிலைப்படுத்தவும் பயன்படுத்தப்படுகிற பகுதிகள் இறக்கைக்குள்ளாகவே அமைக்கப் பட்ட விமானம்.

**Tail light:** (*வானூ. பொறி.*) வால் விளக்கு: பின்புற விளக்கு: ஒவ்வொரு மோட்டார் வாகனத்திலும் பின்புறத்தில் சட்டப்படி அமைக்கப்படவேண்டிய, இரவில் பூட்டப் படுகையில் எரிய வேண்டிய சைகை விளக்கு.

**Tail piece:** (*அச்சு.*) இறுதிப்பகுதி முத்தாய்ப்பு: ஒரு நூலில் ஓர் அத்தியாயத்தின் முடிவில் அல்லது அச்சிடப்படுகிற குறி.

**Tail pipe :** உறிஞ்சு குழாய்.

**Tail print :** வால் அச்சு: அச்சுக்குள்ளிருந்து மாதிரி வடிவத்தை வெளியே எளிதில் எடுப்பதற்கான வகையில் மைய வடிவத்தில் அமைந்த பிடி, உள் அச்சு நன்கு அமைய அதற்கு வசதி செய்வது.

**Tail screw :** வால் திருகாணி : கடைசல் (லேத்) எந்திரத்தில் நிலைப்பிடிமானத்தின் தண்டை இயக்கச் செய்யும் திருகாணி.

**Tail skid :** (*வானூ.*) வால் சறுக்குக் கட்டை: தரையில் நிற்கிற விமானத்தின் வால் பகுதியைத் தாங்கி நிற்கிற சறுக்குக் கட்டை.

**Tail slide :** (*வானூ.*) வால் சறுக்கு விமானம் செங்குத்தாக உயரே ஏறிய பிறகு கீழே சறுக்குகிற நிலை ஏற்பட்டதைத் தொடர்ந்து விமானம் வால் கீழ் நோக்கியதாக பின்புறமாக கீழ்ப் புறமாகச் செயல்படும் நிலை.

**Tail spin :** (*வானூ.*) வானூர்தியின் சுழல் கழுகுப் பாய்ச்சல்.

**Tail stock :** (*எந்.*) வால்பிடிமானம் : ஒரு கடைசல் எந்திரத்தில் ஒரு பொருளைப் பொருத்துவதில் ஒரு புறம் நிலையாக இருத்திய தலைப்பிடிமானம் இருக்கும். மற்றொரு புறத்தில் மூன்றும் பின்னும் நகர்த்தக்கூடிய வால் பிடிமானம் இருக்கும்.

**Tail stock spindle :** (எந்.) நிலைப்பிடிமானத் தண்டு: கடைசல் எந்திர கடைசல் நிலைப்பிடிமானத்தில் செயலற்ற மையத்தைத் தூக்குகிற செருகு குழல் அல்லது தண்டு.

**Tail surface :** (வானூ.) வால் பரப்பு: ஒரு விமானத்தின் வால் பகுதியில் உள்ள நிலைப்படுத்துகிற அல்லது கட்டுப்படுத்துகிற பரப்பு.

**Tail unit :** (வானூ.) வால் தொகுதி: விமானத்தை நிலைப்படுத்தவும் கட்டுப்படுத்தவும் உதவ விமானத்தின் பின் புறத்தில் அமைந்த எல்லா பரப்புகளும் அதாவது நிலைப்படுத்தி, துடுப்பு, சுக்கான் தூக்கி ஆகியவை அடங்கும்.

**Tail wheel :** (வானூ.) வால் சக்கரம் : தரையில் உள்ளபோது ஒரு விமானத்தின் வால் பகுதியைத் தாங்கி நிற்கும் சக்கரம். அது திருப்பத்தக்கதாக அல்லது திருப்பமுடியாததாக, நிலையாக அல்லது சுழலும் வகையில் அமைக்கப்பட்டிருக்கலாம்

**Tain :** வெண் மெல் தகடு; முகக் கண்ணாடியின் முகட்டுக் காப்புத் தகரம்.

**Take :** (அச்சு.) எழுத்துப் பகுதி: அச்சுக்கோப்பவர் எந்த ஒரு சமயத்திலும் வைத்திருக்கின்ற ஒரு வாசகத்தின் ஒரு பகுதி.

**Take - off distance:** (வானூ.) எழும்பு தொலைவு சுழி: நிலை வேகத்திலிருந்து கிளம்புகிற ஒரு விமானம். இறுதியாகத் தரையிலிருந்து அல்லது நீரிலிருந்து தொடர்பகன்று மேலே எழும்புவது வரையிலான தொலைவு. மேலெழும்பும் தொலைவு, காற்றமைதி அல்லது குறிப்பிட்ட காற்று வேக அடிப்படையில் கணக்கிடப்படுவது.

**Take - off speed :** (வானூ.) எழும்பு வேகம்: ஒரு விமானம் முற்றிலுமாக வானில் எழும்பிய நிலையில் உள்ள காற்று வேகம்.

**Take-up:** (பட்.) இறுக்கமைவு தேய்மானத்தால் அல்லது வேறு காரணங்களால் பகுதிகளில் ஏற்பட்ட தவிர்வைப் போக்குவதற்கான ஒரு கருவி.

**Taking up:** (பட்.) சரிப்படுத்து: எந்திரம் போன்றவற்றில் தேய்மானத்துக்காகத் தகுந்தபடி பொருத்துதல் சம்பந்தப்பட்டது.

**Talo:** வெளிமக் கன்மகி; மென் கல் பொடி: காகிதம், உய்வுப் பொருட்கள், அழகு சாதனப் பொருட்கள் முதலியவற்றில் பயன்படுத்தப்படுகிற மென்கல்பொடி.

**Tallow:** கொழுப்பு; விலங்கின் உருக்கிய நிணம்: விலங்குக் கொழுப்புகளிலிருந்து தயாரிக்கப்படுவது.

**Tambour:** (க.க.) கூரையிட்ட பாதை: கூரையுள்ள சிறிய மூடப்பட்ட நடைபாதை.

**Tamo, japanese ash:** (*மர. வே.*) ஜப்பானி தாமோ சாம்பல்: தாமோ, ஜப்பானில் சாம்பல் (மரவேலை) ஃபிராக்சிமஸ் மஞ்சூரியா இப் பொருளானது, நிறத்திலும் தன் மையிலும் பெரும் வித்தியாசம் கொண்டது. இருக்கைச் சாதனங் கள், அறைத்தடுப்பு, அழகுச் சுவர் போன்று பயன்படுத்துதல் ஆகிய வற்றுக்கு நிறையப் பயன்படுத்தப் படுகிறது. தாமோ நேர்த்திப் பூச்சு மூலம் மரத்தின் கீற்றுப் பாணிகள் மிக எடுப்பாகத் தெரியும்.

**Tamp:** கெட்டித்தல்: வெடிப்பாற் றல் பெருக்கும்படி வெடிச் சுரங்க வாயில் களிமண் திணித்து வைத் தல்.

**Tamping:** (*பொறி.*) கெட்டித்தல்: சிறு கற்கள் போன்ற பொருள் களைப் பதித்து அடித்து கெட்டித் தல். ஒரு மாதிரிப் பாணியைச் சுற்றி மண்ணை வைத்துத் தட்டு தல்,

**Tanbark:** பதனிடு பட்டை: ஓக் மரத்தின் பட்டை போன்று டானின் அடங்கிய மரத்தின் பட்டை. தோல் பதனிடப் பயன் படுத்திய பின்னர் ஓரளவில் எரி பொருளாகப் பயன்படுவது.

**Tandem airplane:** (*வானூ.*) அடுக்கு இறக்கை விமானம்: ஒரே மட்டத்தில் முன்னும் பின்னுமாக அமைந்த இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட இறக்கை களைக் கொண்ட விமானம்.

**Tang:** முனை: விளிம்பு ஒரு வெட் டுக் கருவியின் கழுத்து அல்லது பிடிக்குள்ளாக செருகப்படும் பகுதி.

**Tangent:** தொடுகோடு: குறுக்காக வெட்டிச் செல்லாமல் ஒரு கோட் டை அல்லது பரப்பை ஒரு புள்ளி யில் தொடுதல் - தொடுகோடு.

**Tangent of an angle:** (*கணி.*) இருக்கை: ஒரு கோணத்துக்கு எதிரே உள்ள பக்கத்தை அருகில் உள்ள பக்கத்தால் வகுத்து வரும் ஈவு.

**Tangible :** தொட்டுணரத்தக்க : தெளிவாக உணரமுடிகிற, உண் மையான.

**Tank :** (*தானி. எந்.*) தொட்டி : மோட்டார் வாகனம் ஒன்றில் பெட் ரோல் நிரப்பப்படும் தொட்டி.

**Tannin or Tannic acid:** (*வேதி*) டானின் அல்லது டானிக் அமிலம் : பளபளப்பான சற்று மங்கலான மஞ்சள் ஒழுங்கற்ற பொடி ($C_{14}H_{10}O_9$) கால்நட், சுமாக், தேயிலை போன்றவற்றிலிருந்து பழுப்பான வெள்ளைப் பளபளப் புள்ள செதில் போன்ற வடிவில் கிடைப்பது. மருத்துவத்தில் இது உடல் திசுக்களை சுருங்கவைக்கும் பொருளாகப் பயன்படுத்தப்படு கிறது.

**Tantanium:** (*உலோ.*) டான்டானி யம்; டேன்டலைட்டிலிருந்து பெறப் படுகிற, அமிலத்தை எதிர்க்கும்

தன்மையுள்ள, சம்பியாக இருக்கத் தக்க பளபளப்பான வெள்ளை நிற உலோகம். பெரிதும் மின் பல்பு களிலும் ரேடியோ குழல்களிலும் இழையாகப் பயன்படுவது, கம்பி யாக, தண்டாக விற்கப்படுவது.

**Tap:** புரியாணி உள்வரி இழைப்புக் கருவி; புரியிடுதல்: புரிதண்டு கொண்டு புரிகளை அமைத்தல். (எந்.) உள்ளிடைப் புரிகளை அமைப்பதற்கான புடைத்த புரி களைக் கொண்ட கருவி, (கியர்-வரை) ஒரு துளையிடப்பட வேண்டுமென்பதற்கான குறியீடு.

**Tap bolt:** *(எந்.)* புரியிடப்பட்ட தாழ் துளை: பொதுவில் முழு நீளத் துக்கும் புரியிடப்பட்ட தாழ். தலை யின் அடிப்புறத்திலும் படியும் இடத்திலும் மட்டும் சீர் செய்யப் பட்டது. இந்த தாழ்களின் தலை சதுர அல்லது அறுகோண வடிவில் இருக்கும்.

**Tape:** *(பொறி.)* அளவிடு பட்டை: லினன் அல்லது பருத்தி அல்லது மெல்லிய உருக்கினால் செய்யப் பட்ட வளையத்தக்க அளவுச் சாத னம். பொதுவில் வட்ட வடிவ உறைக்குள் இருக்கும். பயன்பாட் டுக்குப்பின் மீண்டும் சுருட்டி உள்ளே அடக்கி விடலாம்.

**Taper:** *(எந்.)* குவிந்தமைதல்:படிப் படியாக, சீராக அளவு குறுகிக் கொண்டு வருதல். குவிந்த குழிவு. குவிந்த தண்டு, குவிந்த நடுத் தண்டு என்பதுபோல.

**Taper attachement :** *(எந்.)* குவிய இணைப்பு: குவிந்து அமையும் வகையில் கடைவதற்கு ஒரு லேத் தில் பொருத்துவதற்கான சாதனம். அளவுக்குத் தக்கபடி இதில் மாற் றம் செய்ய இயலும்.

**Tapered - shank drill** *(எந்.)* குவியத்தண்டுக் குடைவி: குவிந்து செல்லும் நடுத்தாங்கி கொண்ட, சாதாரண குடைவுச்சுழல்வியில் அல்லது குழிவில் பயன்படுத்தப்படு கிற, திரும்புகிற அல்லது அப்படி அல்லாத குடைவி.

**Tapered spindle:** *(எந்.)* குவி யத் தண்டு: குவியத்தண்டு வேலைக் கருவி அல்லது தண்டைப் பொருத் தும் வகையில் ஒரு புறத்தில் உள் பகுதியில் குவிந்து அமைந்த துளை உள்ள தண்டு.

**Taper gauge :** *(எந்.)* குவியளவு மானி: உள்ளே அல்லது வெளியே எந்த அளவுக்கு குவிந்து அமைந் துள்ளது என்பதை துல்லியமாக அளக்கும் கருவி.

**Taper per ft :** *(எந்.)* அடி வீதம் குவிதல் குவிந்தமைவது எந்த அளவில் உள்ளதை வெளிப்படுத் தும் முறை அதாவது ஜார்னோ குவிவு (அல்லது குவியம்) அடிக்கு 6". பிரவுன் மற்றும் ஷார்ப் குவிவு அடிக்கு 5". பத்து மட்டும் வராது.

**Taper pin :** *(எந்; பொறி.)* குவிய ஆணி: உருண்டையான உலோகக் கம்பிகளிலிருந்து செய்யப்படுவது. ஒரு தண்டுடன் ஒரு உறுப்பை

பிணைப்பதற்குப் பயன்படுவது. 1 முதல் 10 வரை எண் அடிப்படையில் அளவு வரிசைப்படுத்தப்பட்டது. எண் 1 என்பது அகலப் பகுதியில் 156'' குறுக்களவும் $3\frac{1}{2}$ முதல் ஒரு அங்குல நீளமும் கொண்டது. எண் 10 என்பது அகலப் பகுதியில் 706 அங்குலக் குறுக்களவும் $1\frac{1}{2}$ முதல் 6 அங்குல நீளமும் கொண்டது.

**Taper reamer :** (*எந்.*) குவியத் துளை துருவி: குவிந்து அமையும் துளைகளில் உள்ளே செலுத்தி துளையைத் தேவையான அளவுக்குத் துருவிப் பெரிதாக்குவதற்கான சாதாரண நீண்ட துருவு பள்ளம் கொண்ட துளைத் துருவி. குவிய ஆணியைச் செலுத்துவதற்கு துளை போடப் பயன்படுவது.

**Taper - pin drills:** (*உலோ. வே.*) குவிய ஆணி துளை கருவி: அடிக்கு $\frac{1}{4}$ அங்குலம் வீதம் குவிந்து அமைந்த, பல் போன்ற கூரான விளிம்புகளைக் கொண்ட துளையிடு கருவி.கட்டி உலோகத்திலிருந்தான குவிய ஆணிகளை செருகுவதற்கான துளைகளைப் போட வல்லது.

**Taper tap :** குவியப் புரியிடு கருவி: நீளவாட்டில் குவிந்து அமைந்த புரியிடும் கருவி. துளையிடப்பட்ட பின் துளையில் திருகு புரியிடுவதற்கு எளிதில் உதவுவது.

**Taper turning :** (*எந்.*) குவியக் கடைசல் கடைசல் எந்திரத்தில் நிலைப்பிடிமானத்தைப் பொருத்தாமல் அல்லது குவிய இணைப்பைப் பொருத்திக் கடைவது.

**Tap, hob, sellers:** (*எந்.*) நீண்ட புரியிடு கருவி: இதில் நீள்வாட்டில் மத்திய பகுதியில் மட்டும் புரி இருக்கும். அத்துடன் பல குழிவுகள் இருக்கும். அச்சுகளில் மற்றும் கடைசல் எந்திர புரியிடு கருவிகளில் புரி போடுவதற்கு அது பயன்படுகிறது.

**Tapestry:** அலங்காரத் திரைச் சீலை: தொங்கவிடுவதற்கும், இருக்கைகளின் பரப்பு மீது பொருத்துவதற்குமான அலங்கார சித்திர வேலைப்பாடு அமைந்த துணி.

**Tap hole:** (*வார்.*) வடி துளை: உலோகத்தை உருக்குவதற்குப் பயன்படுத்தப்படும் குழிவு வாணலியின் புடைப்பில் உள்ள துளை, உருகிய உலோகம் இதன் வழியே பெறப்படும்.

**Tapped face plate:** (*பட்.*) புரியிட்ட முகத்தகடு: ஒரு முகப்புத் தகட்டில் துளைகளுக்குப் பதில் அல்லது காற்றுடன் சேர்த்து புரியிட்ட துளைகள் இருக்கும்.

**Tapper tap:** (*எந்.*) புரி எந்திர புரி தண்டு: புரியிடும் எந்திரங்களில் நட்டுகளில் புரியிடுவதற்கான விசேஷ புரிதண்டு.

**Tappet:** (*தானி.*) டாப்பெட்: புடைச் சக்கரத்துக்கும் வால்வுக்கும் இடையே முன்னும் பின்னுமாக இயங்கும் பகுதி.

**Tappet valve:** (*தானி.*) தட்டியக்கப் பிதுக்கத் தடுக்கிதழ்: வட்டுத் தலையுடன் கூடிய தடுக்கிதழி லிருந்து ஒரு தண்டு நீண்டுசெயல்வி யாக இருக்கும். உள் எரி எஞ்ஜி னில் பொதுவில் பயன்படுகிறது.

**Tapping:** (*உலோ. வே.*) புரியிடுதல்: கையால் அல்லது எந்திரத் தைப் பயன்படுத்தி ஒரு புரிதண்டு மூலம் ஒரு துளையினுள் புரிகளைப் போடுதல்.

**Tapping bar:** (*வார்.*) வடிதண்டு (வார்ப்பு) ¾ முதல் 1½ அங்குல குறுக்களவும் 8 முதல் 10 அடி நீள மும் உள்ள இரும்புத் தண்டு. உலைத் தொட்டியில் உருகிய நிலையில் உள்ள இரும்புக் குழம் பை வெளியே பாயச் செய்ய ஆத் தொட்டியின் திறப்பு வாயைத் திறப்பதற்குப் பயன்படுவது.

**Tapping machine:** (*பட்.*) புரியிடு எந்திரம்: சிறு உறுப்புகளில் உற் பத்திப் பணிகளில் அடிக்கடி பயன் படுத்தப்படுகிற ஒரு எந்திரம். ஒரு துளையில் புரியிட முன்புற இலக்க மும் பின்னர் வெளியே எடுக்க எதி ராகச் சுற்றும் இலக்கமும் கொண் டது.

**Tap remover** (*பட்.*) புரிதண்டு அகற்றி: துளைக்குள் உடைந்த புரி தண்டை வெளியே திருகி எடுப் பதற்கு அதைப் பற்றிக், கொள்வ தற்கான கருவி

**Tap splice:** (*மின்*) டேப் பிணைப்பு:காண்க கிளை இணைப்பு.

**Tap wrench:** (*எந்.*) புரிதண்டு பிடிகருவி: துளைகளில் புரியிடு கையில் புரிதண்டை கெட்டியாகப் பற்றிக் கொண்டு இயக்குவதற்கான இரட்டைப்பிடி நெம்புகோல்.

**Tarnish:** மங்கு மினுமினுப்பு இழப்பு மங்கலாகுதல்.

**Tar - paulin:** கருங் கித்தான் கான்வாசினால் ஆன நீர் புகாத கெட்டியான போர்வை.

**Taut:** விறைப்பு: விறைப்பாக, நன்கு இழுக்கப்பட்ட. தொய்வு இல்லாமல் ஒரு கயிறு விறைப்பாக இழுக்கப்பட்டது போல.

**Tawing:** பதனிடுதல்: படிக்காரம் அல்லது உப்பைக் கொண்டு தோலைப் பதனிடுதல்

**Taxi:** (*வானூ.*) தரை கடலில் ஓடும் விமானம: சொந்த இயங்கு திறன் கொண்டு ஒரு விமானத்தைத் தரையில் ஓடச் செய்தல். கடல் விமானத்தை நீரின் மீது ஓடச் செய்தல்.

**Taxi - meter** (*எந்.*) உந்து வேகமானி: ஒரு வாடகை வண்டி ஓடிய தூரத்தை அளவிடும் கருவி, வாடகையைக் கணக்கிடுவதற்கு மான கருவி.

**Taxi - way** (*வானூ.*) விமான நகரு பாதை: விமானம் இறங்கு

களத்தில், தரையிறங்கும் வட்டாரத்திலிருந்து அல்லது அந்த வட்டாரத்துக்கு விமானம் ஓடுவதற்கென சிறப்பாகத் தயாரிக்கப்பட்ட தரை.

**T bolt:** (எந்.) 'T' வடிவ செருகு ஊசி: ஆங்கில "T" எழுத்து போன்ற வடிவம் கொண்ட போல்ட். அதன் தலைப்பகுதியானது கடைசல் எந்திர அல்லது இழைப்பு எந்திர மேடை போன்றவற்றின் T துளைகளில் படிமானமாகப் பொருத்துவது.

**Teak:** (மர. வே.) தேக்கு: கிழக்கு இந்தியாவில் காணப்படுகிற பெரிய வடிவிலான மரம். இதன் மரக்கட்டை மிக நீடித்து உழைக்கக்கூடியது. கப்பல் கட்டுமானத்துக்கும் இருக்கைச் சாதனங்கள் செய்யவும் மிகவும் விரும்பப்படுவது.

**Tears:** கிழிதல்: தொலைக்காட்சித் திரையில் ஓசை காரணமாக கிடைமட்டமாக ஏற்படுகிற பாதிப்பு, படம் கிழிவது போன்று தோன்றும்.

**Technical:** தொழில்நுட்பம்: குறிப்பிட்டதொரு கலை, அறிவியல் பிரிவு, வேலை, தொழில் போன்றவை தொடர்பான தொழில் நுட்பப் பள்ளி, தொழில் நுட்பச் சொல் போன்றது.

**Technical director:** தொழில் நுட்ப இயக்குநர்: ஒரு ஸ்டுடியோவில் தொழில் நுட்பக்கருவிகள், ஊழியர்களை மேற்பார்வையிடுவர்.

**Technology:** தொழில் நுட்பவியல் தொழில் துறைக் கலைகள் சம்பந்தப்பட்ட அறிவியல் துறை.

**Tee:** இணைப்பி: (குழாய்) வெவ்வேறு குறுக்களவுள்ள குழாய்களைப் பொருத்துவதற்கான இணைப்பி, அல்லது குழாயின் ஓட்டத் திசையை மாற்றுவதற்கான இணைப்பி. மாட்டுத் தலை இணைப்பியில் நுழைவாயை விடத் திறப்பு வாய் பெரிதாக இருக்கும். நேர் இணைப்பியில் இரு வாய்களும் சம அளவில் இருக்கும்.

**Telecast:** தொலைக்காட்சி ஒளிபரப்பு: தொலைக்காட்சி நிகழ்ச்சி அல்லது தொலைக்காட்சி ஒளிபரப்பு.

**Telecommunication:** தொலைத் தொடர்பு: தொலைப் போக்குவரத்து, தந்தி, கடவடி வடக்கம்பி-கம்பியில்லாத் தந்தி-தொலைபேசி முதலியன வழியாகத் தொலைச் செய்தி அறிவிப்பு முறை.

**Telecon:** வானொலித் தொலை முறை அமைவு: வானொலி-தந்தி வட இணைப்பு மூலமாகத் தொலைக்காட்சித் திரையில் செய்தி ஒளியிட்டுக் காட்டுவதன் மூலம் பலர் ஒருங்குகூடி கலந்தாய்வு செய்ய வழிகோலும் அமைவு.

**Telegraph:** (மின்.) தந்தி: கம்பி வழியே செய்திகளை அனுப்புவதற்கும் பெறுவதற்குமான சாதனம். இதன் வழியே எழுத்துகளைக் குறிக்கின்ற வகையிலான மின் சிக்னல்கள் அனுப்பப்படும்.

**Telegraph-key:** தந்தி மின்னோட்ட இயக்கமைவு: தந்தித் துறையில் மின்னோட்டத்தைப் பாய்ச்சவோ தடுக்கவோ வகை செய்யும் பொறியமைவு.

**Telekinema:** தொலைக்காட்சி மூலம் திரைப்படங்கள் காட்டும் திரைக் காட்சி.

**Telemeter:** தொலைவுமானி: நில அளவையிலும் பீரங்கி சுடும் பயிற்சியிலும் தொலைவைக் கணிப்பதற்கான கருவி.

**Telemeter:** தொலைக் கணிப்பியல்:

**Telephone:** (மின்.) தொலைபேசி: குரலை நீண்ட தொலைவுகளுக்கு மின் சிக்னல் வடிவில் அனுப்புவதற்கான சாதனம்.

**Telephone drop:** (மின்.) தொலைபேசி விழுதுண்டு: தொலைபேசி சுவிட்ச் பலகையில் கவன ஈர்ப்புத் துண்டுகளில் ஒன்று. கீழே விழும் போது தொலைபேசி தொடர்பாளரின் கவனம் ஈர்க்கப்பட்டு ஒருவர் தொடர்பு கோருகிறார் என்பதை அறிந்து கொள்வார்.

**Telephone exchange:** (மின்.) தொலைபேசி இணைப்பகம்; ஒரு பிரிவுக்குள் தொலைபேசி வைத்திருப்போர் இடையிலும், பிற இணைப்பகங்கள் மூலம், தொலைபேசி கட்டமைப்புக்குள்ளான வேறு ஒரு தொலைபேசியுடனும் இணைப்புகளை அளிக்க சுவிட்ச் பலகைகளைக் கொண்ட மத்திய அமைப்பு.

**Telephone hook switch:** தொலைபேசி கொக்கி விசைக்குமிழ்: தொலைபேசியில் ரிசீவரின் எடை காரணமாகச் செயல்படுகின்ற பிரிநிலை நெம்புகோலினால் கட்டுப்படுத்தப்படும் சுவிட்ச். தொலைபேசிமணி அடிப்பது, மற்றும் பேசுவதற்கான சர்க்கிலும் செயல்படுவது ஆகியவற்றைக் கட்டுப்படுத்தப் பயன்படுவது.

**Telephony:** தொலைபேசி இயக்கம்: ஒரு தொலைபேசி அல்லது தொலைபேசிகள் தொகுப்பின் இயக்கம்.

**Telephoto lens:** தொலைநோக்கி லென்ஸ்: மிகத் தொலைவில் உள்ள பொருட்களின் மிகப் பெரிய காட்சிகளை அளிப்பதற்காகப் பயன்படும் மிகக் குறுகிய கோணமுள்ள லென்ஸ்.

**Telescope:** (இயற்.) தொலைநோக்கி: தொலைவில் உள்ள பொருளின் தெளிவான, பெரிய காட்சியைப் பெறுவதற்காகப் பயன்படும் பார்வைக்கருவி.

**Television:** தொலைக்காட்சி: தொலைவில் நடப்பதைக் காணும் சாதனம். ஒரு காட்சியை வரியிடு முறையின்படி சிறு சிறு துணுக்குகளாகப் பிரித்து எண்ணற்ற நுண்ணிய மின் சைகைகளாக மாற்றி அனுப்பும் ஒரு வகை தகவல் தொடர்புச் சாதனம். பெறப்படும் மின் சைகைகள் மறுபடி ஒளி-நிழல் துணுக்குகளாக மாற்றப்படும்

போது தொலைக்காட்சித் திரையில் ஆரம்பத்தில் படமாக்கப்பட்ட அசல் காட்சியாகத் தெரிகிறது.

**Television camera tube:** தொலைக்காட்சி படக் குழாய் : ஒரு காட்சியில் ஒளி, நிழல் பகுதிகளை மின் குறிகளாக மாற்றுவதற்குப் பயன்படுத்தப்படும் மின்னணுக் குழாய்.

**Tell tale :** (எந்.) நிகழ்ச்சிப் பதிவீட்டுக்கருவி: எந்திரம் அல்லது வேலையின் ஒரு பகுதி மீது இணைக்கப்பட்ட தற்காலிகக் கருவி குறிப்பிட்ட வேலை செய்து முடிக்கப்பட்டது அல்லது இயக்கத்தின் திசை மாற்றப்பட வேண்டும் என்பது போன்ற தகவலை பணியாளருக்குத் தெரிவிக்கும் நோக்கம் கொண்டது.

**Temperature:** (இயற்.) வெப்ப நிலை: ஒரு பொருள் பெற்றுள்ள வெப்பத்தின் அளவு.

**Tempering:** குவியமாகு: வேலைக்கு ஏற்ற வகையிலான அளவுக்கு உருக்கிற்கு கடினத் தன்மையை ஏற்றுவதற்கான பக்குவ முறை. கரிம உருக்குகளைப் பொருத்தவரையில் ஒரு உருக்குத் துண்டை மிகச் சிவந்த நிலைக்குச் சூடேற்றி அதை எண்ணெய் அல்லது நீரில் அமிழ்த்தி எடுத்து நிறத்தைச் சோதித்தபின் இறுதியாக அமிழ்த்துவர். விசேஷ உருக்குகள் வெப்பப் பக்குவ முறையில் கடினமாக்கப்படுகின்றன.

**Tempering sand:** (வார்.) மணல் பதமாக்கு: அச்சுகளைத் தயாரிப்பதற்காக வார்ப்பட மணலுடன் நீரைச் சேர்த்துத் தகுந்த ஈரப்பதத்தை அளித்தல்.

**Template:** (எந்.) வடிவத் தகடு: தற்காலிகமான வடிவக் குறிப்பு அல்லது மாடல். இதைப் பயன்படுத்தி வேலை வடிவம் குறிக்கப்படுகிறது. அல்லது செய்த வேலையின் வடிவம் சரியா என்று இதைப் பயன்படுத்தி சோதிக்கப்படுகிறது.

**Temple or tenter hook:** குறுக்குக் கழி: கையால் நெசவு செய்யும் துணி ஒரே சீரான அகலத்தில் இருக்கும் வகையில் துணியை விறைப்பாக இழுத்துப் பிடித்து வைத்திருக்கும் சாதனம்.

**Tenacity:** கெட்டிமை: கிழித்தெறிய முற்படுகிற விசைகளை எதிர்த்து நிற்க ஒரு பொருளுக்கு உள்ள தன்மை.

**Tenon:** (மர.வே) நாக்கு: ஒரு மரக் கட்டையின் விளிம்பில் தனியே புடைத்து நிற்கும் நாக்கு. இது செதுக்குத் துளையுடன் மிகச் சரியாகப் பொருத்தும். இது செதுக்குத் துளை நாக்கு இணைப்பு எனப்படும்.

**Tenom saw:** (மர. வே.) முதுகுரம்பம்: வேலை மேடை மீது மரத் தொழிலாளர் பயன்படுத்துகிற முதுகுப் புறத்தில் கெட்டிப் பட்டையுள்ள சாதாரண முதுகு ரம்பம்.

**Tensile:** (பொறி.) இழுதன்மை யுடைய: எளிதில் அறுந்துவிடாமல் நீளமாக இழுக்கத்தக்க, நீட்டத் தக்க ,இழுதிறன் கொண்டது.

**Tensile strain:** (பொறி.) விறைப் பாற்றல்: நீளவாட்டில் இழுத்தல் அல்லது நீட்டுதல் நிலையில் ஏற் படும் எதிர்ப்பு, நசுக்குவதற்கு நேர் மாறானது.

**Tensile strength:** (பொறி.) இழு தாங்கு வலிமை: இழுக்கும் விசை யை எதிர்த்து நிற்க ஒரு உலோகக் கட்டை அல்லது பொருளுக்குத் தேவையான வலிமை. (இயற்) யித்துக்கொள்ளும்வரை ஒரு பகுதி தாங்கி நிற்கிற, நேரடியாக செலுத்தப்படுகிற இழுவிசை இது ஒரு சதுர அங்குல குறுக்குப் பரப் புள்ள தண்டை உடைப்பதற்குத் தேவையான இவ்வளவு பவுண்ட் விசை என எண்களில் அளிக்கப் படுகிறது.

**Tensile stress:** (பொறி.) இழுப்புத் தாங்கு விசை: ஒரு தண்டு அல்லது ஒரு பொருள் இழுப்புக்குள்ளாகும் போது அதை எதிர்த்துத் தாங்கி நிற்பதற்காகத் தோன்றும் விசை.

**Tension:** இழுவிசை: இழுக்கின்ற அழுத்தலுக்கு நேர் எதிரானது.

**Tension spring:** (எந்.) இழுப்பு விசை சுருள்வில்: இழுக்கும் விசை யின் கீழ் செயல்படுகின்ற வகையில் வடிவமைக்கப்பட்ட இழுப்பு விசை திருகு சுருள்வில்.

**Terminal:** (க.க.) முடிவிடம்: சுழல் படிக்கட்டு தாங்கு தூண் அல் லது தாங்கு தூணின் பூச்சு. (மின்) மின் சாதனம் ஒன்றுக்கும் வெளி சர்க்கியூட்டுக்கும் இடையிலான இணைப்பு நிலை.

**Term of patent:** காப்புரிமைக் காலம்: ஒருவருடைய காப்புரி மைக்கு முழுப் பாதுகாப்புக் காலம். இது நீட்டிப்பு எதுவும் இன்றி பதி னேழு ஆண்டுகள் தொடங்கும்.

**Ternary steel:** (உலோ.) உருக்கு கலோகம்: இரும்பு, கார்பன், மற் றும் ஏதேனும் ஒரு விசேஷத் தனி மம் கலந்த எல்லா வகையான கலோக உருக்குகளுக்குமான பொதுப் பெயர்.

**Terneplate:** (உலோ.) மட்டத் தகரம்: காரீயம் 80 விழுக்காடும், ஈயம் 20 விழுக்காடும் கலந்த ஒரு கலோகத்தைக் கொண்டு இரு புற மும் பூச்சு அளிக்கப்பட்ட மென்மை யான கருப்பு நிற சாதாரண உருக் குத் தகடுகள்.

**Terrace:** (க.க.) படிவரிசை: ஒரு புறம் செங்குத்தாக அல்லது சரி வாக உள்ள புல்வெளி போன்று, சரிமட்டமான மேட்டுப் பரப்பு.

**Terracotta:** சுட்ட களி: கட்டடங் களின் வெளிப்புற அலங்கார வேலைப்பாடுகளுக்குப் பரவலாகப் பயன்படுத்தப்படுகிற சுட்ட களி.

**Terrazzo flooring:** கல்துண்டுத் தரை: கருங்கல் துண்டுகளும் சிமென்டும் கலந்து பரவியது போன்று மெருகு ஏற்றப்பட்ட

தரை, சிமெண்டில் பல் வண்ணக் கல் துண்டுகளைப் பதித்து பாவிய தரை.

**Tertiary color:** மூன்றாம் வகை வண்ணம்: ஆரஞ்சு, பச்சை, ஊதா போன்ற இரண்டாவது வகை வண்ணங்களை இரண்டிரண்டாகக் கலப்பதன் மூலம் பெறப்படும் ஒரு வண்ணம். இதன் மூலம் ஆலிவ், எலுமிச்சை, சிவந்த பழுப்பு வண்ணங்கள் பெறப்படும்.

**Tessera:** (க.க.) பல்வண்ணப் பட்டைத் துண்டுப்பாளம்: மொசைக் தாழ்வாரம், நடைகள் ஆகியவற்றை அமைக்கப் பயன்படுகிற சிறிய சதுர வடிவிலான கல் அல்லது ஓடு.

**Test bar:** (வார்.) சோதனைக் கட்டை: பழுப்பு வார்ப்பு இரும்புத் துண்டை வைத்து சோதனை. அதன் குறுக்கு வாட்டு வலிமை, உடையும் தன்மை, சுருங்கும் தன்மை; குளிர்வடையும் தன்மை. கெட்டித் தன்மை ஆகியவை சோதிக்கப்படும். சோதனைக்கான இத்துண்டுகள் பொதுவில் $1\frac{1}{4}$ அங்குல குறுக்களவும் 15 அங்குல நீளமும் உடையவை.

**Test bench:** (தானி. மின்.) சோதனை மேடை: தானியங்கி மின் சாதனங்களை சோதிப்பதற்குப் பல்வேறு கருவிகள் மற்றும் அளவு மானிகள் இணைக்கப்பட்ட ஒரு பெஞ்சு அல்லது மேஜை.

**Tester:** கட்டில் மேற்கட்டு: படுக்கைக்கு மேலே படுக்கைக் கால்கள் தாங்கி நிற்கிற விதானம்.

**Testing:** (எந்.) சோதித்தல்: எந்திரக் கருவிகள் அல்லது மின் சாதனம் வேலைக்கான நிலையில் உள்ளனவா என்று கண்டறிவதற்கான ஒரு முறை.

**Testing machine:** (பொறி.) சோதிப்பு எந்திரம்: ஒரு பொருளின் உறுதி மற்றும் இழுவைத் தன்மையை சோதிப்பதற்கான ஒரு எந்திரம்.

**Testing set:** (மின்.) சோதனை செட்: வயரிங் அல்லது ஒரு சாதனம் நல்ல செயல் நிலையில் உள்ளதா என்று நிர்ணயிப்பதற்கான கருவிகள், அல்லது சாதனங்கள்.

**Test lamp:** (மின்.) சோதனை விளக்கு: நன்கு காப்பிடப்பட்ட பொருத்திக்சன் அமைந்த சாதாரண மின் பல்பு.

**Test pattern:** சோதனைப் பாணி: பல கோடுகள், வளையங்கள் முதலியவை அடங்கிய ஒரு வரைபடம். மெறு கருவியை சோதித்து சரிப் படுத்துவதற்காக அனுப்பப்படுவது. அனுப்பு கருவியை சோதிப்பதற்குப் பயனாவது.

**Tetraethyl lead** (வேதி.) டெட்ரா எத்தில் காரீயம்நச்சுத்தன்மையுள்ள எளிதில் ஆவியாகிற திரவம். என்ஜினில் கோட்ட இலக்கத்தைக் குறைப்பதற்கும் பெட்ரோலுடன் சிறிதளவு சேர்க்கப்படுவது.

**Text :** (*அச்சு.*) வாசகம் ஒரு நூலில் அல்லது அச்சிடப்பட்ட வேறு ஏதேனும் ஒன்றில் அடங்கிய வாசகம்.

**Text type:** (*அச்சு.*) வாசக எழுத்து அலகு வகை: அச்சிடப்பட்ட எழுத்துக்களின் வடிவளவைக் குறிக்கின்ற அலகு.

**T - head engine:** (*தானி.*) T தலை என்ஜின்: T என்னும் எழுத்து போன்ற வடிவமைப்பு கொண்ட மோட்டார் பிளாக்கின் குறுக்கு வெட்டுப் பகுதி. வால்வுகள் என் ஜினில் இரு புறங்களிலும் அமைந் திருக்கும். எனவே ஒரு கேம்ஷாப் டுகள் இரு கேம் ஷாப்ட் டிரைவ் கீர்கள் தேவை. விலையுயர்ந்த கட்டுமானம்.

**Theorem :** தேற்றம்: எண்பிக்கத் தக்க ஓர் உண்மை. நிரூபிக்கப் பட வேண்டிய ஒரு கூற்று.

**Theoretical :** கொள்கையளவில்: ஒரு கருத்துக் கோட்பாடு தொடர் பான அல்லது அளவுச் சார்ந்தன; அனுமான; கற்பிதமான.

**Theory :** கோட்பாடு: ஒன்றுக் கொன்று மிக நெருங்கிய தொடர் புள்ள கவனிப்புகள் அல்லது தோற்றங்கள் பலவற்றை விளக் கும் முயற்சி.

**Therlo :** (*உலோ.*) தெர்லோ: தாமிரம், அலுமினியம், மாங்கனீஸ் ஆகியவை அடங்கிய கலோகம்.

**Thermal conductivity:** (*பற்.*) வெப்ப கடத்து திறன்: (பற்றவைப்பு) ஓர் உலோகப் பொருளின் வழியே வெப்பத்தைக் கடத்துவதில் அந்த உலோகத்துக்கு உள்ள திறன். அந்த உலோகம் எவ்வளவு வேகத் தில் வெப்பத்தைக் கடத்துகிறது என்பதைத் தீர்மானிப்பதில், வெப் பம் பெறுவதற்கு முந்தைய நிலை, தேர்ந்தெடுக்கப்பட்ட வெப்ப ஊது குழல் அளவு ஆகியவற்றையும் கணக்கில் கொள்ளவேண்டும்.

**Thermal jet engine:** (*வானூ.*) வெப்ப ஜெட் என்ஜின்: பின்புறமான பீச்சுக்கு வாயுக்களை விரிவாக்க வெப்பத்தைப் பயன்படுத்தும் ஒரு ஜெட் என்ஜின். இது விமான ஜெட் என்ஜினின் வழக்கமான வடிவம்.

**Thermal reaction:** (*குழை.*) வெப்ப விளைவு: திடவடிவைப் பெறுகையில் வேதியியல் விளை வால் பிளாஸ்டிக்கில் தோன்றும் வெப்பம்.

**Thermal unit:** (*இயற்.*) வெப்ப அலகு: வெப்பத்தைக் கணக்கிட அல்லது ஒப்பிடுவதற்குத் தேர்ந் தெடுக்கப்படும் அலகு. இதர அளவுகளில் ஒப்பிடுவதற்கான நிர்ணய அலகு.

**Thermit:** (*பொறி.*) மீவெப்பூட்டி: அலுமினியப் பொடியும் இரும்பு, குரோமியம் அல்லது மாங்கனீஸ் ஆக்சைடும் கலந்த பொடி. தெர் மிட் (பொடி வைத்துப் பற்ற வைத் தல்) முறையில் பற்றவைப்பதற்கு இது பரவலாகப் பயன்படுத்தப்படு கிறது.

**Thermit :** மீவெப்ப அழுத்த முறை பற்ற வைப்பு: அழுத்த முறையில் பற்ற வைக்கும் இதில் தெர்மிட் விளைவு உண்டாக்கும் திரவப் பொருட்கள் மூலம் வெப்பம் பெறப் படுகிறது.

**Thermit welding :** மீவெப்பூட்டி பற்ற வைப்பு: அழுத்தம் பயன்படுத் தப்படாத (உருகு) பற்ற வைப்பு முறை, இதில் தெர்மிட் விளை வினால் உருகும் உருக்கிலிருந்து வெப்பம் பெறப்படுகிறது. மேற்படி விளைவின்போது உருக்கு உருகி அதுவே வெடிப்புகளை, கீறல் களை நிரப்பப் பயன்படுகிறது.

**Thermo - couple :** (*மின்.*) வெப்ப மின்னாக்கி: இது ஒரு வகை மின்னாக்கி. வெவ்வேறான இரு உலோகங்களால் ஆன தண்டுகள் அல்லது வயர்களை ஒன்றாகப் பற்ற வைத்த பின்னர் இவ்விதம் இணைந்த பகுதியைச் சூடேற்றி னால் தண்டு அல்லது வயர்களின் மறுமுனையில் மின்சாரம் தோன் றும். மிகுந்த வெப்பத்தை அளிக் கும் அதிவெப்பமானிகளில் இது பயன்படுத்தப்படுகிறது.

**Thermodynamics :** (*பொறி.*) வெப்ப இயக்கவியல்: வெப்பத்தை ஆற்றலின் வடிவமாக அல்லது வேலைக்கான ஒரு சாதனமாகக் கருதி ஆராய்கிற அறிவியல் பிரிவு.

**Thermoelectric metals :** வெப்ப மின் உலோகம்: உயர் வெப்பத்தை அளவிடுவதற்காக வெப்ப இணைப்பிகளில் பயன்படுத்தப்படு கிற உலோகங்கள் அல்லது உலோகங்கள் அல்லது கலோகங் கள். பிளாட்டினம், நிக்கல், தாமிரம், ரேடியம் போன்றவை அதிகம் பயன்படுத்தப்படுகின்றன.

**Thermograph:** (*வானூ.*) வெப்ப அளவுக் கருவி: வெப்ப அளவைப் பதிவு செய்யும் கருவி.

**Thermometer:** வெப்பமானி: வெப்பநிலையிலான மாற்றங்களை அளவிடுவதற்கான அளவீட்டுக் கருவி.

**Thermonuclear Reaction :** (*வேதி.*) அணுக்கருப் பிணைப்பு விளைவு: எடை குறைந்த இரு அணுக்கருக்கள் ஒன்றாக இணைந்து எடை கூடிய அணுவாக மாறும்போது மிதந்த ஆற்றலை வெளிப்படுத்துகிற விளைவு.

**Thermopile** (*மின்.*) கதிரியக்க வெப்பக்கூற்றுமானி: வெவ்வேறான பொருட்களை மாற்றி மாற்றி வரி சையாக ஒரு தொகுப்பாக அமைத்து இந்த இணைப்புகளைச் சூடேற்றினால் மின்சாரம் உற் பத்தியாகும்.

**Thermoplastic:** (*குழை.*) உருகு குழைமம்: குழைமக் (பிளாஸ்டிக்) குடும்பத்தில் (காண்க. பிளாஸ்டிக்) ஒரு வகை. இக் குடும்பத்திலான ஒரு வகைப் பிசின் பொருளை மீண் டும் மீண்டும் வெப்பமேற்றி வடிவை மாற்றலாம். குளிர்ந்த பின் அது உறுதியாகிவிடும்.

**Thermoset:** *(குழை.)* வெப்ப நிலைப்பி: ஒரு இரண்டாவது வகை பிளாஸ்டிக் பிரிவு. (காண்க பிளாஸ்டிக்) இந்த வகையின் கீழ் வரும் குடும்பங்களைச் சேர்ந்த பிசின்கள் ஒரு அச்சுக்குள் வைக்கப்பட்டு வெப்பமும், அழுத்தமும் செலுத்தப்படும்போது ஏற்படும் பிணையால் வேதியியல் மாற்றங்களுக்கு உட்பட்டு அச்சுக்கு ஏற்ற வடிவைப் பெற்று, மீண்டும் உருக்க முடியாதபடி நிலைத்த நிலையைப் பெறுகிறது.

**Thermosiphon system:** *(தானி.)* வெப்ப வடி குழாய் ஏற்பாடு: இவ் விதக் குளிர்விப்பு முறையானது வெப்பநீர் மேலே செல்ல, குளிர்ந்த நீர் அடியில் நிற்கும் என்ற உண்மையை அடிப்படையாகக் கொண்டது. என்ஜின் காரணமாக வெப்பமடையும் நீர் ரேடியேட்டரில் மேலுக்குச் சென்று குளிர்வடைந்து மீண்டும் கீழே வரும்போது ஒப்புநோக்குகையில் குளிர்ந்து உள்ளது. பிறகு அது வெப்பமடைந்து மேலே செல்கிறது.

**Thermostat:** வெப்ப நிலைப்பி: வெப்ப அளவைத் தானாக ஒழுங்குபடுத்திக் கட்டுப்படுத்துவதற்கான ஒரு கருவி.

**Thermostatic:** வெப்பச் சீர்நிலைக் கருவி: வெப்பச் சீர்நிலை (வெப்ப மேற்று) நீராவி மூலம் வெப்ப மேற்றும் முறைகளில் காற்றையும், படிவுத் திவலைகளையும், நீராவி வெளியேற வாய்ப்பின்றி ரேடியேட்டரிலிருந்து வெளியேற்றுதல் வெளியேற்று வால்வு எளிதில் ஆவியாகிற திரவம் நிரம்பிய இடைத் திரையினால் இயக்கப்படுகிறது. இது விரைவாக சுருங்கவோ, விரியவோ செய்கிறது.

**Thermostatic element:** வெப்பச் சீர்நிலைக் கோட்பாடு: வெப்பச் சீர்நிலை இயக்கி: குறிப்பிட்ட வெப்ப நிலையில் செயல்படுவதற்கென்றே உருவாக்கப்பட்ட இயக்கி அல்லது கருவியானது அக்குறிப்பிட்ட வெப்பத்தைப் பெறும்போது வால்வைத் திறக்கும் அல்லது மூடும். சுவிட்ச் அல்லது வேறு உறுப்புகளை இயக்கும். பொதுவில் இது சுருள் வடிவில் இருக்கும். அல்லது ஈதர் அல்லது வேறு திரவம் நிரப்பப்பட்டு இரு புறங்களிலும் சீவிடப்பட்ட வெற்று உலோகக் குழலாகவும் இருக்கலாம். விரியும்போது அல்லது சுருங்கும்போது ஒரு பட்டாம்பூச்சி வால்வை இயக்கும் இரு உலோகப் புயமாகவும் இருக்கலாம். இது அவ்வளவாகப் பயன்படுத்தப்படுவதல்ல.

**Thickness gauge or feeler:** *(எந்.)* பருமன் அளவுமானி: இது பேனாக்கத்தி போன்ற வடிவம் கொண்டது. இதன் விளிம்புகள் ஓர் அங்குலத்தில் ஆயிரத்தில் இவ்வளவு பங்கு என்ற அளவில் பருமன் வித்தியாசப்படும். மோட்டார் வாகன வால்வுகள் போன்ற உறுப்புகளில் இடைவெளி அளவை சரிப்படுத்தப் பயன்படுத்தப்படும்.

**Thickness ratio:** *(வானூ.)* திண்மை விகிதம்: விமான இயக்க

கட்டுப்பாட்டுப் பரப்புகளின் அதிக பட்ச பருமனுக்கும் அவற்றின் குறுக்குக் கோட்டுக்கும் இடையே உள்ள விகிதம்.

**Thick space:** (அச்சு.) தடிப்பு இடைவெளி: எந்த ஒரு குறிப்பிட்ட முகப்பிலும் மூன்று முதல் ஒரு 'யெம்' வரையில் அமைக்கப்பட்ட இடைவெளி.

**Thimble:** விரற்சிமிழ்: சிறுகுழாய்: (1) போல்ட், பின்போன்று ஏதேனும் ஒன்றின் உள்ளே அல்லது அதன்மீது அல்லது அதைச்சுற்றி செருகுவதற்கு பயன்படுத்தப்படுகிற, வழக்கமாக உலோகத்தால் ஆன சிறு குழல்.

(2) கயிறு அல்லது கேபிள் தேயாமல், பிரியாமல் இருப்பதற்காக அதன் நடுவே பொருத்தப்படுகிற குழிவுகள் கொண்ட வளையம்.

**T hinge:** (க. க.) T வடிவ கீல்: கிட்டத்தட்ட 'T' வடிவிலான கீல் பட்டையான அமைப்புடன் நேர் கோணத்தில் இணைந்த மற்றொரு பட்டையைக் கொண்டது. முக்கியமாக கதவு, கேட் ஆகியவற்றில் பயன்படுத்தப்படுவது.

**Thin space:** (அச்சு.) மென் இடைவெளி: சொற்களிடையே ஐந்து முதல் ஒரு யெம் வரை அமைக்கப்பட்ட இடைவெளி.

**Thrid - angle projection:** மூன்றாம் கோண எடுப்புத் தோற்றம்: அமெரிக்காவில் பின்பற்றப்படுகிற எந்திரவியல் வரைபடங்களில் வெவ்வேறு தோற்றங்களை எடுத்துக்காட்டல். பொதுவில் வரைபட அதாவது மேலிருந்து காட்சி, முன் பக்கக் காட்சி, பக்கவாட்டுக் காட்சி, பின்புறக்காட்சி ஆகியவை எடுத்துக் காட்டப்படும். ஒவ்வொரு காட்சியும், எடுத்துக்காட்டப்பட்ட பக்கக்காட்சியின் பின்புலனாக வைத்துக் காட்டப்படும்.

**Thrid brush:** (தானி.) மூன்றாம் பிரஷ்: புலம் - சுற்று மின் ஓட்டத்தைக் கட்டுப்படுத்துவதன் மூலம் மின்னாக்கியின் மின் உற்பத்தி அளவைக் கட்டுப்படுத்தும் துணை பிரஷ்.

**Thrid - class lever:** (எந்.) மூன்றாம் வகை நெம்புகோல்: விசையானது எடைக்கும் ஆதாரத்தானத்துக்கும் இடையே செலுத்தப்படும் நெம்புகோல்.

**Thixotropic:** (குழை.) திக்ஸோட்ரோபிக்: மிகநைசாகப் பொடி செய்த சிலிக்கா போன்ற கரையாத திடப்பொருட்கள் அடங்கிய திரவ பிளாஸ்டிக்குகள் கலத்தில் இருக்கும்போது பாகுபோல் இருக்கும். பரப்பில் பூசினால் திரவமாகி விடும். இவ்வகைப் பிசின் சரிவான பரப்பில் பூசப்பட்டால் வழிந்து இறங்காமல் பரப்பின் மீது நிலையாக இருக்கும்.

**Thixotropy:** (வேதி. குழை.) திக்ஸோட்ரோபி: சில சேர்மானங்கள் ஆசையா நிலையில் கூழ்மமாக

இருந்து நன்கு கிளரும்போது திரவ நிலைக்கு உள்ளாகும் தன்மை.

**Thread** : நூல்: பட்டு, பருத்தி அல்லது கம்பளி போன்று வழக்கமாக உலோகமல்லாத பொருளால் ஆன மெல்லிய கயிறு அல்லது இழை.

**Thread-cutting screws** : *(எந்.)* புரிவெட்டும் திருகு: வரிவரியாக அமைந்த வெட்டு முனை கொண்ட ஸ்குருக்கள் உள்ளே இறங்கும் போது புரிகள் வெட்டப்படும் இது புரி தண்டை தேவையற்றதாக்குகிறது. உலோகத் தகடுகள், மென்மைக் கலோகங்கள், பிளாஸ்டிக் போன்றவற்றில் புரியிட ஏற்றது

**Threaded sleeve** : *(பட்.)* புரியிட்ட உறை: உலோகத்தால் ஆன உள்ளீடற்ற உறைகள். வழக்கமாக உருளை வடிவில் உட்புறம் புரியிடப்பட்டது. இரு தண்டுகள் அல்லது இரு குழாய்களை இணைப்பதற்குப் பயன்படுவது.

**Thread gauge** : *(உலோ. வே.)* புரியளவு மானி : திருகு புரிகளின் இடைவெளியைச் சோதிப்பதற்கான அளவுமானி.

**Threading** : புரியிடுதல்: உள்புறத்தில் அல்லது வெளிப்புறத்தில் திருகு புரிகளை அமைத்தல்.

**Thread miller**: *(எந்.)* புரி கடைசல் எந்திரம் ; புரிகளை இடுவதற்கும், வெட்டி வேலைப்பாடு செய்வதற்குமான கடைசல் எந்திரம்.

**Thread plug** : *(குழை.)* புரி செருகு: உள்ளிடைப்புரிகளை உருவாக்குவதற்காகச் செருகப்படுகிற வார்ப்பு அச்சுப்பகுதி. வேலைக்குப் பிறகு வெளியே திருகி எடுக்கப்பட வேண்டியது.

**Thread - rolling** *(எந்.)* புரியமைத்தல்: ஒரு உலோகக் கட்டியில் உறுதியான உருளை அல்லது அச்சைச் செலுத்தி திருகுபுரிகளை அமைத்தல். அப்போது உள்ளிருந்து உலோகச் சுருள் துணுக்குகள் வெளிப்பட்டு உள்ளே புரிகள் அமையும். இவ்விதப் புரிகள் வலுவானவை; செலவு குறைவு.

**Threads per inch** : *(எந்.)* அங்குல வாரிப் புரி: இது புரியின் அளவைக் குறிப்பது. எந்த ஓர் குறுக்களவுக்கும் இவ்வளவு எண்ணிக்கையிலான புரிகள் என்று நடைமுறை அளவு உள்ளது. அதாவது ½ அங்குலக் குறுக்களவு. அங்குலத்துக்கு 13 புரி. ஓர் அங்குலக்குறுக்களவு அங்குலத்துக்கு 8 புரி. இப்படியாக புரிகளின் நோக்கம் (1) ஸ்குரு போல்ட், நட்டு ஆகியவற்றை ஒன்றாக இருத்தி வைத்தல், (2) திரவம் அல்லது வாயுக்களின் அழுத்தத்தை அதாவது குழாய் இணைப்புகளின் உறுப்புகளை நன்றாக இறுக்கிப் பொருந்துதல், (3) ஜாக் ஸ்குரு. பல் இணைப்பு செலுத்தி போன்றவை மூலம் விசையை செலுத்துதல், (4) மைக்ரோ மீட்டர், காலிபர் போன்ற

கருவிகளின் பகுதிகளைத் துல்லிய மாகப் பிரித்து அமைத்தல்.

**Thread tool:** (எந்.) புரிகருவி: கடைசல் எந்திரத்தில் பொருத்தும் வேலைக் கருவி. இடப்பட வேண் புரி அளவுக்கு வடிவமைப்புக் கொண்டது.

**Three and four fluted drills:** (உலோ. வே.) மூன்று மற்றும் நான்கு திருகு பள்ள துளையீடுகள்: சுரண்டு துருவிகளுக்குப் பதில் பல சமயங்களில் பயன்படுவது. புதி தாகத் துவங்கி துளையிட அவை பயனற்றவை. ஆனால் ஏற்கென வே துளையிடப்பட்ட, துருவப் பட்ட துளைகளைப் பெரிதாக்க உதவுபவை.

**Three phase:** (மின்.)மூன்று பேஸ்: மூன்று ஏ.சி. சுற்றுகள் அல்லது 120 மின் பாகைகளில் பேஸ் வித்தி யாசப்படும் சர்க்கியூட்டுகள்.

**Three ply:** மூவடுக்கு ஒட்டுப் பலகை: தனித்தனியான மூன்று அடுக்குகளைப் பயன்படுத்தித் தயாரிக்கப்பட்ட ஒட்டுப் பலகை (பிளைவுட்).

**Three-point suspension:** (தானி.) மும்முனை நிலைப்பு (மோட் டார் வாகன) மோட்டார் வாகனத் தில் என்ஜினின் எடையை மூன்று நிலைகள் தாங்கி நிற்கும் வகையில் என்ஜினை நிலைப்படுத்தும் முறை.

**Three-quarter binding:** முக் கால் நூல்கட்டு: அரை நூல் கட்டுப் (பைண்டிங்) போன்றதே, ஆனால் தோல்பகுதி நிறைய வெளியே தெரியும்.

**Three-quarter floating axle:** (தானி.) முக்கால் மிதப்பு அச்சு: பின்புற அச்சின் உறைப்பெட்டி சக்கரங்களின் மையத்தண்டு வரை நீண்டிருக்கும். அச்சின் வெளிப்புற முனைகள் சக்கரத்தண்டின் தகட்டு விளிம்புகளுடன் பற்றவைக் கப்பட்டிருக்கும் அல்லது இணைக் கப்பட்டிருக்கும் தகடு சக்கர மையத் தண்டுடன் போல்ட் மூலம் பொருத்தப்பட்டிருக்கும். சக்கரம் ஒவ்வொன்றிலும் ஒரு பேரிங்கு தான் இருக்கும். அது அச்சுத்தண் டின் உறைப்பெட்டி மேல் பொருத் தப்பட்டிருக்கும்.

**Three-square file:** (தானி.) முப் பட்டை அரம்: மூன்று முனை கொண்ட அரம். ரம்பத்தின் பற் களைக் கூராக்குவதற்குப் பயன் படுவது.

**Three-way switch:** (மின்.) மூன்று வழி சுவிட்ச்: ஒரு மின் விளக்கு அல்லது பல மின் விளக்கு களை வெவ்வேறான இரு இடங் களிலிருந்து இயக்குவிப்பதற்கான ஒரு சுவிட்ச்.

**Three - wire method :** மூன்று வயர் முறை : அமெரிக்க தர நிர் ணய அமைப்பு சிபாரிசு செய்தபடி திருகுகளில் புரிகள் நடுவில் உள்ள இடைவெளியை அளக்கும் முறை. பயன் வழி கையேட்டைக் காண்க.

**Threshold :** (க.க.) தலைவாயில் : 1. ஒரு கட்டடத்தின் நுழைவு வாயில் 2. கதவுக்கு அடியில் அமைந்த மரப்பலகை, கல்பலகை, அல்லது உத்தரம்.

**Throat :** (க.க.) கணப்புத் தொண்டை : கணப்பிலிருந்து புகை அறைக்குச் செல்லும் திறப்பு (எந்திர) துளை வெட்டும் எந்திரத்தில் வெட்டு கருவிக்குப் பின்னால் உள்ள இடைவெளி போடப்படும் துளையின் அளவு இந்த இடைவெளியின் ஆழத்தைப் பொருத்தது.

**eThrottle :** திராட்டில் : நீராவி போன்றதைக் கட்டுப்படுத்த அல்லது அடைத்து நிறுத்த, இதைச் செய்வதற்கான ஒரு கருவி.

**Throttle valve :** (எந்.) நீராவியைக் கட்டுப்படுத்தும் தடுக்கிதழ் : 1. மோட்டார் வாகன என்ஜினில் பெட்ரோலுடன் கலப்பதற்கு காற்று உள் புகுவதைக் கட்டுப்படுத்துவது போன்று, ஒரு குழாயில் அல்லது திறப்பில் முற்றிலுமாக அல்லது ஓரளவு மூடியபடி இருப்பதற்காகப் பொருத்தப்பட்டுள்ள மெல்லிய பட்டையான தகட்டு வால்வு. 2. நீராவிக்குழாயில் நீராவி வருவதைக் கட்டுப்படுத்துவதற்கான வால்வு.

**Through bolt:** (எந்.) திருபோல்ட்: இணைக்கப்பட வேண்டிய பகுதிகளில் உள்ள துளைகளில் உள்ள இடைவெளி வழியே செல்கின்ற போல்ட் இணைப்புப் பகுதிகள் முற்றிலும் நட்டுகளைப் பயன்படுத்தி முடுக்கப்படுகின்றன.

**Through shake :** மர உத்தரத்தில் வருடாந்திர வளர்ச்சி வளையங்கள் இடையே உறுதியின்றி இருக்கின்ற இடைவெளி. உத்திரத்தின் இரு முகப் பகுதிகளிலும் இது நீண்டு அமைந்திருக்கும்.

**Throw :** (எந்.) விரை சூழல் இயக்கப் பொறி : ஓர் என்ஜினின் கிராங் ஷாப்டில் உள்ளது போன்று அச்சு மைய வேறுபாட்டு அளவு; இது பிஸ்டனின் அடியின் நீளத்தில் பாதிக்குச் சமம்.

**Throwing:** வனைதல்: மட்பாண்ட வனைவு சக்கரத்தில் ஒரு மண்கலத்துக்கு வடிவம் அளித்தல்.

**Thrust bearing or thrust block:** (எந்.) தள்ளு தாங்குதல் அல்லது குழை முட்டு: நீளவாட்டில் தள்ளு விசையைத் தாங்குகின்ற பொறி உறுப்பு.

**Thrust collar:** (எந்.) தள்ளு வளையம்: ஒரு தண்டின் மீது படிகிற அல்லது அதனுடன் இணைக்கப்பட்ட வளையம். தண்டு அல்லது அதன்மீது பொருத்தப்பட்ட பகுதிகளின் இயக்க விளைவுகளைக் குறைப்பது அல்லது தாங்கிக்கொள்வது இந்த வளையத்தை அமைப்பதன் நோக்கம்.

**Thumb nut:** (எந்.) திருகுமரை : கட்டைவிரலாலும், ஆள்காட்டி

விரலாலும் இயக்க முடிகிற திருகு மரை.

**Thumb plane :** (மர. வே.) சிறு இழைப்புளி: (இழைப்புளி) 4 அல்லது 5 அங்குல நீளம உள்ள சிறிய இழைப்புளி. ஓர் அங்குல அகலமுள்ள இழைப்புத் துண்டு கொண்டது.

**Thumb screw:** (எந்.) நக திருகாணி: கட்டைவிரல். நகத்தைப் பயன்படுத்தி திருகிவிடக் கூடிய திருகாணி.

**Thumb tack:** அழுத்து ஆணி: அகன்ற தலை கொண்ட கூரான முனை கொண்ட ஆணி. வரைபடக் காகிதம் நகராமல் இருக்க அதன் ஓரங்களில் பொருத்தி வைக்க வரைபடக்காரர்கள் பயன்படுத்துவது.

**Thurm:** செங்குத்தான சதுரக் கட்டைகள், பலகைகளில் ரம்பத்தைக் கொண்டு அறுப்பது, கடைசலில் தோன்றுவது போன்ற பாணிகளை உண்டாக்குவது.

**Tie:** (க.க.) செருகு துண்டு: மற்ற துண்டுகள் விழாமல் அவற்றின் இடத்தில் இருப்பதற்காக ஒரு துண்டைச் செருகுதல் அல்லது சேர்த்தல்.

**Tie beam:** (க.க.) வரிக்கை; கட்டு உத்தரம்: முக்கோண வடிவக் கூரையில் அமையும் சாய்வு உத்தரங்களின் கீழ் நுணிகள் விலகி விடாதபடி தடுக்கிற அல்லது நிலையாகச் சேர்த்து வைக்கிற உத்தரம்.

**Tie dyeing :** கட்டுச்சாயம்: சாயம் ஏற்றும் போது துணியின் சில பகுதிகள் நூலினால் நன்கு கட்டப்பட்டு அப்பகுதிகளில் சாயம் ஏறாத படி தடுக்கப்படுகின்றன. நூல் அகற்றப்பட்டதும் தக்க டிசைன்கள் வெளிப்படுகின்றன.

**Tie piece :** கட்டு துண்டு: விறைப்பேற்றுவதற்கு ஒரு துண்டின் மீது பயன்படுத்தப்படுகிற விறைப்புத்துண்டு. இது வரைபடத்தில் காட்டப்படுவதில்லை. வார்ப்படத்தில் இது போன்று தயாரிக்கவும் தேவையில்லை.

**Tier :** அடுக்கு: பெட்டிகள் அடுக்கப்பட்டது போல ஒன்றன் மீது ஒன்றாக அடுக்குவது.

**Tiering machine :** அடுக்கும் எந்திரம் : ஆட்களை ஈடுபடுத்த வேண்டிய அவசியமின்றி, பொருட்களை ஒன்றன் மீது ஒன்றாக அல்லது வரிசையாக அடுக்கும் பணியைச் செய்யும் எந்திரம்.

**Tie rod :** (தானி. எந்.) இணைப்புத் தண்டு : ஒரு மோட்டார் வாகனத்தில் முன்புறச் சக்கரங்களை இணைக்கும் குறுக்குத் தண்டு: வண்டி திருப்பப்படும் போது சக்கரங்கள் இணைந்து செயல்பட உதவுகிறது.

**Tie-up material:** (அச்சு.) கட்டு நிலைகோக்கப்பட்டஎழுத்துக்களை

ஒன்று சேர்த்து கட்டி வைப்பதற்குப் பயன்படுத்தப்படுகிற அனைத்துப் பொருட்கள்.

**Tight fit :** (எந்.) அழுத்தப் பொருத்தம் : சிறிதளவு அழுத்தம் மூலம் செய்யப்படுகிற சரிபொருத்தம்.

**Tight pulley :** (எந்.) இறுக்கக் கப்பி : தண்டுடன் இணைக்கப்பட்ட கப்பி. இதற்கு மாறான அமைப்பில் தண்டுடன் இணையாமல் இருக்கிற கப்பியானது சுலபத்தில் சுழலும்.

**Tile :** (க.க.) ஓடு : மண், சிமெண்ட் அல்லது கண்ணாடியால் ஆனவை. கூரையில் அமைக்கப் பயன்படுத்தப்படுபவை. கலையம்சம் பொருந்திய டிசைன், நேர்த்தி ஆகியவற்றுடனும் தயாரிக்கப்பட்டு தரையிலும், சுவரிலும் பதிக்கப் பயன்படுபவை.

**Tilt top table :** சாய்ப்பு மேசை : பீடம் கொண்ட மேசை, இதன் மேல்பலகை கீல்கொண்டு பொருத்தப்பட்டுள்ளதால் கிடைமட்ட நிலையிலிருந்து செங்குத்து நிலைக்குக் கொண்டு வர இயலும்.

**Timber:** வெட்டுமரம்: மரம்: பல்வேறான வேலைகளுக்கு ஏற்ற வகையில் நீண்ட கட்டைகளாக சதுரப் பலகைகளாக அறுத்து வைக்கப்பட்டுள்ள மரம். காடுகளில் வெட்டப்பட்ட மரக் கட்டைகளிலிருந்து இவ்விதம் தயாரிக்கப்படுகிறது.

**Timber trestle:** (பொறி.) மரக் கட்டுமானம்: ஓடை அல்லது பள்ளங்கள் மீது ரயில்பாதை அமைப்பதற்குப் பயன்படுத்தப்படுகிற மரக் கட்டுமானங்கள். செங்குத்தாக, கிடைமட்டமாக, குறுக்காக மரக் கட்டைகளை அமைத்துக் கட்டப்படுபவை.

**Time measure:** கால அளவு:

| | | |
|---|---|---|
| 60 வினாடி | — | 1 நிமிடம் |
| 60 நிமிடம் | — | 1 மணி |
| 24 மணி | — | 1 நாள் |
| 7 நாள் | — | 1 வாரம் |
| 28, 29, 30 அல்லது 31 நாட்கள் | — | 1 காலண்டர் மாதம் |
| 30 நாள் | — | 1 வட்டி கணக்குக்கு ஒருமாதம் |
| 52 வாரம் | — | 1 ஆண்டு |
| 365 நாள் | — | 1 ஆண்டு |
| 366 நாள் | — | 1 லீப் ஆண்டு |

**Timer:** (தானி.) முன்னேற்பாட்டுக் கருவி: மோட்டார் வாகனத்தில் சிலிண்டர்களில் தக்க சமயத்தில் தீப்பொறி தோன்றும் வகையில் முதன்மை தீப்பற்று சர்க்யூட்டைத் துண்டிப்பதற்குப் பயன்படும் கருவி.

**Time switch:** (மின்.) நேர ஒழுங்கு மின்விசை மாற்றுக்குமிழ்: கடிகாரத்தினால் கட்டுப்படுத்தப்பட்டு குறித்த நேரத்தில் இயங்கும் சுவிட்ச்.

**Timing:** (தானி. எந்.) காலத் திட்ட அமைப்பு: 1. மிகப் பயனுள்ள

குதிரை சக்தி கிடைக்கின்ற வகையில் என்ஜின் வால்வுகளையும், கிராங்க்ஷாப்டையும் அவற்றின் உரிய இடத்தில் அமைத்தல்.

2. பிஸ்டனின் முகப்புமீது மிக அதிகபட்ச பயன் பிளவு ஏற்படுகிற வகையில் பிஸ்டனின் மேற்புற செயலுறா நிலைக்கு ஏற்ப எரிதலைத் துண்டிக்கும் உறுப்பைப் பொருத்துகிற நிலை.

**Timing gear:** கால ஒழுங்கு பல்லிணை: மோட்டார் வாகன என்ஜினில் கேம்ஷாப்டை இயக்கும் பல்லிணைகள். பிஸ்டன்களின் இயக்கத்துக்கு ஏற்ப கால ஒழுங்குடன் வால்வுகள் திறந்து மூட கேம் ஷாப்ட் உதவுகிறது. கிராங்க் ஷாப்ட் இருமுறை சுழன்றால் கேம் ஷாப்ட் ஒருமுறை சுழலும். எனவே இந்தகியர்கள் இயக்கம் 2 - க்கு ஒன்று என்ற விகிதத்தில் அமைய வேண்டும்.

**Timing marks:** *(தானி.)* கால ஒழுங்குக் குறியீடு: எரிதல்: என்ஜின் பிளைவீல் அல்லது இயக்கச் சமநிலை மீதும் முதல் நம்பர் சிலிண்டர் எரிதலுக்குத் தயாராகிற நிலை மிகச் சரியாகப் பொருந்தி நிற்பதைக் காட்டுவதற்காகச் செய்யப்பட்டுள்ள குறியீடுகள்.

வால்வு: மெக்கானிக்குகள் வால்வுகளை பிஸ்டன் நிலைக்கு ஏற்ப கால ஒழுங்கு இருக்கும் வகையில் அமைப்பதற்காக வால்வு மீதுள்ள குறியீடுகள்.

**Tin:** *(உலோ.)* ஈயம்: வெள்ளி போன்று பளபளப்பான உலோகம். அடர்த்தி எண் 7.3. தொழில் காரியங்களுக்கு, குறிப்பாக கலோகங்களைத் தயாரிக்க மிக முக்கியத்துவமும், விலை மதிப்பும் கொண்டது.

**Tincture:** சாராயக் கரைசல் மருந்து வகை: ஒரு பொருளிலிருந்து கரைப்பான் மூலம் பிரித்தெடுக்கப்படுகிற மிக நன்கு கரைகிற, நைசான பகுதிகள்.

**Tinder :** எரி துண்டு: தீயைக் கொழுந்து விட்டு எரியச் செய்வதற்காகத் தீயில் போடப்படுகிற உலர்ந்த, எளிதில் எரியக்கூடிய பொருள்.

**Tinning :** *(உலோ.)* ஈயம் பூசுதல: (1) தகரத் தயாரிப்பில் இரும்புத் தகடுகள் மீது அளிக்கப்படுகிற மெல்லிய பூச்சு.

(2) பற்று வைப்புக்கோல் மீது அதைப் பயன்படுத்தும் முன்னர் பற்று வைப்புப் பொருளைப் பூசுவது.

**Tin plate :** தகரத் தகடு : ஈயம் பூசப்பட்ட மெல்லிய உருக்குத் தகடு.

**Tin smith :** தகர வேலைக்காரர்: தகரத் தகடுகளைக் கொண்டு பொருட்களைத் தயாரிப்பவர்.

**Tin snips :** *(உலோ. வே.)* தகர வெட்டுக் கத்திரி: உலோகத்

தகட்டு வேலைக்காரர்கள் வெட்டுவதற்குப் பயன்படுத்தும் கையால் இயக்கும் கத்திரிக்கோல்.

**Tint block :** செதுக்குருப்பாளம் : டின்ட் பிளாக் (அச்சு) ஒரு திட வண்ணத்தை அச்சிடுவதற்குப் பயன்படுத்தப்படும் ஒரு தட்டையான உலோகத்தால் ஆன அல்லது பிளாஸ்டிக் முகப்பு கொண்ட உலோகத் தகடு. பொதுவில் வண்ணம் லேசாக அல்லது அடிப்படை வண்ணத்துக்கு மாறுபாடு காட்டுவதாக இருக்கும்.

**Tints :** *(வண்.)* மென்னிறம் : லேசான நிறங்கள், குறிப்பாக ஓரளவு வெண்மை கலந்த நிறங்கள்.

**Tip radius :** *(வானூ.)* நுனி ஆரம் : சுழல் அச்சிலிருந்து சுழலிப் பட்டையின் வெளி விளிம்பு வரையிலான தூரம்.

**Tire bolt :** பட்ட ஆணி : சக்கரத்தின் வெளிப்புற மரப்பகுதி மீது உலோகப்பட்டை பொருத்துவதற்காகப் பயன்படுத்தப்படும் துளையற்ற பட்டையான தலை கொண்ட போல்ட்.

**Tire tool :** *(தானி.)* டயர் மாற்றும் கருவி : மோட்டார் வாகன டயர்களை அகற்றுவதற்காகப் பயன்படும் இரும்பு அல்லது உருக்குப் பட்டை இவ்விதமான எந்தஒரு கருவியையும் டயர் மாற்றும் கருவி எனலாம்.

**Tissue manila:** மெல்லிய மணிலா: உறுதியான நாரினால் ஆன மணிலா நிறமுள்ள மெல்லிய காகிதம்.

**Tissue paper:** மெல்லிழைத் தாள்: பல்வேறான தரம் கொண்ட மிக மெல்லிய காகிதத்தைக் குறிப்பதற்குப் பயன்படும் சொல்.

**Titanium:** *(உலோ.)* டைட்டானியம்: கரிமக் குழுவைச் சேர்ந்த உலோகத் தனிமம். தாமிரம், வெண்கலம் மற்றும் இதர உலோகங்களுடன் சேர்த்து கலோகம் செய்யப் பயன்படுத்தப்படுவது, வெள்ளை வண்ணத்தில் டைட்டானியம் ஆக்சைட் முக்கிய பொருள். இதைப் பயன்படுத்தும் பெயிண்டுகள் மிக நன்கு உழைக்கின்றன.

**Title block:** தலைப்பு மூலை: ஒரு வரைபடத்தில் பொதுவில் வலது புறத்தின் கீழ் மூலையில் அல்லது கீழ்ப்புறம் நெடுக, கம்பெனியின் பெயர். வரைபடத்தின் தலைப்பு, அளவு அலகு, தேதி, மற்றும் தேவையான தகவல்கள் இடம் பெற்றிருக்கும்.

**Title page:** *(அச்சு.)* தலைப்புப் பக்கம்: ஒரு புத்தகத்தின் துவக்கத்தில் புத்தகத் தலைப்பு, நூலாசிரியர் பெயர், வெளியிட்டவரின் பெயர் முதலியவை அடங்கிய பக்கம்.

**T joint:** T இணைப்பு: ஒன்றுக்கொன்று செங்கோணத்தில் அமை

யும் வகையில் இரு இரும்புத்துண்டு களை இணைப்பதற்குப் பயன்படுத் தப்படும் பற்றவைக்கப்பட்ட ஒரு வகை இணைப்பு (குழாய் வேலை). சாதாரண 3 வழி குழாய் இணைப்பு மேலும் கீழுமாக உள்ள நீண்ட குழாயில் நடுப்புறத்திலிருந்து இந்த இரண்டுக்கும் செங்கோணத்தில் மூன்றாவது குழாய் அமைந்திருக் கும்.

**T.N.T Trinitrotoluol:** (*வெதி.*) TNT டிரானைட்ரோடோலுவோல் ($C_7H_5(NO_2)_3$) நிறமற்ற நீர்ம ஹைட்ரோ கார்பனான டோலு வோலுடன் நைட்ரேட் சேர்ப்பு மூலம் உருவாக்கப்படும் வெடிப் பொருள். உருகுநிலை 80 டிகிரி சென்.டிகிரேட். இந்த வெடிப் பொருள். அதிர்ச்சி மூலம் தீப்பற்று வதல்ல. எனவே ஒப்புநோக்குகை யில் கையாள்வதற்கு ஓரளவில் பாதுகாப்பானது.

**Tobin bronze:** (*உலோ.*) டோ பின் வெண்கலம்: தாமிரம், துத்த நாகம். ஈயம், இரும்பு, காரீயம் ஆகியவை கலந்த ஒரு கலோசத் தின் வர்த்தகப் பெயர். மிகுந்த இழுவலிமை கொண்டது. உப்பு நீரின் அரிமானத்தை நன்கு தாங்கி நிற்பது. எனவே கப்பலின் இணைப் புப் பகுதிகளைச் செய்வதற்குப் பயன்படுத்தப்படுவது.

**Toe:** (*உலோ. வே.*) விளிம்போரம்: ஒரு தண்டின் விளிம்பு ஓரம்.

**Toe - in :** (*தானி.*) முன்புறப் பொருத்து: மோட்டார் வாகனத் தில் முன்புறச் சக்கரங்களைப் பொருத்துவது தொடர்பானது. பின் புறச் சக்கரங்களைவிட முன்புறச் சக்கரங்கள் 1/8 முதல் ¼ அங்குல அளவுக்கு நெருக்கமாக இருக்கும். முன்டயர்தேய்மானத்தை குறைந்த பட்ச அளவுக்குக் குறைக்க இது தேவை. தவிர வண்டியை ஓட்டிச் செல்வது இதன் மூலம் சுலபமாகும் கார் வேகமாகச் செல்கையில் சக் கரங்கள் அகன்று அமைய முற் படும். முன்புறப் பொருத்து இதை சமப்படுத்துவதாக இருக்கும்.

**Toeing :** (*மர. வே.*) ஓரச் செலுத்து : ஒரு பலகையை மற் றொன்றுடன் இணைப்பதற்காக அப்பலகையின் ஒரு ஓரத்துக்கு அருகே ஆணிகளை சாய்வாக அடித்தல்.

**Toenailing :** (*மர. வே.*) பலகை முலைச் சாய்வாணி; சாய்வு செலுத்து : ஆணிகளின் தலை வெளியே நீட்டியிராத வகையில் ஆணிகளை சாய்வாக அடித்தல். தரை அமைப்பதற்கு பலகை களைப் பொருத்துவதற்கு செய் வதைப் போல.

**Toe switch :** (*தானி.*) மிதி சுவிட்ச் : காரின் உள்புறத்தில் தரை போர்டில் அமைக்கப்பட்ட சுவிட்ச், காலால் மிதித்து அழுக்கி னால் ஸ்டார்ட்டர் செயல்படும்.

**Toggle :** (*எந்.*) இறுக்கிப் பிடிப்பு : நடுவில் கீல் கொண்ட இரட்டை இணைப்பு.

**Toggle bolt :** *(மின்.)* இறுக்கத் தாழ்ப்பாள் : உள்ளீடற்ற ஓட்டினால் ஆன சுவரில் பொருத்துவதற்கானது. இதில் திருகாணியின் தலைப்புறத்தில் சுழலும் வளையம் இருக்கும். இதைத் திருப்பி நீளவாட்டு நிலைக்குக் கொண்டு வந்து அதில் தாழ்ப்பாளை மாட்டலாம். பின்னர் அதை செங்குத்து நிலைக்குத் திருப்ப முடியும்.

**Toggle switch :** *(மின்.)* இறுக்க மின்விசை மாற்றுக் குமிழ் : குமிழ் அல்லது நீட்டிக்கொண்டிருக்கிற புயத்தை மேலும் கீழுமாக அல்லது ஒரு பக்கத்திலிருந்து வேறு பக்கமாக அமுக்கும்போது மின் தொடுமுனைகளை மாறி மாறி மூடுகிற அல்லது திறக்கிற மின்விசை மாற்றுக்குமிழ்.

**Tolerance :** *(எந்.)* ஏற்கைப் பிசகு : தயாரிக்கப்பட்ட எந்திர உறுப்புகளின் அளவுகள் ஏற்கத் தக்க அளவு கூடக் குறைய இருப்பது. ஏற்கத்தக்க அளவுக்கு உள்ள அளவுப் பிசகு. (எந்தி.) ஏற்கை வரம்பு என்றும் குறிப்பிடப் படும்.

**Toluene :** *(வேதி.)* சாயப் பிசின்: நிலக்கரித் தாரிலிருந்து தயாரிக்கப்படுவது. இது முக்கியமாக சாயப் பொருட்களையும், T.N.T. தயாரிக்கவும் பயன்படுத்தப்படுகிறது.

**Toncan metal :** *(உலோ.)* டொங்கன் உலோகம் : மிகவும் நேர்த்தியான கார்பன் மிகக் குறைவான உருக்கு அல்லது இரும்பின் வர்த்தகப் பெயர். அரிமானத்தை நன்கு எதிர்த்து நிற்பதால் உலோகத் தகடுகளைத் தயாரிப்பதற்குப் பயன்படுவது.

**Tone :** *(வண்.)* வண்ண நயம்: வண்ணச் சாயை (நிறம்) ஒரு வண்ணத்தின் தன்மை அல்லது அளவை அது அழுத்தமாக உள்ளதா அல்லது லேசாக உள்ளதா என்று குறிப்பிடுவது.

**Tongs:** இடுக்கி: ஒரு பொருளைப் பிடித்து எடுப்பதற்கு அல்லது ஒரு பொருளை அடித்து, தட்டி வேலை செய்ய அதை நன்கு பற்றிக் கொள்வதற்குப் பயன்படும் இரு புயங்களைக் கொண்ட கருவி.

**Tongue:** *(மர. வே.)* நாக்கு: ஒரு சட்டம் அல்லது பலகையின் ஓரத்தில் தக்க வடிவில் வெட்டி உருவாக்கப்பட்டு அளவில் சிறியதாகத் துருத்தி நிற்கிற பகுதி. இது இன்னொரு சட்டம் அல்லது பலகையில் தக்க வடிவில் வெட்டி அகற்றப்பட்ட பள்ளமான பகுதியில் நன்கு பொருந்தி இரண்டையும் நன்கு சேர்க்க உதவுகிறது.

**Tool bit:** *(எந்.)* வேலைக் கருவித் துண்டு: உயர்வேக உருக்கினால் ஆன சிறிய துண்டு. வேலைக் கருவிப் பிடிப்பானில் வைக்கப்பட்டு வெட்டு வேலைக்கருவியாகப் பயன்படுவது.

**Tool box or tool head:** (எந்.) வேலைக் கருவிப் பெட்டி: (மெஷின்) இழைப்பு எந்திரத்தில் வேலைக் கருவி இடம் பெற்றுள்ள குறுக்குட் புறத்துடன் தொகுத்து வைக்கப்பட்டுள்ள உறுப்புகள். கருவிக்கு வேலை அளிக்கின்ற வகையில் கட்டமைக்கப்பட்டுள்ளது.

**Tool holder tor lathe or plner:** (பட்.) வேலைக்கருவி பிடிப்பான்: தண்டு அல்லது உருக்கினால் ஆன ஒரு துண்டு. வெட்டுவதற்கான வேலைக்கருவியை இத் தண்டுக்கள் செருக முடியும். மிக விலை உயர்ந்த உருக்கினால் ஆன வேலைக் கருவியையும் இவ்வகையில் பயன்படுத்தமுடியும். இப்பிடிப்பானை நகர்த்தவேண்டிய அவசியமின்றியே வேலைக்கருவியை அப்புறப்படுத்த முடியும்.

**Tooling oalf:** காரியக் கானா: பட்டை மூலம் பதனிடப்பட்ட தோல் புத்தக பைண்டிங் செய்யும் போது எழுத்துக்களைப் பதிக்கும் காரியத்துக்கு மிகச் சிறந்தது.

**Tooling sheepskin:** சிறுபொருள் ஆட்டுத்தோல்: விலை மலிவான. நிறங்களில் கிடைக்கிற தோல். பர்ஸ், கார் செருகி, சாவி உறை முதலிய சிறுபொருள்களைத் தயாரிப்பதற்குப் பயன்படுவது.

**Tooling up:** கருவிகளை ஆயத்த மாக்குதல்: ஒரு பொருளை நிறைய அளவில் உற்பத்தி செய்யும் முறைகளைப் பயன்படுத்தும் நோக்கில் உற்பத்திக்குத் தேவையான விசேஷக் கருவிகள், கட்டுமானச் சாதனங்கள் ஆகியவற்றைத் தயாரித்து ஆயத்தப்படுத்துதல்.

**Tool, knurling:** (பட்.) முகட்டுக் கருவி: மடிப்பு போன்ற பல முகடுகளைக் கொண்ட கருவியைக் கொண்டு சுழலும் உலோகப் பொருள் மீது பல வரிப்பள்ளங்களை உண்டாக்குவது. அழகுக்காகவும். நல்ல பிடிப்புக்காகவும் இப்படிச் செய்யப்படும்.

**Tool maker:** (எந்.) வேலைக் கருவியாளர்: பணிச் சாதனங்கள், பொருத்திகள், அளவு மானிகள் முதலியவற்றைத் தயாரிப்பதில் தேர்ச்சி பெற்றவர்.

**Tool makers clamp:** கருவியாளியின் திருகுபிடி: மரத்தச்சர் பயன்படுத்தும் திருகுபிடி போன்ற ஆனால் அதைவிடச் சிறிய வடிவிலான முற்றிலும் உலோகத்தால் ஆன பிடிப்புச் சாதனம்.

**Tool post:** (எந்.) தாங்கு கருவி: பற்றுக்கருவி; உச்சியில் வளையத்தைக்கொண்ட தம்பம். கடைசல்எந்திரத்தின் மேற்புரத்தில் அமைந்த மரு இந்த வளையத்துக்குள் வெட்டுக் கருவி பொருத்தப்படும்.

**Tool room:** (எந்.) கருவி அறை: வேலைக்க்ருவி அறை: வேலைக் கருவிகள் சேமித்து வைக்கப்பட்டுள்ள அறை. இதிலிருந்துதான் தொழிலாளருக்கு கருவிகள் வழங்கப்படும். பணிச் சாதனங்கள். பொருத்திகள் போன்றவை தயா

ரிக்கப்பட்டு, பழுதுபார்க்கப்படுகிற இடம்.

**Tool steel:** (*உலோ.*) வெட்டுக் கருவி உருக்கு: வெட்டுப் பகுதிகளாகப் பயன்படுத்துவதற்குத் தகுந்த ஏதேனும் ஒரு கரிம உருக்கு அல்லது அதிவேக உருக்கு.

**Tool tip:** (*எந்.*) கருவிமுனை: பருமனான கார்பன் உருக்குத் தண்டின் மீது பற்றவைக்கப்பட்ட அல்லது பித்தளையை உருக்கிச் சேர்க்கப்பட்ட கெட்டித்த கார்பைடினால் ஆன வெட்டும் துண்டு.

**Tooth :** காகித நேர்த்தி : கிரேயான் அல்லது பென்சிலைக் கொண்டு வரைவதற்கு உகந்த அளவுக்குக் காகிதம் கொண்டுள்ள நேர்த்தியைக் குறிப்பது.

**Tooth face:** (*எந்.*) பல் முகப்பு: கடைசல் எந்திர வெட்டு கருவியின் பரப்பு. பணியின்போது துண்டு வெட்டப் படுகையில் இப்பரப்பின் மீது தான் படுகிறது.

**Toothing:** (*க.க.*) சுவரின் பல் விளிம்பு: சுவர் போன்ற கட்டுமானத்தைக் கட்டுகையில் பின்னால் மேற்கொண்டு சுவரை விரிவுபடுத்துவதானால் புதிதாகவைக்கிற செங்கற்களுக்குப் பிடிமானம் இருக்கவேண்டும் என்பதற்காக, செங்கற்களை மேலிருந்து கீழாக நீட்டியும் உள்ளடக்கியும் அமைப்பது.

**Top:** நீள் கம்பளி இழை: சிக்கு எடுக்கப்பட்டு கம்பளி நூலாக நூற்பதற்காக உள்ள நீண்ட கம்பளரோமம்.

**Top dead center:** (*தானி.*) சுழலா மேல் நிலை: முதல் நம்பர் பிஸ்டனின் சிலிண்டரில் பிஸ்டன் மேல் உச்சிக்கு வரும்போது உள்ள நிலை. இந்த நிலை பிளைவீலில் குறிக்கப்பட்டிருக்கும். என்ஜினின் உச்சபட்ச திறனுக்காக சரிப் பொருத்தம் செய்யும்போது இந்த நிலை கணக்கில் கொள்ளப்படும்.

**Topping:** மேல் வண்ணமூட்டல்: சாயமேற்றப்பட்ட துணியை இன்னொரு வண்ணம் கலந்த கரைசலில் முக்குவது.

**Torque :** (*மின்.*) திருப்பு விசை : சுழல் பகுதி திரும்பும் முயற்சி. (*பொறி*) விசையை அளிக்கையில் தண்டும் சேர்ந்து சுற்ற முற்படுவது.

**Torque arm :** திருப்புத் தடுப்புப் புயங்கள் : உந்து வண்டியில் பின்புற அச்சுக்கு விசை அளிக்கப்படுகையில் பின்புற அச்சின் உறைப் பெட்டியும் சேர்ந்து சுற்றாமல் தடுப்பதற்கு உள்ள இரு புயங்கள்.

**Torque converter:** (*தானி. எந்.*) திருப்புவிசை மாற்றி : பின் சக்கரங்களில் திருப்பு விசையை அதிகரிக்கும் பொருட்டு விசேஷமாக அமைக்கப்பட்ட இயங்கு விசை செலுத்தும் முறை. இதன் மூலம் விரைவில் வேகம் எடுக்கும்

**Torque stand :** (*வானூ. தானி.*) திருப்பு விசை மானி : ஒரு என்ஜி

னின் திருப்பு விசையை அளப்பதற்கான சோதனை மேடை.

**Torgue wrench :** (*எந்.*) திருப்பு குறடு : திருகு குறட்டைப் பயன்படுத்துகையில் குறிப்பிட்ட நிலைக்கு மேல் திருப்ப முடியாது.

**Torsion :** (*பொறி.*) முறுக்கு: ஒரு தண்டைத் திருப்புகையில் உருமாற்றமடைய முற்பட்டு முறுக்கிக் கொள்ளும் போக்கு.

**Torsional strength :** (*பொறி.*) முறுக்கு திறன் : முறுக்கு விசையை எதிர்த்து தாங்கி நிற்பதற்கு ஒரு தண்டு போன்றவற்றுக்கு உள்ள திறன். இத்திறன் ஒரு தண்டின் குறுக்களவின் முப்படிக்கு ஏற்ப மாறுபடுகிறது.

**Torsion balancer :** (*தானி.*) திருகு சமனாக்கி : பிஸ்டனின் உந்தல்களால் ஏற்படும் அதிர்வுகளைக் குறைக்கும் பொருட்டு கிராங்க்ஷாப்டின் முனையில் பொருத்தப்பட்ட கருவி.

**Torsion spring :** திருகு ஸ்பிரிங் : மேலிலிருந்து கீழாக வளைந்து வளைந்து புரிபோல அமைந்த ஸ்பிரிங், இதன் இரு முனைகளும் நன்கு பொருத்தப்பட்ட நிலையில் அழுத்தப்படும்போது சுருளுவதும், நீளுவதுமாக இருக்கும்.

**Torso :** (*க.க.*) சிலை முண்டப் பகுதி : கட்டுமானக் கலையில் உருமாறிய தூண்களைக் குறிப்பது (2). தலைப்பகுதி இல்லாமல் உடல் மட்டுமே காணப்படுகிற சிலை.

**Torus :** (*க.க.*) பீடப்புடை வளையுறுப்பு : பெரிய வடிவிலான குவிந்த அமைப்பு கொண்ட அரை வட்ட அச்சு, அடித்தளத்தை வடிவமைக்கப் பயன்படுத்தப்படுவது.

**Tote boxes or pans :** (*பட்.*) உதிரிப் பொருள் கிண்ணம்: தொழிற்சாலைகளில் சிறிய உறுப்புகளை சேமித்து வைக்க அல்லது எடுத்துச் செல்வதற்குப் பொதுவில் பெட்டிகள், அல்லது உலோகத்தால் ஆன கிண்ணங்கள் பயன்படுத்தப் படுகின்றன. இவை பொதுவில் சற்று சரிவான வடிவில் இருக்கும். ஒன்றுக்குள் ஒன்றாக வைத்து அடுக்குவதற்கு இது வசதியாக இருக்கும்.

**Toughness :** (*பொறி.*) கடினத்துவம் : நிரந்தர உருமாற்றத்தை எதிர்த்து நிற்பதிலும், அவ்வித நிரந்தர உருமாற்றம் ஏற்பட்ட பின்னர் முறிவை எதிர்த்து நிற்பதிலும் ஓர் உலோகத்துக்குள்ள திறன்.

**Touring car :** (*தானி.*) உலா கார் : ஐந்து அல்லது ஏழு பயணிகள் ஏறிச் செல்கின்ற வகையில் அமைந்த திறந்த உடல்பகுதி கொண்ட கார்.

**T Plate:** (*க.க.*) 'T' வடிவத் தகடு: ஆங்கில 'T' வடிவம் கொண்ட ஓர் உலோகத் தகடு, இரு பரப்புகள் ஒன்று சேரும் இணைப்புப்

பகுதியை வலுப்படுத்துவதற்காகப் பயன்படுத்தப்படுவது.

**Trace :** பற்றி வரை (வரைதல்) : மூலவரைபடம், தேசப்படம் போன்றவற்றின் மீது மெல்லிய துணி அல்லது காகிதத்தை வைத்து அதன் மீது கோடு வரைந்து பிரதி எடுத்தல்; பென்சில் கொண்டு ஓரப்படம் தயாரித்தல்; தேசப்படம் தயாரித்தல்.

**Tracer :** பற்றி வரையாளர் : வடிவரைவாளர் தயாரித்த வரைபடங்கள் மெல்லிய காகிதங்களை வைத்து பற்றி வரைப்பிரதிகள் பலவற்றை எடுக்கிற உதவியாளர் அல்லது துணை வடிவரையாளர்.

**Tracery :** (க.க.) ஊடு சித்திரம் : வட்ட வடிவ கண்ணாடி, பலகணிகள், பலகணிகளுக்கு மேல் அமைந்த கண்ணாடிகள் ஆகியவற்றின் மீது ஒளி ஊடுருவுகிற அலங்கார வேலைப்பாடுகளை அமைத்தல்.

**Trachelium ;** (க.க.) டிராக்கிலியம் : கிரேக்க டோரிக் பாணித் தூண்.

**Tracing :** பற்றி வரைதல் : (வரைபடம்) முதல் நிலை வரைபடம், வடிவப்படம், வரைபடம் தயாரித்தல், மெல்லிய துணி, காகிதம் அல்லது ஒளி ஊடுருவுகின்ற விரிப்புப் பொருள்களை வரைபடங்கள் மீது வைத்து பிரதிகளை எடுத்தல்.

**Tracing acircuit :** (தானி; மின்.) சர்க்கியூட்டைக் கண்டறி :1.(மோட்டார் - மின்) மூலத்திலிருந்து இயக்க நிலைவரை ஒரு சர்க்கியூட்டை மீட்டரைப் பயன்படுத்தி, மணி அடிக்கிற ஜெனரேட்டரைப் பயன்படுத்தி, கோளாறைக் கண்டுபிடிப்பது அல்லது சர்க்கியூட்டை மேலும் நீட்டிப்பது. 2. மின்சார வயர் மீதுள்ள நூல்களின் நிறத்தை வைத்து அடையாளம் காண்பது.

**Tracing linen :** பற்றி வரையும் துணி : (வரைதல்) துணிமீது தக்க பூச்சு அளித்துப் பிறகு அத்துணியைப் பற்றி வரைதலுக்கு பிரதி எடுப்பதற்காக பயன்படுத்துதல்.

**Tracing paper :** பற்றி வரைத் தாள் : (வரைபடம்) ஓரளவு ஒளி ஊடுருவுகின்ற காகிதம். வரைபடம் மீது தாளை வைத்து பிரதி எடுத்து புளூ பிரிண்ட் எடுக்கப் பயன்படுத்துவர். இது பற்றி வரைத்துணியை விட மலிவானது. தவிர பல தடவை பயன்படுத்த வேண்டிய அவசியம் இல்லாதபோது பற்றி வரைத்துணியை விட பற்றி வரைத் தாள் உகந்தது.

**Tracing tool :** பற்றி வரைக் கருவி : தோல் மீது டிசைன்களை எழுதவும், அமைத்து முடிக்கவும் பயன்படுகிற கூரான, சிறியதொரு கருவி.

**Traction :** டிராக்ஷன் : சாலை மீது சக்கரங்கள் உருளும்போது ஏற்படுவது போன்ற உருள்

உராய்வு, அல்லது பிடிமான உராய்வு.

**Tractor air plane:**(*வானூ.*)டிராக்டர் விமானம் : தாங்கு பரப்புகளுக்கு முன்புறமாக அமைந்த சுழலி அல்லது சுழலிகளைக் கொண்ட விமானம்.

**Tractor propeller :** (*வானூ.*) டிராக்டர் புரொப்பல்லர் : (விமான) விமான என்ஜினின் முன்புற முனை மீது அல்லது சுழலித் தண்டுக்கு முன்புறமாக அமைந்த சுழலி.

**Trade union :** தொழிற் சங்கம் : உறுப்பினராக அங்கம் வகிக்கும் எல்லா தொழிலாளர்களுக்கும் ஒரே தரமான வசதிகளைப் பெற்றுத் தரும் நோக்குடன் தொழிலாளர் ஒன்று சேர்ந்து ஏற்படுத்திக் கொள்ளும் அமைப்பு.

**Traffic beam :** (*தானி. எந்.*) முகப்பொளிக் கற்றை : மோட்டார் வாகன முகப்பு விளக்கிலிருந்து தரையை நோக்கிப்படுகிற ஒளிக் கற்றை, எதிர்வரும் வாகன ஓட்டியின் கண் கூசாவண்ணம் இருக்க ஓர் ஏற்பாடு. நகரங்களின் சாலைகளில் இது பயன்படுவது, ஊருக்கு வெளியே ஓட்டிச் செல்கையில் எதிரே வாகனம் வந்தால் பயன்படுவது.

**Traffic control projector :** (*வானூ.*) ஒளி சமிக்ஞை காட்டி : விமான ஓட்டிக்கு ஒளி சமிக்ஞைகள் அளிப்பதற்கான ஒருபுரொஜக்டர்.

**Trailing edge :** (*வானூ.*) பின்புற முனை : விமானக்கட்டுப்பாட்டுப் பரப்பு அல்லது சுழலியின் பின்புறமுனை.

**Train :** டிரெயின் (பணிக்கூடம்): விசையை செலுத்தவும், வேகத்தை மாற்றவும் ஒன்றோடு ஒன்று பொருத்தப்பட்ட கியர்களின் ஏற்பாடு.

**Trammel :** தண்டு வட்டவரைவி : பெரிய வட்டங்களைப் போடுவதற்கு உதவும் வட்ட வரைவி. புள்ளியில் கூர்முனையை பெறுவதற்கான தலைப்பகுதி நீண்ட தண்டு ஒன்றில் முன்னும் பின்னுமாக நகர்த்தும் வகையில் அமைந்துள்ளது. தேவையான ஆரத்துக்கு ஏற்பத் தலைப்பகுதியை அதில் உள்ள ஸ்குரு கொண்டு முடுக்கிப் பயன்படுத்தலாம்.

**Transept :** (*க.க.*) இரு புறத் தாழ்வாரம் : சிலுவை வடிவில் அமைந்துள்ள சர்ச்சின் நுழைவாயிலின் மறு கோடியில் இரு புறங்களிலும் நீண்டு அமைந்துள்ள தாழ்வாரங்கள்:

**Transfer :** மாற்று : ஒன்றை ஓரிடத்திலிருந்து வேறு இடத்துக்கு அகற்றுதல்.

**Transfar calipers :** (*எந்.*) மாற்றும் காலிபர் : இடுக்குகளையும் அத்துடன் அளந்த பின்னர் பணி நிலையிலிருந்து அகற்ற அளவை மாற்றியாக வேண்டியுள்ள இடங்களிலும் அளப்பதற்கான கருவி.

பணிநிலையிலிருந்து எடுத்த பின் கால்களை அளக்கப்படும் பகுதியின் மிகச் சரியான அளவுக்கு மாற்றிக் கொள்ள முடியும்.

**Transfer molding :** (குழை.) மாற்றிடும் அச்சு : உள்விச்சு வார்ப்புக்கு அதாவது வெப்பம் அளிக்கப்பட்டு குளிர்ந்த பின் உறுதியாகிய பொருட்களை வார்ப்பதற்கு மற்றொரு பெயர்.

**Transformer:** (மின்.) மின்மாற்றி: மின்னோட்டத்தில் மின்னழுத்தத்தையும், மின் அளவையும் உயர் நிலையிலிருந்து குறைந்த நிலைக்கு அல்லது குறைந்த நிலையிலிருந்து உயர்நிலைக்கும் மாற்றுவதற்கான சாதனம்

**Transistor :** (மின்.) டிரான்சிஸ்டர் (மின்) மின்னணு சர்க்கியூட்டுகளில் முன்னர் வெற்றிடக் குழல்கள் செய்து வந்த பணிகளைச் செய்கின்ற அடக்கமான சின்னஞ்சிறிய பொருள். வடிவில் சிறியது. சூடேறாதது. உடனடியாகச் செயல்படுவது. மூன்று அல்லது அதற்கு மேற்பட்ட மின் வாய்களைக் கொண்ட தீவிர அரைக் கடத்திக் கருவி.

**Transistor radio :** டிரான்சிஸ்டர் ரேடியோ.

**Transit :** கோண - நிலை அளவீட்டுக் கருவி : இக்கருவியானது (1) பார்ப்பதற்கு தொலை நோக்கி (2) அளவுகள் குறிக்கப்பட்ட வில்கள், கிடைமட்ட, செங்குத்துக் கோணங்களை அளப்பதற்கு ஒரு வெர்னியர் (3) சம நிலை மட்டம் (4) சம நிலைப்படுத்தும் ஸ்குருக்களுடன் ஒரு முக்காலி. ஆகியவை அடங்கியது. (சர்வே) கோணங்களை அளக்கவும், பேரிங்குகளை நிர்ணயிக்கவும், சமநிலை காணவும் சர்வேயர்களும், என்ஜினியர்களும் பயன்படுத்தும் கருவி.

**Transite :** (உலோ.) டிரான்சிட்ஸ் : கல்நார் இழையையும், போர்ட்லண்ட் சிமென்டையும் நன்கு கலந்து மிகுந்த அழுத்தத்தில் செலுத்தி அச்சுகளை உருவாக்குதல். இதுவணிகப் பெயர்.இவ்விதம் உருவாக்கப்பட்டபொருள் தீப்பிடிக்காத சுவர்கள், கூரை ஆகியவற்றைத் தயாரிக்கவும், அடுப்புசூளைக்குள் உள்பரப்புப் பூச்சாகவும் பயன்படுத்தப்படுகிறது.

**Transition strip:**(வானூ.)விமான ஓரப் பாதை : விமான நிலையத்தில் ஓடு பாதை அல்லது இதர கெட்டிக்கப்பட்ட பரப்புக்கு அருகே உள்ள விமான இறங்கு வட்டாரத்தின் ஒரு பகுதி. இது உடைத்த கற்கள் அல்லது வேறு தகுந்த பொருட்களால் கெட்டிக்கப்பட்டது. விமானம் பத்திரமாகி இறங்கவும் ஓடுபாதையில் அல்லது மேற்படி ஓரப்பகுதியில் எந்தத் திசையிலும் தரையில் ஓடவும் இப்பாதை உதவும்.

**Transit man :** டிரான்சிட் உதவியாளர் : சர்வேயர் அல்லது என்ஜினியர் பயன்படுத்துகிற டிரான்சிட் கருவியைக் கையாளுபவர். அவர் ஒரு பட்டதாரி என்ஜினியராக இருக்கத் தேவையில்லை.

**Translucent :** ஒளிக்கசிவு : ஓரளவு ஒளி ஊடுருவுகிற (காகிதத் தயாரிப்பு) பளபளப்பான நேர்த்தி கொண்ட, பூச்சு உள்ள அட்டை.

**Transmission :** (தானி.) செலுத்தீடு : மோட்டார் வாகனத்தின் பின் பகுதியில் உறுப்புப் பெட்டிக்குள் கியர்கள் அமைந்துள்ள ஏற்பாட்டைக் குறிப்பது இதில் ஏற்படுகிற மாறுதல்களின் விளைவாக வேக விகிதத்தில் மாற்றம், முன் புறத்தை நோக்கி இயக்கம், பின்புறத்தை நோக்கி இயக்கம் ஆகியவை சாத்தியமாகின்றன.

**Transmitter:** (மின்.) ஒலிப்பரப்பனுப்பீட்டுக் கருவி : தொலைபேசிக் கருவியில் பேசுகின்ற முனையைக் குறிக்கும். இது இரு தட்டையான கரிம மின்வாய்கள் உள்ளன. இவற்றில் ஒன்று அசையும்.

**Transmitting set :** அனுப்பு சாதனம்: குறிப்பிட்ட அதிர்வெண்களைக் கொண்ட மாறலை அல்லது தொடர்ச்சியான ஊர்தி அலையைத் தோற்றுவிட்டதற்குப் பயன்படும் சாதனம்.

**Transmutation :** (மின்.) தனிம மாற்றம் : ஒரு தனிமத்தை வேறு தனிமமாக மாற்றுதல் (காண்க ரசவாதம்) கதிரியக்கத் தன்மை கொண்ட ரேடியத் தயாரிப்புகளிலிருந்து வெளிப்படும் துகள்களைக் கொண்டு தாக்குவதன் மூலம் சமீப ஆண்டுகளில் தனிமங்களை வேறு ஒன்றாக மாற்றுவது சாதிக்கப்பட்டுள்ளது. சைக்ளோட்ரானைப் பயன்படுத்தி இதைச் சாதிப்பது மற்றொரு முறை.

**Transom :** (க.க.) சிறு சாளரம் (கட்டட) ஒரு கதவு அல்லது ஜன்னலுக்கு மேலாக உள்ள சிறு கதவு.

**Transombar :** (க.க.) நடுச்சட்டம் : கதவை, ஜன்னலை இரண்டாகப் பிரிக்கிற கிடைமட்டமாக அமைந்த நடுச்சட்டம் இதன் பலகை மேல் பகுதியை மட்டும் தனியே திறக்க முடியும்.

**Transparency :** ஊடுருவு புகைப்படம் : இதுவும் ஒரு ஒளிப்படமே எனினும் இது ஒளி ஊடுருவுகின்ற பிலிம் வடிவில் அமைந்த படம். ஒளியில் காட்டுவதன் மூலமே படத்தைக் காண இயலும்.

**Transparent :** ஒளி ஊடுருவுகிற : பொருட்களைத் தெளிவாகக் காண்கிற வகையில் ஒளி ஊடுருவும் தன்மை கொண்டது.

**Transpose :** மாற்றிப்போடு: ஒரு சமன்பாட்டில் ஒரு புறத்திலிருந்து மறுபுறத்துக்கு உறுப்புகளின் சமத்துவ நிலை மாறாமல் இருக்க மாறிய அடையாளக் குறியுடன் மாற்றிப் போடுதல்.

**Trap :** நீராவி பொறியமைவு நீராவியால் வெப்பமேற்றும் முறைகளில் நீர் படிதலையும், காற்றையும் ரேடியேட்டர் குழாய் முதலியவற்றிலிருந்து நீராவியைச் செலுத்தாமல் வெளியேற்றுதல்.

**Trap door :** (க.க.) கள்ளக் கதவு: தரையில், மச்சுப் புறத்தில் அல்லது கூரையில் அமைந்த திறப்பை மூடுவதற்கான கதவு அல்லது மூடி.

**Trapezium :** நாற்கரம் : எந்த இரு பக்கங்களும் இணையாக இல்லாத நான்கு புறங்களைக் கொண்ட வடிவம்.

**Trapezoid :** கோடகம் : நாற்கரம் கொண்ட உருவம். இதில் இரு புயங்கள் இணையானவை(கணித) பரப்பு = இணையாக உள்ள பக்கங்களின் கூட்டுத் தொகையில் பாதி X செங்குத்துக் கோட்டின் நீளம்.

**Trap rock :** இடைப்பாறை : மிக உறுதியான, உழைக்கக் கூடிய பாறை : வெட்டி எடுப்பது கடினம். சாலைகள் அமைக்கவும், ரயில் தண்டவாளங்ளுக்குத் தளமாகவும் பயன்படுவது.

**Trass :** பூச்சுக் கலவை (குழை.) ஒரு வகையான சாம்பல், மஞ்சள் அல்லது வெண்மை நிற மண், எரிமலைகள் உள்ள பகுதிகளில் சாதரணமாகக் காணப்படுவது. நீருக்கடியில் நன்கு கெட்டிப் படுகிற சிமெண்ட் தயாரிப்புக்குப் பயன்படுவது.

**Traveling crane :** நகரும் பளுத் தூக்கி : நீராவி அல்லது மின்சாரத் தால் இயங்கும் பளுத்தூக்கி. இது நெடுக்காகவும் குறுக்காகவும் செல்லக் கூடியது. பொதுவில் மேலிருந்து தூக்குகின்ற வகையைச் சேர்ந்தது. இதன் அடிப்பகுதி குறுக்குத் தண்டு மீது அமைந்தது. இத்தண்டின் முனைகள் இணையாக அமைந்த தண்டவாளங்கள் மீது உட்கார்ந்திருக்கும்.

**Treacle stage :** டிரேசில் ஸ்டேஜ்: (குழை.) வெப்பமாக்கப்பட்டபின் குளிர்ந்ததும் கெட்டியாகின்றபிசின் திரவ நிலையில் இருப்பது.

**Tread :** படித்தரை : (கட்டுமான படியின் சம தரையான பகுதி. படியேறுகையில் பாதங்களை வைக்கும் பகுதி.

**Treadle :** (எந்.) மிதித்தியக்கும் காலால் இயக்குகின்ற எந்திரத்தின் பகுதி.

**Trefoil:** மூவட்ட: (க.க.) ஒன்றிணைந்த மூவட்ட அலங்காரப் பகுதி.

**Treillage:** (க. க.) பந்தல்: கொடிகள் படர்ந்து அமைவதற்காகப் போடப்படும் பந்தல்.

**Trench:** நெடுபள்ளம்: (பல நெடும் பள்ளம்) குழாய்களைப் புதைப்பது போன்று தரையில் அமைக்கப்படுகிற நீண்ட குறுகிய பள்ளம்.

**Trend:** நிலவரம்: பொதுவான போக்கு.

**Tre-pan:** (*எந்.*) ஒரு துளையைச் சுற்றி வட்டமான குழிவை வெட்டுதல்.

**T rest:** டி. ரெஸ்ட்: மரவேலை லேத் எந்திரத்தில் வேலைக் கருவிக்கான தாங்கு நிலை. பணி செய்ய வேண்டிய பொருளை தேய்ப்புச் சக்கரம் கொண்டு வேலை செய்வதற்கும் தாங்கு நிலை.

**Trestle:** நாற்கால் தாங்கி: கீழ் நோக்கி சரிவாக அமைந்த நான்கு கால்கள்மீது அமைந்த உத்தரம். இவ்விதமான இரண்டைப் பக்கம் பக்கமாக வைத்து அவற்றின் மீது ஒரு பலகை அமைக்கலாம். பள்ளம் அல்லது குழிவின் மீது இவ்விதக் கட்டுமானத்தை அமைத்து அதன் மீது சாலை அல்லது ரயில் பாதை போடலாம். (இருக்கை) இவ்விதக் கட்டத்தின் மீது பலகை அமைத்து மேசையாக்கலாம் (மெத்தை) அகன்ற மேல் பகுதியைக் கொண்ட அறுப்பதற்கான தாங்கு தூண். வெளி முனைகளில் திண்டு வைக்கப்பட்டது.

**Trestle table:** (*வரை.*) நாற்கால் தாங்கி மேசை: நாற்கால் தாங்கி மீது வரைவதற்காக அமைக்கப்பட்ட பெரிய பலகை.

**Triangle:** முக்கோணம் : மூன்று புறங்களையும் மூன்று உள் கோணங்களையும் கொண்ட வடிவம். செங்கோணத்தில் ஒரு கோணம் நேர் கோணமாக இருக்கும்.

**Triangular truss;** முக்கோணத் தாங்கி: குறுகிய விரி பரப்புக்கான குறிப்பாக கூரைகளை அமைப்பதற்கான தாங்கி.

**Triangulation:** முக்கோணமாக்குமுறை: நிலம் மற்றும் நீர் மீதான பரப்புகளையும் இவற்றின் மீதுள்ள குறிப்பிட்ட நிலைகள் எவ்வளவு தொலைவில் உள்ளன என்பதையும் அளவிட இந்த நிலைகளைச் சேர்த்து பல கோணங்களை உருவாக்கிக் கொண்டு அடித்தளம், கோணம் ஆகியவற்றைக் கணக்கிடும் முறை.

**Trickle charge:** துளி மின்னேற்றி: இரு திசை மின்சாரத்தை நேர் மின் சாரமாக மாற்றுகிற திருத்தி. தேங்கு மின்கலத்துக்கு தினமும் 24 மணி நேரம், பொதுவில் மிகக் குறைவான விகிதத்தில் நேர் மின் சாரத்தை அளிப்பது.

**Trifiorium:** ரிபி:.யோரியம்: ஒரு சர்ச்சின் உள்ளே பிரதான நடுப் பாதைக்கு மேலாக உள்ள சரிந்த கூரைக்கும் நடைபாதை விதானத்துக்கும் இடையே உள்ள வெளி.

**Trigonometry :** (*கணி.*) திரிகோணமிதி: ஒரு முக்கோணத்தின் புறங்கள், கோணங்கள் ஆகியவற்றை அளக்கும் அறிவியல்.

**Trim:** (*க.க.*) டிரிம்: ஒரு கதவு அல்லது பலகணியின் நிலைத் தண்

டுக்கும் பிளாஸ்டருக்கும் இடையில் உள்ள இணைப்புகளை மறைப்ப தற்கு மரம் அல்லது உலோகத் தால் ஆன பகுதிகள். (காகிதத் தயாரிப்பு) காகிதத் தயாரிப்பு எந் திரத்தில் தயாரித்து முடிக்கப்பட்ட காகிதத்தின்-ஓரம் வெட்டுவதற்கு முன்-மிக அதிகபட்ச அகலம்.

**Trim:** டிரிம்: ஒரு விமானம் திருப் பாமல், ஏறி இறங்காமல் பறக்கிற நிலையில் காற்று வீசும் அச்சுக்கும், விமான அச்சுக்கும் இடையிலான கோணம். (கட்டிட) கதவு, பல கணி ஆகியவற்றைச் சுற்றிலும் உள்ளே அல்லது வெளியே அமைந்த வடிப்பு வேலை. அல்லது இதர நேர்த்தி வேலை.

**Trim angle:** டிரிம் கோணம்: கடல் விமானத்தின் மிதவைப் பகுதி, பறக்கும் படகின் உடல் பகுதி. இவற்றின் கிடைமட்டக் கோட்டுக் கும், நீளவாட்டுக் கோட்டுக்கும் இடையிலான கோணம். மேற் கூறியவற்றின் முன்புறப் பகுதி, பின்புறப்பகுதியை விடத் தூக்க லாக இருந்தால் கோணம் நேர் மறையானது.

**Trimmer arch:** (க.க.) நீள் வளைவு: கணப்பு மேலுள்ளது போன்று சற்று தட்டையான வளைவு.

**Trimmers :** (க.க.) டிரிம்மர் : மரப்பலகைகள், உத்தரங்கள் கொண்டு தரைத்தளம் அமைக்கும் போது பயன்படும் தாங்கு உத்தரம்.

**Trimming dies :** (எந்.) பிசுறு நீக்கு அச்சுகள் : நீட்டப்பட்ட அல்லது வேறு வகையில் உருவாக் கப்பட்ட உலோகப் பொருட்களின் ஓரங்களில் உள்ள பிசுறுகளை அகற்றுவதற்குப் பயன்படுத்தப் படும் அச்சுகள்.

**Trimming joist** (க.க.) டிரிம்மிங் உத்தரம் : :அவர் பிதுக்கங்கள் மேல் அமைந்த உத்தரத்தைத் தாங்கும் உத்தரம்.

**Trim size :** ஓரம் வெட்டிய அளவு : ஓரங்கள் வெட்டப்பட்ட பின் பைண்ட் செய்யப்பட்ட பின்னர் உள்ள பக்கத்தின் அளவு.

**Trip hammer :** (எந்.) விழு சம்மட்டி : விசை மூலம் இயங்கும் சம்மட்டி. இந்த வகை சம்மட்டி யில் சம்மட்டி உயரே சென்ற பின் அது தானாகக் கீழே விழுகின்ற மாதிரியில் ஏற்பாடு இருக்கும்.

**Triphibian** (வானூ.) முத்திற விமானம் : நிலம், நீர், விழுபனி, அல்லது ஐஸ் கட்டித் தரையிலி ருந்து கிளம்புவதற்கு அல்லது இறங்குவதற்கு வசதியான அடிப் புற சாதனம் கொண்ட விமானம்.

**Triplane** (வானூ.) மூவிறக்கை விமானம் : ஒன்றுக்கு மேல் ஒன் றாக மூன்று இறக்கைகள் அமைந்த விமானம்.

**Triple case:** (அச்சு.) மூன்று கேஸ் : வெவ்வேறான மூன்று வடிவங்களில் உள்ள எழுத்து

களைப் போட்டு வைப்பதற்கான பல அறைச் சட்டம்.

**Triplex steel** : (உலோ.) முப்படி உருக்கு : பெஸ்ஸிமர் முறை. திறந்த உலைமுறை மின்சாரமுறை ஆகிய மூன்றையும் பயன்படுத்தித் தயாரிக்கப்பட்ட உருக்கு.

**Tripoli** : திரிபோலி : பொடிப் பொடியாக உதிர்ந்து போகிற அளவுக்குத் தரம் கெட்டுப் போன சுண்ணாம்புக்கல், பாலிஷ் போடுவதற்குப் பயன்படுத்தப்படுகிறது.

**Tripper**: விடுவை: (பட்.) எந்திரத்தில் ஓர் உறுப்பு திடீரென மற்றோர் உறுப்பை விடுவிக்கிற ஏற்பாடு அல்லது அவ்விதம் விடுவிக்கிற உறுப்பு. இந்த ஏற்பாடு கையால இயங்குவதாக அல்லது விசையால் இயங்குவதாக இருக்கும்.

**Tri-sect**: முவெட்டு: மூன்று சம பகுதிகளாகப் பிரித்தல்.

**Trolley**: (மின்) தொடு சக்கரம்: ஒரு சாதனத்தை இயக்க அல்லது சாலையில் ஓடும் வாகனம் இயங்குவதற்கு தலைக்குமேலே உள்ள மின் கம்பியிலிருந்து மின்சாரம் பெறுவதற்கு ஒரு தண்டின் மேல் நுனியில் மின் கம்பிமீது உட்காரும் வகையில் சிறு சக்கரம் இருக்கும் அல்லது வழுக்கிச் செல்லும் தொடு சாதனம் இருக்கும்: (எந்திர) சங்கிலியைப் பயன்படுத்தி பாரத்தைத் தூக்குவதற்கான சக்கர வடிவிலான தாங்கு பகுதி. இது ஒரு நீண்ட உலோகத் தண்டு மீது நகர்ந்து செல்லக்கூடியது.

**Trouble lamp**: (மின்.) சங்கட விளக்கு: மிக நீண்ட மின் கம்பியின் நுனியில் பல்பு பொருத்தப்பட்ட விளக்கு. பழுது பார்க்கும்போது அவ்விடத்துக்கு ஒளி கிடைக்க உதவுவது.

**Trowel** : (வார்ப்.) கரணை: வார்ப்பட ஆலைக் கரணைகள் சிறியவை; குறுகலானவை. பொதுவில் இவை சுமார் $1\frac{1}{2}$ அங்குல அகலமும் 5 அல்லது 6 அங்குல நீளமும் உள்ளவை.

**Troy weight**: டிராய் எடை: இந்த அளவு முறைப்படி ஒரு ராத்தல் என்பது 12 அவுன்ஸ் பொற்கொல்லர்களும், நகைக் கடைக்காரர்களும் பயன்படுத்தும் எடை முறை 24 கிரெய்ன் = 1 வெள்ளி வெயிட் 20 வெள்ளி

வெயிட் = 1 அவுன்ஸ்
12 அவுன்ஸ் = 1 ராத்தல்

**True air speed meter**: (வானூ.) விமான அசல் வேகமானி: இது ஒரு வகையான காற்று வேகமானி. இது காற்றின் வேகத்தையும் கணக்கில் கொண்டு விமானத்தின் உண்மையான வேகத்தைக் கண்டறிந்து கூறுவது.

**Trunnion**: சாய்வு புயங்கள் : நீண்ட குழல் அல்லது தண்டின் நடுப்பகுதியில் இரு புறங்களிலும் நீட்டிக் கொண்டிருக்கிற புயங்கள். இவற்றைத் தாங்குதூண்கள் மீது அமைத்தால் குழலை அல்லது தண்டை மேலும் கீழுமாகத் தக்கபடி சாய்த்து அமைக்க முடியும்.

**Truss:** (க.க.) முட்டு : கட்டடத்தில் நீண்ட இடைவெளிகளுக்கு நடுவே பாரத்தைத் தாங்குவதற்காக அமைக்கப்படுகிற மூன் கூட்டி இணைக்கப்பட்ட முக்கோண வடிவ கட்டுமானப் பகுதிகள் இருக்கைகளில் இரு ஓரங்களைத் தாங்குவதற்குப் பயன்படுத்தப்படும் உறுதியான சட்டங்கள். பொதுவில் இவை ஒன்றோடு ஒன்று இணைக்கப்பட்டிருக்கும்.

**Trussed axle** (தானி.) முட்டுத் தண்டு : முட்டுத் தண்டு மூலம் உறுதியேற்றப்பட்ட அச்சு.

**Trussed beam:** (க.க.) முட்டுக் கம்பி மூலம் வலுவேற்றப்பட்ட நீண்ட தண்டு.

**Truss rod:** முட்டு மூலம் வலுவேற்றப்பட்ட தண்டின் இரு முனைகளிலும் பிணைக்கப்பட்ட கம்பி.

**Try square.** (எந்.) அளவுச்சதுரம்: தாங்கள் கையாளும் பொருள் உண்மையில் சதுரமானதானதா என்று சோதிக்க மெக்கானிக்குகள் பயன்படுத்தும் ஒரு சிறு சதுரம். செங்கோணத்தைக் குறிக்கவும் இது பயன்படும்.

**T slot:** (எந்.) T. குழி: கடைதல், இழைத்தல், மற்றும் வேறு பணிக்கான எந்திரத்தின் மேடையில் உள் வெட்டு மூலம் டி. போல்ட்டின் தலை உட்காருகிற அளவுக்கு ஏற்படுத்தப்பட்ட குழிவு. இக்குழிவானது டி. போல்ட்டை தக்க நிலைக்கு சரிபொருத்தம் செய்ய உதவும்.

**T slot cutter:** (எந்.) டி. குழிவெட்டுக் கருவி: டி. குழிகளின் அகன்ற பகுதிக்கு நேர்த்தி அளிப்பதற்காகப் பயன்படுகிற கடைசல் வெட்டுக் கருவி.

**T sqaure:** (க.க.) T சதுரம்: வடிவரைவாளர் பயன்படுத்தும் கருவி. இரண்டு முதல் மூன்று அங்குல அகலம் கொண்ட ஒன்று முதல் ஐந்து அடி நீளம் கொண்ட பட்டை. இதன் தலைப்புறத்தில் செங்கோணமாக அமையும் வகையில் இப்பட்டை பொருத்தப்பட்டுள்ளது. தலைப்புறப் பட்டை குறைந்தது இரு மடங்கு பருமன் கொண்டது. டி. சதுரமானது இணை கோடுகளையும். கிடைமட்டக் கோடுகளையும் வரையப் பயன்படுவது.

**Tube:** (மின்.) குழாய்: ரேடியோ கலைகளைக் கண்டுபிடித்து பெருக்குவதற்கான கருவி, மற்றும் சிறு அளவு மின்சாரங்களைக் கண்டறியவும், இருதிசை மின்சாரத்தை நேர்திசை மின்சாரமாகத் திருத்துவதற்கும் பயன்படுகிற சாதனங்களின் ஒரு பகுதியாகப் பயன்படுகிற கருவிகள் உள்பட பொதுப் படையான சொல்.

**Tube punch:** (தோல்.) குழல் துளைக்கருவி: கட்டிங் பிளையர் போன்று கையால் இயக்கித் துளையிடும் கருவி. துளையிடுவதற்கென குழிவான சிறு குழல் அல்லது குழல்

கள் உள்ளன. பொத்தான் பொருத்துவதற்கு அல்லது கண் அமைக்க இவ்விதம் துளையிடப் படும்.

**Tub-sizing:** (அச்சு.) தொட்டி முக்கு: காகிதத்தின் மேற்பரப்புக்கு நேர்த்தி அளிப்பதற்காகக் கூழ் பூச்சு அளிக்க பெரிய காகிதச் சுருளை கூழ் தொட்டியில் முக்கு தல்.

**Tubular axle:** (தானி.) குழல் அச்சு: உருக்கினால் ஆன குழலி னால் செய்யப்பட்ட அச்சு.

**Tubular radiator :** (தானி.) குழாய்முறை வெப்பமகற்றி : வெப் பம் அகற்றும் சாதனம். பல சிறிய குழாய்களைக் கொண்டது. இவற் றின் வழியே நீர் பாய்ந்து செல்லும் போது வெப்பத்தை எடுத்துக் கொண்டு குளிர்விப்பு நடைபெறு கிறது.

**Tudor style :** (க க.) டியூடர் பாணி : டியூடர் வம்ச அரசர்கள் இங்கிலாந்தை ஆண்ட காலத் தைச் சேர்ந்த கட்டிடக் கலைப் பாணி. பொதுவில் எட்டாம் ஹென்றி மன்னர் காலத்தைக் குறிப்பது.

**Tufting:** குஞ்சத் தையல்: மெத்தை பதித்த இருக்கைகளில் உள்ளே இருக்கிற மென்பொருள் இடம் நகராமல் இருக்க அதையும் போர்த்து துணியையும் சேர்த்து தைத்தல். குஞ்சத் தையல் போட்ட இடத்தில் போர்த்துத் துணியை கெட்டி நூல் அறுத்து விடாமல் இருக்க ஒரு பொத்தான் அமைக் கப்படும். அது பார்வையையும் அளிக்கும்.

**Tulip tree :** துலிப் மரம் : (மரம்) போப்லார் அல்லது துலிப்போப் லார் எனப்படும் மரம். லேசான மஞ்சள் நிறம் கொண்டது. மென் மையானது. வேலைப்பாடுக்கு எளியது. வெள்ளை ஊசியிலை மரம் போல இதைப் பலவகைக் காரியங்களுக்குப் பயன்படுத்த முடியும்.

**Tumble :** பிசிறு உருட்டு : வார்ப் படப்பொருட்கள். அடித்து உரு வாக்கப்பட்ட பொருட்கள் ஆகிய வற்றை அவை தயாரிக்கப்பட்ட உடன் ஒரு பெரிய பீப்பாயில் போட்டு உருட்டுதல். ஒன்றோடு ஒன்று நன்கு உராயும் போது பிசிறு கள் அகன்று இப்பொருட்கள் சுத்த மாகி விடும்.

**Tumbled :** (அச்சு.) புரண்டு போதல் : அச்சிடப்பட்ட தாளை மேலிருந்து கீழாகப் புரட்டிப் பார்ப் பது. இது தவிர்க்கப்பட வேண் டும். வலமிருந்து இடமாகத் தான் புரட்ட வேண்டும்.

**Tumbler gear :** புரட்டு கியர் : வரிசையான பல கியர்களில் நடு வில் அமைந்த கியர். இயக்கப்பட்ட கியரின் திசையை பின்புறமாக மாற்றுவதற்கு இது உதவும்.

**Tuner :** அலைத்தேர்வி : தேவை யான குறிப்பிட்ட ரேடியோ அலைகளை மட்டும் தேர்ந்

தெடுத்து மற்ற அலைகளை நிராகரிக்கும் வகையில் சரியமைக் கப்படுகிற கன்டென்சர் சர்க்கியூட்.

**Tung oil :** (வண்.) டங் ஆயில் : சீனாவிலும், ஜப்பானி லும் காணப்படும் டங் மரத்தின் விதையிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய், வார்னிஷ் உலர்விகள் ஆகியவற்றைத் தயாரிக்கப் பயன் படுவது. சீன மர எண்ணெய் என்றும் இதற்கு ஒரு பெயர் உண்டு.

**Tungsten :** (வேதி.) டங்ஸ்டன: சில கனிமங்களில் குறிப்பாக வோல்ஃப் ரமைட்டிலிருந்து பெறப்படும் உலோகம். இது உலோக வடிவில் இரும்புடன் சேர்த்துப்பயன்படுத்தப் படுகிறது. சூழ்ம வடிவில் இது மின்பல்புக்கு இழை தயாரிக்கப் பயன்படுகிறது. சோடியம் டங்ஸ் டேட் ($Na_2WO_4$) வடிவில் மரம், துணிகளின் மீது தீப்பிடிக்காத தன்மை அளிக்கப் பயன்படுகிறது.

**Tungsten carbide :** டங்ஸ்டன் கார்பைட் : மீதேன் அல்லது ஹைட்ரோ கார்பன் வாயுவில் வைத்து பழுக்கக் காய்ச்சிய டங்ஸ் டனை கரிம முறையில் தயாரிக்கப் பட்ட இருப்புப் பழுப்புப் பவுடர். இது தேய்ப்புப் பொருளாகப் பயன் படுத்தப்படுகிறது. அல்லது இது கோபால்ட் அல்லது வேறு கெட் டிப்படுத்தும் பொருளுடன் சேர்க் கப்பட்டு கட்டியாக்கப்பட்டு அதைக் கொண்டு உயர்வேக வெட்டு உலோகம் தயாரிக்கப் பட்டு அதன் மூலம் வேலைக் கருவி கள் தயாரிக்கப்படுகின்றன. இந்த உலோகப் பொருள் விடியாமெட் டல், கார்போலாய், போரான் என்ற வணிகப் பெயர்களில் விற் கப்படுகிறது. இதன் மூலம் தயா ரிக்கப்பட்ட வெட்டுக் கருவிகள் முன்னர் இருந்தவற்றை விட 3 முதல் 5 மடங்கு வேகத்தில் வெட்டு பவை. இது விலை உயர்ந்தது என்றாலும் பல அமைப்புகள். செலவுக்கு ஏற்ப இது உழைக்கி றது என்று கருதுகின்றனர்.

**Tungsten lamp :** (மின்.) டங்ஸ் டன் பல்பு : டங்ஸ்டன் உலோ கத்தால் ஆன மெல்லிய கம்பியை இழையாகக் கொண்ட மின்சார பல்பு.

**Tungtew steel :** (உலோ.) டங்ஸ் டன் உருக்கு : வெட்டு வேலைக் கருவிகளைத் தயாரிப்பதற்குப் பயன்படுத்தப்படும் ஓர் கலோக உருக்கு.

**Tuning :** (மின்.) இயைவிப்பு : ரேடியோ அலைகளைப் பெறும் சர்க்கியூட்டின் மின் பண்புகளை மாற்றி, நாம் விரும்புகிற குறிப் பிட்ட சிக்னல்கள் நன்கு தெளி வாகவும், வலுவாகவும் பெறும்படி செய்தல்.

**Tunnel engineer :** (பொறி.) சுரங்கப் பொறியர் : போக்கு வரத்து வசதிகளை மேம்படுத்தும் பொருட்டு மலைகள் ஊடாகவும்

ஆறுகளுக்கு அடியிலும் சுரங்கப் பாதை அமைக்க அளவீடுகள், டிசைன் ஆகியவற்றைத் தயாரித்து கட்டுமானத்தை மேற்பார்வையிடு பவர்.

**Turbidity :** கலங்கல் : தெளிவான நீருடன் ஒப்பிடுகையில் வண்டல் போன்றவற்றால் நீர் கலங்கி இருக்கும் அளவு.

**Turbine :** டர்பைன் : ஒரு வகை நீராவி என்ஜின். இதில் இயக்குவிக்கும் உறுப்புகள் அனைத்தும் சுழல்கின்றன.

**Turbo - propeller engine :** (வானூ.) டர்போ சுழலி என்ஜின் : வாயு டர்பைன் மாதிரியிலான விமான என்ஜின். இதில் டர்பைன் விசையானது கம்பிரசரையும் அத்துடன் சுழலியையும் இயக்கப் பயன்படுத்தப்படுகிறது. அநேக சமயங்களில் இது "டர்போ - புரோப்" என்றும் குறிப்பிடப்படுகிறது.

**Turbulent flow:** (வானூ.) கொந்தளிப்பான ஓட்டம்: நீர்ம ஓட்டத்தில் எந்த ஒரு குறிப்பிட்ட இடத்திலும் வேகத்தின் அளவும், திசையும் நேரத்துக்கு நேரம் விரைவாக மாறிக்கொண்டே இருக்கின்ற நிலை.

**Turf or peat:** (கான்க பீட்.) டர்ப் அல்லது பீட்:

**Turn - and - bank indicator:** (வானூ.) திருப்பு சாய்வுமானி: விமானம் எந்த அளவுக்குத் திருப்புகிறது என்பதையும் எந்த அளவுக்குத் சாய்ந்து செல்கிறது என்பதையும் காட்டுவதற்கு ஒரே உறைக்குள் அமைந்துள்ள கருவி.

**Turnbuckle:** (எந்.) திருப்பு பிணைப்பு: இரு தண்டுகளை ஒன்றோடு ஒன்று திருகி இணைப்பதற்கு புரி கொண்ட இணைப்பு.

**Turned sort:** (அச்சு.) திரும்பிய எழுத்து: அச்சுக் கோக்கும்போது வேண்டுமென்றே மேல் பகுதி அல்லது முகப்புப்பகுதி கீழ் நோக்கி இருக்கும் வகையில் அமைக்கப்படுவது. இதனால் பிரதி எடுக்கும் போது அடிப்பகுதி மேல் நோக்கி இருப்பதால் கருப்பாக விழும். உரிய எழுத்து இல்லாத நிலையில் அந்த இடத்தில் உரிய எழுத்தைப் பின்னர் அமைக்கவேண்டும் என்று குறிப்பதற்காக இவ்விதம் தலைகுப்புற வேறு எழுத்து வைக்கப்படுகிறது.

**Turning gouge:** (மர.வே.) திருப்பு செதுக்குளி: கடைசல் எந்திரத்தில் மரக்கட்டைகளை சாய்வான முனை கொண்ட செதுக்குளியைப் பயன்படுத்தி மரத்தைச் செலுத்தி எடுப்பது. இவ்வித செதுக்குளி முனையின் அகலம். $\frac{1}{4}$ முதல் $1\frac{1}{2}$ அங்குலம் வரை இருக்கும்.

**Turning machine:** வளைப்பு எந்திரம்: ஒரு உருளையின் விளிம்பை வெளிப்புறமாக உள்ளே கம்பி அமைக்கிற வளையம் வளைத்து

மடிக்கும் எந்திரம். வாளி அல்லது புனலின் விளிம்பு போன்று அமைக்க வல்லது.

**Tnrn meter:** (*வானூ.*) திரும்பு மீட்டர்: விமானம் ஏதாவது ஒரு பக்கம் திரும்புகையில் அவ்விதம் திரும்புகிற விகிதம் நிர்ணயிக்கப் பட்ட அச்சிலிருந்து எந்த அளவில் உள்ளது என்பதைக் காட்டுகிற கருவி.

**Turmeric:** (*வேதி.*) மஞ்சள்: சீனா, கிழக்கிந்தியா மற்றும் பல வெப்ப மண்டல நாடுகளில் விளையும் பயிரிலிருந்து பெறப்படுவது. மஞ்சள் தாள் தயாரிப்புக்கு இது மஞ்சள் சாயப்பொருளாகப் பயன் படுகிறது. காரப்பொருள்களை சோதிப்பதற்கு இத் தாளைப் பயன்படுத்தும்போது மஞ்சள் தாள் பழுப்பு நிறமாக மாறும். மருத்துவம், உணவுப் பொருள்களுக்கு நிறம் ஏற்றவும், துணிகளுக்கு சாயமேற்றம் மஞ்சள் பயன்படுத்தப் படுகிறது.

**Tupentine:** (*வண்.*) டர்பென்டைன்: நீண்ட இலை பைன் மரத்தண்டிலிருந்து வடித்து எடுக்கப்படும் திரவம். பெயிண்டை நன்கு பூச அதைக் கரைப்பதற்குப் பயன்படுத்தப்படுகிறது.

**Turret:** (*க.க.*) துருத்து: பெரிய கட்டடத்தில் பொதுவில் ஒரு மூலையில் சில சமயங்களில் பிதுக்கத் தூண்களிலிருந்து மேலெழும்பி நிற்கும் சிறு கோபுரம் காமிராவில் பல லென்சுகள் அமைக்கப்பட்ட ஓர் ஏற்பாடு. நான்கு லென்சுகளில் எதை வேண்டுமானாலும் முன்னே வரும்படி செய்து கொள்ள முடியும்.

**Turret lathe:** சுழல் கோபுர கடைசல் எந்திரம்: கடைசல் எந்திரத்தில் வெவ்வேறான வேலைக் கருவிகள் ஒரு சுழல் உருளையில் கீழ் நோக்கி செங்குத்தாகப் பொருத்தப்பட்டிருக்கும். எதையும் கழற்றி பொருத்த வேண்டிய அவசியல் இன்றி தேவையான வேலைக் கருவியை முன் கொண்டு வந்து நிறுத்தி இயக்கலாம்.

**Tuscan:** டஸ்கன்: (*க.க.*) புராதன கட்டடக் கலையின் ஐந்து வகையில் நுணுக்க வேலைப் பாடுகள் மிகவும் குறைவாக உள்ள கட்டடக் கலை வகை.

**Tueyre:** காற்றுத் திறப்பு: இரும்புக் குழம்பு உள்ள தொட்டிக்குள் "காற்று பெட்டி" மூலம் காற்றைச் செலுத்துவதற்காக தொட்டியினுள் அமைந்த திறப்பு.

**Tweezers:** (*அச்சு.*) சிறு சாமணம்; சாமணம் போன்றவை. ஆனால் வடிவில் சிறியவை, அச்சுக் கோக்கும்போது நடுவே தவறான எழுத்துகள் இருக்குமானால், அக்குறிப்பிட்ட எழுத்தை மட்டும் அகற்றுவதற்குப் பயன்படுவது.

**Twill:** சாய்வரித் துளி: நெசவுப் பாலை காரணமாக துணியின்

மேற்பரப்பில் சற்று மேடான குறுக்காகச் செல்வது போன்ற கோடுகள் காணப்படும்.

**Twin ignition:** (*தானி.*) இரட்டைத் தீ பற்றுகை: இரு பற்றவைப்பு உள் எரி என்ஜினில் ஒரே சமயத்தில் அல்லது மாறி மாறி வாயுக் கலவை தீப்பற்றும் வகையில் அமைக்கப்பட்ட இரட்டை பிரிப்பு முனைகளைக் கொண்ட ஏற்பாடு.

**Twin-six engine:** (*தானி.*) இரட்டை ஆறு என்ஜின்: 6 சிலிண்டர்களைக் கொண்ட இரு ஜோடி, 60 டிகிரி கோணத்தில் பொருத்தப் பட்டிருக்கும்.

**Twist bits:** (*மர. வே.*) திருகு துண்டுகள்: உலோகத்தில் துளையிடப் பயன்படுத்தப்படும் திருகு துளைக் கருவிகள் போன்றவை. ஆனால் இவை சிறிய துண்டுகள். கருவியைப் பொருத்தப்படுபவை. இவற்றில் திருகு வரிப்பள்ளங்கள் பக்கம் பக்கமாக இருக்கும். மரத்தில் ஸ்குருக்களை இறக்குவதற்கான துளைகள் போடப் பயன் படுபவை.

**Twist drill:** (*எந்.*) திருகு துளைக் கருவி: உலோக உருளைத் தண்டில் இரு புரிகள் பக்கம் பக்கமாக அமைந்து மேலிருந்து கீழாக நுனி வரை இறங்கும். உலோகம், மரம் இரண்டிலும் பயன்படுத்த இவை தயாரிக்கப்படுகின்றன. துளைத் தண்டு ஒரே சீராக இருக்கலாம். அல்லது கீழ்ப்புறத்தில் குவிந்தும் இருக்கலாம்.

**Two-filament bulbs:** (*காண்க.*) இரு இழை பல்புகள்: இரட்டை இழை பல்பு.

**Two-line letter:** (*அச்சு.*) இரு வரி எழுத்து: ஒரு வாசகத்தின் முதல் எழுத்து; பெரிய அளவிலானது. இதன் உயரம் இரு வரிகள் அளவுக்கு உள்ளது.

**Two-on:** (*அச்சு.*) டு ஆன்: ஒரே சமயத்தில் அதிகப்பிரதிகளை அச்சிட இரண்டு அல்லது அதற்கு மேலான "பாரங்களை" அமைத்தல்.

**Two-phase:** (*மின்.*) இரு:.பேஸ்: இதை கால் ஃபேஸ் எனலாம். 90 டிகிரி இடமாற்றம் இருக்கிற அளவிலான இரு சுற்றுகள் அல்லது சர்க்கியூட்டுகள்.

**Two-phase alternator:** (*மின்.*) இரு :.பேஸ் மின்னாக்கி: பல ஃபேஸ் நேர் திசை மின்சார மின்னாக்கி. ஃபேஸ் 90 டிகிரி இடமாற்றம் இருக்கிற வகையில் இரு வகை மின்னோட்டங்களை அளிக்கும் சுற்றுகளைக் கொண்டது.

**Two-speed rear exle:** (*தானி.; எந்.*) இரு வேக பின் அச்சு: இந்த ஏற்பாட்டில் பின்புற அச்சில் இரு வேகச்சுற்றுக்கு அதாவது ஒற்றை வேக அச்சில் கிடைப்பதைப் போல இரு மடங்கு வேகத்துக்கு வழி செய்யப்படுகிறது, குறிப்பாக லாரிகளில் இவ்விதம் செய்யப் படும். இதனால் என்ஜின் தேய்மா

னம் குறையும். பெட்ரோல் உபயோகம் குறையும்.

**Two-tone steerhide:** இரு வழி தோல் பயன்: விலை குறைந்த தோல் பொருள் புத்தகங்களை பைண்ட் செய்கையில் மேற்புறத்தில் அமைக்கவும், உறைப்பெட்டிகளின் மேற்புறத்தில் அமைக்கவும் பயன்படுவது. இயற்கை நிலையில் அல்லது பல வண்ணப் புள்ளிகளுடன் கிடைக்கப்பெறுவது.

**Two way radio:** இரு வழி வானொலி தொடர்புக் கருவி: பல்வேறு இடங்கள் இடையே ரேடியோ தொடர்பு கொள்வதற்கு உதவும் சாதனம். எங்கும் எடுத்துச் செல்லத்தக்கது. ரேடியோ அலைகளைப் பெறுவதற்கும் அனுப்புவதற்குமான கருவிகள் அடங்கியது.

**T wrench:** 'T' வடிவ திருப்பு கருவி: T' வடிவில் உள்ள திருப்பு கருவி. பற்றிக் கொள்வதற்குக் குழிவு இருக்கும்.

**Tympan :** (அச்சு.) அழுத்துப் படலம் : அச்சிடும் போது காகிதம் மீது எழுத்துகள் நன்கு பதிந்து அச்சிடுவதற்கான வகையில் தகுந்த அழுத்தத்தைக் கொடுப்பதற்காக அச்சு எந்திரத்தில் ஒன்று அல்லது அதற்கு மேலாக வைக்கப்படும் காகிதங்கள்.

**Tympanum :** (க.க.) முகட்டுக் குமிழ் : கட்டடத்தின் மேற்புறத்தில் அலங்காரமாக முக்கோண வடிவில் அமைக்கப்படுகிற இடம்.

**Type :** (அச்சு.) அச்சு எழுத்து : உலோகத்தால் ஆன எழுத்து. அச்சிடுவதற்குப் பயன்படுவது. இதன் உயரம். 0. 918 அங்குலம்.

**Type caster :** (அச்சு.) அச்சு வார்ப்பு எந்திரம் : அச்சு எழுத்துக்களை வார்க்கும் எந்திரம்.

**Type gauge :** (அச்சு.) எழுத்து அளவி : அச்சுக் கோக்கப்பட்ட வாசகத்தில் எவ்வளவு வரிசைகள் உள்ளன என்று அளவிடுவதற்கு குறியீடு செய்யப்பட்ட மரத்தால் அல்லது உலோகத்தால் ஆன அளவி.

**Type high :** (அச்சு.) அச்சு உயரம் : அச்சு எழுத்தின் உயரம் நாட்டுக்கு நாடு வேறுபடுகிறது. அமெரிக்காவில் இதன் உயரம். 0. 918 அங்குலம்.

**Type metal :** (அச்சு.) அச்சு உலோகம் : ஒரு பங்கு ஈயம், இரு பங்கு ஆன்டிமனி, ஐந்து பங்கு காரீயம் ஆகியவற்றால் ஆன அலோகம்.

**Type planer :** (அச்சு.) எழுத்து சமன்படுத்தி : நல்ல கெட்டியான மரக்கட்டை சேரில் எழுத்துக்களை கலங்களாக அடுக்கிய பின்னர் எழுத்துகளின் தலைகள் சமச்சீராக ஒரே மட்டத்தில் அமைய இக்கட்டை கொண்டு தட்டி விட்டுப் பிறகு கேஸை முடுக்குவர்.

**Typographer :** (அச்சு.) அச்செழுத்தாளர் : தலைமை அச்சா

ளர் அல்லது அச்சு எழுத்துகளை வடிவமைப்பவர்.

**Typographic :** (அச்சு.) அச்சுக் கலை : அச்சுக்கலை தொடர்பாக.

**Typography :** (அச்சு.) அச்செழுத்தியல் : 1. அச்சுக்கோத்தல் அல்லது எழுத்துக்களை தக்கவாறு அடுக்குதல். 2. அச்சுக்கலை.

# U

**U bolt:** (எந்.) U-மரையாணி: 'U' என்ற ஆங்கில எழுத்தின் வடிவில் அமைந்த மரையாணி. இதன் இரு முனைகளிலும் திருகிழை அமைக்கப்பட்டிருக்கும். இதனை, உந்து ஊர்தியில் உள்ளது போன்ற விற்சுருளைப் போல் "பிடிப்பு ஊக்கு" என்றும் கூறுவர்.

**U clamp:** (எந், பட்.) U-பற்றுக் கருவி: 'U' என்ற அங்கில எழுத்தின் வடிவில் அமைந்த பற்றுக் கட்டை. சமதளப் படுகைகளில் வேலைப்பாடு செய்ய வேண்டிய இறுக்கிப் பொருத்துவதற்கு இது பயன்படுகிறது.

**U-dometer:** (இயற்.) U-மழை மானி: ஒரு வகை மழை மானி.

**Ultimate strength:** (பொறி.) இறுதி வலிமை: எந்திரத்தில் மிக அதிக அளவில் நிலைப்படுத்தக் கூடிய பார விசை.

**Ultra marine:** (வண்.) நீல வண்ணப் பொருள்: வெண்களிமண், கரி, கந்தகம் போன்றவற்றிலிருந்து செய்யப்படும் நீல வண்ணப் பொருள்.

**Ultra micro meter:** (வண்.) உறு துண்ணளவை மானி: அங்குலத்தின் பத்து லட்சத்தில் ஒரு கூறினையும் துல்லியமாகக் கணிக்கும் அளவை மானி.

**Ultra microscope:** (வண்.) புடையொளி நுண்ணோக்காடி:

**Ultra speed welding:** கடும் வேகப் பற்றவைப்பு: இரண்டு அல்லது அவற்றுக்கு மேற்பட்ட பற்றவைப்பு மின் முனைகளைக் கொண்டு, பற்ற வைக்க வேண்டிய பொருளை ஒரே சமயத்தில் தொட்டுச் செய்யப்படும் மிக வேகப் பற்றவைப்பு முறை.

**Ultrs-violet:** புற ஊதாப்பகுதி: கண்ணுக்குப் புலனாகாத நிறப் பட்டையின் ஏழு நிறங்களில் ஊதாக் கதிர்களுக்கு அப்பாற்பட்ட மண்டலம்.

**Umber:** (வண்.) செங்காவி: மங்கனீஸ் ஆக்சைடும், களிமண்ணும் அடங்கிய பழுப்புச் செங்காவி வண்ணம். இது நிறமியாகப் பயன்படுத்தப்படுகிறது.

**Uncontrolled spin:** (வானூ.) கட்டற்ற சுழற்சி: விமானத்தில் கட்டுங்கடங்காமல் சென்று விடும் சுழற்சி.

**Under-ground cable:** (மின்.) தரையடிக் கம்பி வடம் : ஈயம் அல்லது பிற நீர்புகாப் பொருள்களில் பொதிந்து வைக்கப்பட்டுள்ள மின் கடத்து கம்பி வடம். இது தரையடியில் மின் கம்பிவடக் குழாய்களினுள் செலுத்திப் புதைக்கப்பட்டிருக்கும்.

**Underlay:** (வண்.) அடித்தாங்கல் : அச்செழுத்து உருக்களின் அடியில் அடிக்கிடைத்தாள்களைத் தாங்கலாக வைத்து உறுதி செய்தல்.

**Under pinning:** (பொறி.) அடையுதைவுக் கட்டுமானம் : சுவர்க் கட்டுமானங்களில் கீழ்க்கட்டுமான ஆதரவு அமைத்துத் தாங்குதல் அமைத்தல்.

**Under shot wheel:** (பொறி.) நீர்விசைச் சக்கரம் : அடியில் நீரோட்டம் மூலமாக இயக்கப் பெறுகிற சக்கரம்.

**Under writer:** (மின்.) மின் சாதன ஆய்வாளர் : மின் சாதனங்கள் நீண்ட நாட்கள் உழைக்கக் கூடியனவா, எளிதில் தீப்பிடிக்காமல் காப்புடையனவா என்பதைச் சோதனை செய்து ஆராய்ந்தறிய வல்ல நிறுவன ஆய்வாளர்.

**Undulatory movement:** (வானூ.) அலையூசல் இயக்கம் : அலைகளைப் போல் ஏற்ற இறக்கத்துடன் இயங்குதல்.

**Uniform load:** (பொறி.) மாறாநிலைச் சுமை : வேறுபாடின்றி மாறாத நிலையிலுள்ள சுமையளவு. இதில் எஞ்சினின் கட்டமைப்புச் சுமையும், அதில் ஒரு சீராகப் பரப்பி வைக்கப்பட்டுள்ள பாரத்தின் சுமையும் உள்ளடங்கும்.

**Unilatral tolerance:** ஒரு பக்கத் திறம் : அடிப்படைப் பரிமாணத்திலிருந்து ஒரு பக்கம் கூடுதலாகவோ குறைவாகவோ வேறுபடுவதற்கு இடங்கொடுக்கும் அமைவு. எடுத்துக்காட்டு: 5.250" — 002"

**Union:** (கம்.) கூட்டிணைப்பு : குழாய்களை இணைத்தல் அல்லது பொருத்துதல்.

**Unit magnetic pole:** (மின்.) ஒருமக் காந்தத்துருவம் : ஒரு செ.மீ. தூரத்திலுள்ள சம அளவு ஆற்றல் வாய்ந்த ஒரே துருவத்தை ஒரு டைன் (நொடி விசையழுத்தம்) ஆற்றலுடன் விலக்குகிற காந்தத் துருவம். ஒரு கிராம் எடைமானத்தை ஒரு நொடியில் நொடிக்கு ஒரு செ.மீ. விழுக்காடு செலுத்த வல்ல அளவுடைய விசை ஆற்றல் அலகு ஆகும்.

**Unit of Illumination:** (மின்.) ஒளியடர்த்தி அலகு : மெழுகு விளக்கொளி ஒரு விளக்கின் ஒளிர் திறன். சராசரி கோள மெழுகு விளக்கொளி என்பது, விளக்கின்

மையத்திலிருந்து எல்லாத் திசைகளில் சராசரியாக பரவும் ஒளியின் திறன் ஆகும். சராசரி கிடைமட்ட விளக்கொளி என்பது, விளக்கின் ஒளிமையத்திலிருந்து கிடைமட்டத் தளத்தில் பரவும் சராசரி ஒளித் திறன் ஆகும்.

**Unit of magnetic flux :** (மின்.) காந்தப்பாய்வு அலகு : ஒரு காந்தப் பொருளில் இணைக்கப்பட்டுள்ள காந்த விசை வழிகளின் மொத்த எண்ணிக்கை. இது, ஒரு காந்தச் சுற்று வழியில் பாயும் காந்த ஓட்டமாகக் கருதப்படுகிறது.

**Unit of magnetic intensity:** (மின்.) காந்த அடர்த்தி அலகு : காந்த இயக்க விசையின் அலகு. காந்தச் சுற்று வழியின் மூலமாக காந்தவிசை வழிகளைச் செலுத்தும் காந்த அழுத்த விசை.

**Unit of magnetic reluctance :** (மின்.) காந்தத் தடை அலகு : காந்த மூட்டிய பொருளினால் காந்தப்பாய்வுக்கு ஏற்படும் தடையின் அளவு.

**Unit power plant :** (தானி.) மின்னாக்கி அலகு : உந்து ஊர்தியில் மின்னாக்கம் செய்வதற்கான எந்திரப் பகுதிகளின் முழுத் தொகுதி. இதில் மின்னோடி, மின் செலுத்தி, மின்னோடியின் துணைக் கருவிகள் அனைத்தும் அடங்கும்.

**Unit stress :** (பொறி.) அழுத்த விசை அலகு : ஓர் அலகு பரப்புப் பகுதியின் மீது ஏற்படும் அழுத்த விசையின் அலகு. இது பெரும்பாலும் ஒரு சதுர அங்குலத்திற்கு இத்தனை பவுண்டு என்ற கணக்கில் குறிப்பிடப்படும்.

**Universal :** இன முழுதளாவிய : இயல்பாகப் பல பொருள்களுக்கும் உரித்தாகக் கொள்ளத்தக்க பொது மூல அடிப்படைக் கருத்துப் படிவம்.

**Universal grinding machine :** (பட்.) பொதுசாணை எந்திரம் : சுழல் மேசை, சுழல் உருளை, சுழல் சக்கர முளை பொருத்தப்பட்டுள்ள ஒரு சாணை எந்திரம். இது நீள் உருளைச்சாணை, மேற்பரப்புச் சாணை, முகப்புச்சாணை முதலிய உள்முக, புறமுகச் சாணை தீட்டுதலுக்குப் பயன்படுகிறது.

**Universal joint :** (எந்.) பொது இணைப்பு : ஊடு அச்சுகள் நேர் கோட்டில் இல்லாத இரு சுழல் தண்டுகள் தங்கு தடையின்றிச் சுழல்வதற்கு இடமளிக்கிற ஒரு வகை இணைவமைவு.

**Universal milling machine :** (எந்.) பொது வெட்டு எந்திரம் : ஊடுவெட்டாகவும், நீளவெட்டாகவும் உலோகங்களில் பள்ளங்கள் வெட்டுவதற்கான ஓர் எந்திரம். இதில் சுழலும் வெட்டு கருவிக்கு எதிராக வெட்ட வேண்டிய உலோகத் தகட்டினைச் செலுத்துவர். இந்தச் சுழல் வெட்டுகருவி ஒரு சுழல் மேசையுடன் பொருத்தப்பட்டிருக்கும்.

**Universal saw table :** (*மர. வே.*) பொது ரம்ப மேசை : சாய்தளத்தில் ரம்ப மேசை சுழல்வதற்கு இடமளிக்கிற ஒரு ரம்ப மேசை.

**Unlimited ceiling:** (*வானூ.*) வரம்பற்ற உயர எல்லை: மேகமட்டம் 9,000 அடிக்கு மேற்பட்ட நிலையில் விமானம் தங்கு தடையின்றிப் பறப்பதற்கான உயரத்தின் எல்லை.

**Unshielded carbon arc welding:** காப்பற்ற கார்பன் வில் பற்றவைப்பு: காப்புக்கருவி எதுவுமின்றி கார்பன் வில் பற்றவைப்பு முறை.

**Unshielded metal arc welding:** காப்பற்ற உலோக வில் பற்றவைப்பு: வெற்று நிலையில் அல்லது இலேசாக முலாமிட்ட கம்பி அல்லது சலாகை மின்முனையாகப் பயன்படுத்தப்படும் உலோக வில் பற்றவைப்பு முறை.

**Up - holsterry:** (*மர. வே.*) மெத்தை வேலைப்பாடு : அறைகலன்கள் முதலியவற்றுக்கு மெத்தை, திண்டு பொருத்தும் வேலைப்பாடு.

**Up keep :** (*தானி.*) பேணுகைச் செலவு : உந்து ஊர்திகளைப் பேணிக் காப்பதற்கான செலவு.

**Upper case :** (*அச்சு.*) மேலின எழுத்து : அச்சுக்கலையில் சிறிய எழுத்துக்களிலிருந்து வேறுபட்ட தலைப்பு எழுத்துக்களைக் குறிக்கும் மேலின எழுத்துகள்.

**Up right :** (*க.க.*) பாரந்தாங்கி : கட்டிடத்திற்குத் தாங்கலாக அமையும் தூண் அல்லது கம்பு.

**Uranium :** (*உலோ.*) யுரேனியம் (விண்மம்) அணு ஆற்றலுக்குப் பயன்படும் தனிமம், கடினமான, தகடாக நீட்டக்கூடிய உலோகம். மிகு வேக எஃகுகளின் வலிமையினையும், விறைப்புத் தன்மையினையும் அதிகரிப்பதற்கு இது பயன்படுகிறது. இயற்கையான யுரேனியத்தில் U-235, U-238 என்ற இரு முக்கிய ஓரகத் தனிமங்கள் உள்ளன. இயற்கை யுரேனியத்தின் 140 பகுதியில் ஒரு பகுதி U-235 என்பதாகும்.

**Urea:** (*குழை.*) யூரியா: பால் உணி விலங்குகளின் சிறு நீரில் அடங்கியுள்ள சேர்மப்பொருள். இது யூரியா ஃபார்பால் டிஹைறடு ரெசினாய்டுகளுக்கான ஆதாரப் பொருளாகவும் பயன்படுகிறது. இது செயற்கையாகவும் தயாரிக்கப்படுகிறது.

**Urea resin:** (*குழை.*) யூரியா பிசின்: பிளாஸ்டிக் குடும்பத்தில் ஒருவகை இது யூரியாவும் மெலாமினும் கலந்த அமினோ குடும்பத்தைச் சேர்ந்தது. ஃபார்மால் டிஹைறடு அல்லது அதன் மீச்சேர்மப் பொருள்களுடன் வினைபுரிவதன் மூலம் இது பெறப்படுகிறது. இது பதங்கெடுவதைத் தடுக்கக் கூடி

யது; எண்ணெய்ப் பசையைத் தடுக்க வல்லது; மேற்பரப்பு கடினத்தன்மை கொண்டது. இதனால், இது மின் பொருள்கள், பொத்தான்கள் முதலியவை தயாரிக்கப் பயன்படுகிறது.

**Useful load:** (*வானூ.*) இன்றியமையாச் சுமை: விமானத்தில் இன்றியமையாது தேவைப்படும் சுமை விமான ஊழியர்கள், பயணிகள், எரிபொருள் இதில் அடங்கும்.

**Utility:** பயனோக்கப் பண்பு: நடைமுறைப் பயனுடைய பண்பு அல்லது நிலை. நடைமுறைப் பயன்பாடுள்ள பொருள்.

# V

**'V' s :** (*எந்; பட்.*) 'வி' வழிகள் : மேசை அல்லது பொருட்கள் நிறைந்த கலங்கள் நகர்ந்து செல்வதற்கென சற்று உயரமான அல்லது ஏழிவான வகையில் அமைந்த 'V' வடிவப் பாதைகள்.

**Vaccum :** (*இயற்.*) வெற்றிடம் : காற்று அல்லது வேறு ஏதேனும் ஒன்று வெளியேற்றப்பட்ட கொள் கலம். (நீராவி, வெப்பம்).

**Vaccum brake :** (*தானி.*) வெற்றிட முறை பிரேக் : கன ரக பயணி வாகனங்களுக்கு மிகவும் உகந்த ஏற்பாடு. பிரேக் இயக்கு முறையானது உள் வாங்கு பல முனைக் குழாய், அல்லது கார்ப்புரேட்டரிலிருந்து திராட்டிலுக்கு சற்று மேலே வெற்றிடத்தை பெற்றுக் கொண்டு இயங்குகிறது.

**Vaccum cleaner :** வெற்றிட முறை துப்புரவி : கம்பள விரிப்பு, போன்றவற்றிலிருந்து குப்பை, தூசு ஆகியவற்றை வெற்றிட முறை மூலம் உறிஞ்சும் மோட்டாரால் இயங்கும் மின்விசிறிக் கருவி.

**Vaccum forming :** (*குழை.*) வெற்றிட முறையில் உருவாக்கம் : ஷீட் உருவாக்கம் வெப்ப முறை உருவாக்கம் ஏற்றும் பெயர் உண்டு. முக்கியமான ஒரு முறையில் வெப்ப பிளாஸ்டிக், குழைமம் ஆகிற அளவுக்கு சூடேற்றப்பட்டு பிறகு வெற்றிட முறை மூலம் ஒரு அச்சில் வந்துபடியும்படி செய்யப்படுகிறது. இதில் பல மாறுபாட்டு முறைகள் உள்ளன. காற்றைச் கீழ்நோக்கிச் செலுத்தி குழைமம் ஷீட்டுகளாக உருவாகும்படி செய்யலாம். அல்லது காற்றை மேல் நோக்கிச் செலுத்தியும் ஷீட்டுகளை உருவாக்கலாம். இந்த முறையைப் படிமான முறை என்றும் கூறலாம். விளம்பர அடையாளங்கள், விமான உறை போன்றவற்றைச் செய்ய படிமான முறை பயன்படுதப்படுகிறது.

**Vaccum control :** (*தானி.*) வெற்றிடக் கட்டுப்படுத்தி : பல முனைக்குழாய் வெற்றிடத்தினால் கட்டுப்படுத்தப்படுகிற பிரேக், கிளட்ச் போன்று மோட்டார் வாகனத்தின் எந்த ஓர் உறுப்புக்கும் பொருந்தும்.

**Vaccum fuel supply :** (தானி.) வெற்றிடமுறை எரிபொருள் அளிப்பு: பிரதான எரிபொருள் தொட்டியிலிருந்து உயர்ந்த மட்டத்தில் உள்ள என்ஜினுக்கு வெற்றிட முறை மூலம் தான் பெட்ரோல் கிடைக்கிறது. வெற்றிடத் தொட்டி இதற்கு உதவுகிறது. என்ஜின் ஓடும் போது கார்புரேட்டரில் தோற்றுவிக்கப்படும் வெற்றிடத்தின் பலனாக வெற்றிடத் தொட்டியில் ஓரளவு வெற்றிடம் பராமரிக்கப்படுகிறது.

**Vaccum gauge :** (தானி.) வெற்றிட அளவுமானி : ஓர் என்ஜினின் உள் வாங்கி பல முனைக்குழாயில் அல்லது எரிபொருள் குழாயில் உள்ள வெற்றிடத்தை அளந்து கூறுவதற்கு காற்று மண்டல அழுத்த அடிப்படையில் குறியீடுகள் செய்யப்பட்ட அளவுமானி.

**Vaccum metalizing :** (குழை.) வெற்றிட உலோகப்பூச்சு : ஆவியாக்கப்பட்ட அதாவது மிக நுண் திவலைகள் வடிவிலாக்கப்பட்ட உலோகத்தை (அலுமினியம்) கொண்டு பிளாஸ்டிக் உறுப்புகள் மீது மெல்லிய பூச்சு அளித்தல். இது வெற்றிடத் தொட்டியில் நிகழ்த்தப்படுகிறது. மின்சார இழை மூலம் ஆவியாக்கப்படுதல் நிகழ்த்தப்படுகிறது. உலோகக் குழம்பில் நிறம் சேர்க்கப்பட்டுப் தங்க, பித்தளை, அல்லது தாமிர நிறம் இருக்கும்படி பார்த்துக் கொள்ளப்படுகிறது. இறுதி தயாரிப்புகளின் மேற்புறம் ஓரளவு உலோகத்தன்மை பெற்றிருக்கும்.

**Vaccum tube :** (மின்.) வெற்றிடக் குழாய் : உள்ளிருந்து வாயு அல்லது ஆவி அகற்றப்பட்ட — மிச்ச மீதியாக சிறு அளவுக்கு இருக்குமானால் அதனால் மின் தன்மைகள் பாதிக்கப்படாத அளவுக்கு வெற்றிடமாக்கப்பட்ட மின்னணுக்குழாய்.

**Valley :** (க.க.) கூரைப்பள்ளம் : இரு கூரைகளின் சரிவுகள் சந்திப்பதால் ஏற்படும் கோணம். அல்லது அந்தச் சந்திப்பில் உள்ள வடிநீர்ப் பாதை.

**Valley rafter :** (க.க.) கூரைப் பள்ளச் சட்டம் : இரு கூரைகளின் சரிவு சந்திக்கின்ற பள்ளத்துக்கு அடியில் நெடுக அமைந்த சட்டம்.

**Value :** (வண்.) உயர் தகவு ஒரு வண்ணத்தின் அழுத்தம் அல்லது மென்மையைக் குறிக்கும் தன்மை.

**Valve :** தடுக்கிதழ் : குழாய்களின் வழியே நீர்மம் அல்லது வாயுவின் ஓட்டத்தை ஒழுங்குபடுத்தும் சாதனம்.

**Velve action :** (தானி.) தடுக்கிதழ் செயல்பாடு : டைமிங் கியர்கள், செயின் கேம் ஷாப்ட் லிப்டர்கள், வால்வு தொகுப்பு ஆகிய வால்வுகள் திறந்து மூடுவதைக் கட்டுப்படுத்தும் பகுதிகள்.

**Valves:** (தானி.) தடுக்கிதழ்கள்: என்ஜின் சிலிண்டர்களுக்குள் அல்லது அவற்றிலிருந்து வாயுக்கள் வெளியே செல்வதை மற்றும் உள்ளே செல்வதைக் கட்டுப்படுத்தும்

கருவிகள். மோட்டார் என்ஜின்களில் அவை மோப்பெட் வால்வுகள் என்று குறிப்பிடப்படுகின்றன.

**Valve spring:** (*தானி.*) தடுக்கிதழ் திருகு சுருள் விசை வில்: தடுக்கிதழ் மூடிய நிலையில் இருக்கும் பொருட்டு 40 முதல் 90 ராத்தல் அழுத்தத்தை ஏற்படுத்துகிற அழுத்து வகை திருகு சுருள் விசைவி .

**Valve stem:** (*தானி.*) தடுக்கிதழ் தண்டு: போப்பெட் வகை தடுக்கிதழ் தண்டு.

**Valve timing:** (*தானி.*) தடுக்கிதழ காலத் திட்டம்: பிஸ்டனின் நிலையைப் பொருத்து தடுக்கிதழின் செயல்பாட்டைத் தக்கபடி பொருத்துதல்.

**Vanadium:** (*உலோ.*) வெண்ணாகம்: வெள்ளி போன்று வெண்மையாகக் காட்சியளிக்கிற அரிய தனிமம். கலோக உருக்குத் தயாரிப்புக்கு மிகவும் பயன்படுவது. மோட்டார் வாகன அச்சு போன்று கடும் அதிர்ச்சிக்குள்ளாகிற பகுதிகளைத் தயாரிக்க வனாடிய வெண்ணாக உருக்கு பயன்படுகிறது.

**Vanadium steel:** (*உலோ.*) வண்ணாக, உருக்கு: 0. 10 முதல் 0.15 சதம் வரையில் வனாடியம் கலந்த உருக்கு. இதை அடித்து உருவாக்க முடியும். எனினும் இந்த உருக்கை படிப்படியாகத்தான் சூடேற்ற வேண்டும். சாதாரண வனாடியம் உருக்கைவிட குரோம்-வனாடியம், நிக்கல்-வனாடியம் உருக்குகளே அதிகம் பயன்படுத்தப்படுகின்றன.

**Vandyke brown:** (*வண்.*) வான்டைக் பழுப்பு நிற: பழுப்பு நிறக் கலவைப் பொருள் கலந்த இயற்கையில் கிடைக்கிற களிமண். ஆழ்ந்த நிறம் காரணமாக கலவை பெயிண்டுகளைத் தயாரிக்கப் பயன்படுவது.

**Vane:** (*க.க.*) காற்று திசைகாட்டி: காற்று எந்தத் திசையை நோக்கி வீசுகிறது என்பதைக் காட்டும் சாதனம்.

**Vanishing point:** மறையும் புள்ளி: பின்னணி காட்சியை குறிப்பிடுகையில் பயன்படும் சொல். படம் வரையும்போது பின்னோக்கிச் செல்கின்ற இணைகோடுகள் ஒரு புள்ளியில் போய்ச் சேரும். இப்புள்ளியே மறையும் புள்ளியாகும்.

**Vapor :** (*தானி.*) ஆவி : வாயு, நீராவி, பெட்ரோலும் காற்றும் சேர்ந்த கலவை.

**Vaporize :** (*வேதி.*) ஆவியாக்கு : ஆவி அல்லது வாயு நிலைக்கு மாற்றுதல்.

**Vaporizer :** ஆவியாக்கி : ஆரம்ப காலத்து கார்புரேட்டர்.

**Vapor Lock :** ஆவித் தடை : எரிபொருள் வரும் குழாய்களில் எரிபொருள் ஆவி சேர்ந்து விடுவதன் காரணமாக என்ஜினுக்கு எரிபொருள் வருவது தடைப்படுதல் அல்லது குறைதல்.

**Variable :** (*கணி.*) மாறி : மதிப்பு மாறக்கூடிய அளவு அப்படி

மாறும்போது மற்றவற்றின் மதிப்பு மாறாதிருக்கும்.

**Variable condenser :** (*மின்.*) மாறு மின்தேக்கி : சில வரம்புகளுக்கு உட்பட்ட மின்தேக்கி. சில வரம்புகளுக்கு உட்பட்டு இதன் திறனை மாற்ற முடியும்.

**Variable Motion :** (*பொறி*) மாறுபடு இயக்கம் : ஒரு பொருள் சரி சமமான தூரங்களை வெவ்வேறு கால அளவுகளில் கடக்குமானால் அது மாறுபடு இயக்கம் எனப்படுகிறது.

**Varnish :** (*வண்.*) வார்னிஷ் : ஆல்கஹால் அல்லது எண்ணெயில் சில வகைப் பிசின்கள் கலந்த நீர்த்த கலவை. ஒரு பரப்பின் மீது உறுதியான, நேர்த்தியான மண் பூச்சை அளிக்கப் பயன்படுவது. வார்னிஷ் தெளிவாக அல்லது நிறத்துடன் இருக்கலாம்.

**Varying speed motor :** (*மின்*) வேகம் மாறுபடும் மோட்டார் : செய்சுமைக்கு ஏற்ப வேகம் மாறுகின்ற மோட்டார். பொதுவில் செய்சுமை அதிகரிக்கும்போது வேகம் குறையும். எனினும் விரும்பியபடி வேகத்தை மாற்றத்தக்க மோட்டாரிலிருந்து இது வேறுபட்டது.

**Vault :** (*க.க.*) வளைந்த கூரை : அடுத்தடுத்து அமைந்த வளைவுகளால் இணைக்கப்பட்டு உட்புறமானது வளைவாக அமைந்த கூரை. வளைவான கூரை கொண்ட அறை அல்லது இடம்.

**V Belt : V.** வார்ப்பட்டை : விளிம்புள்ள உருளையில் மாட்டப்படுகிற ஆங்கில V போன்று தோற்றமளிக்கும் வார்ப்பட்டை. பட்டையான பெல்டுடன் ஒப்பிடுகையில் V வார்ப்பட்டை, உருளையிலிருந்து நழுவ அல்லது சுழலுவதற்கு வாய்ப்புக் குறைவு.

**V Blocks:** (*எந்.*) வி. பிளாக்குகள் உருளை வடிவிலான உலோகப் பொருள்களைச் சோதிக்கும்போது அல்லது உருக்கொடுக்கும்போது நகராமல் இருப்பதற்காக ஒரு புறத்தில் V வடிவில் செதுக்குதல்.

**Vector:** (*மின்.*) வெக்டார்: மாறு திசை மின்சாரத்தில் ஒன்றிணைந்து செயல்படுகிற பகுதிகளை விளக்கிக் காட்டுகிற படம்.

**Vee radiator:** (*தானி.*) V ரேடியேட்டர்: இரு பகுதிகளாகத் தயாரிக்கப்பட்டு நடுவில் 180 டிகிரிக்கும் குறைவான கோணத்தில் இணைக்கப்பட்டது.

**Vegetable tannage :** தாவரப் பதனம் : டான்னிக் அமிலம் கலந்த தாவரப் பொருட்களைக் கொண்டு தோலைப் பதப்படுத்துதல்.

**Vehicle :** (*வேதி.*) பூச்சு சாதனம் : வார்னிஷ் அல்லது லேக்கரைக் கரைத்துப் பூசுவதற்கான திரவப் பொருள்.

**Vellum :** வரைநயத் தோல் : தோலினால் ஆன ஆவணம் போன்று தோன்றும் காகிதம்.

**Velocity :** (எந்.) திசை வேகம் : கடக்கும் தொலைவை நேரத்தால் வகுத்து ஒரு விநாடிக்கு அல்லது ஒரு நிமிஷத்துக்கு இவ்வளவு அடி என்று கூறுதல் (இயற்.) ஒரு பொருள் செல்லும் விகிதம்.

**Velox paper :** வெலாக்ஸ் காகிதம் : குறிப்பிட்ட வகைப் புகைப் படத் தாளின் வணிகப் பெயர்.

**Veneer :** (க க; மர. வே.) நேர்த்தி முகப்பு : (தொல் — மர நேர்த்தி) சாதாரண மேற்பரப்புக்கு நேர்த்தியான உயர்ந்த பார்வை அளிக்க அல்லது செலவைக் குறைக்க மரம் அல்லது வேறு பொருள் மீது மெல்லிய படலத்தைப் படிய வைத்தல்.

**Veneer press :** (மர. வே.) மேலொட்டு அழுத்தப் பொறி : ஒட்டுப் பலகை அல்லது நீள் சதுரப் பலகைத் துண்டுகளைப் பசையிட்டு ஒட்டுவதற்கான பெரிய, கனமான அழுத்தப் பொறி.

**Veneer saw :** (மர. வே.) மேலொட்டு ரம்பம் : மெல்லொட்டுப் பலகைகளை வெட்டுவதற்குப் பயன்படும் தனி வகை வட்ட வடிவ ரம்பம்.

**Venetian blind :** (க.க.) பலகணித் திரை : மடக்கு வரிச்சட்டம் பல கணித் திரை.

**Venetian red :** (வண்.) இரும்பு ஆக்சைடு ($Fe_2O_2$) : சிவப்பு வண்ணப் பொடியாகப் பயன்படும் இரும்பு ஆக்சைடுக் கலவை. இது இரும்பு சல்பேட்டை சுண்ணாம்புடன் சூடாக்குவதன் மூலம் கிடைக்கிறது.

**Vent :** (வார்.) வாயுத் துளை : வார்ப்பட வேலையில் வாயுக்கள் வெளியேற இடமளிப்பதற்காக அமைக்கப்படும் ஒரு சிறிய துளை.

**Ventilation :** (க. க.) காற்றோட்டம் : அறையில் காற்றோட்டம் ஏற்படுமாறு செய்யும் முறை.

**Ventilator :** (க.க.) பலகணி : வெளிச்சமும், காற்றும் வருவதற்காக அமைக்கப்பட்டுள்ள சாதனம்.

அசுத்தக் காற்றை வெளியேற்றுவதற்கான புழை.

**Vent pipe :** (க.க.) காற்றுக் குழாய் : பல்வேறு குழாய் அமைப்புகளிலிருந்து புகைக்கூம்பு வழியே காற்று வெளிச் செல்வதற்காக அமைக்கப்பட்டுள்ள சிறிய குழாய்.

**Vent stack :** (க.க.) புகைக் கூம்பு ; காற்றுக் குழாய்களுடன் இணைக்கப்பட்டுக் கூரைக்கு வெளியே நீட்டிக் கொண்டிருக்கும் செங்குத்தான குழாய். இதன் வழியாக வாயுக்களும் புகையும் வெளியேறுகின்றன.

**Vent wire :** (வார்.) வாயுக் கம்பி : வார்ப்பட வேலையில் நீராவியும், வாயுவும் வெளியேறுவதற்காக, வார்ப்பிலிருந்து தோரணி

யை அகற்றுவதற்கு முன்பு ஒரு கம்பி மூலமாகத் துளைகள் உண்டாக்கப்படுகின்றன.

**Veranda :** (க.க.) தாழ்வாரம் : கட்டிடத்திற்கு வெளியே நீட்டிக் கொண்டிருக்குமாறு அமைக்கப்படும் திறந்த நிலை ஒட்டுத் திண்ணை.

**Verdigris :** (வேதி.) தாமிரத்துரு : இது தாமிரத்தின் மேற்பரப்பில் ஆக்சிகரணம் ஏற்படுவதால் உண்டாகிறது. தாமிரத்தை அசெட்டிக் அமிலத்துடன் கலப்பதாலும் தாமிரத்துரு உருவாகிறது. இது முக்கியமாக நிறமியாகவும், சாயப்பொருளாகவும் பயன்படுகிறது.

**Verge :** (க.க.) மோட்டு விளிம்பு : முக்குட்டுச் சுவர் கடந்த மோட்டு விளிம்பு. இது கூரையின் மஞ்சடைப்புக்கு மேல் நீட்டிக் கொண்டிருக்கும்.

**Vermiculation :** (க.க.) புழு அரிப்புத் தடம் : புழு அரிப்புப் போன்ற வரிப்பள்ளங்களுடைய தடம்.

**Vermilion :** (வண்.) இரசக் கந்தகை : செந்நிறமான இரசக் கந்தகை. இது நிறமியாகப் பெருமளவில் பயன்படுத்தப்படுகிறது. பாதரசச் சல்பைடிலிருந்து ($HgS$) பெறப்படுகிறது.

**Vernier :** (எந்.) வெர்னியர் : ஒரு நிலையான அளவு கோலின் உட்பிரிவுகளின் பின்னப் பகுதிகளைக் கணக்கிட்டு அறிவதற்குப் பயன்படும் ஒரு சிறிய நகரக்கூடிய துணை அளவுகோல்.

**Vernier depth gauge :** (எந்.) வெர்னியர் ஆழ அளவி : வெர்னியருடன் இணைக்கப்பட்டுள்ள ஒரு வகைச் சலாகை வடிவ அளவு கருவி. இது குறுகலான ஆழப் பகுதிகளின் ஆழத்தை அளந்தறியப் பயன்படுகிறது.

**Vertical :** (கம்.) செங்குத்து நிலை : செங்கோட்டு நிலை; வான விளிம்புக்குச் செங்கோணத்திலுள்ள நிலை.

**Vertical boring mill :** (எந். செங்குத்துக் துளைகருவி : கடைசல் எந்திரத்தில் ஒரு சுழல் மேசையில், இழைப்புளியை செங்குத்தாகவும், கிடைமட்டமாகவும் நகர்த்தி கடைசல் வேலை செய்வதற்கான கருவி.

**Vertical centering :** நிலைகுத்து மையம் : தொலைக் காட்சிப் பெட்டியின் திரையில் படத்தை செங்குத்தாக நிலைப்படுத்துவதற்கு உதவும் கட்டுப்பாட்டு அமைவு.

**Vertical lathe :** (எந்.) செங்குத்துக் கடைசல எந்திரம் : பக்கவாட்டில் தலைப்பக்கம் உடைய ஒரு செங்குத்துத் துளைக்கருவி.

**Vertical tall area :** (வானூ.) செங்குத்து வால் பகுதி : விமானத்தில், சுக்கானின் உள்ளபடியான புறக்கோட்டுக்கும், செங்குத்துத்

தளத்தில் நீட்டிக் கொண்டிருக்கும் நிமிர் நேர் விளிம்புக் குட்டையிலான பகுதி.

**Vertimeter :** (*வானூ.*) செங்குத்துமானி : வான்கூண்டின் ஏற்ற, இறக்க வீதத்தைக் காட்டும் சாதனம். இது ஒரு தனி வகை நீரில்லா நுண்ணழுத்த மானியாகும். ஏற்ற வீதமானி ஏற்ற இறக்கத்தைக் காட்டுகிறது.

**Vestibule :** (*க.க.*) முன் கூடம் : வீட்டின் முன் அறை; திருக்கோயில் முக மண்டபம்.

**Viaduct:** (*பொறி.*) மேம்பாலப் பாதை: இரும்புப் பாதை, சாலை போன்றவற்றுக்கு மேலே கட்டப்பட்டுள்ள மேம்பாலம்.

**Vibrating bell:** (*மின்.*) அதிர்வு மணி: மணியடிக்கும் நா அல்லது சுத்தி உடைய ஒரு மின் சாதனம். இதன் வழியே மின்னோட்டம் பாயும்போது நா அல்லது சுத்தி ஒரு மணியைத் தட்டி ஒலி எழுப்பும். இது மின்காந்த ஈர்ப்புத் தத்துவத்தின்படி இயங்குகிறது.

**Vibration dampeners:** (*தானி.*) அதிர்வுத் தளர்வுறுத்தி: ஒரு கோட்டச் சுழல் தண்டின் அதிர்வினைக் குறைப்பதற்காகப் பயன்படுத்தப்படும் எதிர்எடை அல்லது சம நிலைப்படுத்தும் கருவி.

**Vibrator col:** (*மின்.*) அதிர்வுச் சுருள்: ஒருவகை தூண்டுச் சுருள். உள்ளீட்டின் காந்தத் தன்மையானது, அடிப்படைச் சுற்று வழியினை முறிக்கும் வகையில் இயங்குமாறு இது அமைக்கப்பட்டிருக்கும்.

**Video:** ஒளிக்காட்சி: படம் பற்றிய தகவல்களைக் கொண்டுள்ள தொலைக்காட்சிச் சைகையின் பகுதி. அமெரிக்காவில் தொலைக் காட்சியையும் இவ்வாறு குறிப்பிடுகிறார்கள்.

**Viewing miror:** காட்சிக் கண்ணாடி: தொலைக்காட்சியில், படக் குழாயில் உருவாகும் உருக்காட்சியை, பார்வையாளர்கள் பார்ப்பதற்கு வசதியான கோணத்தில் பிரதிபலித்துக் காட்டும் கண்ணாடி.

**Vignette:** (*க.க.*) சித்திர வேலைப்பாடு: தளிர்க்கொடி ஒப்பனை வேலைப்பாடு; முகப்பெழுத்துச் சித்திர வேலைப்பாடு; முற்காலக் கையெழுத்துப் படிகளுக்குரிய தலைப்பெழுத்துப் பூ வேலை ஒப்பனைக் கோலம்; பெயர்ப்பக்க முகட்டுப் பூவேலைப்பாடு; பெயர்ப்பக்க அடி வரிப் பூ வேலைப்பாடு.

**Vinyl acetal resins:** (*வேதி; குழை.*) வினில் அசிட்டால் பிசின்: பாலிவினில் அசிட்டேட்டிலிருந்து தயாரிக்கப்படுவது. காப்புக் கண்ணாடிகளில் இடைப்படலமாகவும், ஒட்டுப் பசையாகவும் பயன்படுகிறது. இது விறைப்புடையது; ஒட்டுந்தன்மை கொண்டது; ஈரம் புக இடமளிக்காதது; ஒளியாலும் வெப்பத்தாலும் நிலை குலையாதது.

**Vinyl resin:** (குழை.) வினில் பிசின்: பிசின் குடும்பத்தில் ஒரு முக்கியமான வகை.

**Viscid :** (இயற்.) நெய்ப்புத் தன்மை: நெய்ப்புத் தன்மை; ஒட்டும் இயல்பு.

**Viscolsity:** (குழை.) குழைம நிலை: பிசைவுப் பொருளின் திட்ட ஆற்றல். பிசைவுப் பொருளின் தன் ஈர்ப்பு ஆற்றல்.

**Visccusness:** (வேதி.) பசைத் தன்மை: உள்ளொட்டிழுப்புத் தன்மை.

**Vise:** (பட்.) பட்டறைப் பற்றுக் குறடு: பிடித்து நிறுத்துவதற்குரிய மரம் அல்லது உலோகத்தினாலான பற்றுக் குறடு. இதில் இரண்டு தடைகள், ஒன்று நிலையாகவும், இன்னொன்று நகரக் கூடியதாகவும் அமைந்திருக்கும்.

**Visibility:** (வானூ.) காண்பு நிலை: சுற்றுப்புறத்திலுள்ள பொருள்களை எவ்வளவு தூரத்திலிருந்து தெளிவாகக் காணலாம் என்பதைக் குறிக்கும் ஒளியளவு நிலை.

**Vista:** (க.க.) காட்சி வரிசை: சாலை மர அணிவரிசை.

**Visual attral range:** வானூர்தி நெறிமுறை: வானொலி உதவியால் இயக்கப்படும் வானூர்தி நெறிமுறை.

**Visualize:** உருவாக்கிக் காண்: அகக் காட்சியாக உருவாக்கிக் காண்; கற்பனை செய்து காண்.

**Vitalglass:** புறவூதாக் கண்ணாடி: கட்புலனுக்கு அப்பாற்பட்ட ஊதாக்கதிர்களையும் ஊடுருவ விடும் கண்ணாடி.

**Vitreosity:** (வேதி.) பளிங்கியல்பு: கண்ணாடி போன்று எளிதில் நொறுங்கும் தன்மையும், பளிங்கின் திண்மையும், கண்ணாடிபோலப் படிக உருவமற்ற இயல்பும் உடைய பண்பியல்பு.

**Vitrification:** பளிங்குருவாக்கம்: எரிப்பதன் இணைத்து பளிங்கியலாக்கப்பட்ட பொருளின் நிலை.

**Volatile:** (வேதி.) விரைந்து ஆவியாதல்: விரைவாக ஆவியாகும் தன்மை.

**Volatile liquid:** விரைந்து ஆவியாகும் திரவம்: மிக எளிதாக விரைவில் ஆவியாகும் இயல்புடைய திரவம்.

**Volt :** (மின்.) மின் அழுத்தம் (ஓல்ட்) மின் அலகுக் கூறு; மின் இயக்க விசையின் அலகு; மின் அழுத்த விசை.

**Voltage :** (மின்.) மின் வலியளவு : மின் வலி அலகு எண்ணிக்கை அளவு.

**Volta's law :** (மின்.) ஓல்ட்டா விதி : "எந்த இரு உலோகங்க

ளுக்குமிடையிலான மின்னழுத்த நிலை வேறுபாடானது, தொடர் வரிசையிலுள்ள எடை உலோகங் களுக்கிடையிலான மின்னழுத்த நிலை வேறுபாடுகளின் கூட்டுத் தொகைக்குச் சமமானதாக இருக் கும்'' என்பது இந்த விதி.

**Voltage Amplification :** (*மின்.*) **மின்னழுத்த விரிவாக்கம் :** வானொலி அலைவெண் விரிவாக்க நிலைகளில் உண்டாகும் வானொ லிச் சைகைகளைப் பெருக்கிக் காட் டுவதற்கான ஒரு வகை.

**Voltaic cell :** (*மின்.*) **ஓல்ட்டா மின்கலம் :** ஒரு வகை அடிப்படை மின்கலம். இதனை முதலில் கண்டு பிடித்தவர் ஓல்ட்டா. அதனால் இதற்கு அவர் பெயர் சூட்டப்பட் டது. இது இரு முரண்பட்ட உலோகங்கள் ஒரு கரைசலில் அமிழ்த்தி வைக்கப்பட்டிருக்கும். அந்தக் கரைசல், ஓர் உலோகத் தை இன்னொரு உலோகத்தின் மீது அதிக அளவில் வேதியியல் வினைபுரியும். இதனால் இரு உலோகங்களுக்குமிடையே மின்ன ழுத்த நிலை வேறுபாடு உண்டாகி றது.

**V-Thread** (*எந்; பட்.*) **V - திருகிழை :** 'V, என்ற ஆங்கில எழுத்தின் வடிவில் அமைந்துள்ள திருகிழை. 60° கோணத்தில் அமைந்த திருகிழையையும் இது உள்ளடக்கும்.

**V - type engine :** (*தானி.*) **V - வடிவ எஞ்சின் :** 'V' என்ற ஆங்கில எழுத்தின் வடிவத்தில் அடுக்கப்பட்ட நீள் உருளைத் தொகுதிகளைக் கொண்ட ஓர் எஞ்சின்.

**Vulcanite :** (*வேதி.*) **கந்தக ரப்பர் :** கந்தகம் கலந்து கடுமை யூட்டப்பட்ட ரப்பர். இந்திய ரப்பரும் கந்தகமும் கலந்த ஒரு கூட்டுப் பொருள் இது நெகிழ் திறம் இல்லாத கடினமான ரப்பர்.

**Vulcanizing :** (*வேதி.*) **கந்தக வலிவூட்டம் :** இந்திய ரப்பருக்குக் கந்தகம் கலந்து வலிவூட்டுதல். ரப்பருக்கும் வலிமையும் நெகிழ் திறனும் ஊட்டுவதற்கு மிக உயர்ந்த வெப்ப நிலையில் இவ்வாறு செய் யப்படுகிறது.

# W

**Wainscot:** (க.க.) சுவர்ப் பலகை: உட்புறச் சுவர்களில் நேர்த்தி செய்யப்பட்ட பலகைகளைப் பதித்து அழகுபடுத்துதல்.

**Wainscoting:** (க.க.) சுவர்ப் பலகையிடு: உட்புறச் சுவர்களில் நேர்த்தி செய்யப்பட்ட பலகைகளை அமை.

**Wainscoting cap:** (க.க.) சுவர்ப் பலகைத் தொப்பி: சுவர்ப் பலகைகளின் உச்சியில் வார்ப்புகளை அமைத்தல்.

**Wall bed:** (க.க.) சுவர்ப்படுக்கை: சுவரில் பொருத்தப்பட்ட படுக்கை பயன்படுத்தப்படாதபோது இப்படுக்கை சுவருக்குள் அமைந்த உள்ளிடத்துக்குள் அல்லது சுவரை ஒட்டியபடி படிந்து கொள்ளும். இதன் மூலம் இடம் மிச்சப்படும். பல வகைகளிலான இவ்விதப் படுக்கைகள் சிறிய இல்லங்களில் பொதுவில் பயன்படுத்தப்படுகின்றன.

**Wallboard:** (க. க.) சுவர் போர்டு: கட்டடத்துக்குள்ளாக உள்புறச் சுவர்களிலும் கிடைமட்டக் கூரைகளிலும் பிளாஸ்டர் பூச்சுக்குப் பதில் ஒட்டி நிற்கும் வகையில் பயன்படுத்தப்படுவது.

**Wall bracket:** (எந்.) சுவர் பிராக்கெட்: செங்கோண வடிவிலான தண்டு இரு புயங்களில் ஒன்றைச் சுவர் மீது அல்லது கம்பம் மீது பொருத்தலாம். எதையேனும் தாங்கி நிற்க மற்றொரு புயம் உதவும்.

**wall plate:** (க.க.) சுவர் பிளேட்: வேலை பளு பரவலாக அமையும் பொருட்டு உத்தரம், இரும்பு கர்டர் ஆகியவற்றை இரு ஓரங்களிலும் தாங்கி நிற்க சுவரில் பிதுக்கமாக அமைந்துள்ள மரத் தண்டு.

**Wall socket:** (மின்.) சுவர் துளையம்: மின்சாரம் பெறுவதற்கென சுவருக்குள் அல்லது சுவர் மேல் அமைந்த மின்னோட்ட முனை.

**Wane:** (மர. வே.) கோட்டம்: உத்திரம் அல்லது பலகை ஒரு நுனியிலிருந்து மறு நுனி வரை ஒரே சமமாக இல்லாமல் ஏதாவது ஒரு புறம் சற்று கோணலாக இருத்தல்.

**Warding file:** (எந்.) பட்டை அரம்: மெல்லிய, தட்டையான அரம். குறிப்பாக பூட்டுத் தயாரிப்பாளர்கள் பயன்படுத்துவது.

**Warp:** (வானூ.) பாவு நூல்: விமான இறக்கையின் வடிவம் மாறும் வகையில் அதை வளைத்

தல் (துணி) தறியில் நீளவாட்டில் அமைந்த பாவுநூல். (மர. வே.) ஈரப்பசை அல்லது வெப்பம் காரணமாக மரம் நெளிந்து போதல்.

**Warping :** (*வார்.*) நெளிசல் : ஒரு வார்ப்படம் ஆறும்போது ஏற்படுகிற சீரற்ற நிர்ப்பந்தங்கள் காரணமாக வார்ப்படத்தில் ஏற்படுகிற கோணல் அல்லது நெளிசல்.

**Wash :** (*வானூ.*) குலைவு : வானில் பறக்கும் போது ஒரு விமானத்தின் இறக்கைகளும், சுழலியும் காற்றில் ஏற்படுத்தும் குலைவு.

**Washer :** (*எந்.*) வாஷர் : ஓர் இணைப்பு அல்லது ஸ்குரு போன்றவை சிறிதும் இடைவெளியின்றி நன்கு பொருந்தி உட்காருவதற்காகப் பயன்படுத்தப்படுகிற நடுவே துளையுள்ள ஒரு தட்டையான சிறிய வட்டு.

**Washer cutter :** வாஷர் வெட்டர்: தோல், ரப்பர் போன்றவற்றைக் கொண்டு 'வாஷர் தயாரிக்கின்ற கருவி நிலையான நடுவெட்டுப் பகுதியையும், மாற்றியமைக்கத் தக்க இரு வெட்டு முனைகளையும் கொண்டது.

**Washin :** (*வானூ.*) வாஷின் : விமானத்தின் இறக்கை நுனியில் தாக்கு கோணம் அதிகரிக்கின்ற அளவுக்கு இறக்கையை வளைத்து விடல்.

**Wash out :** (*வானூ.*) வாஷவுட் : விமான இறக்கையின் நுனியில் தாக்கு கோணம் குறைகின்ற வகையில் இறக்கையை வளைத்துவிடல்.

**Wate :** (*பட்.*) கழிவுப் பருத்தி : பருத்தி மில்களில் கழிவுப் பொருளாக மிஞ்சுவது. ஆலைக் கூடங்களில் எந்திரங்களைத் துடைக்கப் பயன்படுவது. இது மெல்லிய, மிருதுவான பருத்தி இழைகள் ஒன்றோடு ஒன்று மொத்தையாகச் சேர்ந்த வடிவில் இருக்கும்.

**Waste lubrication :** (*எந்.*) கழிவு மசகு : அச்சு முனை அமைந்த பெட்டிக்குள்ளாக எண்ணெய் தோய்ந்த கழிவுப் பொருளை அடைத்து வைத்தல். ரயில் பெட்டிகளில் இவ்விதம் மசகிடும் முறை கையாளப்படுகிறது.

**Water bar :** (*க.க.*) நீர்த் தடுப்புத் தண்டு : நீர், குறிப்பாக மழை நீர் உள்ளே நுழையாமல் இருப்பதற்காக ஜன்னலின் அடிப்புறத்தில் மரக்கட்டைக்கும், கல்லுக்கும் இடையில் செருகப்படுகிற தண்டு அல்லது பட்டை.

**Water cooling:** (*பொறி.*) நீர் வழி குளிர்விப்பு: உள்ளெரி என்ஜினில் தோன்றும் வெப்பத்தை நீர் ஜாக்கெட், ரேடியேட்டர் ஆகியவற்றின் வழியே நீரைச் செலுத்தி அகற்றும் முறை.

**Water gas:** (*வேதி.*) நீர் வாயு: ஒரு வித வாயு. மிகச் சூடான நிலக்கரி அல்லது கோக் மீதாக நீராவி

யைச் செலுத்தும்போது உண்டாவது. இந்த வாயு திரவ ஹைட்ரோகார்பன்களைக் கொண்டது. சில சமயங்களில் எரிபொருளாக அல்லது வெளிச்சம் தருவதற்காகப் பயன்படுத்தப்படுகிறது.

**Water glass:** (*வேதி.*) நீர்க் கண்ணாடி: குவார்ட்ஸ் மணலை, பொட்டாஷ் அல்லது சோடியம் ஹைட்ரேட்டுடன் சேர்த்து தயாரிக்கப்படுகிற சோடியம் அல்லது பொட்டாசியம் சிலிக்கேட் கரைசல். இது எண்ணெய் கலந்தது போலக் குழம்பாக இருக்கும். ஒட்டுவதற்கும், காப்புப் பூச்சாகவும், தீக்காப்புப் பொருளாகவும் பயன்படுவது.

**Water hammer:** நீர் அறைவு: ஒரு குழாயின் வழியே செல்லும் நீரைத் திடீரென்று தடுத்து நிறுத்தினால் சம்மட்டி அறைவது போன்று எழும் ஒலி.

**Water jacket:** (*பொறி.*) நீர்ப் போர்வை: மோட்டார் பிளாக் மற்றும் ஹெட்டின் வெளிப்புற மூடு உறையானது அதற்கும் சிலிண்டர் சுவர்களுக்கும் இடையே நீர் பாய்ந்து செல்லும் வகையில் வடிவமைக்கப்பட்டிருக்கும். மோட்டார் இயங்கும்போது தோன்றும் வெப்பத்தைத் தொடர்ந்து அகற்றுவது இந்த ஏற்பாட்டின் நோக்கம்.

**Water mark:** நீரோட்டம்: காகிதம் தயாரிக்கப்படுகையில் புடைப்பான டிசைன் கொண்ட ஒரு சிலிண்டர் ஏற்படுத்தும் அழுத்தம் காரணமாக காகிதத்தில் ஏற்படும் குறியீடு. பின்னர் காகிதத்தில் வெளிச்சம் ஊடுருவும் வகையில் வைத்துப் பார்த்தால் அந்த டிசைன் தெரியும். அது நீரோட்டம் எனப்படும்.

**Water proofing walls:** (*க.க.*) நீர் புகாப்பூச்சு: சுவருக்குள் நீர் அல்லது ஈரம் பாயாமல் தடுப்பதற்காக கான்கிரீட்டுடன் ஒரு கலவையைக் கலத்தல். அல்லது அந்தக் கலவையைச் சுவர் மீதே பூசுதல்.

**Water pump:** (*தானி.*) நீர் பம்ப்: மோட்டார் என்ஜினைக் குளிர்விப்பதற்கான முறையில் நீரோட்டம் நடைபெறுவதற்குப் பயன்படும் பம்ப். இந்த பம்புகள் பொதுவில் சிலிண்டர் பிளக் முன்பாக அமைந்திருக்கும். விசிறி இயக்கத்துடன் அல்லது ஜெனரேட்டர் மூலம் பம்ப் இயக்கப்படுகிறது.

**Water putty:** (*மர. வே.*) அடைப்புப் பொடி: இப்பொடியை நீருடன் கலந்து மரப்பொருள்களில் உள்ள மெல்லிய வெடிப்புகள், ஆணித் துவாரங்கள், முதலியவற்றை அடைப்பதற்குப் பயன்படுத்தலாம். எனினும், பளபளப்பூட்டுவதற்கு உகந்ததல்ல.

**Water recovery apparatus:** (*வானூ.*) நீர் சேகரிப்புச் சாதனம்: வான் கப்பலில் உள் எரி என்ஜின்களிலிருந்து வெளிப்படுகிற வாயுக்களைச் சேகரித்து குளிர்வித்து அவற்றில் அடங்கிய நீரைப் பிரித்தெடுக்கிற சாதனம்.

**Water softener:** (கம்.) நீர் மென்னாக்கி : வீடுகளில் கிடைக்கும் நீரில் கால்சியம் மக்னீசியம் சல்பேட், பைகார்பனேட் அடங்கியிருந்தால் சோப்பிலிருந்து நுரை வராது. நீரிலிருந்து உட்பொருட்களை அகற்றும் கருவி. இந்த நோக்கில் பயன்படுத்துகிற வேதிப் பொருள்.

**Watet spots :** (வண். அர.) பூச்சுத் திட்டு: ஒரு பொருளுக்கு வார்னிஷ் பூச்சு அளிக்கும்போது மாறுபட்ட நிறத்துடன் சிறு திட்டுகள் காணப்படும் சில சமயங்களில் சற்று ஆழமாகவும் காணப்படும். ஈரப்பசை உள்ளே அமைந்த காரணத்தால் ஏற்படுவது.

**Water table:** (க.க.) நீர் வடிகை: ஒரு கட்டடத்தைச் சுற்றி சற்று நீட்டிக் கொண்டிருக்கிற சரிவான பலகை மழைநீர் சுவர் மீது விழாமல் இருப்பதற்கான ஏற்பாடு.

**Watt:** (மின்.) வாட்: மின்சக்தியின் அலகு. இது வோல்ட்டை ஆம்பியரால் பெருக்கினால் கிடைக்கும் தொகைக்குச் சமம்.

**Watt hour:** (மின்.) வாட் மணி : மின்சக்தியின் பணியை அளக்கும் அலகு. இது ஒருமணிநேரம் ஒரு வாட்டைச் செலவழித்தால் ஆகும் மின்சக்தியின் அளவு.

**Wattless current:** (மின்.) வாட் இலலா மின்சாரம்: மாறுமின்னோட்டத்தில் விசையை உற்பத்தி செய்ய வோல்டேஜுடன் சேராத பகுதி. செயலற்ற பகுதி. செயல் பகுதிக்கு மாறானது.

**Wattmeter:** (மின்.) வாட் மானி : மினசக்தியை வாட் கணக்கில் அளப்பதற்கான கருவி; அதாவது வோல்ட்டை ஆம்பியரால் பெருக்கி வரும் கணக்கில் காட்டுவது. அந்த வகையில் வோல்ட் மீட்டர், அம் மீட்டர் ஆகிய இரண்டின் பணியைச் செய்வது.

**Watt Second:** (மின்.) வாட் விநாடி : மின்சக்தியை அளக்கும் அலகு, இது ஒரு விநாடி நேரத்துக்கு ஒரு வாட் செலவழித்தால் ஆகும் மின் சக்திக்குச் சமம்.

**Watts per candle:** (மின்.) கேண்டில் அளவில் வாட்: ஒரு மின் பல்பு, எவ்வளவு மின்சாரத்தை பயன்படுத்துகிறது என்பதைஇடைமட்டமாக சராசரியாக உற்பத்தியாகிற கேண்டில் பவர் அளவில் வாட் கணக்கில் கூறுவது.

**Wave length:** (மின்.) அலை நீளம் : இரு திசை மின்சாரத்தின் ஒரு முழு சைன் அலையின் மீட்டர் அளவிலான நீளம் வானொலியைப் பொருத்த வரையில் டிரான்ஸ் மீட்டர் கருவியால் வெளியிடப்படுகிற அடுத்தடுத்த இரு மின்சார அலைகளின் உயர் பட்சப் புள்ளிகள் இடையிலான தொலைவு.

**Waviness :** (குழை.) அலைவம் : மேற்பரப்பு அலை மாதிரியில் வளைந்து அமைதல்.

**Wax:** (*வேதி.*) மெழுகு : உயர் ஒற்றை அணு ஆல்கஹாலின் கரிம உப்பும், மிகுந்த கொழுப்பு அமில மும் கலந்தது. உதாரணம்: தேன் மெழுகு

**Wax engreving:** (*அச்சு.*) மெழுகி உருமானம்: மெழுகு அளிக்கப்பட்ட தாமிரத் தகடுகளின் மீது தக்கபடி வடிவம் கொடுத்து பின்னணியை தயார்படுத்தி அதிலிருந்து எலெக்ட் ரோ பிளேட் வகை பிளேட்டைத் தயாரித்து அச்சிடுதல்.

**Wax finish:** (*மர.வே.*) மெழுகு நேர்த்தி: மரத்தால் ஆன பொருட் கள் மீது இதற்கென்று தயாரிக்கப் பட்ட மெழுகைப் பூசித் தேய்ப் பதன் மூலம் மிக நைசான நேர்த்தி யைப் பெற முடியும்.

**Ways:** (*பட்.*) சறுக்குப் பள்ளம் : நெடுக அமைந்த சிறுபள்ளம். வேலை செய்யப்படுகின்ற பொருள் அல்லது அதைத் தாங்கிய பொருள் இப் பள்ளங்களின் மீது அமைந்தபடி சறுக்கிச் செல்லும்.

**Weak sand:** (*வார்.*) சேராமணல்: வார்ப்பட வேலைக்கான மணலில் சிறு சத அளவுக்குக்களிமண் இருப் பதன் விளைவாக ஒன்று கூடிச் சேராத மணல்.

**Wear and tear:** தேய்ந்தழிதல் : பயன் காரணமாக மதிப்பில் ஏற் படும் குறைவு.

**Weather:** பருவ நிலை: மரம், கல் அல்லது வேறு ஏதேனும் ஒரு பொருள், பருவ நிலையின் விளை வாக காய்ந்து, உலர்ந்து, உரு மாறி,சிதைந்து போகும் நிலைமை.

**Weather boards:** (*க.க.*) மழைப் பலகை: கதவு, பலகணி போன்ற வற்றில் மேலிருந்து கீழாக ஒன்றன் நுனியின் ஒன்றாக அடுக்கி அமைந்த பலகைகள். மழை நீர் உள்ளே புகாமல் வடிவதற்கு ஏற் பாடு.

**Weathering :** (*க.க.*) கட்டு மான முகட்டுத்தளச் சாய்வு : சுவரின் மேற்புறத்தில் அமைந்த மடிப்புகள், விளிம்பு, உதை சுவர் ஆகியவற்றில் மழை நீர் தேங்கா மல் இருக்க அளிக்கப்படும் சரிவு. (மரம்) காற்று, மழை, வெயில் போன்றவற்றினால் மரத்தின் மேற் புறத்தில் ஏற்படும் பாதிப்பு.

**Weather strip :** (*க.க.*) கசிவுத் தடுப்பான் : சன்னல், மற்றும் கத வுகளின் வெளிப்புறத்தின் கீழ்ப் பகுதியில் உலோகம், மரம் அல்லது வேறு பொருளில் செய்யப்பட்ட பட்டையை அமைத்தல். கதவு மீது படும் நீர் கீழிறங்கும் போது உள்ளே வராமல் தடுக்கும் ஏற் பாடு.

**Web :** (*எந்.*) வெப் : வார்ப் படங்கள் அடித்து உருவாக்கப் பட்ட பொருட்கள் ஆகியவற்றின் இரு பகுதிகளை இணைக்கும் மெல் லிய தகடு அல்லது பகுதி. (காகிதத் தயாரிப்பு) காகிதத் தயாரிப்பு எந்திரத்தில் தயாரிப்பு நிலையில் உள்ள அல்லது தயாரிக் கப்பட்ட காகிதம்.

**Webbing :** சாக்குப் பட்டை : சணல் இழையைக் கொண்டு 3, 3½ மற்றும் 4 அங்குல அகலத்தில் 72 கெஜ நீளத்துக்குத் தயாரிக்கப்படு கிற சாக்குப் பட்டை. மர இருக்கை பிரேம்களில் ஸ்பிரிங்குகளுக்குக் கீழே அமைக்கப்படுவது.

**Webbing stretcher :** விறைப்புக் கட்டை : மர இருக்கைச் சாதனங் களில் திறப்புகளின் மீதாக போர்த்து துணியை விறைப்பாக இழுத்துக்கட்ட உதவும் சிறிய கட்டை. தட்டையான இக்கட்டை யின் ஒரு புறத்தில் இறுகப் பிடித் துக் கொள்ள வாட்டமாக ஏதாவது பொருள் சுற்றப்பட்டிருக்கும். மறு புறத்தில் செருகுவதற்கு வசதியாக கூரான உருக்கு முனைகள் இருக் கும்.

**Web - calendered :** சுருள் நேர்த்தி : காகித உற்பத்தியின் போது காகிதம் நீண்ட சுருளாக இருக்கும் போதே சுழல் உருளை கள் இடையே செலுத்தப்பட்டு மழ மழப்பாக்கப்படுதல்.

**Web of drill :** (எந். ) குடைவி முனை : ஒரு குடைவு கருவியில் சுழன்று இறங்கும் வெட்டுக் குழிவு களின் அடிப்புறத்தில் குடைவியின் பருமன்.

**Wedge :** (எந்.) ஆப்பு : ஆங்கில 'V' வடிவில் மரம் அல்லது உலோ கத்தால் ஆன துண்டு. ஒரு பொரு ளில் வலுவான அழுத்தத்தை ஏற் படுத்த அல்லது இரண்டாகப் பிளக்கப் பயன்படுவது.

**Wedging :** பதமாக்கல் : களி மண்ணைப் பொருளாக உருவாக் கும் நோக்கில் அதை நன்கு பிசைந்து பதப்படுத்துவது.

**Weft or woof :** ஊடு : தறியில் குறுக்காக அமையும் நூல்கள்.

**Weight :** காகித எடை : ஒரு ரீம் காகிதத்தின் அல்லது 1000 ஷீட் காகிதத்தின் எடையைக் குறிப்பதற்குப் பயன்படுத்தப்படும் சொல்.

**Weight font :** (அச்சு.) பான்ட் எடை : இன்ன எழுத்து இன்ன விலை என்பதற்கு மாறாக எடைக் கணக்கில் விற்கப்படும் அச்சு எழுத் துகள்.

**Weighting :** துணி எடைமானம் : பட்டுடன் கனிம உப்புகள் அல்லது வேறு பொருட்களைச் சேர்த்து பட்டுக்கு கனம் சேர்த்தல்.

**Weir :** (பொறி.) தூம்பு : ஆறு, அல்லது ஓடையின் குறுக்கே எழுப் பப்படும் சுவர் அல்லது அணை யின் உற்பத்திக் காரியங்களுக்கு, போதுமான நீர் கிடைக்கச் செய்வ தற்காக நீர்மட்டத்தை உயர்த்தும் நோக்கில் கட்டப்படுவது.

**Welding :** (எந்.) பற்று வைப்பு : இரும்பு அல்லது உருக்குத் தகடு போன்றவற்றின் ஓரங் களை இணைக்கும் முறை, ஆக்சி ஆசிடிலீன், மின்சாரம் அல்லது அடிப்பதன் மூலம் சேர்ப்பது.

**Welding rod :** (பற்ற) பற்ற வைப்புத் தண்டு : பொதுவில் 24 அங்குல நீளமும், ¼, 3/8, அல்லது ½ அங்குலக் குறுக்களவும் கொண் டது. தீப்பிச்சு மூலம் பற்றவைக் கையில் இணைக்க வேண்டிய இடத்தில் இத்தண்டுகள் உருகி இணைக்கும்.பற்ற வைப்புத் தண்டு கள் செய்ய வேண்டிய வேலையின் தரத்தைப் பொருத்து வெவ்வேறு வகைப் பொருட்களால் ஆனது.

**Welding transformer :** (மின்.) பற்றுவைப்பு மின்மாற்றி : ஒன் றோடு ஒன்று பொருத்தப்படுகிற உலோகப் பகுதிகளை இணைப்ப தற்கு வெப்பம் பெறப் போதுமான மின்சாரத்தை உடனே தரும் இறக்கு மின்மாற்றி.

**Weld - mark :** (குழை.) இணைப்பு அடையாளம் : பிளாஸ்டிக் பொருளின் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட தாரைகள் முற்றிலுமாக ஒன்று சேராத காரணத்தால் ஏற்படும் அடை யாளம்.

**Weld period :** பற்று வைப்புக் காலம் : பற்ற வைப்பதை ஒரு தடவை முற்றிலுமாகச் செய்து முடிப்பதற்கு ஆகும் காலம்.

**Weld time :** பற்றுவைப்பு நேரம் : ஒரு தடவை பற்று வைக்கும் போது மின்சாரம் பாய்வதற்கு அனுமதிக் கப்படுகிற நேரம். துடிப்பு - பற்று வைப்பில் பற்று வைப்பு நேரத்தில் சூடாறும் நேரமும் அடங்கும்.

**Well hole:** (க.க.) மாடிப் படிக் குழி: படிக்கட்டுத் தொகுதிகள் அடுத்தடுத்து 3 திசைகளில் திரும்பி அமையும்போது அவற்றின் நடுவே செங்குத்தாக அமைந்த இடை வெளி.

**Welted edge:** தடித்த விளிம்பு: இருக்கைச் சாதனங்களில் போர்த்து துணிகளின் விளிம்பு களைச் சேர்த்துத் தைக்கையில் உட்புறமாக துணி போர்த்திய ஒரு கயிற்றைக் கொடுத்துத் தைத்தல். இதன்மூலம் இணைப்புகள் புடைப் பாக இருக்கும்.

**Wet end:** ஈர முனை: காகிதத் தயாரிப்பு எந்திரத்தில் காகிதம் உருப்பெற்று முதலாவது ஈரம் போக்கும் உருளை வரையிலான பகுதி.

**Wet rot:** ஈர உருத்து: ஈரப்பசை, உகந்த வெப்பம் காரணமாக மரக் கட்டை உளுத்துப் போதல்.

**Wet steam:** ஈர நீராவி: ஈரப்பசை அடங்கிய தெவிட்டிய நீராவி.

**Wheel and axle:** சக்கரமும் அச் சும்: பளுவைத் தூக்குவதற்கு மிக எளிய எந்திர விதி. அச்சில் அமைந்த சக்கரத்தின் வெளிச் சுற்று மீது விசை செலுத்தப்படு கிறது. சங்கிலி அல்லது கயிறு மூலம் எடையானது அச்சுடன் இணைக்கப்படுகிறது.

**Wheel base:** சக்கர அடிமானம்: கார் அல்லது வாகினில் உள்ளது

போன்று முன் சக்கர மையத்தி லிருந்து பின் சக்கர மையம் வரை உள்ள தூரம்.

**Wheel dresser:** (எந்.) சக்கரத் தீட்டுக் கருவி அரைப்பு சக்கரங் களின் வெட்டு முகங்களை மறுபடி கூராக்கவும், சுத்தப்படுத்தவும் பயன்படும் கருவி.

**Wheel hub:** சக்கரக் குடம்: ஒரு சக்கரத்தில் ஆரைக் கால்கள் அனைத்தும் வந்து சேருகின்ற மையப்பகுதி. இப்பகுதியில் தான் அச்சுக்கான துளை அமைந்திருக் கும்.

**Wheel lathe:** சக்கரக் கடைசல் எந்திரம்: குறுகிய மேடையும் ஆழ மான இடைவெளியும் கொண்ட விசேஷ கடைசல் எந்திரம். சக்கரங்களைக் கடைவதற்குப் பயன்படுவது.

**Wheel puller:** (தானி.) சக்கர இழுவி: மோட்டார் வாகனச் சக்க ரங்களை அச்சிலிருந்து விடுவித்து வெளியே இழுப்பதற்கான கருவி.

**Wheel window:** (க.க.) சக்கரப் பலகணி: சக்கரத்தில் உள்ளது போன்று ஆரைகள் அமைந்த வட்டவடிவ ஜன்னல்.

**Wheel wright:** சக்கரப் பணி யாளர்: வாகின்கள் அல்லது அலை போன்றவற்றைத் தயாரிக்கிற அல் லது பழுது பார்க்கிற பணியாளர்.

**Whetting:** (எந்.) தீட்டுதல்: வெட்டு முனையைக் கூறாக்குவதற் காக சிறு துளி எண்ணெய் சேர்க் கப்பட்ட தீட்டு கல்லில் தீட்டுவது.

**Whirler:** சுழல்வி: மண்பாண்டங் களுக்கு பட்டையிடும்போது அல் லது அலங்கார வேலைப்பாடு செய்யும் போது பயன்படுத்தப்படும் சுழல் கருவி.

**White antimony:** (வண்; அர.) வெள்ளை ஆன்டிமனி: பெயிண்ட் தயாரிப்பில் பயன்படுத்தப்படுகிற நச்சற்ற வெள்ளை நிறப்பொருள். டைட்டானியம் ஆக்சைட் பெயிண்ட் போன்று மெல்ல உல ரும் தன்மையை அளிப்பது.

**White cedar:** (மர. வே.) வெள்ளை செடார்: 30 முதல் 50 அடி உயரம் வளரும் மரம். குறுக் களவு ஒன்று முதல் 2 அடி இருக் கும், லேசான மரம். மென்மை யானது. நீடித்து உழைப்பது. கூரை அமைக்கவும் படகு கட்ட வும் வேலிக் கம்பமாக நடவும், மரச்சாமான்கள் தயாரிக்கவும் பயன்படுவது.

**White coat:** வெள்ளைப் பூச்சு: சிமெண்ட் போன்ற பூச்சு அளிக்கப் பட்ட சுவர் மீது உறுதியான வெள்ளைப் பூச்சு அளித்தல். இப் பூச்சுப் பொருளானது பிளாஸ்டர் ஆஃப்பாரிசும்,சுண்ணாம்புக் குழை வும் அடங்கியது. இதனுடன் சில சமயம் பொடியாக்கப்பட்ட சல வைக் கல்லும் சேர்க்கப்படும். மேல் பூச்சுக்கு ஜிப்சம் குழைவும் பயன் பயன்படுத்தப்படலாம்.

**White iron:** (உலோ.) வெள்ளை இரும்பு: மிகவும் உறுதியான வார்ப்பு இரும்பு, தயாரிப்பின் போது வார்ப்பானது உலோக அச்சில் குளிர்விக்கப்படுகிறது.

**White lead:** (வேதி; வண்.) ஒயிட் லெட்: காரீயத்தின் ஹைட்ரேடட் கார்பனேட். பெயிண்ட் தயாரிப்பில் பயன்படுத்தப்படுகிறது.

**White - metal lloyas :** (உலோ.) வெள்ளை உலோகக் கலோகங்கள் : துத்தம், ஈயம், தாமிரம் ஆகியவற்றைச் சேர்த்து தயாரிக்கப்படுகிற அலோகம். மோட்டார் வாகனத்தில் கடினமான உறுப்புகளை அச்சு வார்ப்பு மூலம் தயாரிக்கப் பயன்படுவது.

**Whtte oak :** (மர. வே.) ஒயிட் ஓக் : அமெரிக்க ஓக் மரங்களில் மிகவும் உறுதியானது. எடைமிக்கது. அடர்ந்து அமைந்தது. நீடித்த உழைப்பும், வலிமையும் தேவைப்படுகிற பணிகளுக்குப் பயன்படுத்தப்படுகிறது.

**White pine :** (மர. வே.) வெள்ளை பைன் : நீளவாட்டில் உள்ளோட்டம் அமைந்த மென்மரம் : வெளிறிய நிறம்: வடிவமைப்புப் பணிகளுக்கும், இணைப்புப் பணிக்கும் விரிவாகப் பயன்படுவது.

**White space :** (அச்சு.) வெள்ளிடம் : ஒரு ஷீட்டில் அச்சிடப்படாத பகுதி.

**White spots :** (வண்; அர.) வெள்ளைத் தட்டு : இறுதிப் பூச்சு அடித்த பின்னர் காணப்படும் சிறு சிறு வெள்ளை நிறப்புள்ளிகள் அல்லது திட்டுகள் அவசரமாகச் செய்த வேலை காரணமாக உள்ளே ஈரப் பசை சிக்குவதால் ஏற்படுவது. சரியாகத் தயாரிக்கப்படாத மட்டமான கரைப்பானைப் பயன்படுத்துவதாலும் ஏற்படுவது.

**White spruce :** (மர. வே.) விலை குறைவான சாதாரண மரம் : பெரிதும் பிரேம்களைச் செய்யவும், தரைகளை அமைக்கவும், மற்றும் அது போன்ற பணிகளுக்கும் பயன்படுவது.

**White wash :** (க.க.) வெள்ளையடி : நீரில் கரைத்த சுண்ணாம்பை பிரஷ் கொண்டு பூசுதல் அல்லது ஸ்பிரே கருவி மூலம் ஸ்பிரே செய்தல். சுண்ணாம்பு நன்கு ஒட்டிக் கொள்ள சில சமயங்களில் உப்பு சேர்ப்பது உண்டு. நீலத்தைச் சேர்த்தால் நல்ல வெண்மை கிடைக்கும்.

**Whiting :** (வேதி.) வெள்ளைப் பசை : நன்கு பொடி செய்த சாக்கட்டி எண்ணெயுடன் நன்கு கலந்தால் பசை போலாகும். துளைகளை சந்துகளை அடைப்பதற்குப் பயன்படுவது.

**Whitney keys** (எந்.) விட்னி கீ : சதுர தண்டு சாவிகள். இரு முனைகளிலும் நுனிகள் மழுங்கலாக இருக்கும்.

**Whitworth thread :** (எந்.) விட்வர்த் திருகு : தர நிர்ணயப் படுத்தப்பட்ட இங்கிலாந்தின் திருகுபுரி தலைப்பகுதியும் நுனியும் மழுங்கலாக இருக்கும். புரியின் கோணம் 55 டிகிரி.

**Whole depth :** (பல்லி.) மொத்த ஆழம் : ஒரு சக்கரத்தின் பல் பற்றிய அளவு. மேல் விளிம்புக் கோட்டிலிருந்து பல்களுக்கு இடையே உள்ள பள்ளத்தின் அடிமட்டம் வரையிலான மொத்த ஆழம்.

**Whorl :** (மர. வே.) சுருள் பாணி : நெருக்கமாக இல்லாத சுருள் வடிவப் பாணி.

**Wicket :** (க. க.) உள் கதவு - பெரிய கதவுக்குள்ளாக அதன் பகுதியாக அமைந்த சிறுகதவு.

**Wick - feed oilers :** (எந்.) திரி மசகு : தேக்கி வைக்கப்பட்ட எண்ணெயிலிருந்து வெளிப்படும் திரி மூலம் மசகிடுதல். எண்ணெயில் மூழ்கியுள்ள முனையிலிருந்து எண்ணெயானது திரி வழியே மசகிட வேண்டிய பகுதிக்குச் செல்லும் ஏற்பாடு.

**Wiggler :** (எந்.) மையக் குறியிடு கருவி : துளையிடப்பட வேண்டிய பொருளின் நடுமையத்தை மிகத் துல்லியமாகக் கண்டறிந்து, துளைத்தண்டின் நுனிக்கு நேர் செங்குத்தாக அந்த மையம் அமையும்படி செய்ய உதவும் கருவி.

**Wild black cherry :** (மர. வே.) காட்டு கருப்புச் செர்ரி மரம் : பொதுவில் 2 முதல் 3 அடிக் குறுக்களவுடன் 50 முதல் 75 அடி உயரம் வரை வளரும் மரம். இந்த மரம் சிவந்த பழுப்பு நிறம் கொண்டது. கனிசமான அளவுக்கு கெட்டியானது உறுதியானது. பருவ நிலைகளால் பாதிக்கப்பட்டு வெடிப்பு விடாதது; வளையாதது இருக்கைகள், நுண்ணிய வேலைப்பாடுள்ள பலகைகள் முதலியவற்றைத் தயாரிக்கப் பயன்படுவது.

**Winch :** (எந்.) விஞ்ச் : பாரம் தூக்கும் திருகு உருளை ஏற்றப் பொறி.

**Wind :** நெளிசல் : ஒரு மரத்தில் இருக்கின்ற நெளிசல் அல்லது கோணல்.

**Wind cone :** (வானூ.) காற்று திசை காட்டி : விமான நிலையத்தில் காற்று வீசும் திசையைக் காட்டுவதற்காக உள்ளது. குறுகிக் கொண்டே வரும் நீண்ட துணி ஒரு தண்டின் மீது கட்டி வைக்கப்படும்.

**Winders :** (க. க.) விரியும்படி : மாடிப்படிகளில் சில படிகள் மட்டும் ஒரு புறம் அகன்றும் மறுபுறத்தில் குறுகியும் அமைந்திருப்பது. மாடிப்படிகளில் வளைவிலும், திருப்பங்களிலும் இவ்விதமாக அமைந்துள்ள படிகள்.

**Wind indicator :** (வானூ.) காற்றுக் காட்டி : தரைமட்டக்

காற்றின் வேகம், வீசும் திசை ஆகியவற்றைக் காட்டுகிற கருவி.

**Winding stair :** சுழல்படி : தொடர்ந்து திசை மாறியபடி உயரே செல்லும் படிகள். படிகள் வளைந்து செல்லலாம். அல்லது நடுவில் திட்டுகளுடன் வளைந்து செல்லலாம். படிகளின் நடுவே உள்ள கிட்டத்தட்ட வட்டவடிவ இடைவெளியானது படிக்கிணறு எனப்படும். இது அகன்று இருக்கும். படிகளின் கைப்பிடியும் சுழன்று மேலே செல்லும்.

**Windlass :** பாரம்தூக்கும் பொறி: "வண்டி லாசு" என்றும் கூறுவது உண்டு.

**Wind load :** (பொறி.) காற்று விளைவு : ஒரு கட்டுமானம் மீது வீசும் காற்றினால் ஏற்படுகின்ற பாரம்.

**Window :** (க. க.) பலகணி : ஒரு கட்டடத்தில் அமைந்த பல திறப்புகள். உள்ளே வெளிச்சமும், காற்றும் கிடைப்பதற்காக அமைக்கப்படுவது வேண்டும்போது மூடிக் கொள்ள சட்டங்களுக்குள்ளாக ஒளி ஊடுருவும் பொருள் இணைக்கப்பட்ட ஏற்பாடு கொண்டது.

**Window head :** (க. க.) பலகணித் தலை: பலகணிச் சட்டத்தின் மேல் பகுதி.

**Window jack** பலகணிச் சாரம் : பலகணி அடிச்சட்டத்துடன் பொருந்துகிற, அத்துடன் வெளியே நன்கு நீட்டிக் கொண்டிருக்கிற சிறிய வலுவான மேடை. பொதுவில் பெயிண்ட் அடிப்பவர்கள் பயன்படுத்துவது.

**Window seat :** (க.க.) பலகணி இருக்கை : பலகணிக்குக் கீழே அல்லது பலகணியின் உள் அமைந்த இடத்தில் பொருந்துகிற இருக்கை.

**Wind : shake :** காற்று வெடிப்பு : மரத்தை வெட்டுவதற்கு முன்னதாக மரத்தின் தண்டுகளில் காற்று காரணமாக ஏற்படும் வெடிப்பு.

**Windshield wiper :** (தானி.) கார்கண்ணாடித் துடைப்பான் : காரின் முன்புறத்தில் உள்ள கண்ணாடியில் மழைநீர், அல்லது விழுபனி படியும்போது அதைத் தொடர்ந்து அகற்றி ஓட்டுபவருக்கு எல்லாம் தெளிவாகத் தெரிய உதவும் கருவி. எந்திர முறை மூலம் பல வெற்றிட ஏற்பாட்டின் கீழ் மின்சார மூலம் அல்லது கையால் இயக்கப்படுவது. மழைநீரை, விழுபனியை அகற்ற உறுதியான நீண்ட தண்டின் முன்புறத்தில் ரப்பர் பட்டை அமைந்தது.

**Wind tee :** (வானூ.) காற்று திசைகாட்டி : காற்று எத்திசையை நோக்கி விசுகிறது என்று காட்டுவதற்கு விமானம் தரை இறங்கும் பகுதியில் அல்லது அருகே உள்ள கட்டுமானத்தின் உச்சியில் "T" வடிவில் அமைந்த பெரிய காற்று திசைக்காட்டி.

**Wind tunnel :** (வானூ.) காற்றுச் சுரங்கம் : செயற்கையாக வேண்டிய அளவில் காற்று வீசும் படி செய்வதற்கான சாதனம் அடங்கிய கூடம் : விமான மாடல் போன்றவை வைக்கப்பட்டு காற்று வீசுவதால், காற்று இயக்க விசைகள் சோதனைப் பொருள் மீது ஏற்படுத்தும் விளைவுகளை ஆராய காற்றுச் சுரங்கம் உதவுகிறது.

**Wing :** (வானூ) இறக்கை : விமானத்தின் முக்கிய தாங்கு பரப்புகள். இடது இறக்கை, வலது இறக்கை, மேல் இறக்கை, கீழ் இறக்கை ஆகியன அடங்கும். (கட்டிட) முதன்மை கட்டடத்திலிருந்து பிரிந்து நீண்டு அமைந்த கட்டடப் பகுதி.

**Wing axis:** (வானூ.) இறக்கை அச்சு: இறக்கையின் எல்லாப் பகுதிகளின் வான் இயக்க மையங்களின் குவியம்.

**Winged dividers:** இறக்கையுள்ள பகிர்வி: நீளமான கோடுகளைப் பகிர்ந்து, பிரித்துப் பிரித்து அளப்பதற்கான இறக்கையுள்ள கருவி. கூரான இரு கால்களில் ஒன்றின் மேற்புறத்தில் இணைக்கப்பட்ட மெல்லிய தகடு மற்றதன் ஊடாகவும் சென்று அமைந்திருக்கும். துளையுள்ள காலில் பொருத்தப்பட்ட நிலைப்பு ஸ்குரூவை முடுக்கினால் இக்கருவி அளவு மாறாமல் அப்படியே இருக்கும். குறுகாது; விரியாது.

**Wing heavy:** (வானூ.) இறக்கை இறக்கம்: விமானம் குறிப்பிட்ட நேரு போக்கில் சாதாரணமாகப் பறக்கும்போது கிடை நிலைக் கட்டுப்பாடுகள் இயக்கப்படாத நிலையில் விமானத்தின் வலது அல்லது இடது இறக்கை கீழ் நோக்கிச் சாய்ந்த நிலை.

**Wing loading:** (வானூ.) இறக்கை எடைமானம: முற்றிலுமாக பளு ஏற்றப்பட்ட நிலையில் மொத்த எடையை, தாங்கு பரப்பினால் வகுத்து வரும் எண்.

**Wing nut:** (எந் ) இறக்கை நட்டு: நட்டுகளில் ஒரு வகை. இந்த வகை நட்டில் அதன் இரு புறங்களிலும் இறக்கைபோல இரு மெல்லிய பகுதிகள் நீட்டிக்கொண்டிருக்கும். இறக்கைகளைப்பற்றி நட்டு முடுக்கப்படும் அல்லது வெளியே எடுக்கப்படும்.

**Wing profile:** (வானூ.) இறக்கை விளிம்புரு: ஒரு விமானத்தின் இறக்கையின் ஓரங்களை மட்டும் காட்டும் படம்.

**Wing rib:** (வானூ.) இறக்கை முதுகு: விமான இறக்கையின் உள் கட்டுமானத்தில் விமான வயிற்றுப் புறப் பகுதியிலிருந்து இறக்கையின் ஊடே அதன் வெளி விளிம்பு வரை அமைந்த தண்டு. அதுவே இறக்கைக்கு வடிவத்தை அளிக்கும் அடிப்படைத் தண்டு.

**Wing section:** (வானூ.) இறக்கைக் குறுக்கு வெட்டு: விமான இறக்கையின் நீளவாட்டு அல்லது

வேறு கோணத்திலான குறுக்கு வெட்டுத் தோற்றம்.

**Wing skid:** (*வானூ.*) இறக்கை முட்டு: விமான இறக்கை சாய்ந்த தரையைத் தொடாதபடி தடுக்க இறக்கையின் நுனியின் கீழ் நிறுத்தப்படுகிற முட்டு.

**Wing spar:** (*வானூ.*) இறக்கைத் தண்டு: விமானத்தின் இறக்கையின் உட்புறக் கட்டுமானத்தால் நீளவாட்டில் அமைந்த பிரதான தண்டு.

**Wing tip:** (*வானூ.*) இறக்கை முனை: விமானத்தின் இறக்கையின் வெளிக்கோடி முனை.

**Wing tip flare:** (*வானூ.*) இறக்கை முனை வானூர்தி: விமானம் கீழிறங்குகையில் வெளிச்சம் தேவைப்படுமானால் இயக்குவிப்பதற்கான வாகனம். இது இறக்கையின் நுனிகளில் பொருத்தப்பட்டிருக்கும்.

**Wing truss:** (*வானூ.*) இறக்கைக் கூடு: விமான இறக்கையின் உட்புறக் கட்டுமான பிரேம்களின் கூடு. இணைப்புத் தண்டுகள், குறுக்குத் தண்டுகள், கம்பிகள், கேபிள்கள் ஆகியவற்றை உள்ளடக்கியவை. இதன் வடிவமைப்பின் விளைவாக இறக்கையின் எடை விமானத்தின் உடலுக்கு மாற்றப்படுகிறது.

**Wiped joint:** (*கம்மி.*) துடைப்பு ஒட்டு: இரு துண்டுகளை ஒன்றாக ஒட்ட வைக்கும்போது இரண்டையும் சூடேற்றி தக்க சூடு வந்ததும் வேண்டிய ஓரங்களைச் சேர்த்து வைத்து அவற்றின் மீது உருகிய ஒட்டு உலோகத்தை ஊற்றுதல், பிறகு ஓரளவுக்குச் சேர்ந்ததும், குழம்பு நிலையில் ஒட்டுக்கு மேலுள்ள எஞ்சிய உலோகத்தை துடைப்புத் துணி கொண்டு துடைத்து அகற்றுதல்.

**Wiper:** (*எந்.*) துடைப்பி: கோண வட்ட இயக்கியின் ஒரு வடிவம். சரிந்து ஏறுகிற அல்லது துடைக்கிற பணியைச் செய்வது.

**Wire bar:** (*உலோ.*) கம்பிப் பாளம்: உருளைகளில் கொடுத்து தண்டுகளாக மாற்றுவதற்கான தாமிரப் பாளம். உருளைக்குள் எளிதில் செருக சரிவான விளிம்பு இருக்கும்.

**Wire brush:** கம்பி பிரஷ்: தூரிகைக்குப் பதில் உருக்கினால் ஆன மெல்லிய துண்டுகள் அல்லது கம்பிகளைக் கொண்ட பிரஷ். ஒரு பரப்பின் மீதுள்ள துருசு, அழுக்கு அல்லது வேறு பொருட்களை அகற்றப் பயன்படுவது.

**Wire cloth:** கம்பி துணி: மிக மெல்லிய கம்பிகளில் ஆன துணி.

**Wired edge:** கம்பியிட்ட ஓரம்: ஒரு பொருளின் ஓரத்துக்கு வலுவேற்ற விளிம்பில கம்பியைப் பொருத்தி அதை மூடி விடுதல்.

**Wire drawing:** கம்பி இழுத்தல்: கம்பி தயாரிக்கும் முறை. உலோகத் தண்டு, தக்க உலோகத் தட்

டின் நடுவே உள்ள ஓட்டை வழியே இழுக்கப்படும்.

**Wire gauge :** (எந்.) உயர் அளவுமானி : தயாரிக்கப்படுகிற கம்பிகள் மற்றும் தகடுகளின் குறுக்கு அறைகளைக் கண்டறிவதற்கென குறியீடுகளையும், அளவு எண்களையும், கம்பி, தகடு ஆகியவற்றை வைத்து அளவு பார்க்க வெவ்வேறு அளவுகளில் குழிவுகளையும் கொண்ட தகடு. அமெரிக்காவில் பயன்படுத்தப்படுகிற அமெரிக்க தர நிர்ணய உருக்கு கம்பி அளவுமானி அதிகார முறையில் அங்கீகரிக்கப்பட்டது. ஆனால் சட்ட மதிப்பு இல்லாதது. வரி விதிப்புப் பணிகளுக்கு பிர்மிங்ஹாம் அளவுமானி அமெரிக்க சட்ட மன்றத்தால் அங்கீகரிக்கப்பட்டது. ஆகும். "அமெரிக்கன் பிரவுன் அண்ட் ஷார்ப் காஜ், தாமிரக் கம்பிகளையும், இரும்பல்லாத உலோகங்களால் ஆன கம்பிகளையும் அளக்கப் பயன்படுகின்றன.

**Wire glass :** (க.க.) கம்பி பதித்த கண்ணாடி : அகன்ற இடைவெளி கொண்ட கம்பி வலை உள்ளே பதிக்கப்பட்ட கண்ணாடி. தற்செயலாகக் கண்ணாடி உடைந்தாலும் துண்டுகள் சிதறாமல் தடுக்க இந்த ஏற்பாடு உதவும்.

**Wire mark :** கம்பிக்குறி : காகிதம் தயாரிக்கப்படுகையில் காகிதம் மீது ஃபோர்ட்ரீனியர் எந்திரத்தின் கம்பி அல்லது உருளை எந்திரத்தின் உறை ஏற்படுத்தும் அடையாளக்குறி.

**Wire nails :** கம்பி ஆணிகள் : கம்பிகளிலிருந்து செய்யப்படுகிற ஆணிகள் பல்வேறு காரியங்களுக்கு ஏற்ப, பல அளவுகளில் பல விதமான தலைகளுடன் தயாரிக்கப்படுபவை. முன்னர் இருந்த வெட்டு ஆணிகளுக்குப் பதில் இவை பரவலாகப் பயன்படுபவை.

**Withe :** (க.க.) வித் : அதே புகைக் குழாயில் புகை வழிகளுக்கு இடையில் அமைந்த பகுதி.

**Wolframite :** (உலோ.) வோல்ஃப்ராமைட் : அலுமினியம், டங்ஸ்டன், மற்றும் சிறு அளவில் தாமிரம், துத்தம் ஆகியவற்றைக் கொண்டு தயாரிக்கப்படுகிற ஜெர்மன் அலோகம். இது டுராலுமினியத்தின் பல பண்புகளைப் பெற்றுள்ளது.

**Wood alcohol :** (வேதி.) மர ஆல்கஹால் : காண்க மெதனால்.

**Woodcut:** (அச்சு.) மரச் செதுக்கு அச்சு: அச்சடிப்பதற்கு மரக் கட்டையால் செய்யப்படுகிற பிளேட். இதில் தேவையில்லாத பின்னணி செதுக்கி அகற்றப்படும். அச்சிடப்பட வேண்டியவை புடைப்பாக நிற்கும்.

**Wood engraving:** (அச்சு.) மரச் செதுக்கு வேலை: மரச்செதுக்கு அச்சுகளைத் தயாரிக்கும் அலை.

**Wood finishing:** (மர. வே.) மர நேர்த்தி: மரப்பொருட்களுக்கு இறுதி நேர்த்தி அளிக்க அவற்றைத் தயார்படுத்துவது, பின்னர் பெயின்ட் அல்லது வார்னிஷ் கொடுப்பது; குறிப்பிட்ட நேர்த்தி தேவைப்பட்டால் பாலிஷ் அளிப்பது.

**Wood flour :** மர மாவு : மிக நைசாகப் பொடி செய்யப்பட்ட மரம். பொதுவில் ஒயிட் பைன் மரத்திலிருந்து தயாரிக்கப்படுவது. லினோலியம் தரை, ரப்பர் ஆகியவற்றில் உள்ள சிறு ஓட்டைகளை அடைப்பதற்குப் பயன்படுவது.

**Wood pattern making:** மரத்தால் ஆன வடிவங்கள்: மரத்தைக் கொண்டு மாடல்கள் அல்லது பிளான்களைத் தயாரிப்பது.

**Wood pulley:** (எந்.) மர உருளை: இது வார்ப்பு இரும்பினால் ஆன உருளை (ஜகடை) யை விட லேசானது. எனினும் அதே அளவிலான பெல்ட் இறுக்கத்தில் 25 சதம் கூடுதலாக விசையைச் செலுத்தியது. மிகுந்த ஈரம் பாய்ந்த வேலைகளுக்கு உகந்தது அல்ல.

**Wood screws:** (பட்.) மர வேலை திருகாணிகள்: மரவேலைகளுக்குப் பயன்படும் திருகாணிகள் நீள்வட்ட, வட்ட, மழுங்கலான தலை என பலவகையான தலைகளுடன் தயாரிக்கப்படுகின்றன. ஆணியின் அளவுதலை அதிகபட்சமாகப்பிடிக்கின்ற நிலையிலிருந்து முனை வரை கணக்கிடப்படுகிறது. ஜிம்லெட் கூர்முனை அளவுகள் தரப்படுத்தப்பட்டவை. திருகாணிகள் பிரகாசமாக அளவில் கால்வனைஸ் செய்யப்பட்டவை. நீல நிறம் அளிக்கப்பட்டவை. பல வகையான திருகாணிகள் ஒரு சைஸ் ஆணிக்கும் அடுத்த சைஸ் ஆணிக்கும் உள்ள வித்தியாசம் 0.013 அங்குலம், ஆணிகளின் நம்பர்கள் 1 முதல் 30 வரை உள்ளன. ¼ அங்குலம் முதல் 6 அங்குலம் வரை பல நீளங்களில் உள்ளன. ஆணியில் புரிகள் மட்டும் அமைந்த பகுதி மொத்த நீளத்தில் 10இல் 7 பங்கு அளவுக்கு உள்ளது. புரிகள் கோணம் 82 டிகிரி.

**Wood turning:** மரக்கடைசல்: மரக் கட்டைகளை கடைசல் எந்திரத்தில் கொடுத்துக் கடைவது.

**Wood work:** மர வேலைப்பொருள்: மரத்தால் ஆன பொருட்கள்.

**Woof:** குறுக்கு இழை: நெசவில் அகலவாட்டில் அதாவது குறுக்காக அமைந்த இழை. நீளவாட்டிலான பாவு நூலுக்கு நேர்மாறானது.

**Work:** வேலை: வேலை என்பது நேரக் கணக்கில் அன்றி அடி/ராத்தல், அங்குலம் ராத்தல், கணக்கில் கூறப்படுகிறது. (இயற்) விசையை தொலைவினால் பெருக்கி வரும் தொகையானது வேலைக்குச் சமம்.

**Working depth:** *(பல்லி.)* செயல் ஆழம்: பல் சக்கரத்தில் மேல் விளிம்புக் கோட்டிலிருந்து கிளியரன்ஸ் அதாவது இடைவெளிக் கோட்டு வரையிலான ஆழம். அதாவது மொத்த ஆழத்திலிருந்து இடைவெளியைக் கழித்து வரும் ஆழம்.

**Working drawing:** *(க.க.)* செயல் வரைபடம்: எல்லா அளவுகளும், தேவையான பணிக் குறிப்புகளும் கொண்ட பணியை வெற்றிகரமாகச் செய்து முடிப்பதற்கு உதவுகிற வரைபடம்.

**Working gauges:** *(எந்.)* செயல் அளவு மானிகள்: உற்பத்திக்குப் பயன்படுத்துகிற அளவுமானிகளைக் குறிக்கும் சொல்.

**Woɹking load:** *(பொறி.)* பணி நிலை பாரம்: ஒரு கட்டுமானம் சாதாரணமாக உள்ளாகிற பாரம். அது அதிகபட்ச பாரம் அல்ல. மாறாக சராசரி பாரம்.

**Working unit stress:** *(பொறி.)* செயல் யூனிட் அழுத்தம்: இறுதியான அழுத்தத்தை பாதுகாப்பு அலை எண்ணால் வகுத்து வருவது.

**Work life:** *(குழை.)* பசைக் காலம்: ஒரு செயலூக்கியுடன் அல்லது பிற பொருளுடன் கலந்த பின்னர் ஒரு பசைப் பொருள் உபயோகிக்கத் தக்க நிலையில் உள்ள நேரம்.

**Works manager;** பணி மேலாளர்: ஒரு தொழிற்சாலையின் ஜெனரல் சூபரின்டெண்ட். பல தொழிற்சாலைகளில் பிரதம என்ஜினியர் போன்றவர்.

**Worm - and - gear steering:** *(தானி.)* நெளிதண்டு மற்றும் கியர் ஸ்டியரிங்: ஸ்டியரிங் கியர் தண்டின் கீழ்முனையில் அமைந்த நெளிதண்டுடன் கூடிய ஏற்பாடு. நெளி கியர் குறுக்குத் தண்டுடன் இணைக்கப்பட்டிருக்கும். தகுந்தபடி பொருந்தியுள்ளதா என்று சரி பார்த்து அமைக்க இயலும்.

**Worm drive :** *(தானி.)* நெளி தண்டு இயக்கம்: பெவல் பல்லிணை பினியன், அல்லது செயின் மூலமாக இல்லாமல் நெளிதண்டும், சக்கரமும் இணைந்த செயல் மூலம் இயங்குவது.

**Worm gearing :** *(பல்லி.)* நெளி பல்லிணை: திருகுபுரி பல்லிணையும், பல்சக்கர பல்லிணையும் இணைந்த பல்லிணை.

**Worm Threads :** *(எந்.)* நெளி புரி: இப்புரிகள் ஆக்மி ரகத்தைச் சேர்ந்தவை. 29 டிகிரி கோணத்தில் அமைந்தவை. எனினும் தரப்படுத்தப்பட்ட ஆக்மி புரியை விட ஆழமானவை.

**Wove paper :** வலைச்சட்டக் காகிதம்: நெருக்கமான வலையைக் கொண்டு தயாரிக்கப்பட்ட காகிதம். இதில் நீரோட்டம் இராது.

**Wreath :** (க.க.) படிகளின் வளை கைப்பிடி : மாடிப்படியின் கைப்பிடியில் செங்குத்தாகவும், கிடைமட்டமாகவும் வளைந்த பகுதி. மாடிப்படியின் துவக்கத்தில் கீழே உள்ள தாங்கு தூணுடன் பக்கவாட்டில் இணைக்கப்படுவது.

**Wreath piece :** (க.க.) மாடிப் படை வளை கைப்பிடித் துண்டு : சுழன்று செல்லும் மாடிப்படிகளின் களின் வளைந்து வளைந்து செல்லும் கைப்பிடியின் ஒரு பகுதி.

**Wrecking bar :** (எந்) பாடழிவுக் கைப்பிடி : பொதுவில் ஒன்று முதல் இரண்டு அடி நீளமுள்ள உருக்குத் தண்டு. ஒரு முனையில் மெல்லிய விளிம்பு இருக்கும். மறுமுனை வளைந்து பிடிமானத்துக்கு உகந்தபடி குழிவுடன் கூடிய பல் இருக்கும்.

**Wrench :** (எந்.) திருகு குறடு : சாதாரண ரகங்கள் நட்டுகளுக்கு ஏற்ப எளிதில் மாற்றிக் கொள்ளத் தக்கவை. மங்கி குறடு, இரட்டை முனை, குறடு, 'எங்' குறடு, பாக்ஸ் குறடு, டி குறடு, துளைக்குறடு முதலியவை (எந்திர) போல்ட் அல்லது நட்டுகளைத் திருப்புவதற்கு விசையைச் செலுத்துவதற்கான இசைக் கருவி.

**Wrinkling :** (வண்; அர.) திரளுதல் : பெயிண்ட் அல்லது வார்னிஷ் அடக்கம் போதிய அளவுக்கு அதிகமாகக் கனமாக பூசினால், வெப்பம் அதிகமாகக் இருந்தால், காற்றில் ஈரப்பசை மிகுதியாக இருந்தால் அல்லது பரப்பின் மீது நீட்சித் தன்மை கொண்ட பிலிமை பரப்பினால் சுருக்கம் விழும் அல்லது பெயின்ட், வார்னிஷ் திரண்டு நிற்கும்.

**Wrong font ;** (அச்சு.) தவறான பான்ட் : அச்சுக்கோக்கப்பட்ட வாசகத்தால் இதர எழுத்துகளிலிருந்து வித்தியாசமாக உள்ள வேறு அளவிலான எழுத்து.

**Wrong side :** தவறான பக்கம் : கம்பி வலை கொண்டு தயாரிக்கப்பட்ட காகிதத்தில் கம்பி வலை மீது அமைந்த புறத்தில் அடையாளம் இருக்கும். இது தவறான பக்கமாகும்.

**Wrought iron :** (உலோ.) தேனிரும்பு : பெரும்பாலான கார்பனும், இதர உள்ளிடப் பொருட்களும் அகற்றப்பட்ட இரும்பு.

# X

**X-braced chair:** எக்ஸ் இருக்கை நாற்காலி: நாற்காலியில் அமரும் பகுதியானது X வடிவில் அமைந்தது.

**X member:** (*தானி.*) எக்ஸ் உறுப்பு: அழுத்தி உருவாக்கப்பட்ட 'ப' வடிவ குறுக்குத் தண்டுகள் ஆங்கில X வடிவில் அமைக்கப்பட்டது. மோட்டார் வாகன கட்டுமானத்தின்போது பிரதான பிரேமில் வைக்கப்படுவது.

**X-ray:** எக்ஸ் கதிர்: காமா கதிர்கள் போன்றவை. மிகவும் ஊடுருவும் திறன் கொண்டவை. எக்ஸ் கதிர்கள் அணுக்கருவிலிருந்து வருபவை அல்ல மாறாக அதைச் சுற்றியமைந்த எலெக்ட்ரான்களிலிருந்து வருபவை.எலெக்ட்ரான் தாக்குதல் மூலம் இவை உண்டாகின்றன. எக்ஸ் கதிர்கள் பெரும்பாலான பொருட்களை ஊடுருவிச் செல்கின்றன இக் கதிர்கள் மூலம் எலும்புகளின் உள் உறுப்புகளின் நிழல்களைப் பார்க்கவும், படம் பிடிக்கவும் முடியும் (இயற்) ரோண்ட்ஜன் கதிர்களின் ஜன ரஞ்சகப் பெயர். குருக்ஸ் குழாயில் கேதோட் கதிர்கள் எதிர்ப்புறம் உள்ள சுவரில் அல்லது குழாயில் உள்ள ஒரு பொருளைத் தாக்கும்போது தோன்றும் ஆற்றல் வடிவிலான கதிர்கள்.

**X-ray tube:** எக்ஸ் கதிர்குழாய்: எக்ஸ் கதிர்களைத் தோற்றுவிப்பதற்கான வெற்றிடக் குழாய்: இதன் உள்ளே நிலை மின்புலத்தின் மூலம் எலக்ட்ரான்கள் மிக வேகத்தில் செல்லும்படி செய்யப்படுகின்றன. இவற்றைத் திடீரென நிறுத்தி இலக்கைத் தாக்கும்படி செய்கின்றனர்.

**X-shaped chair:** (*மர.வே.*) எக்ஸ் வடிவ நாற்காலி: பழங்காலப் பாணியிலான நாற்காலி. இதில் கீழ்ப்புறம் உள்ள தாங்கும் பகுதி X வடிவில் இருக்கும். பல சமயங்களிலும் அழகிய வேலைப்பாடு இருக்கும். தவிர இது பெரும்பாலான சமயங்களில் மடிக்கத் தக்கதாக இருக்கும்.

# Y

**Yardage:** *(பொறி.)* யார் டேஜ்: எவ்வளவு மண் தோண்டப்பட்டது. என்பதை கன கெஜத்தில் குறிப்பிடுவதற்குப் பயன்படும் சொல்.

**Yard stick:** கெஜக்கோல்: 36 அங்குல நீளம் கொண்ட, அளவுகள் குறிக்கப்பட்ட நீண்ட மெல்லிய மரச்சட்டம். உலோகத்தில் செய்யப்பட்ட அவ்வித அளவுகோல் 36 அங்குல அளவுகோல் எனப்படுகிறது.

**Yaw:** *(வானூ.)* திருக்கை: பறக்கும் பாதைக் கோட்டிலிருந்து கோண இயக்கத்தால் விமான அச்சிலிருந்து வலது புறம் அல்லது இடது புறம் திரும்பும் போக்கு.

**Yaw meter:** *(வானூ.)* திருக்கை அளவுமானி: ஒரு விமானத்தின் திருக்கையின் கோணம் எவ்வளவு என்று அளந்து கூறும் கருவி.

**Y connection:** *(மின்.)* ஒய் இணைப்பு: மூன்று பேஸ் சர்க்கியூட்டில் பயன்படுகிற கிளை இணைப்பு.

**Year ring:** *(மர. வே.)* ஆண்டு வளையம்: இது வளர்ச்சி வளையம் வருடாந்திர வளையம். வருடாந்திர வளையம் என்றும் குறிப்பிடப்படும். மரத்தின் குறுக்கு வெட்டில் இந்த வளையங்கள் காணப்படும். குறுக்கு வெட்டில் குழல்களைச் செருகியது போன்று தோன்றும். ஒவ்வோர் வளையமும் ஓர் ஆண்டைக் குறிக்கும். மரம் வளருகையில் சாறு இவற்றின் வழியேதான் உயரே செல்கிறது.

**Yellow:** *(வண்.)* மஞ்சள்: அடிப்படை நிறம். நிறமாலையில் சிவப்புக்கும், பச்சைக்கும் இடையே அமைந்துள்ளது.

**Yellaw ocher** *(உலோ.)* மஞ்சள் பித்தளை: 70 பங்கு தாமிரமும், 30 பங்கு துத்த நாகமும் கலந்த கலோகம். இது மட்ட ரகக் கலோகம். உறுதி தேவையற்ற கனிமங்களுக்குப் பயன்படுவது.

**Yellow ocher:** *(வண்.)* மஞ்சள் காவி: மண் போன்ற இரும்புக் கனியிலிருந்து பெறப்படும் நிறம். பெயிண்டுகளில் சாயம் அளிக்கப் பயன்படுவது.

**Yellow pine:** *(மர. வே.)* மஞ்சள் ஊசியிலை: என்றும் பசுமை மாறாத மரம் இரு வகைப்பட்டது. ஒன்று நீண்ட இலை. மற்றொன்று குட்டை இலை நீண்ட இலை ஊசியிலை வகையின் மரம் அடர்த்தியாக இருக்கும். கனமாகவும், உறுதியாகவும் இருக்கும். பெரும்பாலும் கனத்த உத்திரங்களாகப் பயன்படுத்தப்படும். குட்டை இலை வகை எளிதில் முறியும்.

அவ்வளவு உறுதியற்றது. விலையும் குறைவு. செலவு குறைந்த தரைத் தளமாகவும். இதர வகைகளிலும் பயன்படுவது.

**Yew:** (*மர.வே.*) யூ மரம்: மெதுவாக வளருகின்ற நடுத்தர அளவுள்ள பசுமை மாறாத மரம். மரத்தின் உள்ளே துணுக்குகள் அடர்ந்து கெட்டியாக இருக்கும். சற்று நெகிழும் தன்மை கொண்டது. ஆரஞ்சு சிவப்பு முதல் பழுப்பு வரையிலான நிறம் கொணடது.

**Yield point:** (*எந்.*) முறி நிலை: மாதிரி உலோகத் துண்டு மீது கூடுதல் பளுவைச் சேர்க்காத நிலையில் அது விரிந்து கொடுக்கத் தொடங்கும்போது உள்ள நிர்ப்பந்தத்தின் அளவு.

**Yield strength:** (*பொறி*) வலிமை இழப்பு நிலை: ஒரு உலோகப் பொருள் நிரந்தரமாக நீண்டு போகின்ற நிலையை ஏற்படுத்துவதற்குத் தேவைப்படும் பளு.

**Yield value:** (*குழை.*) இளரு நிலை: பிளாஸ்டிக் திரவம் போன்று பாய்வதற்கு மிகக் குறைந்தபட்ச அழுத்த நிலை. இதற்கும் குறைவான அழுத்தத்தில் பிளாஸ்டிக் நெகிழும் தன்மை கொண்ட திட வடிவில் இருக்கும். இந்த நிலைக்கும் அதிகமான அழுத்தத்தில் பிசுபிசுப்பான திரவமாக இருக்கும்.

**Yoke:** (*க.க.*) மேல் குறுக்கு: பலகணி சட்டத்தில் மேற்புற குறுக்குச் சட்டம். (தொலை) மின்னணுக்கற்றையை கிடைமட்டமாகவும், செங்குத்தாகவும் திருப்பி விட மின்னணு காமிரா அல்லது படக் குழாயின கழுத்துப் பகுதியில் அமைந்த சுருள்கள்.

# Z

**Zebrano:** (*மர.வே.*) ஜீப்ரானோ: ஆஃப்ரிக்காவின் மேற்குக் கரையைச் சேர்ந்த மிகப்பெரிய மரம். மரம் மிகக் கெட்டியானது. எடை மிக்கது. வலிமை கொண்டது. இதன் சற்று மங்கலான பின்னணி நிறம், கரும்பழுப்பான இணை கோடுகள் காரணமாக இது பார்வைக்கு மிக எடுப்பானது. மிக நளினமான மரவேலைப் பொருட்கள், சுவர் மறைப்புப் பலகைகள் ஆகியவற்றுக்கு மிக அரிய மரமாகக் கருதப்படுகிறது.

**Zee bar:** (*பொறி.*) ஜீபார்: கட்டுமான உருக்குத் தண்டு. அதன் குறுக்கு வெட்டு ஆங்கில 'Z' வடிவில் அமைந்து மேற்புறத்தையும் கீழ்ப் புறத்தையும் இணைப்பது. பெரும்பாலும் கப்பல் கப்பல் கட்டுமானத்துக்கும், இதர கட்டுமானங்களுக்கும் பயன்படுவது.

**Zero :** பூச்சியம் : எண்களில் சூன்யத்தைக் குறிப்பது. மதிப்பில் மிகத் தாழ்ந்தது.

**Zero ceiling :** (*வானூ.*) பூச்சிய வரம்பு : 100 அடிக்குக் கீழான மேகக்கூட்டம். விமானம் பறப்ப தற்குத் தகுதியற்ற வானிலை.

**Zig zag rule :** மடியும் அளவு கோல் ; அளவு கோலானது மடிக் கும் வசதி கொண்டது. மடித்து விரிக்கும் போது உள்ள நிலை யைக் குறிப்பது. மொத்தம் 2 அடி முதல் 8 அடி நீளம் இருக்கும். எனினும் இது தனித்தனியே 6 அங்குலப் பகுதிகள் கொண்டது. இவை ஒன்றோடு ஒன்று இணைந்தவை.

**Zinc :** (*உலோ.*) துதத நாகம் : நிலம் பாய்ந்த வெண்மை நிற உலோகம். கால்வனைசிங் செய்வ தற்கும் கலோகங்களைத் தயாரிப் பதற்கும் பயன்படுவது.

**Zinc chloride :** (*வேதி.*) துத்த குளோரைடு : வெள்ளை நிறமுள் ளது. நீர்த்துப் போகிற உப்பு. ஹைட்ரோ குளோரிக் அமிலத்தில் துத்தத்தை அல்லது துத்த ஆக்ஸைடை சேர்ப்பதன் மூலம் அல்லது துத்தத்தை குளோரினில் எரிப்பதன் மூலம் பெறப்படுவது. பற்ற வைப்புக் காரியங்களுக்கு எளிதில் உலோகத்தை உருக்கத் துணைப் பொருளாகப் பயன்படு வது.

**zinc engraving or etching :** (*அச்சு.*) துத்தச் செதுக்கு : துத்த நாகத்தினால் ஆன அச்சுத் தகடு. அச்சிடப்பட வேண்டிய பகுதியை மட்டு விட்டு விட்டு மீதிப் பகுதியை மட்டும் செதுக்கி அகற்றி விடுதல்.

**Zingoxide :** (*வேதி.*) துத்த நாக ஆகஸைட் : துத்த நாக கார்பனேட்டை சூடுபடுத்துவதன் மூலம் பெறப்படும் துத்தநாகப் பவுடர். பெயின்ட் தயாரிக்கவும், மருந்தாகவும், துத்தநாக உப்பாக வும் பயன்படுவது.

**Zinc sulphate :** (*வேதி.*) துத்த சல்பேட் : கழிவு துத்தத் துண்டு களை சல்பியூரிக் (கந்தக) அமிலத் தில் போட்டுக் கரைத்துத் தயாரிக் கப்படுவது. காலிகோ அச்சு, சாய மிடல் ஆகியவற்றுக்கும், வைத் தியத் துறையிலும், ஆளிவிதை எண்ணெயை உறைய வைக்கவும், மரம் மற்றும் தோல்களை கெடா மல் காக்கவும் பயன்படுவது.

**Zing white :** (*வண்.*) துத்த வெள்ளை : பெயின்ட் தயாரிப் புக்கு நிறமியாகப் பயன்படும் துத்த நாகப் பவுடர்.

**Zinox :** (*வண்.*) ஜினோக்ஸ் : எனாமல் தயாரிப்புக்குப் பயன் படுத்தப்படும் துத்த நாக ஹைட்ரேட் ஆக்ஸைட்.

**zoom :** (*வானூ.*) செங்குத்தான ஏற்றம் : விமானம் செங்குத்தாக உயரே ஏறுவது. அப்போது உயரே ஏறுகின்ற விகிதமானது, சீராகப் பறக்கும்போது கிடைப் பதை விட அதிக அளவில் இருக் கும்.

———

# Encyclopaedic Tamil Scientific Technical Dictionary
(Final part)

*By*
Manavai Mustafa



*Published by*
**MEERAA PUBLICATION**
AE-103, ANNA NAGAR
MADRAS-600 040.